# அன்பெனும் தோட்டத்திலே

**ஓஷோ**

தமிழாக்கம்:

**வரலொட்டி ரெங்கசாமி**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அன்பெனும் தோட்டத்திலே
முதற் பதிப்பு : நவம்பர், 2010
இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 2019
விலை : ₹ 300/-

Anbenum Thottathiley (Tamil)
Originally published in English as
**The Path of Love**



| | | |
|---|---|---|
| Translated by | : | **Varalotti Rengasamy** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | November, 2010 |
| Second Edition | : | December, 2019 |
| Pages | : | 480 |
| **Price** | : | **₹ 300/-** |
| ISBN | : | 978-81-8345-197-0 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai. |



Published by :
**KAVITHA PUBLICATION**
No. 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044-42161657
Whatsapp : 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்



# அன்பெனும் தோட்டத்திலே

ஓஷோ

# முன்னுரை

ஆன்மிகத்தில் உண்மையான நாட்டம் கொண்டவன் வாழ்க்கையில் சாதாரண மனிதனாகவே இருப்பான். கபீர் ஒரு சாதாரண மனிதர்தான். அவர் ஒரு கூட்டத்தில் இருந்தால் உங்களால் அவரை இனம் கண்டுகொள்ள முடியாது. அந்த அளவுக்குச் சாதாரணமானவர் கபீர். அவருடைய தனித்தன்மை வெளியே தெரியாது. அவர் முகத்தைப் பார்த்து அவர் யார் என்று உங்களால் அடையாளம் கண்டுகொள்ள முடியாது.

ஆனால் புத்தரின் தனித்தன்மையும் அவருடைய தெய்விகத்தன்மையும் சுடர்விட்டுப் பிரகாசித்தன. புத்தரிடம் ஒரு காந்த சக்தி இருந்தது.

ஏசுநாதரும் அப்படித்தான். ஆன்மிகப் புரட்சி செய்ய வேண்டும் என்ற துடிப்பு அவரிடம் எப்போதும் இருந்தது. ஆனால் கபீர்?

அவர் ஒரு சாமானியர்.

நான் சொல்வதைக் கவனமாகக் கேட்க வேண்டும். கபீரை சாதாரண மனிதர் என்று சொன்னேனே தவிர சராசரி மனிதர் என்று சொல்லவில்லை.

சராசரி வேறு சாதாரணம் வேறு. சராசரி மனிதர் சாதாரண மனிதர் இல்லை. ஒரு சராசரி மனிதரிடம் கொஞ்சம் இயல்பு கடந்த நிலை, கொஞ்சம் இயற்கைக்குப் புறம்பான தன்மை இருக்கும்... இன்னும் அழுத்தமாகச் சொன்னால் ஒரு சராசரி மனிதரிடம் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது பைத்தியக் காரத்தனம் இருக்கத்தான் செய்யும். எல்லாரிடமும் பைத்தியக்

காரத்தனம் கொஞ்சமாவது இருக்கத்தான் செய்கிறது. சொல்லப் போனால் இந்த உலகில் இயல்பான மனிதர்கள் என்று யாருமே இல்லை.

இதை நான் கேட்டிருக்கிறேன்:

ஒரு பிரபல மனவியல் நிபுணர் மன நோய்களைப் பற்றிக் கல்லூரி மாணவர்களுக்கு வகுப்பு எடுத்துக் கொண் டிருந்தார். ஒரு மாணவன் சந்தேகம் கேட்டான்.

"ஐயா மனநோய் உள்ளவர்களைப் பற்றிச் சொன்னீர்கள். இயல்பாக இருப்பவர்கள் எப்படி இருப்பார்கள் என்பதைப் பற்றியும் சொல்லுங்களேன்."

நிபுணர் ஒரு கணம் யோசித்தார். பின் சொன்னார். "எனது முப்பது வருட அனுபவத்தில் இதுவரை இயல்பான மனிதனைச் சந்திக்கவேயில்லை. அப்படியே ஒரு வேளை சந்தித்தாலும் எப்பாடு பட்டாவது அவனைக் குணப்படுத்தி விடுவேன்."

நீங்கள் உங்கள் சராசரி வாழ்க்கையில் சந்தித்திருக்கவே முடியாத சாதாரண மனிதர் கபீர். தன்னை வேறுபட்டவராகக் காட்டிக்கொள்ள வேண்டும் என்ற ஆசை அணுவளவும் இல்லாத அபூர்வமான மனிதர் கபீர்.

அவர் ஞானம் பெற்ற பின்னும் சாதாரண மனிதனாகவே வாழ்ந்தார். புகழ் பெற்ற ஞானியான பிறகும் தான் செய்துவந்த நெசவுத் தொழிலை விடாமல் செய்து வந்தார் அவரிடம் சீடர்கள் குவிய ஆரம்பித்தார்கள். ஆயிரக்கணக்கில் சீடர்கள் இருந்தும்கூட கபீர் நெசவுத் தொழிலை நிறுத்தவில்லை.

"ஏனய்யா உங்களை இன்னும் வருத்திக் கொண்டிருக்கிறீர்கள்? அதுதான் இவ்வளவு பேர் இருக்கிறோமே, நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். நீங்கள் எந்த வேலையும் செய்ய வேண்டாம்."

இதைக் கேட்டு கபீர் பெரிதாகச் சிரிப்பார்.

"ஆண்டவன் நான் எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறானோ அப்படியே இருந்துவிட்டுப் போகிறேன். வேறு எப்படியும் இருக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு

இல்லை. மேலே இருப்பவன் நான் நெசவாளியாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறான். அதனால்தான் நான் அப்படியே இருக்கிறேன். நான் நெசவாளியாகப் பிறந்தேன். நெசவாளியாகவே இறக்கப் போகிறேன்.''

மிகச் சாதாரணமாக வாழ்ந்தார் கபீர். தான் நெய்த துணிகளை விற்கக் கடைத்தெருவிற்குப் போவார். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைப்பார்.

இதை நாம் நன்றாகக் கவனித்து மனதில் உள்வாங்கிக் கொள்ள வேண்டும். கபீர் ஒரு போதும் தன்னை ஞானி என்று சொல்லிக் கொண்டதில்லை. எந்த உண்மையான ஞானியும் தன்னை ஞானி என்று சொல்லிக் கொள்ள மாட்டான்.

உண்மையைப் புரிந்து கொண்டவன் தனக்கு ஒன்றும் தெரியாது என்பதைத் தயக்கமில்லாமல் ஏற்றுக் கொள்வான். தனது அறியாமையை ஏற்றுக் கொள்வதில்தான் உண்மையான அறிவு இருக்கிறது.

ஒரு ஞானியின் அறியாமை ஆழமானது. அந்த அறியாமையிலிருந்துதான் வெகுளித்தனம் பிறக்கிறது. உங்களுக்கு விஷயங்கள் தெரியும்போது சாமர்த்தியம் பிறக்கிறது. சூழ்ச்சி பிறக்கிறது. ஆக உங்களுக்கு அறிவு உண்டாகும்போது உங்கள் குழந்தைத்தனத்தை நீங்கள் தொலைத்துவிடுகிறீர்கள்..

கபீர் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று வார்த்தைக்கு வார்த்தை சொல்லுவார். இதை நீங்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும். அப்போதுதான் உங்கள் மனதில் கபீரின் கவிதைகளைப் புரிந்து கொள்வதற்கான பின்னணி உருவாகும்..

கபீரின் கவிதைகள் அவருடைய மேதாவித்தனத்திலிருந்து வரவில்லை. அவருடைய வெகுளித்தனத்திலிருந்து வந்தன. அவருடைய குழந்தைத்தன்மையிலிருந்துதான் அவரது சாகா வரம் பெற்ற கவிதைகள் ஜனித்தன.

ஓஷோ -

*'பரவசம்-மனிதன் மறந்துவிட்ட ஒரு மொழி'* என்ற நூலிலிருந்து

வழிப்போக்கனைத் தன் வீட்டிற்குள் அழைத்துக் கொள்பவன்
எனக்கு மிகவும் நெருக்கமானவன்
இல்லத்தில்தான் உண்மையான சங்கம் இருக்கிறது.
இல்லத்தில்தான் வாழ்க்கையை அனுபவிக்க முடியும்.
பின் நான் ஏன் வீட்டைத் துறந்து
காட்டில் அலைந்து திரிய வேண்டும்?
நான் ஞானம் பெற வேண்டும் என்று பிரமன் நினைத்தால்
நான் என் வீட்டிலேயே
பந்தத்தையும் முக்தியையும் பார்த்துவிட முடியும்.
ஆண்டவன் என்னும் மகாசமுத்திரத்தின்
ஆழத்திற்குச் செல்பவனே எனக்கு உகந்தவன்
ஆண்டவனை நினைக்கும்போது எவனுடைய மனம்
தன்னையே எளிதாக இழக்கிறதோ அவன் எனக்கு நெருக்கமானவன்
இறைவனை அறிந்தவன் எனக்கு நண்பன்
இறைவனின் மேலான உண்மைநிலையைத் துய்ப்பவன்
எனக்கு நெருக்கமானவன்
அன்பையும் துறத்தலையும் ஒன்றாக இணைத்து
முதலும் முடிவும் அற்ற இறைமையின்

இனிமையான ராகத்தை இசைப்பவன் எனக்கு உகந்தவன்

கபீர் சொல்கிறார்:

இல்லம்தான் நிரந்தரம்.

இல்லத்தில்தான் நிஜம் இருக்கிறது

உண்மையாக இருக்கும் அந்த ஒருவனை அடைய இல்லம்தான் உதவும்.

அதனால் எங்கே இருக்கிறீர்களோ அங்கேயே இருங்கள்;

காலாகாலத்தில் அனைத்தும் உங்களை நாடி வரும்

ஏ துறவியே! சாதாரண சேர்க்கையே புனிதமானது

இறைவனை நான் சந்தித்த நாள் முதலாக

எங்கள் காதல் விளையாட்டுக்கள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன

நான் என் கண்களை மூடவில்லை; என் காதுகளையும் மூடவில்லை

என் உடலைத் துன்புறுத்திக் கொள்வதில்லை.

நான் என் கண்களால் நாலா பக்கமும் பார்த்துப் புன்னகை பூக்கிறேன்.

இறைவனுடைய அழகையே எங்கும் காண்கிறேன்.

அவன் பெயரைச் சொல்கிறேன்

நான் பார்ப்பதெல்லாம் அவனையே நினைவுபடுத்துகிறது

நான் செய்யும் செயலெல்லாம் வழிபாடே!

உதயமும் அஸ்தமனமும் எனக்கு ஒன்றுதான்

என்னிடம் முரண்பாடுகள் கரைந்துவிட்டன.

நான் எங்கு சென்றாலும் இறைவனைத்தான் வலம் வருகிறேன்;

நான் சாதித்ததெல்லாம் அவன் சேவையை மட்டும்தான்

*நான் கீழே படுத்தால் அவனை விழுந்து வணங்குகிறேன்.*

*நான் பூஜிப்பது அவனை மட்டுமே*

*எனக்கு வேறு யாரும் இல்லை.*

*என் நா அசுத்தமான வார்த்தைகளைப் பேசுவதை நிறுத்திவிட்டன.*

*என் நா இரவும் பகலும் அவன் புகழையே பாடுகிறது*

*அமர்ந்தாலும் எழுந்தாலும் என்னால் ஆண்டவனை மறக்க முடியாது.*

*அவன் இசையின் தாளம் என் காதில் கேட்கிறது*

*கபீர் சொல்கிறார்:*

*என் இதயம் சீற்ற நிலையில் இருக்கிறது*

*மறைக்கப்பட்டதை என் ஆன்மாவுக்குத் தெரிவிக்கிறேன்.*

*இன்பத்தையும் துன்பத்தையும் கடந்த அந்த*

*ஆனந்தப் பெருங்கடலில் அமிழ்ந்து கிடக்கிறேன்.*

மதம் இந்த சமூகத்தைப் பீடித்த ஒரு நோயாகத்தான் இருந்திருக்கிறது. ஒருவிதமான பைத்தியக்காரத்தனமாகத்தான் இருந்திருக்கிறது.

எப்போதாவது அபூர்வமாகத்தான் மதங்கள் ஆரோக்கியமாக இருந்திருக்கின்றன. ஒரு புத்தரோ ஓர் ஏசுநாதரோ ஒரு கிருஷ்ண பரமாத்மாவோ ஒரு கபீரோ இந்த உலகத்தில் நடமாடும்போது மட்டும்தான் மதம் நன்மை விளைவிப்பதாக இருந்திருக்கிறது.

தன் இருப்புநிலையின் மூலமாக ஒரு மதத்தின் சாரத்தை உணர்ந்தவனின் புரிந்துணர்வு வேறு. மற்றவர்களின் புறச்செயல்களைப் பார்த்து அதே போல் செய்ய முற்படுபவனின் புரிந்துணர்வு வேறு. அடுத்தவர்களைப் பார்த்து அது போல் வேஷம் போடுபவனிடம் புரிந்துணர்வே இருக்காது.

மெய்ப்பொருளை வெளி வேஷங்களால் உணர முடியாது.. ஒரு ஞானியின் நகலாக இருப்பதனால் நீங்கள் ஞானியாகிவிட முடியாது.

மெய்ப்பொருள் மூல உரு. அதை அடைய வேண்டுமென்றால் நீங்களும் மூல உருவாக இருக்க வேண்டும். போலிகளாக வேஷதாரிகளாக ஆஷாடபூதிகளாக இருந்தால் மெய்ப்பொருளை உணர முடியாது.

அடுத்தவரைப் பின்பற்றுவதால் மெய்ப்பொருளை உணர முடியாது. உங்கள் வாழ்வைப் புரிந்து கொள்வதன் மூலம்தான் மெய்ப்பொருளை நீங்கள் உணர முடியும். உண்மை ஒரு வகுப்பிலோ சில வாதங்களிலோ இல்லை. உங்கள் இருப்பு நிலையின் அடியாழத்தில் உண்மை அன்பென்னும் வடிவத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறது.

உண்மை தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது. அது தார்க்கிகர்களின் கூற்றுக்கள் இல்லை. அடிமனதில் இருக்கும் அன்பு வெடித்துச் சிதறும்போது வெளிவருவதுதான் உண்மை. மெய்ப்பொருள்.

உங்களுக்குள் இருக்கும் உண்மை மெய்ப்பொருள் வெடித்துச் சிதறும்போது வாழ்க்கையைப் பற்றி, இறைவனைப் பற்றி, மதத்தைப் பற்றி உங்களுக்கு ஒரு புதிய பார்வை கிடைக்கிறது. உங்கள் கண்களில் ஒரு விசேஷமான வேறுபாடு வந்துவிடுகிறது. உங்கள் கண்களில் ஒரு தெளிவு, ஓர் ஒளி, ஒரு நேர்மை புலப்படுகிறது.

உங்கள் மனம் அடுத்தவர்களிடம் இரவல் வாங்கிய சிந்தனைகளால் நிறைந்திருந்தால் உங்கள் மனதில் தோன்றும் ஒரு மயக்கத்தைத்தான் நீங்கள் மதம் என்று சாதிப்பீர்கள்.

இந்த அடிப்படை வேறுபாடுதான் ஒரு போலி வேஷதாரியை மன நோயாளியாக்குகிறது. ஒரு கிறிஸ்துவன் மனநோயாளி. ஓர் இந்து மன நோயாளி. ஆனால் கிருஷ்ண பரமாத்மாவிடமும் ஏசுநாதரிடமும் இருந்த மனநலம் மிகவும் மேம்பட்ட வகையைச் சேர்ந்தது

ஏசுநாதர் எதையாவது சொன்னால் அவர் அதை உணர்ந்து சொல்கிறார். கிளிப்பிள்ளையைப் போல் அடுத்தவர் சொன்னதை அர்த்தம் புரியாமல் ஒப்பிப்பதில்லை. அது அவருடைய ஞானம். அதுதான் ஏசுநாதருக்கும் அவரைப் பின்பற்றும் ஒரு சராசரி கிறிஸ்துவனுக்கும் இடையே உள்ள மிகப்பெரும் வேறுபாடு.

நீங்கள் கிறிஸ்துவராகும்போது ஏசுநாதரின் வார்த்தைகளை அப்படியே ஒப்பிக்கிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாக ஏசுநாதருடைய நிழலாகவே மாறிவிடுகிறீர்கள். உங்கள் இருப்பு நிலையையும் இழக்கிறீர்கள். உங்களையே இழக்கிறீர்கள். அதன்பின் உங்களிடம் நிஜம் இல்லை. தனித்தன்மை இல்லை. தனிச் சிறப்பு இல்லை.

ஒரு கிறிஸ்துவன் உயிரற்ற உடல் ஏற்கனவே இறந்து போனவன். ஆனால் மதமோ மறுபிறப்பைப் பற்றியது. ஒரு வகையில் பார்த்தால் ஒவ்வொரு மதமும் ஒரு சிலுவையில் அறைதல்தான். பழையது இறந்தால்தானே புதியது பிறக்க முடியும்?

ஆனால் செத்துப் போன ஒரு தத்துவத்தை. - ஒரு கோட்பாடை - ஒரு தேவாலயத்தை - நீங்கள் பின்தொடரும் போது பழையதைச் சாக விடாமல் தடுக்கிறீர்கள். புதியதைப் பிறக்கவிடாமல் தடுக்கிறீர்கள். அபாயத்தைக் கண்டால் அஞ்சி ஓடுகிறீர்கள். ஏசுநாதர் தன் ஆன்மாவை நேருக்கு நேர் சந்திக்கும்போது ஓர் அபாயகரமான நிலையில் அவர் இருக்கிறார். அதுவரை அவர் அறியாத பாதையில் பயணிக்கவும் முற்படுகிறார்.

ஒரு நாள் ஓர் இளைஞனுக்கு சந்நியாசம் கொடுத்தேன். 'அறியாததைத் தேடு' என்று உபதேசம் செய்தேன்.

'ஏன்? எப்படி? அறியாததை எப்படித் தேடமுடியும்? எனக்கு அது என்னவென்றே தெரியாதபோது அதை எப்படி எங்கே தேடுவேன்?'

நாம் அறிந்ததைத்தான் தேடிக்கொண்டிருக்கிறோம். அதனால்தான் நமக்குத் தெய்வத்தன்மை என்றால் என்னவென்றே தெரியாமல் போய்விட்டது.

தெரிந்ததைத் தேட ஆரம்பித்தால் நாம் ஒரு சிறிய வட்டத்திற்குள்ளேயே தேடிக்கொண்டிருப்போம். செக்கு இழுக்கும் மாட்டைப் போல் ஒரே இடத்தையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்போம். அதன்பின் நீங்கள் இயந்திரம் போல் ஆகிவிடுவீர்கள்.

அறியாதவற்றைத் தேடுங்கள். அப்போதுதான் உங்கள் இயந்திரத்தனமான வாழ்க்கையிலிருந்து விலகிப் போக முடியும்.

ஒரு வகையில் அந்த இளைஞன் கேட்டது சரிதான் "அறியாததை எப்படித் தேடமுடியும்?"

தெரிந்ததைக் கைகழுவுங்கள். அறிந்தவற்றைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதீர்கள். அறியாதவற்றுக்காகக் காத்திருங்கள்.

தெரிந்தவற்றைப் பிடித்துக் கொண்டு தொங்காமல் இருந்தால், அறிந்தவற்றை அப்புறப்படுத்தினால் அறியாதவை தானாக உங்களைத் தேடிவரும். அது உங்கள் வாசல் கதவருகே காத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் உங்கள் மனம் முழுவதும் தெரிந்த விஷயங்களால் நிறைந்து வழிந்து கொண்டிருக்கிறது. அதனால் அறியாதவை வாசலைத் தாண்டி வர இடம் இல்லை. அறியாதவை உங்கள் விருந்தாளியாக வரத் துடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் வீட்டுக்காரரோ (நீங்கள்தான்) அறிந்தவற்றில் மூழ்கிப் போய்க் கிடக்கிறார். அறியாத புதுமைகளைப் பார்க்கக்கூட அவருக்கு நேரம் இல்லை.

ஆமாம். என்னால் அந்த இளைஞனின் கேள்வியைப் புரிந்து கொள்ள முடிகிறது. அறியாததை எப்படித் தேடமுடியும்?. ஏனென்றால் நீங்கள் எதைத் தேடுகிறீர்களோ அது ஏற்கனவே தெரிந்த விஷயமாகத்தான் இருக்க முடியும். உங்கள் மனதால் அது அறியாத எதையும் தேட முடியாது. அறியாததை உள்ளே வராமல் தடுக்கும் மிகப்பெரிய தடுப்புச் சுவர் உங்கள் மனம்தான்.

மனம் தெரிந்தவற்றையே மீண்டும் மீண்டும் தேடிக் கொண்டிருக்கும்.. செய்ததையே மீண்டும் மீண்டும் செய்து கொண்டிருக்கும்.

மனதை உதறித்தள்ளும் வித்தைதான் தியானம். சில நொடிகளுக்காவது மனதை விலக்கி வைக்க முடிந்தால் நாம் அறியாதவற்றைப் பார்க்க முடியும். எங்கே போகிறோம் என்பதே தெரியாத இடத்துக்குப் போகமுடியும். அந்த சில நொடிகள்தான் தியானத்தின் உயிர்நாடி. அவை அழகான தருணங்கள். நீங்கள் எங்கே போகிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் யார் என்பதுகூடத் தெரியாது. உங்கள் இலக்கு என்ன என்பதும் தெரியாது. திசைகளைக்கூட அறிய மாட்டீர்கள். அறிவு என்பதே அங்கு இருக்காது.

அறிவு இல்லாதபோது அங்கு அன்பு பிறக்கும். அறிவும் அன்பும் எதிர் துருவங்கள். அறிவு மிகுந்திருக்கும் இடத்தில் அன்பு குறைந்துதான் இருக்கும். அன்பு மிகும்போது அறிவு குறையத்தான் செய்யும். அன்பு உங்களை ஞானியாக்கும். அறிவாளியாக்காது. அறிவு உங்களை சாமர்த்தியசாலியாக, சூழ்ச்சிக்காரனாக மாற்றிவிடும். ஆனால் அறிவு ஒரு போதும் அன்பைக் கொடுக்காது.

அறிந்தது மனம். அறியாதது கடவுள். ஏசுநாதர் ‘அன்பே கடவுள்’ என்கிறார். அறிய முடியாதது அன்பு

அறியாததற்குள் நுழைய அசாதாரணத் துணிச்சல் வேண்டும்.. அறிந்ததைப் பிடித்துத் தொங்குவதற்குத் துணிச்சல் தேவையில்லை. எந்தக் கோழையும் அதைச் செய்யலாம். சொல்லப்போனால் கோழைகள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

நீங்கள் ஒரு கிறிஸ்துவனாக, ஓர் இஸ்லாமியனாக, ஓர் இந்துவாக மாறும்போது கோழையாகிவிடுகிறீர்கள்.

ஆனால் நீங்கள் உண்மையான சமய உணர்வில் தோய்ந்து நிற்கும்போது அசாதாரணமான துணிச்சலுடன் விளங்குகிறீர்கள். நீங்கள் ஒரு புது அனுபவத்தைப் பெறுகிறீர்கள். அறியாததை நாடுகிறீர்கள். தெரிந்ததிலிருந்து விலகி, அளக்க முடியாததை, சொல்லால் விளக்கமுடியாததை நோக்கிப் பயணிக்கிறீர்கள்.

இதில் நீங்கள் உங்களையே தொலைத்துவிடும் அபாயம் இருக்கிறது. யார் கண்டது? இதிலிருந்து மீளமுடியாமலேயே

போகலாம். அந்தப் பேரபாயமும் இருக்கத்தான் செய்கிறது. நீங்கள் உங்கள் கட்டுப்பாடுகளை இழக்கும் அபாயம் இருக்கிறது. அவ்வளவு ஏன் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும் அபாயம்கூட இருக்கிறது. உண்மையான சமய உணர்விற்கு நீங்கள் கொடுக்கும் விலை அதுதான்.

இன்று பலரும் அச்சத்தில் இருக்கிறார்கள். அதனால் உண்மையான சமயத்தை விட்டுவிட்டு மாற்றுருக்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு இருக்கிறார்கள். கிறிஸ்துவ மதம், இந்து மதம் இஸ்லாமிய மதம் - இவையெல்லாம் ஒரு வகையில் போலிகளே. மலிவான மாற்றுருக்கள். எளிதாகக் கிடைப்பவை. நீங்கள் எதுவும் செய்ய வேண்டாம். நீங்கள் ஒரு கிறிஸ்துவக் குடும்பத்தில் பிறந்தால் போதும், கிறிஸ்துவராகிவிடுவீர்கள். இன்னொரு குடும்பத்தில் பிறந்தால் இந்துவாகிவிடுவீர்கள். நீங்கள் எதுவும் செய்யவில்லை. எதையும் மனப்பூர்வமாகத் தேர்ந்தெடுக்கவில்லை. நீங்கள் இருக்கும் இடத்திலிருந்து அரை அங்குலம் கூட நகரவில்லை. நீங்கள் தீர்த்தயாத்திரை போக வில்லை. எந்தத் தேடலிலும் இறங்கவில்லை.

மதம் என்பது உங்களுக்கு ஒரு வெற்றுருவமாக ஒரு முத்திரைச் சீட்டாக மட்டுமே இருக்கும். இந்த முத்திரைச் சீட்டுகள் ஒரு நாள் நோய்க் கிருமிகளாக மாறலாம்.

ஏன் அப்படி நிகழ்கிறது? உங்கள் உள்ளே இருக்கும் உண்மை ஒன்றாக இருக்க உங்கள் முத்திரைச்சீட்டு முற்றிலும் வேறாக இருக்கிறது.

ஓர் இந்துவை, ஓர் இஸ்லாமியனை, ஒரு கிறிஸ்துவனை, ஒரு பௌத்தனை ஒரு சமணனை ஆழமாகப் பாருங்கள். முத்திரைச்சீட்டுக்கள்தான் வித்தியாசமாக இருக்கும். அடிமட்டத்தில் ஆள் ஒரே மாதிரியாகத்தான் இருப்பான். இந்த முத்திரைச் சீட்டுக்கள்தான் இன்றுள்ள பிரச்சினைகளுக்கு மூலகாரணங்கள்.

'உங்கள் பகைவனையும் நேசியுங்கள்' என்று பைபிள் சொல்கிறது. ஆனால் உங்களால் உங்கள் நண்பனையே நேசிக்க முடியவில்லையே! அவ்வளவு ஏன், உங்களால் உங்களையே நேசிக்க முடியவில்லையே!

ஏசுநாதர் சொல்கிறார்: "உன்னை நேசிப்பதுபோல் உன் அண்டை வீட்டுக்காரனை நேசி." உங்களையே நேசிக்க முடியாதபோது உங்கள் அண்டை விட்டுக்காரனை எப்படி நேசிப்பதாம்?

அவ்வளவு ஏன் உங்கள் காதலியை, உங்கள் காதலனை நேசிக்க முடியவில்லையே? பகைவனை எப்படி நேசிப்பீர்களாம்?

நீங்கள் அன்பின் வழியை அறியமாட்டீர்கள். நீங்கள் பாசாங்கு செய்வீர்கள். பொய் வாழ்க்கை வாழ்வீர்கள். ஆஷாடபூதியாக இருப்பீர்கள்.

அது ஒரு வகையான மனநோய். நீங்கள் இரண்டு மனங்கள் உடையவராக இருப்பீர்கள். அடி ஆழத்தில் ஒரு மனிதனாகவும் மேல் மட்டத்தில் மற்றொரு மனிதனாகவும் வாழ்வீர்கள்,. உள்ளே அழுவீர்கள். வெளியே சிரிப்பீர்கள்.

இப்படி இருப்பது உங்களை இரு கூறாகக் கிழித்துவிடும். இதுதான் மனச்சிதைவு நோயின் வித்து. எல்லா மனநோய் களுக்கும் இதுவே வித்து. பலவகையான நரம்புமண்டலக் கோளாறுகளுக்கும் இதுதான் மூல காரணம்.

மதமே மனநோயின் மூலம்.

உங்கள் இதயத்தால் உணர்வுபூர்வமாக ஏற்றுக்கொள்ளப்படும் உங்களுக்கு மகிழ்ச்சியை, மனநலத்தைக் கொடுக்கும். உங்களை இந்த வாழ்க்கையைக் கொண்டாட வைக்கும். பூரண தெய்வ நலத்தை அள்ளிக் கொடுக்கும். அடுத்தவரைப் பார்த்து அது போல் வேஷம் போடும் மதம் உங்களுக்கு மன நோயைக் கொடுக்கும்; உங்களை நிரந்தர நோயாளியாக்கிவிடும்.

இந்த இரண்டு வகை மதங்களை நாம் முதலில் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். உங்கள் மதத்தை நீங்கள் மற்றவரிடம் இரவல் வாங்கியிருந்தால் அது உங்களுக்குத் தொல்லையைக் கொடுக்கும். இரவல் வாங்கிய மதம் வாழ்க்கைக்கு எதிரானது.

ஒவ்வொரு நொடியும் அத்தகைய மதம் உங்கள் வாழ்க்கையை எதிர்த்துக் கொண்டிருக்கும். உங்களை நீங்களே துன்புறுத்திக் கொள்ளும்படி செய்துவிடும்.

உங்களுக்கும் உங்கள் மதத்துக்கும் இடையே முரண்பாடுகள் தோன்றும். அதனால் உங்களை நீங்களே சித்திரவதை செய்து கொள்வீர்கள்.

குற்ற உணர்வு அதிகமாகும். நீங்கள் வாழ்க்கையில் என்ன செய்தாலும் உங்கள் மனதில் இருக்கும் குற்ற உணர்வு உங்களைச் சாடிக்கொண்டேயிருக்கும்.

நீங்கள் நிம்மதியாக ஒரு கோப்பை தேநீர் கூட அருந்த முடியாது. அதைக்கூடப் பாவச் செயல் என்று சொல்லும் மதங்கள் இருக்கின்றன.

மகாத்மா காந்தியின் ஆசிரமத்தில் தேநீர் தடை செய்யப்பட்டிருந்தது. யாராவது தேநீர் குடித்தால் அவர்களைப் பிடித்துத் தண்டித்துவிடுவார்கள். தண்டனை என்ன தெரியுமா? ஒரு நாள் பட்டினி கிடக்க வேண்டும்.

தேநீர் குடிப்பதே குற்றம் என்றால் மற்றவற்றைப் பற்றிச் சொல்ல வேண்டாம்.

இந்தத் தடைகளும் கண்டனங்களும் உங்களை முழுமையான வாழ்க்கை வாழவிடாது. முழுமையான வாழ்க்கை வாழ முடியவில்லை என்றால் உங்களால் இறைத்தன்மையை உணர முடியாது. ஏனென்றால் உங்களுக்குள் இருக்கும் அந்த ஆன்ம நெருப்பு கொழுந்து விட்டு எரிந்தால்தான் உங்கள் விறகு இரண்டு பக்கமும் நன்றாக எரிந்தால்தான் உங்கள் வாழ்க்கை முழுமை பெறும். உங்களால் இறைவனை நெருங்க முடியும்.

உங்கள் வாழ்க்கையின் முழுமை நிலையில்தான் நீங்கள் இறைவனைப் பார்க்க முடியும். அந்த உச்சத்தில்தான் அந்தப் பூரணத்துவத்தில்தான் உங்களால் இறைத்தன்மையைத் தரிசிக்க முடியும். உச்சத்தை அடையாமல் இறைத்தன்மையை உணர முடியாது.

உச்சநிலையில் ஏற்படும் அனுபவங்கள்தான் ஒருவனை நல்ல மனநலத்துடன் வைத்திருக்கும் என்று ஆப்ரஹாம் மாஸ்லோ சொல்கிறார். நல்ல மனநலத்துடன் இருக்கும் ஒருவனால் மட்டும்தான் உச்சநிலை அனுபவங்களைப் பெற முடியும் என்றும் அவரே சொல்கிறார்.

அவர் சொல்வது சரிதான். நீங்கள் உச்சத்தைத் தொடும்போது அந்தக் கணத்தில் உங்கள் அகக்கதவு திறக்கிறது. நீங்கள் பரிபூரணமாக அதில் முழுகும்போது மட்டுமே உங்கள் உள்ளே இருக்கும் கதவு திறக்கும். அந்த நிலையில் நீங்கள் தெய்வத்தின் திருவடிகளை ஸ்பரிசிக்கிறீர்கள்.

அதையே தந்த்ர சாஸ்திரமும் சொல்கிறது.

உடலுறவு கொள்ளும்போது உங்கள் உச்சநிலை முழுமையாக இருந்தால்,

உங்கள் மொத்த இருப்பு நிலையும் அந்த அனுபவத்தில் முழுமையாகத் திளைத்திருந்தால்,

உங்களின் ஒவ்வொரு நாடி நரம்பும் மகிழ்ச்சியின் உச்சத்தில் துடித்துக் கொண்டிருந்தால்,

உங்கள் உடலில் உள்ள ஒவ்வொரு அணுவும் உயிர்ப்புடன் விளங்கும் அந்த நேரத்தில் மட்டுமே,

நீங்கள் வாழ்க்கையின் சாரமான அனுபவத்தைப் பெறுவீர்கள்.

அப்போது நீங்கள் ஒரு கங்கு கரை காணாத மகா சமுத்திரமாக விளங்குவீர்கள். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. உங்களுக்கு எல்லைகளே இருக்காது.

உடலுறவில் நீங்கள் அடையும் உச்சநிலையில் நீங்கள் முதன் முதலாக இறைமையைத் தரிசிப்பீர்கள்.. சமாதி, நிர்வாணம், ஸடோரி (satori - ஜென் மதம் சொல்லும் சமாதிநிலை) என்று பல மதங்கள் பலவாறாக அனுபவிக்கும் அந்த உன்னத நிலையை நீங்கள் அடைவீர்கள்.

ஆனால் அதை அடைய உடலுறவு கொள்ள வேண்டும் என்பதில்லை. எந்த சூழ்நிலையிலும் எந்தச் செயலிலும் உங்களால் அந்த உச்ச நிலையைத் தொட்டுவிட முடியும்.

ஆனால் உங்களுடைய மதங்கள் உங்களை அந்த உச்ச நிலையைத் தொடவிடாது. அவை உங்களை செயலிழக்கச் செய்கின்றன. உங்களை முடமாக்குகின்றன. உங்களைச்

சுருக்குகின்றன. குறைந்த பட்ச வாழ்க்கையையே உங்களுக்கு அவை அனுமதிக்கின்றன. அடிப்படைத் தேவைகளை மட்டுமே தீர்த்துக் கொள்ள அனுமதிக்கின்றன.

துறவுக்கு அவை சொல்லும் விளக்கமும் அதுதான். குறைந்த பட்ச வாழ்க்கை. அடிப்படைத் தேவைகளுக்கு மட்டுமே அனுமதி.

எப்படி நிரம்பி வழிவது என்று உங்கள் மதங்கள் உங்களுக்குச் சொல்லித் தருவதில்லை. எப்படி உங்களை நீங்கள் மேலும் மேலும் குறுக்கிக் கொள்வது என்பதை மட்டுமே சொல்லித் தருகின்றன.

அவை உங்களைக் குறுகலான குகைகளாக மாற்றி விடுகின்றன. உண்மையான மதம் உங்களைத் திறக்கிறது. பரந்து விரிந்து கிடக்கும் ஆகாசத்தைப் போல் உங்களைத் திறந்த வெளியாக்குகிறது.

உண்மையான மதம் நேர்மறையானது. ஏசுநாதர் நேர்மறை யானவர். வாழ்க்கையைத் தீவிரமாகக் காதலித்தவர். ஆனால் கிறிஸ்துவர்கள் எதிர்மறையானவர்கள். வாழ்க்கையை வெறுப்ப வர்கள்.

கிருஷ்ண பரமாத்மா நேர்மறையானவர். வாழ்க்கையை ஒரு திருவிழாவாகக் கொண்டாடியவர். நடனம் பாட்டு காதல் என்று கோலாகலமாக வாழ்ந்தவர். ஆனால் இந்துக்கள் அப்படியில்லை. அதுவும் இந்து மதத்தின் சாமியார்கள் வாழ்க்கையை வெறுப்பவர்கள். எதிர்மறை எண்ணங்களை உடையவர்கள். வாழ்க்கையில் விஷத்தைப பாய்ச்சுபவர்கள்.

உங்கள் மதம் உங்கள் அனுபவத்தில் விளைந்ததாக இருந்தால் உங்களால் இந்த வேறுபாட்டை உணர முடியும். அப்போது உங்கள் மதம் வாழ்க்கையை ஏற்றுக் கொள்வதாக இருக்கும்.

நீங்களும் வாழ்க்கையை ஏற்றுக் கொள்வீர்கள். வருவது அனைத்தையும் ஏற்றுக்கொண்டால் அந்த ஆண்டவனின் தன்மை உங்களுக்கு வந்துவிடும்..

ஆனால் உங்கள் மதம் வெறும் கட்டுப்பாடுகளாக மட்டும் இருந்தால் - இரவல் வாங்கப்பட்ட மாற்றுருவாக - போலியாக -பொய்யாக இருந்தால் - அது வாழ்க்கையைக் கண்மூடித்தனமாக எதிர்க்கும்.

உங்களுக்கு வாழவே பயமாக இருக்கும். எப்போதும் உங்கள் மனதில் ஒரு குற்ற உணர்வு இருந்து கொண்டேயிருக்கும். எதைச் செய்வது எதைச் செய்யக் கூடாது என்ற குழப்பம் இருந்து கொண்டேயிருக்கும்.

“இது சரியா, தவறா? இது நல்லதா, கெட்டதா?” போன்ற கேள்விகள் உங்களைச் சதா சர்வகாலமும் உறுத்திக் கொண்டேயிருக்கும்.

இரவல் வாங்கிய கோட்பாடுகளால் அமைக்கப்பட்ட மதம் ஒழுக்க விதிகளைத் தாண்டிச் செல்வதில்லை. உண்மையான மதம் ஒழுக்க விதிகளுக்கு அப்பாற்பட்டது.

இதைப் புரிந்து கொண்டால்தான் உங்களால் கபீர்தாசின் சூத்திரங்களைப் புரிந்து கொள்ள முடியும்.

கபீர் இந்துவோ, இஸ்லாமியரோ, கிறிஸ்துவரோ இல்லை. அவர் ஓர் உண்மையான மனிதர். அவருடைய சொற்கள் மிகவும் தூய்மையானவை. அவர் எதைப் பற்றியும் பயப்படவில்லை. கவலைப்படவில்லை. மனதில் தோன்றியதை அப்படியே சொன்னார்.

அவருடைய சூத்திரங்களுக்குள் நுழையும் முன் இன்னும் சில விஷயங்களை நினைவு கொள்ள வேண்டும்.

ஒன்று: பல நூற்றாண்டுகளாக மதம் என்பது வாழ்க்கையிலிருந்து தப்பி ஓடும் ஒரு வழியாகத்தான் இருந்திருக்கிறது.

“வாழ்க்கையிலிருந்து விடுபட்டு ஓடு. உலக வாழ்க்கை தவறு. ஒரு துறவியாக இரு. ஒரு சந்நியாசியாக இரு. வாழ்க்கையிலிருந்து விலகி ஓடு.” என்றுதான் காலம் காலமாகச் சொல்லி வந்திருக்கிறார்கள்.

உயிருடன் இருப்பது பாவம் என்றும் வாழ்க்கையே ஒரு தண்டனை என்றும் பல காலமாகப் போதித்து வந்திருக்கிறார்கள்.

அப்படித்தான் மதத்தில் தோய்ந்தவர்கள் பலரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் உங்கள் முந்தைய பிறவிகளில் செய்த பாவங்களுக்குத் தண்டனையாகத்தான் உங்களுக்கு இந்தப் பிறவி கிடைத்திருக்கிறது என்று உபதேசம் செய்தார்கள்.

உங்களைத் தண்டிப்பதற்காகத்தான் உங்களை இந்த உலகில் கொண்டு வந்து போட்டிருக்கிறார்கள் - இது தான் இந்து மதத்தின் தத்துவம்.

கிறிஸ்துவர்களின் தத்துவம் இன்னும் மோசமானது. அது உங்களை இன்னும் பெரிய பாவியாக்குகிறது. உலகத்தின் முதல் மனிதன் கடவுளுக்குக் கீழ்ப்படிய மறுத்துவிட்டான் - அதனால் பிறக்கும் ஒவ்வொரு மனிதனும் பாவியாகவே பிறக்கிறான். நீங்கள் பாவத்தில்தான் பிறக்கிறீர்கள் என்று கிறிஸ்துவ மதம் சொல்லுகிறது.

பௌத்த மதத்தினரோ இந்த வாழ்க்கையே ஒரு சிறை என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சிறையிலிருந்து எவ்வளவு விரைவில் விடுதலை பெறமுடியுமோ அவ்வளவு நல்லது என்று சொல்கிறார்கள்.

கடவுளே! வாழ்க்கையிலிருந்து தப்பித்து ஓடுவதா? பல நூற்றாண்டுகளாக ஒரே ஒரு பிரார்த்தனைதான் மனிதன் மனதில் நிலைத்து நின்றிருக்கிறது. "இறைவா தயவு செய்து என்னை மீண்டும் இந்த உலகத்திற்கு அனுப்பாதே" என்பதுதான் அந்த பிரார்த்தனை.

நான் துறவறத்தை வலியுறுத்தவில்லை என்று கபீர் சொல்கிறார். வாழ்க்கையிலிருந்து விலகி ஓடு என்று சொல்லவில்லை. கடவுள்தான் இந்த உலகத்தைப் படைத்தார் என்றால் உலகம் அழகாகத்தானே இருக்க வேண்டும்? கடவுளிடமிருந்து உலகம் வந்ததென்றால் அது ஒரு வரப்பிரசாத மாகத்தானே இருக்க வேண்டும்? அது எப்படி ஒரு தண்டனை யாக, சிறையாக இருக்க முடியும், சொல்லுங்கள்!

இது ஒரு மகா வாக்கியம். கண்ணால் காணும் இந்த உலகம் ஒரு வரப்பிரசாதம். தண்டனையல்ல. கடவுள் உங்களை

ஓர் இருட்டுச் சிறைக்குள் தள்ளவில்லை. இந்த உலகமே ஒரு கொண்டாட்டம். கடவுளுக்கு உங்கள்மேல் அதீத அன்பு இருப்பதனால்தான் நீங்கள் ஆடிப்பாடி மகிழ இந்த உலகத்தை உங்களுக்குக் கொடுத்திருக்கிறார்.

கபீர் துறவறத்தை எதிர்க்கிறார். கொண்டாடுவதை ஆதரிக்கிறார். அது முதல் கோட்பாடு. இரண்டாவதாக அவர் சொல்வது வாழ்க்கை என்றாலே சேர்ந்து இருப்பதுதான்.

வாழ்க்கையின் உயிர்நாடி சங்கம். அல்லது சமுதாயம்.

வாழ்க்கை என்பது ஒரு பெரிய சங்கம், சேர்க்கை.; எனவே வாழ்க்கையிலிருந்து தப்பித்து ஓடப் பார்க்காதீர்கள். தனியாக வாழவும் முயற்சி செய்யாதீர்கள் என்று சொல்கிறார்.

மற்ற மனிதர்களோடு சேர்ந்து வாழ்வதில்தான் வாழ்க்கையின் செழிப்பு இருக்கிறது. சமுதாயம்தான் உங்களைச் செழிப்பாக்குகிறது. பலதரப்பட்ட உறவுகள்தான் வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுக்கின்றன.

மற்றவர்களோடு உங்களுக்கு எந்த அளவிற்கு வலுவான உறவு இருக்கிறதோ அந்த அளவுக்கு நீங்கள் செழிப்புடன் வாழ்வீர்கள்.

இமயமலையில் ஒரு குகையில் வாழும் ஒரு தனிமனிதன் பரம ஏழை. அவனுள் உறவென்னும் ஆறுகள் ஓடுவதில்லை யாதலால் அவன் ஒரு வறண்ட பாலைவனமாகவே வாழ்கிறான்.

ஒவ்வொரு முறையும் யாராவது ஒருவர் உங்களைப் பார்க்கும் போது உங்களுக்குள் ஓர் ஆறு ஓடுகிறது. ஒவ்வொரு முறையும் ஒருவர் உங்கள் கைகளைப் பற்றிக் குலுக்கும்போது உங்களுக்குள் ஒரு சக்தி நுழைகிறது. ஒவ்வொரு மனிதத் தொடர்பிலும் உங்களுக்கு ஏதோ ஒரு லாபம் கிடைக்கிறது.

எல்லா மனிதத் தொடர்புகளையும் துண்டித்துவிட்டு எல்லா உறவுகளையும் அறுத்துக்கொண்டு இமயமலையில் உள்ள குகையில் தனியாளாக சந்நியாசியாக அமர்வது தற்கொலை செய்து கொள்வதற்குச் சமம்.

அந்த நிலையில் உங்களிடம் ஒரு சதவிகிதம்தான் உயிர் இருக்கிறது. நீங்கள் மூச்சுக்காற்றை இழுத்து விடுவதால் உயிருடன் இருக்கிறீர்கள் என்று அனுமானிக்க வேண்டியிருக்கிறது.

இது ஒருவகையில் மரணம்தான். நீங்கள் குறைந்த பட்ச வாழ்க்கை வாழ்கிறீர்கள். சொல்லப் போனால் நீங்கள் வாழவேயில்லை. வாழவேண்டுமே என்ற வெறுப்புடன் தயக்கத்துடன் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள்.

'ஐயோ இப்படி வாழ வேண்டி வந்துவிட்டதே! என்னை வற்புறுத்தி வாழ வைத்துவிட்டார்களே' என்று குறைப்பட்டுக் கொண்டே வாழும் அந்த அரைகுறை வாழ்க்கை எப்படி வாழ்க்கையோடு சேர்த்தி?

உங்களுக்கு இந்த உலகம் பிடிக்கவில்லை. வண்ணங்கள் நிறைந்த வானவில், அழகான மரங்கள் விண்மீன்கள் மனிதர்கள் - எதுவுமே பிடிக்கவில்லை. யாருடனும் உறவு பாராட்ட நீங்கள் விரும்பவில்லை.

மற்ற மனிதர்களோடு நீங்கள் உறவு வைத்துக் கொள்ள விரும்பவில்லையென்றால் இறைவனுடன் உங்களுக்கு இருக்கும் தொடர்பு வெகுவாகக் குறைந்துவிடுகிறது.

நீங்கள் ஒரு மனிதனுடன், ஒரு மரத்துடன் ஒரு விலங்குடன் தொடர்பு கொள்ளும்போது இறைத்தன்மையின் பல்வேறு படிவங்களுடன் தொடர்பு கொள்கிறீர்கள்.

மற்ற மனிதர்களோடு ஒரு சமுதாயமாகச் சேர்ந்து வாழ்வதுதான் உண்மையான வாழ்க்கை என்று கபீர் சொல்கிறார். உறவுகள்தான் வாழ்க்கை. உறவுகள் அழகானவை.

மூன்றாவதாகக் கபீர் சொல்வது: மதத்தை வெறும் சடங்காக மாற்றிவிடாதீர்கள். சடங்கு மதத்தைத் தவிர்க்கும் வழி. மதம் என்பது தன்னார்வத்தின் விளைவாக இருக்க வேண்டும். வெறும் சடங்காச்சாரமாக இருக்கக் கூடாது. மதம் தொடர்பான செயல்களை நீங்கள் விரும்பிச் செய்ய வேண்டும். அதைக் கடமையாக நினைத்துக் கடனே என்று செய்யக்கூடாது.

உங்கள் இதயம் அதை விழையும்போது மட்டுமே செய்ய வேண்டும். தினமும் கோயிலுக்கும் மசூதிக்கும் போக வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரே மாதிரியாக மீண்டும் மீண்டும் தினமும் ஜெபம் செய்ய வேண்டிய தேவையில்லை - ஏனென்றால் நீங்கள் ஒரே ஜெபத்தைத் தினமும் செய்தால் அதில் உங்கள் உணர்வுகள் இருக்காது. வெறும் இயந்திரத்தனமாக இருக்கும்.

நான் இதைக் கேட்டிருக்கிறேன்.

ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த ஓர் அறிஞர் இந்தியாவில் இருந்த ஒரு வயதுமுதிர்ந்த வேதப் பண்டிதரைப் பார்க்க வந்தார். அந்தப் பண்டிதர் மிகவும் பிரபலமாக இருந்தார். அவருக்கு ரிக் வேதம் அத்துப்படி. மொத்த வேதத்தையும் மனப்பாடமாக வைத்திருந்தார் அந்தப் பண்டிதர். அவர் பிரபலமானதற்குக் காரணமே அதுதான்.

இங்கே நாம் கவனமாக இருக்க வேண்டும். அவர் முற்றும் உணர்ந்த ஞானி இல்லை. பண்டிதர் அவ்வளவுதான். நல்ல ஞாபக சக்தி கொண்ட ஒரு படிப்பாளி. அவரை ஒரு நல்ல கணினி என்று சொல்லலாம். ஆனால் சத்தியமாக ஞானி என்று சொல்ல முடியாது.

ஜெர்மன் நாட்டு அறிஞர் ரிக் வேதத்தின் சில பகுதிகளை அந்தப் பண்டிதருடன் விவாதிப்பதற்காக வந்திருந்தார். அந்தப் பகுதிகளை வேத பண்டிதர் முன் சொல்லிக் காட்டினார்.

"இவற்றைப் பற்றி உங்களுடன் விவாதிக்க விரும்புகிறேன்"

"இதை நான் இதுவரை கேட்டதேயில்லையே!" என்றார் நமது பண்டிதர். ஏனென்றால் ஜெர்மானிய அறிஞர் அவை ரிக் வேதத்தின் பகுதிகள் என்று சொல்லவில்லை. அதனால்தான் பண்டிதர் அவற்றைப் பற்றிக் கேட்டதேயில்லை என்று சொல்லி விட்டார்.

ஜெர்மானியருக்கு ஆச்சரியம்.

"உங்களுக்கு மொத்த ரிக் வேதமும் தலைகீழ்ப்பாடம் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். நீங்கள் இந்தப் பகுதிகளை இதுவரை கேட்டதில்லை என்று சொல்கிறீர்களே?"

"என்னால் பகுதிகளை நினைவில் வைத்துக் கொள்ள முடியாது. எனக்கு மொத்த வேதமும் தெரியும். ரிக் வேதம் தொடக்கத்தில் இருந்து முடிவு வரை தங்கு தடையில்லாமல் ஒப்பிக்க முடியும். ஆனால் நடுவே இரண்டு வாக்கியங்களைச் சொன்னால் எனக்குத் தெரியாது."

இது போல் பலமுறை நடந்திருக்கிறது. மொத்தத்தையும் நீங்கள் எளிதாகச் சொல்லிவிட முடியும் அப்படிச் சொல்வதில் எந்தத் தன்னுணர்வும் இல்லை. ஒலிப்பதிவுக் கருவி தான் பதிவு செய்ததை அப்படியே கக்குவதைப் போல் இயந்திரத்தன மான செய்கை அது. நடுவே ஏதாவது கேட்கப்பட்டால் அது நீங்கள் அறிந்ததுதான் என்பதுகூட உங்களுக்குத் தெரியாது.

அந்தப் பண்டிதர் சொன்னது போல் அது உங்களுக்கு முழுமையாகத் தெரியும். அதன் பகுதிகள் தெரியாது. அதிலிருந்து ஒரு வாக்கியத்தைச் சொன்னால் தெரியாது. உங்களுக்குத் தெரிந்ததை வைத்துக் கொண்டு நீங்கள் சடங்குகள் செய்யலாம். தினமும் மசூதிக்குச் சென்று நமாஸ் செய்யலாம். நமாஸ்தானே இஸ்லாமியர்களின் யோகப்பயிற்சி?

இல்லை இந்து மதச் சடங்கைச் செய்யலாம். இல்லை வேறு எந்த மதச் சடங்கையும் செய்யலாம். ஏன், நீங்களாகவே ஒரு சடங்கை உருவாக்கி அதைத் தினமும் செய்யலாம். தினமும் நீங்கள் அதை ஆசாரத்துடன் செய்யலாம். அது உங்களுக்குப் பழக்கமாகிவிடும். ஆனால் ஒரு நாளும் அது உங்கள் நிலையை உயர்த்தாது.

கபீர் சொல்கிறார்: எப்போதும் இயல்பாக இருங்கள். நீங்கள் அமைதியாக அமர்ந்திருக்கும் போது உங்கள் மனதில் ஒரு பிரார்த்தனை எழுந்தால் அதைச் சொல்லுங்கள். யாரோ சொல்லி வைத்த வழக்கமான முறை சார்ந்த பிரார்த்தனையைச் செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை. உங்களுக்கு என்ன சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் சொல்லுங்கள்.

ஏசுநாதர் பிரார்த்தனை செய்வதில் ஒரு மகத்தான உள்ளுணர்வைக் கொண்டுவந்தார். கடவுளைக் குறிக்க அவர்

abba என்ற சொல்லைப் பயன்படுத்தினார். கிறிஸ்துவர்கள் இதைத் "தந்தை" என்று மொழி பெயர்த்தார்கள். பிதா என்று சொன்னார்கள். அதனால்தான் அவர்கள் ஜெபம் செய்யும் போது பரமண்டலத்தில் இருக்கும் எங்கள் பரம பிதாவே என்று சொல்கிறார்கள்.

ஆனால் அந்த மொழிபெயர்ப்பு தவறு. Abba என்பது தந்தையைச் செல்லமாக அழைக்கும் பெயர். அதை 'அப்பா' 'பா' அல்லது daddy என்று வேண்டுமானால் மொழி பெயர்க்கலாம். இந்த abba என்ற சொல்லை ஏசுநாதர்தான் முதலில் உள்ளே கொண்டு வந்தார். அவருக்கு முன்னால் யூதர்கள் இறைவனை அந்தப் பெயரிட்டு அழைக்கவில்லை. ஆண்டவனைச் செல்லமாக 'அப்பா' 'பா' 'daddy' என்று அழைப்பது அந்தக்காலத்தில் பெரிய தெய்வ நிந்தனையாக இருந்திருக்க வேண்டும். ஆனால் அந்தச் சொல்தான் இயல்பாக, தன்னிச்சையாக, அன்பு கொண்டதாக அந்நியத்தன்மை இல்லாமல் இருக்கிறது.

இறைவனைத் தந்தை என்று அழைப்பது சரியில்லை. அது ஏதோ மருத்துவச் சொல் போலத் தோன்றுகிறது. அதில் அன்பு இல்லை. காதல் இல்லை. நெருக்கம் இல்லை. உயிரே இல்லை. அது ஒரு சம்பிரதாயமான வார்த்தை. அப்பா என்ற சொல் வேறு வகையைச் சேர்ந்தது.

இறைவனை ஏசுநாதர் abba என்று அழைப்பதைக் கேட்டு யூதர்கள் ஆத்திரம் அடைந்தார்கள்.

"யார் இந்த ஏசு? இவன் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான்?" என்று பொங்கி எழுந்தார்கள். அவர்களால் ஏசுநாதரை மன்னிக்க முடியவில்லை.

என்றாலும் ஏசுநாதரின் பிரார்த்தனை இயல்பாக அன்பு மிகுந்ததாக இருந்தது. அதில் போலியான மரியாதையோ சடங்காச்சாரமோ இல்லை.

சில நேரங்களில் ஏசுநாதர் தன் சீடர்களிடம் சொல்லுவார்.

"நான் இப்போது பிரார்த்தனை செய்ய விரும்புகிறேன். அதற்கான உந்துதல் எனக்கு இப்போது வலுவாக இருக்கிறது."

சில நேரங்களில் மக்கள் கூட்டத்திடையே பிரசங்கம் செய்து கொண்டிருக்கும் போது திடீரென்று தன் சீடர்களைப் பார்த்துச் சொல்வார்:

“வாருங்கள் நாம் இப்போது ஒரு தனியிடத்தை நாடிச் செல்வோம். எனக்கு ஜெபம் செய்ய வேண்டும் போல் இருக்கிறது.”

ஏசுநாதருக்குப் பிரார்த்தனை என்பது ஒரு சடங்கல்ல. ஓர் உணர்வு. அதை அவர் தன் தலையால் - மூளையால் - செய்யவில்லை. இதயத்தால் அன்பால் செய்தார். அத்தகைய உணர்வுகளால் உங்கள் இதயத்தை நிரம்பி வழியவிடுங்கள்.

சில நேரம் நீங்கள் மௌனமாக இருக்க நேரிடும். அப்போது உங்களிடமிருந்து எதுவும் வெளியே வராது - உங்கள் மௌனத்தைத் தவிர. மௌனத்திலும் வழிபாட்டு உணர்வு இருக்கிறது. சில நேரங்களில் வார்த்தைகளால் கோக்கப்பட்ட பிரார்த்தனையைவிட மௌனமாகச் செய்யப்படும் பிரார்த்தனையில் இன்னும் அதிகமான வழிபாட்டுணர்வு இருக்கிறது. சில நேரங்களில் உங்களிடமிருந்து வார்த்தைகள் வரலாம்.

அப்படி வரவில்லை என்றால் வார்த்தைகளை வற்புறுத்தி வரவழைக்காதீர்கள். நீங்கள் என்ன நாடகமா போடுகிறீர்கள்? உள்ளிருந்து என்ன வருகிறதோ அதை அப்படியே சொல்லுங்கள். அதை மேம்படுத்த நினைக்காதீர்கள்.

பிரார்த்தனை செய்வதற்கு ஒத்திகை செய்யாதீர்கள். பிரார்த்தனை இயல்பாக தன்னிச்சையாக உங்களிடம் மலரட்டும்.

அதைத்தான் கபீர் ஸஹஜ் என்ற வார்த்தையால் குறிப்பிடுகிறார். அந்தச் சொல்லுக்கு இயல்பான இயற்கையான என்று பொருள். நீங்கள் இயல்பாக இருந்தால் படிப்படியாக சமாதி நிலைக்கு வருவீர்கள் என்று சொல்கிறார் கபீர்.

கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் உங்களுக்கு உள்ளே இருக்கும் அந்த வெளியில் நுழைவீர்கள். அப்போது பார்க்கும் காட்சிகள் அனைத்தும் மறைந்துவிடும். ஓர் அழகான வெற்றிடம், சூன்யம், எதுவுமே இல்லாத ஆகாசம் மட்டுமே மிஞ்சியிருக்கும்.

அந்த வெற்றிடத்தில்தான் பரம்பொருள் வந்து இறங்கும். நீங்கள் பூரணத்துவம் பெறுவீர்கள்.

இதைத்தான் ஸஹஜ சமாதி என்று கபீர் சொல்கிறார். அது தன்னிச்சையாக ஏற்படும் ஓர் ஆனந்த பரவச நிலை.

உங்கள் மொத்த வாழ்க்கையிலும் இந்த வழிபாட்டு உணர்வு ஊடுருவ வேண்டும் என்று கபீர் சொல்கிறார். மதம் உங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருக்கக் கூடாது. அதுவே உங்கள் வாழ்க்கையாக இருக்க வேண்டும். காலை எழுந்து உங்கள் பூஜையறையில் கண்ணை மூடிக் கொண்டு ஜபம் செய்வதால் மட்டும் மதத்துடனான உங்கள் உறவு முடிந்துவிடாது.

ஞாயிற்றுக்கிழமை தேவாலயத்திற்குச் சென்று தொழுது திரும்பிவிட்டால் பாக்கி ஆறு நாட்கள் ஹாய்யாக இருக்கலாம் என்று தப்புக் கணக்குப் போடாதீர்கள். அது மதம் இல்லை. சடங்காச்சாரம்.

உங்களுக்கு மதம் முக்கியம் என்றால் சமய உணர்வு எந்த நேரத்திலும் உங்களிடத்தில் மிகுந்திருக்க வேண்டும்.

உண்ணும் போதும் பேசும் போதும் நடக்கும் போதும் அடுத்தவர் பேச்சைக் கவனிக்கும் போதும் உங்களுக்குள் வழிபாட்டு உணர்வு மேலோங்கியிருக்க வேண்டும். உங்கள் செயல்களிலும் செய்யாமையிலும் வழிபாட்டுணர்வு ஊடுருவட்டும். உறங்கும் போதும் அந்த உணர்வு இருக்க வேண்டும். அப்போது தான் இயல்பான பரவச நிலையை உங்களால் அடைய முடியும்.

இந்த இயல்பான பரவச நிலையை கபீர் பெரிதும் நேசிக்கிறார். பரவச நிலையில் இரண்டு வகை உண்டு என்று சொல்கிறார் கபீர். ஒன்று பயிற்சியால் வருவது. நிர்ப்பந்தத்தால் வருவது. யோகிகள் அப்படித்தான் பரவச நிலையை அடைகிறார்கள். சுவாசப் பயிற்சி யோகப் பயிற்சி மூலம் அந்த நிலையை அடைகிறார்கள். அதற்கான பயிற்சியில் சதா ஈடுபட்டிருக்கிறார்கள். அது பிரயத்னத்தால் வருவது.

பயிற்சியால் வருவது பொய்யாகத்தான் இருக்கும் என்பது கபீரின் கருத்து. அது வெளியுலகத்திற்காக அரங்கேறும் ஒரு நாடகம் அவ்வளவுதான்.

இரண்டாவது, பயிற்சி மூலமாக இல்லாமல் சுய முயற்சியால் இல்லாமல் நிர்ப்பந்தம் எதுவும் இல்லாமல் வரும் ஆனந்த பரவச நிலையே உயர்வானது என்று தன் சீடர்களுக்கு அடிக்கடி சொல்லுவார் கபீர்.

பரவச நிலைக்குப் பயிற்சி கூடாது. பயிற்சி பரவசநிலையை நச்சுத் தன்மை உடையதாய்ச் செய்துவிடும்.

நாடகத்திற்கு ஒத்திகை பார்ப்பது போல் பரவச நிலைக்கு ஒத்திகை பார்க்க நினைப்பது பைத்தியக்காரத்தனம்.

நீங்கள் அழுத்தம் இல்லாமல் தளர்வாக இயல்பாக இருக்க வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக அந்தப் பரவச நிலையில் மறைய வேண்டும்.

*வழிப்போக்கனைத் தன் வீட்டிற்குள் அழைத்துக் கொள்பவன்*
*எனக்கு மிகவும் நெருக்கமானவன்*
*இல்லத்தில்தான் உண்மையான சங்கம் இருக்கிறது.*
*இல்லத்தில்தான் வாழ்க்கையை அனுபவிக்க முடியும்.*
*பின் நான் ஏன் வீட்டைத் துறந்து*
*காட்டில் அலைந்து திரிய வேண்டும்?*
*நான் ஞானம் பெற வேண்டும் என்று பிரமன் நினைத்தால்*
*நான் என் வீட்டிலேயே*
*பந்தத்தையும் முக்தியையும் பார்த்துவிட முடியும்.*

கபீர் வீட்டை நேசித்தவர். 'வீட்டைத் துறந்து வெளியில் போகாதே, சந்நியாசியாக மாறாதே. துறவறம் பூணாதே. வழிப்போக்கனாக அலையாதே' என்று சொல்கிறார்.

உங்கள் குடும்பத்துடன் கூடி இருங்கள். துறவறம் தேவையில்லை. உங்களுக்குக் கொடுக்கப்பட்ட சூழ்நிலையை

மாற்ற முயற்சிக்காதீர்கள். அதை ஏற்றுக் கொள்ளுங்கள். கடவுள் உங்களுக்குக் கொடுத்ததெல்லாம் நல்லவைதான். அவற்றை நன்றியுடன் ஏற்றுக்கொள்ளுங்கள். அதை மறுக்காதீர்கள். அதை மறுப்பது கடவுளையே மறுப்பதாகும்.

அம்மா, அப்பா, சகோதரன், சகோதரி, மனைவி, குழந்தைகள் - என்னவெல்லாம் இயற்கையாக நிகழ்ந்ததோ அதை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். செயற்கையாக ஒரு சூழ்நிலையை உருவாக்க முயற்சிக்காதீர்கள். செயற்கையின் மூலமாக நீங்கள் இயற்கையை ஒரு நாளும் அடைய முடியாது. யாருமே ஒரு துறவியாக ஒரு சந்நியாசியாகப் பிறப்பதில்லை.

எல்லாரும் ஒரு குடும்பத்தில் ஒரு சமுதாயத்தில்தான் பிறக்கின்றனர். அனைவரும் ஒரு தாய்-தந்தைக்குத்தான் பிறக்கின்றனர். ஒவ்வொரு மனிதனும் ஓர் அன்புச் சூழலில்தான் பிறக்கிறான். துறவறம் மனிதனின் கண்டுபிடிப்பு. குடும்பம் கடவுள் கொடுத்தது.

*வழிப்போக்கனைத் தன் வீட்டிற்குள் அழைத்துக் கொள்பவன்*

*எனக்கு மிகவும் நெருக்கமானவன்*

மனம் போன போக்கில் சுற்றித் திரிபவனை வீட்டிற்குச் செல்ல உதவுபவன் எனக்கு நெருக்கமானவன் என்று கபீர் சொல்கிறார்.

கபீர் மட்டும் இன்று இங்கு இருந்திருந்தால் என்மேல் அன்பைப் பொழிந்திருப்பார். ஏனென்றால் நான் பல வழிப் போக்கர்களை, சுற்றித் திரிபவர்களை வீட்டிற்கு அனுப்பியிருக் கிறேன். வீட்டை விட்டு வெளியேற இருந்தவர்களை வெளி யேறாமல் தடுத்திருக்கிறேன்.

யார் எங்கே இருக்கிறார்களோ அவர்களை அங்கேயே இருக்க வைக்க நான் உதவியிருக்கிறேன்.

அவர்களுடைய வெளிப்புறச் சூழ்நிலையை நான் மாற்றவில்லை. அந்த மாற்றத்திற்கு நான் உதவவும் இல்லை. அவர்கள் தங்களையே மாற்றிக்கொள்ளத்தான் உதவி செய்திருக் கிறேன்.

சூழ்நிலையை மாற்றிக்கொள்வது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதற்கு ஒப்பாகும். அதனால் நமக்கு எந்தப் பயனும் இல்லை. உங்கள் மனநிலையை உள்ளுணர்வை மாற்றிக்கொள்ள வேண்டும்.

*வழிப்போக்கனைத் தன் வீட்டிற்குள் அழைத்துக் கொள்பவன்*

*எனக்கு மிகவும் நெருக்கமானவன்*

வெளியே போய்விட்டவனை வீட்டிற்குத் திரும்பி அழைக்க வேண்டும். அவனைத் தன் குடும்பத்திற்குத் திரும்ப வைக்க வேண்டும்., மீண்டும் இந்த உலத்திற்கு அன்பிற்கு உறவுகளுக்கு அழைக்க வேண்டும்.

*இல்லத்தில்தான் உண்மையான சங்கம் இருக்கிறது.*

*இல்லத்தில்தான் வாழ்க்கையை அனுபவிக்க முடியும்.*

*பின் நான் ஏன் வீட்டைத் துறந்து*

*காட்டில் அலைந்து திரிய வேண்டும்?*

*நான் ஞானம் பெற வேண்டும் என்று பிரமன் நினைத்தால்*

*நான் என் வீட்டிலேயே*

*பந்தத்தையும் முக்தியையும் பார்த்துவிட முடியும்.*

ஆம். இல்லம்தான் பந்தம். இல்லம்தான் முக்தி. இல்லம் பந்தமா முக்தியா என்பது உங்களைப் பொறுத்து இருக்கிறது. நீங்கள் வீட்டிற்கு எதிராக இருந்தால் அது ஒரு பந்தம்போல் தோன்றும். நீங்கள் வீட்டை எதிர்க்கவில்லையென்றால் அதுவே உங்கள் முக்திக்கு உதவும். அது உங்கள் மனப்பாங்கைப் பொறுத்தது. உங்களைப் பிணைக்கும் சங்கிலிகள் கூட உங்கள் விடுதலைக்குக் கருவியாகலாம். உங்கள் சுதந்திரம் கூட உங்களைப் பிணைக்கும் சங்கிலியாகலாம்.

*ஆண்டவன் என்னும் மகாசமுத்திரத்தின்*

*ஆழத்திற்குச் செல்பவனே எனக்கு உகந்தவன்*

*ஆண்டவனை நினைக்கும் போது எவனுடைய மனம்*

*தன்னையே எளிதாக இழக்கிறதோ அவன் எனக்கு நெருக்கமானவன்.*

வார்த்தைகளைக் கூர்ந்து கவனியுங்கள். எளிதாக இழக்கிறதோ.. எந்தவித சுய முயற்சியும் இல்லாமல் எந்த மனம் ஆண்டவனில் ஆழ்ந்து கரைகிறதோ..

*இறைவனை அறிந்தவன் எனக்கு நண்பன்*

*இறைவனின் மேலான உண்மைநிலையைத் துய்ப்பவன்*

*எனக்கு நெருக்கமானவன்*

*அன்பையும் துறத்தலையும் ஒன்றாக இணைத்து*

*முதலும் முடிவும் அற்ற இறைமையின்*

*இனிமையான ராகத்தை இசைப்பவன் எனக்கு உகந்தவன்*

இதுதான் உச்சகட்ட இசைவு. அன்பையும் துறவறத்தையும் இணைக்கும் அற்புதமான இசைவு.

மக்கள் என்னிடம் வந்து புலம்புகிறார்கள்.: "நீங்கள் புதுவகையான துறவிகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். இந்தத் துறவிகள் இல்லங்களிலேயே வசிக்கிறார்களே! என்ன துறவிகள் இவர்கள்?"

ஏனென்றால் பழைய முறைப்படி துறவி என்றால் வீட்டைத் துறந்து காட்டுக்குச் செல்ல வேண்டும். தன் குடும்பத்தைத் துறந்து சொந்த பந்தத்தை எல்லாம் துறந்து நாடெங்கும் சுற்றித் திரியும் வழிப்போக்கனாக இருக்க வேண்டும். இது ஒரு துறவிக்கான பழைய வரைமுறை.

"உங்கள் துறவிகளை நீங்கள் எப்படி துறவிகள் என்று அழைக்கலாம்? அவர்கள் வீட்டை விட்டுப் போவதில்லை. மனைவி மக்களுடன் வசிக்கிறார்கள். அன்புநிலையிலேயே வாழ்கிறார்கள். அவர்கள் எப்படி துறவிகள் ஆவார்கள்?"

அவர்கள்தான் உண்மையான துறவிகள். ஏனென்றால் பழைய வகையினரின் வாழ்வில் ஓர் இசைவு இல்லை. பழைய துறவிக்குள் பிரிவுகள் இருந்தன. முரண்பாடுகள் இருந்தன. அவரிடம் முழுமையில்லை.

என் துறவிகள் முழுமையானவர்கள். அவர்கள் அனைத்தையும் துறந்துவிட்டார்கள். ஆனால் எதிலிருந்தும் தப்பிக்கவில்லை. அன்புநிலையில் வாழ்வார்கள். ஆனால் அந்த அன்பைப் பிடித்துக் கொண்டு தொங்க மாட்டார்கள் - அதுதான் அவர்கள் துறவு. அவர்கள் பொருள்களைப் பயன்படுத்துவார்கள். ஆனால் பொருள்கள் அவர்களைப் பயன்படுத்தாது - அதுதான் அவர்களின் துறவுநிலை. படைத்த வனை படைக்கப்பட்டவற்றில் அவர்கள் பார்ப்பார்கள். படைத்தவன் - படைக்கப்பட்டவை என்று பாகுபடுத்திப் பார்க்கமாட்டார்கள் அவர்களிடம் உயர்வு தாழ்வு நன்று தீது என்று எந்தப் பிரிவுகளும் இருக்காது. ஒன்றுக்கு ஒன்று எதிராக இருப்பவற்றில்கூட ஓர் இசைவைப் பார்ப்பார்கள்.

*இறைவனை அறிந்தவன் எனக்கு நண்பன்*

*இறைவனின் மேலான உண்மைநிலையைத் துய்ப்பவன்*

*எனக்கு நெருக்கமானவன்*

*அன்பையும் துறத்தலையும் ஒன்றாக இணைத்து*

*முதலும் முடிவும் அற்ற இறைமையின்*

*இனிமையான ராகத்தை இசைப்பவன் எனக்கு உகந்தவன்*

*கபீர் சொல்கிறார்:*

*இல்லம்தான் நிரந்தரம்.*

நீங்கள் ஓர் இல்லத்தில்தான் பிறக்கிறீர்கள். வீடேயில்லாத பிறப்புக்குச் சாத்தியம் இல்லை. எனவே இல்லம் உங்களுக்கு ஓர் இயற்கையான மூலகம். உங்கள் இல்லத்திலேயே இருங்கள்.

ஒரு வீட்டிற்கும் இல்லத்திற்கும் வேறுபாடு இருக்கிறது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

வீடு என்பது வெறும் வசிக்கும் இடம் மட்டுமே. அன்புடன் வசிக்கும் இடமே இல்லம். ஒரு வீட்டிற்குள் அன்பு பாய்ச்சப்படும் போதுதான் அது இல்லமாக மாறுகிறது. வீடுகள் எல்லாம் இல்லங்களாகிவிடாது. இன்று பலரும்

வீடுகளில்தான் இருக்கிறார்கள். ஆனால் இல்லத்தில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். வீடுகள் எல்லாம் இல்லங்கள் அல்ல. ஆனால் இல்லங்கள் எல்லாம் வீடுகள்தான்.

ஓர் இல்லத்தில் ஒரு வீட்டைவிடக் கொஞ்சம் அதிகப்படியாக ஏதோ ஒன்று இருக்கிறது. ஒரு வீடு என்பது வெறும் கட்டடம். அதில் ஆன்மா இல்லை.

ஒரு வீட்டில் அன்பு தழைக்கும்போது, அங்கே சொந்தம் நெருக்கம் உறவு நட்பு நேர்மை நம்பிக்கை எல்லாம் இருக்கும்போது அது இல்லமாக ஒளிபெறுகிறது.

நீங்களே அந்த வேறுபாட்டை உணரலாம். ஒரு வீட்டிற்குள் நுழைந்தவுடன் அது வீடா இல்லமா என்று நீங்கள் சொல்லி விடலாம். அது இல்லமாக இருந்தால் அங்கே அன்பின் வெதுவெதுப்பை நீங்கள் உணரமுடியும். நீங்கள் அன்புடன் வரவேற்கப்படுவதாக உணர்வீர்கள். ஒரு வித்தியாசமான சூழலை அந்த இல்லம் உங்களுக்குக் கொடுக்கும். நல்ல தாக்கத்தை ஏற்படுத்தும்.

அது இல்லமாக இல்லாமல் வெறும் வீடாக இருந்தால் அங்கே செங்கல்லும் சிமெண்ட்டும்தான் இருக்கும் ஆன்மா இருக்காது.

அந்த வீடு அழகாகக் கட்டப்பட்டிருக்கலாம். கட்டடக் கலையின் சிறப்பம்சங்கள் அதில் நிறைந்திருக்கலாம். ஆனால் அதனுள் நீங்கள் அன்பின் குளிர்ச்சியை அனுபவிக்க முடியாது. அதில் வாழும் மனிதர்கள் அன்பாக வாழ்கிறார்கள் என்ற தாக்கத்தை நீங்கள் உணரமுடியாது. அங்கே வாழும் மக்கள் தங்கள் வாழ்க்கையை ஒரு விழாவாகக் கொண்டாட மாட்டார்கள். அங்கே வசிப்பவர்களிடம் ஒரு துள்ளல் இருக்காது. ஓர் இயல்பான மகிழ்ச்சி இருக்காது. அங்கே இருப்பவர்கள் தங்கள் வாழ்க்கைக்காக இறைவனுக்கு நன்றி செலுத்தாதவர்களாக இருப்பார்கள்.

சூழ்நிலை இறுக்கமாக இருந்தால் அங்கே நீங்கள் அழைக்கப் படாதவராக உணர்ந்தால் அது வீடு.. அங்கே உங்களை அணைத்து வரவேற்கும் அன்பு இருந்தால் அது இல்லம்.

அந்த இல்லத்தில் யாருமே இல்லாமல் இருக்கலாம். என்றாலும் அங்கே அன்பு இருக்கும். அது அந்த இல்லத்தில் ஒவ்வொரு செங்கலிலும் பரிமளிக்கும்..

ஒரு முறை நான் ஓர் அழகான கவிஞருடன் வாழ்ந்து வந்தேன். அவர் ஒரு பெரிய ஞானியும் கூட. நாங்கள் பல இடங்களுக்கு ஒன்றாகப் பயணித்திருக்கிறோம். அவரிடம் ஒரு விநோதமான பழக்கம் இருந்தது. புதிதாக ஒரு வீட்டிற்குள் நுழைந்தால் அவர் ஒவ்வொரு மூலையாகச் சென்று மூக்கை உறிஞ்சிப் பார்ப்பார்.

“என்னப்பா செய்கிறாய்?” என்று கேட்டால் “இது வீடா இல்லமா என்று பரிசோதித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்” என்று சொல்வார். அவரது கணிப்பு எப்போதும் துல்லியமாக இருக்கும். இந்த விஷயத்தில் அவர் தவறிழைத்து நான் பார்த்ததேயில்லை.

சில இடங்களுக்குப் போனவுடன் அவர் மூக்கை உறிஞ்சிப் பார்த்துவிட்டு “இது இல்லம். இங்கே தங்கலாம்” என்பார். இன்னும் சில இடங்களில் “ஐயோ சாமி! இது வெறும் வீடு. நம்மைக் கொன்றுவிடும். இந்த இடத்திலிருந்து சீக்கிரம் தப்பித்துப் போய்விட வேண்டும்” என்று பதட்டத்துடன் சொல்வார்.

மேம்போக்காகப் பார்த்தால் உங்களுக்கு வித்தியாசம் தெரியாது. ஓர் இல்லத்திற்கு உயிருண்டு.

எப்படி என்று கேட்கிறீர்களா? ஒரு மனிதன் உயிருடன் இருக்கிறானா இல்லையா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள்? கிடத்தப்பட்டிருப்பது சவமா தூங்கிக்கொண்டிருக்கும் மனிதனா என்று எப்படி இனம் கண்டு கொள்வது? அருகில் போய்த் தொட்டுப் பார்ப்பீர்கள். உடலின் வெப்பத்தை உணர்ந்தால் உயிர் இருக்கிறது என்று சொல்வீர்கள். மூக்கின் கீழ் கைவைத்துப் பார்ப்பீர்கள். அவனுடைய மார்புக்கூடு ஏறி இறங்குகிறதா

என்று பார்ப்பீர்கள். மூக்கிலிருந்து சூடான காற்று வந்தால் மார்புக் கூடு ஒரே சீராக ஏறி இறங்கினால் அந்த மனிதன் உயிருடன் இருக்கிறான் என்று அனுமானிப்பீர்கள். அதேபோல் ஓர் இல்லத்திற்கும் அன்பின் வெப்பம், மூச்சுக்காற்று இதயத்துடிப்பு எல்லாமே உண்டு. ஆனால் ஒரு வீட்டிற்கு உயிர் இல்லை. அது வெறும் சவம்.

இன்றைய உலகில் பல்லாயிரம் வீடுகள் இருக்கின்றன. இல்லங்கள்தான் அவ்வளவாக இல்லை.

*கபீர் சொல்கிறான்:*

*இல்லம்தான் நிரந்தரம்.*

*இல்லத்தில் தான் நிஜம் இருக்கிறது*

நீங்கள் இல்லத்தில்தான் பிறக்கிறீர்கள். உங்கள் வேர்கள் இல்லத்தில்தான் இருக்கின்றன. நீங்கள் இல்லத்தில்தான் வாழ வேண்டும். இல்லத்தில்தான் இறக்க வேண்டும். வேறு எங்கேயும் போக அவசியம் இல்லை. இறைவன் அப்படித்தான் உங்களுக்கு விதித்திருக்கிறார். எப்படி ஒரு மரத்தின் வேர்கள் நிலத்தில் படிந்திருக்கின்றனவோ அதே போல் உங்கள் வேர்களும் இல்லத்தில், அன்பில், கூடிவாழும் சமுதாயத்தில் பதிந்திருக்கின்றன.

*உண்மையாக இருக்கும் அந்த ஒருவனை அடைய இல்லம்தான் உதவும்*

*அதனால் எங்கே இருக்கிறீர்களோ அங்கேயே இருங்கள்*

*காலாகாலத்தில் அனைத்தும் உங்களை நாடி வரும்*

பதற்றப்படாதீர்கள். ஏங்காதீர்கள். எல்லாம் உடனே நடந்தாக வேண்டும் என்று ஆலாய்ப் பறக்காதீர்கள். பேராசைப் படாதீர்கள். நீங்கள் காட்டிற்குப் போக வேண்டாம். இமயத்திற்குப் போக வேண்டாம். கத்தோலிக்க மடாலயத்திற்குச் செல்லத் தேவை யில்லை. சமணத் துறவியாக மாற வேண்டியதில்லை. எங்கே இருக்கிறீர்களோ அங்கேயே அப்படியே இருங்கள். அன்பில் திளைத்திருங்கள். ஆழமான உறவுகளில் அமிழ்ந்து இருங்கள். காலத்திற்காகக் காத்திருங்கள். காலம் கனியும்போது ஆண்டவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்வான்.

காத்திருத்தல் என்பது ஒரு மிகச் சிறந்த ஆன்மிகக் குணம். முயற்சி செய்வதைவிடக் காத்திருப்பது இன்னும் புனிதமானது. முயற்சி செய்வதில் அகங்காரத்தின் நிழல் இருக்கும். முயற்சி செய்யும்போது நீங்கள் சொல்கிறீர்கள்: "நான் அதை அடையப் போகிறேன். அந்த இறைத்தன்மையைச் சொந்தமாக்கிக் கொள்ளப் போகிறேன். மெய்ப்பொருளை என்னை விட்டுப் போக விடமாட்டேன். எனக்கு அது வசப்பட்டேயாக வேண்டும். கடவுளை என் கைக்குள் அடக்கப் போகிறேன். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் இந்த உலகத்திற்கு அறிவிக்கப் போகிறேன். 'நான் அடைய வேண்டிய இடத்திற்கு வந்தடைந்து விட்டேன்.'

முயற்சி அகங்காரத்தின் வெளிப்பாடு. காத்திருத்தல் அகமின்மையின் சின்னம். காத்திருத்தல் சாத்வீகத்தின் வெளிப்பாடு. இறைவனை உணர வேண்டுமானால் பெண்ணாக மாற வேண்டுமென்று எல்லாச் சிறந்த ஞானிகளும் ஒரே குரலில் சொல்கிறார்கள்.

ஆண் ஆளுமை உடையவன். ஆண் பிரயத்தனத்தின் மறு உருவம். ஆண் தாக்குபவன். ஆண் மனத்திட்பத்தின் வடிவம். பெண்மை சாத்வீகமானது. பெண் எதையும் ஏற்றுக் கொள்பவள். பொறுத்துக் கொள்பவள். பெண்மை கருப்பையைப் போன்றது. இறைமை வரும்போது காத்திருக்கும் அந்த சாத்வீக மனம் கருப்பையாகி அந்த இறைமையைத் தன்னுள் வாங்கிக் கொள்கிறது. இறைத்தன்மை என்ற கருவால் கர்ப்பம் ஆகிறது.

*ஏ துறவியே! சாதாரண சேர்க்கையே புனிதமானது.*

ஸஹஜ ஸமாதி - இயல்பாக எழும் ஆனந்தப் பரவசமே சிறந்தது. அதைச் சுற்றிக் குழப்பமான கட்டுமானங்களை உருவாக்காதீர்கள். எவ்வளவு யோகப் பயிற்சி, சுவாசப் பயிற்சி - அப்பா! எத்தனை கட்டுமானங்கள். கபீர் அதை எல்லாம் வெறுக்கிறார். எளிமையை விரும்புகிறார். அதைச் சிக்கலாக்கா தீர்கள் என்கிறார். எல்லாம் இயல்பாக இருக்கட்டுமே என்று கெஞ்சலாகச் சொல்கிறார். சரி அவர் என்னதான் உபதேசிக்கிறார்?

*இறைவனை நான் சந்தித்த நாள் முதலாக*

*எங்கள் காதல் விளையாட்டுக்கள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன.*

இறைவன் சதா உங்களுடன் விளையாடிக்கொண்டு இருக்கிறார். நீங்கள் ஆண்டவனைப் பார்க்காமல் இருக்கலாம். அவர் உங்களுக்குத் தொடர்ந்து பல்வேறு பரிசுகளை அனுப்பிக்கொண்டேயிருக்கிறார். தன் இருப்புநிலையை உங்கள் இருப்பு நிலைக்குள் சதா செலுத்திக்கொண்டேயிருக்கிறார். நீங்கள் அவரை முற்றிலுமாக மறந்திருக்கலாம். என்றாலும் அவருடைய திருவிளையாடல்கள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

மேலை நாட்டு ஞானி குர்ஜிஃப் இதனைத் *தன்-நினைவு* என்று சொல்கிறார். கபீர் இதையே *சுரதி* என்கிறார். *சுரதி* என்றால் ஞாபகம், நினைவில் வைத்துக் கொள்ளுதல் என்று பொருள்.

நாம் ஒரு பெரிய விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறோம். நம்முடைய கூட்டாளி சாட்சாத் அந்த இறைவன்தான். இந்தப் பழைய காதல் காலாகாலத்துக்கும் தொடரும். காலம் முடிந்து விட்டாலும் இது நம்முடன் கூடவே வரும். நாம்தான் இதை மறந்து விட்டோம்.

*கபீர் சொல்வதைக் கேளுங்கள்*

*நான் என் கணகளை மூடவில்லை;*

அந்த அளவுக்குக் கூட நான் முயற்சி செய்யவில்லை.

*நான் என் கண்களை மூடவில்லை; என் காதுகளையும் மூடவில்லை*

*என் உடலைத் துன்புறுத்திக் கொள்வதில்லை.*

*நான் என் கண்களால் நாலா பக்கமும் பார்த்துப் புன்னகை பூக்கிறேன்.*

ஏனென்றால் நான் இறைவனை எங்கும் பார்க்கிறேன். அவன்தான் எவ்வளவு அழகாக ஒளிந்து கொண்டிருக்கிறான்.

*நான் என் கண்களால் நாலா பக்கமும் பார்த்துப் புன்னகை பூக்கிறேன்.*

*இறைவனுடைய அழகையே எங்கும் காண்கிறேன்.*

*அவன் பெயரைச் சொல்கிறேன்*

*நான் பார்ப்பதெல்லாம் அவனையே நினைவுபடுத்துகிறது*

*நான் செய்யும் செயலெல்லாம் வழிபாடே!*

*உதயமும் அஸ்தமனமும் எனக்கு ஒன்றுதான்*

*என்னிடம் முரண்பாடுகள் கரைந்துவிட்டன.*

கபீரின் மதம் நாத்திகம் போல் தோன்றுகிறது. அதில் அபரிமிதமான கலையுணர்வு இருக்கிறது.

கபீர் ஒரு சிறந்த கவிஞர். என்றாலும் அவர் முறையாகக் கல்வி கற்கவில்லை. ஆனால் கவிதைக்கும் கல்விக்கும் என்ன சம்பந்தம் சொல்லுங்கள்.

கபீர் ஒரு மிகச் சிறந்த கவிஞர். அவருடைய கவிதைகள் மிகவும் உன்னதமானவை. கபீரின் கவிதைகள் மற்ற கவிதைகளைப் போல் இல்லை. மிகவும் புனிதமான வகையைச் சேர்ந்தது.

அழகை நாட வேண்டும் என்று சொல்கிறார் கபீர். எல்லாம் முடிந்துவிட்டது; இயற்கை மொத்தமும் அழகால் நிறைந்து இருக்கிறது. அழகு என்பது என்ன? அழகுதான் கடவுள். மறைந்திருக்கும் கடவுள். எல்லா அழகும் ஆண்டவனையே சேர்ந்தது. ஓர் அழகான மனித முகத்தைப் பார்க்க நேர்ந்தால் - அது ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம் - அது ஆண்டவனின் முகம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அழகான இரு கண்களைப் பார்க்கும் போது நீங்கள் இறைவன் வசிக்கும் ஆலயத்தின் நுழைவாயிலில் இருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒரு மலர் விரிவதைப் பார்க்கும் போது அது இறைவன் உங்களுக்கு விடுக்கும் ஓர் அழைப்பு என்று புரிந்து கொள்ளுங்கள்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

38 வருடங்களுக்கு முன்னால் தத்துவ ஞானி ஜார்ஜ் ஸாண்டாயனாவிற்கு ஒரு பெரிய சொத்து கிடைத்ததால் புகழ்பெற்ற ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் அவருடைய வேலையை அவர் உதறித்தள்ளும் அளவிற்கு வசதி வந்து விட்டது..

அன்றுதான் அவருடைய ஆசிரியப் பணியில் கடைசிநாள். வகுப்பறை மாணவர் கூட்டத்தால் நிரம்பி வழிந்தது.

அந்த ஞானியின் கடைசி வகுப்பைக் கேட்க மாணவர்கள் ஆர்வத்துடன் குழுமியிருந்தார்கள். அவர் உரையாற்றி முடிக்கும் நேரம். வெளியே பனி பெய்து கொண்டிருந்தது. சேறும் பனியுமாக இருந்த இடத்தில் ஃபோர்சித்தியா என்ற அழகான மஞ்சள் நிற மலர் லேசாக நிமிர்ந்து தன் தலையை நீட்டியது. அவ்வளவுதான். தத்துவ ஞானி தன் உரையை நிறுத்தினார். தன் தொப்பியைத் தலையில் அணிந்து கொண்டார். தன் கையுறையை அணிந்து கொண்டு தன் கைத்தடியை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டார்.

"மாணவர்களே! என்னால் அந்த வாக்கியத்தை முடிக்க முடியாது. இப்போதுதான் எனக்காக ஒரு சந்திப்பு திட்டமிடப் பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டேன். அதற்கு அவசரமாகப் போகிறேன். நன்றி."

ஆமாம். ஒவ்வொரு மலரும் இறைவனிடம் இருந்து வரும் ஓர் அழைப்பு. இறைவனுடனான ஒரு மகத்தான சந்திப்புத் திட்டம். வானில் பறந்து செல்லும் பறவையின் பாடல். வானத்தில் மிதந்து வரும் மேகம் இவையெல்லாம் நமக்கு அனுப்பப்பட்ட செய்திகள். சங்கேதச் செய்திகள். அந்தச் சங்கேத மொழியைப் புரிந்து கொள்ள வேண்டும். அதை ஆழமாகக் கவனித்துப் பார்க்க வேண்டும். நீங்கள் மௌனமாக இருந்தால்தான் அந்தச் செய்தியை ஊன்றிக் கவனிக்க முடியும்.

*கபீர் சொல்கிறார்:*

*நான் என் கண்களால் நாலா பக்கமும் பார்த்துப் புன்னகை பூக்கிறேன்.*

*இறைவனுடைய அழகையே எங்கும் காண்கிறேன்.*

உங்கள் கண்களை மூடிக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லை. கண்கள் மூடியிருந்தாலும் திறந்திருந்தாலும் அவனைத்தான் பார்ப்பீர்கள். ஏனென்றால் அவன் உள்ளேயும் இருக்கிறான். வெளியேயும் இருக்கிறான்.

*அவன் பெயரைச் சொல்கிறேன்*

*நான் பார்ப்பதெல்லாம் அவனையே நினைவுபடுத்துகிறது*

*நான் செய்யும் செயலெல்லாம் வழிபாடே!*

*உதயமும் அஸ்தமனமும் எனக்கு ஒன்றுதான்*

*என்னிடம் முரண்பாடுகள் கரைந்துவிட்டன.*

இறைவனை அடைந்தால்தான் உங்கள் முரண்பாடுகள் கரையும். அதற்கு முன்னால் முரண்பாடுகளை நீங்கள் எதுவும் செய்யமுடியாது. ஏனென்றால் மனம்தான் அந்த முரண்பாடுகளை உருவாக்குகிறது.

நீங்கள் ஆண்டவனை அடையும்போது மனம் அங்கு இருப்பதில்லை. மனம் இல்லாவிட்டால் முரண்பாடுகளும் இருக்க முடியாது. அதன்பின் உங்களுக்கு இரவும் பகலும் ஒன்றுதான். வாழ்வும் சாவும் ஒன்றுதான். அதன்பின் நீங்கள் இருந்தாலும் ஒன்றுதான் மறைந்தாலும் ஒன்றுதான். அதன்பின் உள்ளேயிழுக்கும் சுவாசமும் வெளியே விடும் சுவாசமும் ஒன்றுதான்.

*நான் எங்கு சென்றாலும் இறைவனைத்தான் வலம் வருகிறேன்*

*நான் சாதித்ததெல்லாம் அவன் சேவையை மட்டும்தான்*

*நான் கீழே படுத்தால் அவனை விழுந்து வணங்குகிறேன்*

*நான் பூஜிப்பது அவனை மட்டுமே*

*எனக்கு வேறு யாரும் இல்லை.*

*என் நா அசுத்தமான வார்த்தைகளைப் பேசுவதை நிறுத்திவிட்டன*

*என் நா இரவும் பகலும் அவன் புகழையே பாடுகிறது*

*அமர்ந்தாலும் எழுந்தாலும் என்னால் ஆண்டவனை மறக்க முடியாது*

*அவன் இசையின் தாளம் என் காதில் கேட்கிறது*

*கபீர் சொல்கிறான்:*

*என் இதயம் சீற்ற நிலையில் இருக்கிறது*

*மறைக்கப்பட்டதை என் ஆன்மாவுக்குத் தெரிவிக்கிறேன்.*

*இன்பத்தையும் துன்பத்தையும் கடந்த அந்த*

*ஆனந்தப் பெருங்கடலில் அமிழ்ந்து கிடக்கிறேன்.*

முரண்பாடுகள் நம் படைப்புகள். நம்மால் முழுமையைப் பார்க்க முடியாது பகுதிகளைத்தான் பார்க்க முடியும் என்பதால்தான் முரண்பாடுகள் தோன்றுகின்றன.

ஒரு சின்ன கூழாங்கல்லை உங்கள் உள்ளங்கையில் வைத்துப் பார்த்திருக்கிறீர்களா? அந்தச் சிறு கல்லைக்கூட உங்களால் முழுமையாகப் பார்க்க முடியாது. நீங்கள் ஒரு பகுதியைப் பார்க்கிறீர்கள். அப்போது மற்றொரு பகுதி மறைந்திருக்கிறது. கல்லைத் திருப்பிப் போட்டு மறைந்த பகுதியைப் பார்த்தால் முன்னால் பார்த்த பகுதி மறைந்துவிடும். ஆக மொத்தம் ஒரு சிறு கூழாங்கல்லைக்கூட உங்களால் முழுமையாகப் பார்க்க முடியாது. அவ்வளவு ஏன் ஒரு மண் துகளைக்கூட உங்களால் முழுமையாகப் பார்க்க முடியாது.

நீங்கள் என் முகத்தைப் பார்க்கும்போது . என் முதுகு உங்களுக்கு வெறும் அனுமானமாகத்தான் இருக்கும். எனக்கு முதுகு இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். நீங்கள் என் முதுகைப்பார்க்கும் போது என் முகம் என்பது வெறும் அனுமானம்தான். அது இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம். நான் எதையும் முழுமையாகப் பார்ப்பதில்லை.

ஏனென்றால் நமது மனதிற்கு எதையும் முழுமையாகப் பார்க்கும் வல்லமையில்லை.

தியானத்தின் உச்சியில் மனம் உங்களை விட்டு நழுவும் போது உங்கள் பார்வை முழுமை பெறுகிறது. அப்போதுதான் நீங்கள் முழுமையைத் தரிசிக்க முடியும். வெயில்காலமும் குளிர்காலமும் வேறு வேறு காலங்கள் இல்லை. வசந்தகாலமும் இலையுதிர்காலமும் ஒன்றுதான். ஜனனமும் மரணமும் ஒரே நிகழ்வின் இரு பகுதிகள்.

இன்பமும் துன்பமும் ஒன்றுக்கு ஒன்று எதிரி இல்லை. அவை இரண்டும் இணைந்தேயிருக்கின்றன. மலையும் பள்ளத்தாக்கும் எப்படி ஒரே இடத்தில் இணைந்து இருக்கிறதோ அப்படித்தான் இன்பமும் துன்பமும் இணைந்து இருக்கின்றன. இப்படி வாழ்க்கையில் எல்லாம் ஓர் இடத்தில் சங்கமிக்கும் அற்புதத்தைப் பார்க்க நேர்ந்தால் நீங்கள் எதையும் தெரிவு செய்ய வேண்டியது இல்லை. தெரிவு செய்ய எதுவும் இல்லை.

நீங்கள் மகிழ்ச்சியைத் தேர்வு செய்யும்பொழுது துன்பத்தில் மாட்டிக் கொள்வீர்கள். வெற்றியைத் தேடி ஓடும்போது தோல்வியில் மாட்டிக்கொண்டு துவளுவீர்கள். நம்பிக்கையில் திளைத்திருக்கும்போது ஏமாற்றம் உங்களைத் தேடிவரும். வாழ்க்கையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்தால் சாவு உங்களைத் தேடி வரும். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நொடியும் இப்படி நடப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்களே? இவையெல்லாம் ஒன்றுக்கு ஒன்று எதிர்மறையானவை அல்ல. இவை எல்லாமே ஒன்றுதான். இவை எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்க முடிந்தால் நாம் தெரிவு செய்ய என்ன இருக்கிறது? இப்படியே போனால் தெரிவற்ற தெளிவு நிலைக்கு நாம் சென்றுவிடுவோம்.

இதைத்தான் ஜே.கிருஷ்ணமூர்த்தி சொல்லிக்கொண்டே யிருக்கிறார். எதையும் தெரிவு செய்யாதீர்கள். தெரிவற்ற நிலையில் இருங்கள். தெரிவற்ற விழிப்பு நிலையில் (choiceless awareness) எந்நேரமும் திளைத்திருங்கள். ஆனால் எல்லாம்

ஒன்றுதான் என்ற முழுமையாகப் பார்க்காதவரை இது நடக்காது. எல்லாம் ஒன்று என்று அறிந்தபின் தெரிவு செய்வது இயலாததாகிவிடுகிறது. தெரிவு செய்ய எதுவும் இல்லை. எதையாவது தெரிவு செய்தால் அது தனக்கு நேர் எதிரான தன்மையையும் கூடவே அழைத்துக் கொண்டு வரும்.

பின் தெரிவு செய்வதில் என்ன பயன்?. நீங்கள் அன்பைத் தெரிவு செய்தால் கூடவே தொத்திக்கொண்டு வெறுப்பும் வரும். நட்பைத் தெரிவு செய்தால் இலவச இணைப்பாகப் பகையும் வரும். எதையாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்தால் அதன் எதிர்மறைப்பொருள் கூடவே நிழலாகத் தொடர்ந்து வரும்.

மனம் பக்குவப்படும்போது தெரிவு நின்றுவிடும். நீங்கள் தெரிவற்ற நிலைக்குச் சென்றுவிடுவீர்கள். அந்த நிலையில் எல்லா முரண்பாடுகளையும் கடந்து சென்று விடுவீர்கள்.

முரண்பாடுகளைக் கடந்தால் மனதைக் கடப்பீர்கள். மனதைக் கடந்து போனால் அன்பு என்றால் என்ன என்று தெரிந்து கொள்வீர்கள்.

இதுவரை நீங்கள் எதையெல்லாம் அன்பு என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ அதற்கும் உண்மையான அன்பிற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

இன்று அதிகமாக தவறாகப் பயன்படுத்தப்படும் வார்த்தை அன்புதான். அந்த வார்த்தையைப் போல் தவறான பிரயோகத்தால் அர்த்தம் சிதைக்கப்பட்ட வார்த்தைகள் வெகு சிலவே இருக்கின்றன. உதாரணம் - கடவுள், அமைதி. ஆனால் அர்த்தம் சிதைக்கப்பட்ட வார்த்தைகளில் அன்பிற்குத்தான் முதலிடம்.

எல்லாரும் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் யாருக்குமே அன்பென்றால் என்ன என்று தெரியவில்லை. அன்பைப் பாட்டில் வைத்துப் பாடுகிறார்கள். அன்பை வைத்துக் கவிதைகள் படைக்கிறார்கள். ஆனால் அது என்ன என்பது யாருக்குமே தெரியவில்லை.

நான் பார்த்தவரையில் யாராவது அன்பைப் பற்றிக் கவிதை எழுதினால் அவன் தன் வாழ்க்கையில் அன்பை அனுபவிக்காதவன் என்றே கருதுகிறேன். அன்பென்றால் என்னவென்று தெரியாதவன்தான் அன்பைப் பற்றிக் கவிதை எழுதுகிறான். இல்லாவிட்டால் அன்பைப் பற்றிக் கவிதை எழுதவேண்டும் என்று ஏன் அலைவானேன்? உங்களால் அன்பு செய்ய முடிகிறதென்றால் அதைச் செய்வீர்களா இல்லை அதைப்பற்றிக் கவிதை எழுதுவீர்களா?

நான் பல கவிஞர்களுடைய கவிதைகளைப் படித்திருக்கிறேன். அன்பைப் பற்றி அறிந்த எந்த கவிஞனையும் இதுவரை நான் சந்தித்ததில்லை. அன்பைப் பற்றி முற்றும் உணர்ந்த ஞானிகளுக்குத்தான் தெரியும்.

அன்போடு தொடர்புடையதென்று நாம் நினைத்துக் கொண்டிருக்கும் பல விஷயங்களுக்கும் அன்பிற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இதைப் புரிந்து கொள்ள கஷ்டமாக இருக்கிறதா?

ஓர் உதாரணம் சொல்கிறேன். ஓர் உணவகத்திற்குள் செல்லுங்கள். அங்கே சிலர் "நான் ஐஸ்க்ரீமை நேசிக்கிறேன்." என்பார்கள்.

இன்னும் சிலர் 'நான் கேடிலாக் காரை நேசிக்கிறேன் என்பார்கள்.

சிலரோ "எனக்கு என் நாய்மேல் உயிரினும் மேலான அன்பு" என்று ஜல்லியடிப்பார்கள். சிலருக்குப் பூனை. சிலருக்குப் பெண்கள். இப்படியே அன்பையும் நேசத்தையும் எதற்கு வேண்டுமானாலும் பயன்படுத்தலாம் என்ற நிலை வந்துவிட்டது.

அன்பென்னும் செயலிற்குச் செயப்படுபொருள் கிடையாது. அன்பென்னும் கடிதத்திற்கு விலாசம் அவசியமில்லை. அன்பு கடவுளுக்கு மட்டுமே சொந்தமான விஷயம். நீங்கள் உங்கள் காதலிமேல் நிஜமான அன்பை வைத்திருந்தால் அந்தக் காதலியின் உருவத்தில் ஆண்டவனே வந்து நிற்பான்.

அவ்வளவு ஏன் நீங்கள் ஒரு மரத்தின்மேல் அன்பு வைத்தால் அந்த மரம் மறைந்து போய் அதன் இடத்தில்

அந்த மகாதேவனே வந்து இருப்பான். அந்த மரத்தின் பசுமையாக அதன் மலர்ச்சியாக இறைவனே தோன்றுவான்.

உண்மையான அன்பு என்பது கடவுளோடு மட்டுமே தொடர்புள்ள ஓர் உணர்வு. அன்பு என்பது முழுமை. உண்மையான அன்புதான் உத்தமமான வழிபாட்டுணர்வு. ஆனால் நாம் இன்னும் அன்பைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை.

நமது குழந்தைப் பருவத்திலிருந்தே அன்பின் பொருள் திரித்து உருச்சிதைக்கப்பட்டுவிட்டது.

ஒரு தாய் தன் குழந்தையிடம் கூறுகிறாள். "என்மேல் அன்பாக இரு. என்னை நேசி. ஏனென்றால் நான் உன் அம்மா." தாயாக இருப்பதனால் மட்டுமே அன்பைக் குழந்தை மேல் திணிக்கமுடியும் என்று முட்டாள்தனமான நம்பிக்கை அந்தத் தாயிடம் இருக்கிறது.

அப்பா சொல்கிறார் "என்னை நேசி. நான் உன் அப்பா." அப்பாவாக இருப்பது அன்பு செய்வதற்கு தர்க்கரீதியான காரணம் என்பதுபோல் பேசுகிறார் அவர்.

குழந்தைக்கோ என்ன செய்வது என்றே தெரியவில்லை. தன்னை அப்பா என்று பிரகடனப்படுத்துவதால் மட்டும் எப்படி அவரை நேசிக்க முடியும்?

அந்தக் குழந்தையால் நிஜமாகவே தன் தந்தையை நேசிக்க முடியவில்லையென்றால் அதன் மனதில் குற்ற உணர்வு புகுந்து கொள்கிறது. அந்த உணர்வைப் போக்க அந்தக் குழந்தை அப்பாவின்மேல் அன்பு காட்டுவதுபோல் நடிக்கிறது. என்னவென்றே தெரியாமல் அந்தக் குழந்தை புன்னகை புரிகிறது.

"அம்மா உன்னை நேசிக்கிறேன். அப்பா உன்னை நேசிக்கிறேன்." என்று வாய்க்கு வாய் சொல்கிறது. இந்த வெற்று வார்த்தைகளைக் கேட்டு மக்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். தாய்க்கு சந்தோஷம். ஏனென்றால் குழந்தை சிரித்துக் கொண்டிருக்கிறது. இந்தக் குழந்தையாவது தன்னை நேசிக்கிறதே என்று அவள் மகிழ்கிறாள். பாவம் அவள்மேல் யாரும் இதுவரை அன்பு காட்டியதில்லை.

ஆனால் அந்தக் குழந்தை சிறுவயதிலேயே ஓர் அரசியல்வாதியாகிவிடுகிறது. மற்றவர்களைத் தன் நடிப்பாலும் வெற்று வார்த்தைகளாலும் ஏமாற்றும் வல்லமை அதற்கு வந்துவிட்டது. இந்த வல்லமை படிப்படியாக வளர்ந்துகொண்டே போகிறது. அதன் வாழ்நாள் முழுவதும் இந்தப் பாசாங்கு தொடர்கிறது. அன்பைப் பற்றி வீரவசனம் பேசுவது தொடர்கிறது. அந்தக் குழந்தை வளர்ந்து திருமணம் செய்து கொண்டபின் தினமும் ஆயிரம் முறை தன் மனைவியிடம் “நான் உன்னை நேசிக்கிறேன்” என்று பினாத்தும். வெற்று வார்த்தைகள். அரசியல்வாதியின் மேடைப் பேச்சு. அவ்வளவுதான்.

அந்த வார்த்தைகளில் உயிர் இல்லை. என்றாலும் அந்த வார்த்தைகள் தேவைப்படுகின்றன. ஏனென்றால் மக்கள் வார்த்தை களை மட்டும் வைத்துக்கொண்டு வாழ்கிறார்கள். உண்மை எதுவென்று மக்களுக்குத் தெரிவதில்லை. உண்மையுடனான அனைத்துத் தொடர்புகளும் அறுந்துவிட்டன.

டேல் கார்னஜி என்ற புகழ்பெற்ற சுய முன்னேற்றக் கட்டுரை எழுதுபவர் கூறும் அறிவுரை என்ன? உங்கள் மனைவியை நீங்கள் நேசிக்காவிட்டாலும் பரவாயில்லை. தினமும் மூன்று நான்கு முறையாவது “நான் உன்னைக் காதலிக்கிறேன்” என்று வாயாக வார்த்தையாகச் சொல்லுங்கள். அது போதும். அந்த வார்த்தைகளில் அர்த்தமோ உண்மையோ இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. மக்களுக்கு வார்த்தைகள்தான் வேண்டும். நிஜங்கள் தேவையில்லை என்பது அந்த அமெரிக்கரின் வாதம்.

அன்பு காட்டுவதுபோல் பாசாங்கு செய்ய ஒரு குழந்தை கற்றுக் கொண்டபின் அதற்கு உண்மையாக அன்பு காட்டுவது என்றால் என்னவென்றே தெரியாமல் போய்விடும். ஏனென்றால் அன்பு காட்டுவது என்பது ஒரு செய்கையல்ல. அது ஒரு நிகழ்வு. அது தானாக நிகழ வேண்டும். நீங்கள் அதை நிகழ்த்த முடியாது. அன்பு உங்களைவிடப் பெரியது. மிகவும் பரந்தது. அதை நீங்கள் நிர்வகிக்க முடியாது. அதனைத் திருத்தவோ திரிக்கவோ முடியாது. இதை நினைவில் கொள்ளுங்கள்.

திறந்த மனதுடன் இருங்கள். பாசாங்கு செய்யாதீர்கள். அன்பு வரும்போது நன்றியுணர்வுடன் இருங்கள். அது உங்களை விட்டுப் போனால் மீண்டும் வரும்வரை காத்திருங்கள். எந்தக் காலத்தி:லும் பாசாங்கு செய்யாதீர்கள்.

பாசாங்கையும் பொய் வேஷத்தையும் விட்டுவிட்டால் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் அன்பு உங்களுக்குள் எழுவதைப் பார்ப்பீர்கள். அன்பெனும் மலர் மலர்வதைப் பார்ப்பீர்கள்.

அன்பு என்னும் மலர் உங்கள் இதயத்தில் மலரும்போது அதன் வாசம் இறைவனின் திருவடிவரை செல்லும். இறைவனின் பாதங்களை அடைய அது எந்தப் பாதையை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கலாம். - உங்கள் குழந்தை மூலமாக, உங்கள் மனைவியின் மூலமாக, உங்கள் கணவனின் மூலமாக, உங்கள் நண்பனின் மூலமாக, தோழியின் மூலமாக, ஒரு மரத்தின் மூலமாக ஏன் ஒரு பாறாங்கல்லின் மூலமாகக் கூட அன்பென்னும் மலரின் வாசம் பயணப்படலாம். அது எந்த வழியிலும் செல்லலாம். எதனையும் ஊடுருவிச் செல்லலாம். ஆனால் நிச்சயமாக இறைவனின் பாதங்களை அடைந்துவிடும்.

அன்பு என்பது பரிபூரணத்துவத்துக்கு முகவரியிடப்பட்ட கடிதம். அதற்காகக் காத்திருங்கள்.

அன்பு ஒரு ரகசியச் சாவி. எல்லாப் பூட்டுகளையும் திறக்கக் கூடியது. எல்லாத் தடுப்புகளையும் தகர்க்கக் கூடியது. தடுப்பு என்பது நீங்கள் உங்களுக்குள்ளேயே போட்டுக் கொண்ட ஒரு சிறு பூட்டு அவ்வளவுதான்.

அன்பு ரகசியச் சாவி. பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துப் பூட்டுகளையும் திறக்கும் சாவி.

இன்று இது போதும்.

முதல் கேள்வி

ஓஷோ,

*மேலை நாடுகளில் ஞானம் பெறுவதற்கான விஞ்ஞானத்தையும் தொழில் நுட்பத்தையும் உருவாக்க ஆரம்பித்துவிட்டார்கள். அதற்கான ஒரு தேவை இருப்பது உண்மைதான். விஞ்ஞானத்தின் மூலம் நாம் ஞானம் பெற முடியுமா? இல்லை தொழில் நுட்பம்தான் நமக்கு ஞானம் தருமா? அது சாத்தியப்படுமா? அப்படி ஒரு தொழில் நுட்பத்தை உருவாக்க நினைப்பது பொறுப்புள்ள செயல்தானா? குறிப்பாக "அரிகா முறை" சரியான அணுகுமுறைதானா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.*

தொழில் நுட்பத்தால் ஒருநாளும் ஞானத்தைப் பெற முடியாது. இதை முதலில் நாம் தெரிந்து கொள்ள வேண்டும் அது சாத்தியப்படாது. ஞானத்தின் தன்மை அப்படி.

ஆனால் மேலை நாடுகளுக்குத் தொழில் நுட்பத்தின்மேல் ஒரு தீராத மோகம் இருக்கிறது. அதனால்தான் அனைத்தையும் தொழில் நுட்பத்தில் கொண்டுவர முடியுமா என்று யோசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். தொழில் நுட்பம் அவர்களுக்கு ஒரு கொள்கைப் பிடிவாதம். ஒரு கருத்து ஆவேசம்.

புற உலகை அறிந்து கொள்ள விஞ்ஞானம் ஒரு சரியான அணுகுமுறை என்பதை மறுப்பதற்கில்லை. இந்தக் கூற்றைக்கூட முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியாது.

உலகை அறிந்து கொள்ள விஞ்ஞானம் மட்டும் வழியில்லை. பல வழிகள் இருக்கின்றன. அதில் ஒன்று விஞ்ஞானம். மற்றொன்று கவிதை.

விஞ்ஞானம் அன்பு கொஞ்சம்கூடக் கலக்காத அறிவு. அதனால் அது ஆபத்தானது.. அது அன்பற்ற அறிவு என்பதால் அது எப்போதும் மரண தேவதைக்குத்தான் கீழ்ப் படியும்.; வாழ்க்கைக்கு உதவாது. அதனால்தான் இதுவரை உலகில் ஏற்பட்ட விஞ்ஞான முன்னேற்றங்கள் எல்லாம் மனித இனத்தை அழிவுப்பாதையில் அழைத்துச் சென்று கொண்டிருக்கின்றன.

இன்றைய விஞ்ஞான முன்னேற்றம் மனித இனத்தையே தற்கொலை செய்து கொள்ளத் தூண்டுகிறது.

ஒருநாள் மனித இனம் தற்கொலை செய்து கொண்டால் - மூன்றாம் உலகப் போர் மூண்டால், வல்லரசு நாடுகள் அணுகுண்டுகளை அவிழ்த்துவிட்டால் - அதன்பின் கரப்பான் பூச்சிகள் "நாம்தான் உயிர் வாழத் தகுந்தவர்கள்" என்று நினைக்கத் தொடங்கிவிடும்.

கரப்பான் பூச்சிகளுக்கிடையே தோன்றும் "டார்வின் பட்டாம் பூச்சி" ஒரு புதிய பரிணாம வளர்ச்சி விதியை உருவாக்கும். "நமது இனம்தான் உயிர் வாழத் தகுதியான இனம். அதனால்தான் இந்த உலகப் போரில் நாம் மட்டும் பிழைத்துள்ளோம்" என்று அவை முழங்கும்.

அன்பு கலக்காத அறிவு ஆபத்தானது; ஏனென்றால் அதனுடைய வேரில் விஷம் இருக்கிறது.

அன்பு அறிவைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கும். அறிவு தன் எல்லையைத் தாண்டும்போது அன்பு அதனைத் தடுத்து நிறுத்தும். எல்லை தாண்டிய அறிவு அழிவுக்கு வழிவகுக்கும்.

அன்பால் கட்டுப்படுத்தப்படாத அறிவு விஞ்ஞானம். அது மிகவும் அபாயகரமானது. என்றாலும் அதுவும் ஓர் அணுகுமுறை தான். இந்த உலகையும் அதில் உள்ள பொருள்களையும் அன்பின் துணையின்றித் தெரிந்து கொள்ள விஞ்ஞானம் உதவி செய்கிறது.

நம் உயிர் ஒரு பதார்த்தம் இல்லை. எல்லாவற்றையும் தாண்டியிருக்கும் ஓர் அபூர்வ சக்தி நம் உயிருள் இரண்டறக் கலந்து கிடக்கிறது. அந்த சக்தியை நாம் காணத்தவறிவிட்டோம்.

விஞ்ஞானம் படிப்படியாக தொழில்நுட்பமாகக் கீழிறங்கி இன்று ஏறக்குறைய இயந்திரத்தனமாகிவிட்டது.

இன்று விஞ்ஞானம் எப்படி இருக்கிறது? இயற்கையை இன்னும் எப்படிச் சூறையாடலாம், இயற்கையை எப்படி மாற்றி அமைக்கலாம் என்று இன்றைய விஞ்ஞானிகள் மாநாடு போட்டு யோசித்துக் கொண்டிருக்கிறார்கள்..

விஞ்ஞானம் தோன்றிய நாளிலிருந்தே ஒரு தவறான அடிப்படையுடன் இயங்கி வருகிறது. இயற்கையைத் தோற்கடிப்பது எப்படி? இயற்கையை ஆள்வது எப்படி? அந்த அடிப்படையே முட்டாள்தனமானது.

நாம் இயற்கையினின்றும் வேறுபட்டவர்கள் இல்லை. நாம் எப்படி இயற்கையைத் தோற்கடிக்க முடியும்? நாம்தான் இயற்கை. என்றால் நாம் யாரைத் தோற்கடிக்கப் போகிறோம்? கேட்கவே அபத்தமாக இருக்கிறதே! இந்த அபத்தமான அடிப்படையை வைத்துக் கொண்டு விஞ்ஞானம் மகத்தான அழிவுகளைச் செய்துவிட்டது. இயற்கையை ஒட்டு மொத்தமாக அழிக்கத் தொடங்கிவிட்டோம். சுற்றுச்சூழலை நச்சுப்படுத்தி விட்டோம். காற்று, நீர், கடல், நிலம் அனைத்தையும் மாசு படுத்திவிட்டோம். பூமியில் இருக்கும் இசைவு நசிந்து போய் விட்டது. சுற்றுப்புறச் சூழல் அழிந்து கொண்டே வருகிறது.

இதுவரை நடந்த கொடுமைகள் எல்லாம் போதும்.

நமக்கு வெளியில் உள்ளவற்றையெல்லாம் அழித்த விஞ்ஞானத்தைத் தயவு செய்து உள்ளே கொண்டு வராதீர்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். விஞ்ஞானத்தை ஆன்மிகத்திற்குள் இழுக்காதீர்கள்.

வெளிப்புறச் சூழலுக்குப் பேரழிவைத் தந்த இந்தக் கேடு கெட்ட விஞ்ஞானம் உங்கள் அகத்திற்கு - .உட்புறச் சூழலுக்கு - இன்னும் மோசமான அழிவைத்தான் தரும். ஏனென்றால்

நீங்கள் உள்ளே போகப் போகச் சூழல் இன்னும் நுட்பமாகும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

வெளிப்புறச் சூழலுக்கே கூட விஞ்ஞான அறிவினின்றும் வேறுபட்ட அறிவு தேவைப்படுகிறது. அந்த அறிவின் மூலம் அன்பு.

உங்களுக்குள்ளே எல்லாவற்றிற்கும் உள்ளே நுட்பத்திலும் நுட்பமாக இருக்கும் அந்த மையம் இருக்கிறதே. எல்லாவற்றையும் கடந்த அந்த அணு மையம் இருக்கிறதே அதற்கு அறிவே தேவையில்லை. அதை அறிய உங்களுக்குத் தேவை குழந்தைத் தனம். வெகுளித்தனம். இவற்றில் தோய்ந்த அன்பு.

ஆனால் மேலை நாடுகளோ தொழில் நுட்பத்தை வெறித்தனமாகப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கின்றன. இயற்கையை எதிர்த்து நின்று தொழில் நுட்பம் வெற்றி பெற்றுவிட்டது நாம் வலிமை மிக்கவர்களாகிவிட்டோம் என்ற எண்ணமும் அங்கே இருக்கிறது.

ஆனால் உண்மையில் நாம் வலியவர்களாகவில்லை. அந்த எண்ணம் அடிப்படையிலேயே தவறு. நமது வலிமையை இழந்து கொண்டிருக்கிறோம். இயற்கை வளங்கள் குறைந்து கொண்டே வருவதால் நாளுக்கு நாள் இன்னும் பலவீனமாகிக் கொண்டே வருகிறோம். மனித இனமே மரணப்படுக்கையில் இருக்கிறது. இதே நிலமை தொடர்ந்தால் இன்னும் ஐம்பது ஆண்டுகள் -அதிகம் போனால் அறுபது ஆண்டுகள் அதிகபட்சம் நூறு ஆண்டுகளுக்கு மேல் நமது இனம் இருக்காது. பிரபஞ்சம் தோன்றிய காலத்திலிருந்து பார்த்தால் இந்தக் காலம் சில விநாடிகளுக்குச் சமம்.

அப்படியே மூன்றாவது உலகப் போர் நடக்காமல் போனாலும் நாம் கொஞ்சம் கொஞ்சமாக தற்கொலை செய்து கொண்டு விடுவோம். நூறு வருடங்களில் நாம் யாருமே இருக்க மாட்டோம். ஒரு புல், பூண்டு கூட இருக்காது.

இந்தப் பூமியில் ஏற்கனவே பல இனங்கள் அழிந்து விட்டன. வலிமை கொண்ட பெரிய விலங்குகளின் மொத்த

இனமே பூண்டோடு அழிந்துவிட்டது. அந்தப் பெரிய விலங்குகள் ஒரு காலத்தில் இந்த பூமியில் சுதந்திரமாகச் சுற்றிக் கொண்டிருந்தன. அவை இந்த பூமியின் ராஜாக்களாக கம்பீரமாக உலா வந்தன. இன்று நாம் காணும் யானையைவிடப் பெரிதாக இருந்தன. அவை இப்போது எங்கே இருக்கின்றன என்று யாருக்கும் தெரியாது.

அந்த விலங்குகள் தாங்கள் மிகவும் வலுவடைந்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருந்தன. அவற்றிடம் ஏராளமான சக்தி இருந்தது. ஆனால் ஒரு காலகட்டத்தில் அந்தப் பெரிய விலங்குகளுக்குப் போதுமான உணவு கிடைக்கவில்லை. அவை இன்னும் பெரிதாகிக் கொண்டே வந்தன. ஒரு கட்டத்தில் அவற்றுக்குக் கொஞ்சம் கூட உணவு கிடைக்கவில்லை. பட்டினியால் இனம் இனமாக அழிந்து போயின.

அதே நிலை மனிதனுக்கும் வர அதிக காலம் ஆகாது. மனிதன் தான் மேலும் மேலும் வலுப்பெற்று வருவதாக நினைத்துக் கொண்டிருக்கிறான். அவனால் நிலவின் மேல் நடக்க முடிகிறது.

என்றாலும் பூமியைக் கொஞ்சம் கொஞ்சமாக அழிக்கத் தொடங்கிவிட்டான் மனிதன். இனிமேல் வேறு ஓர் உயிரினமே இங்கே தோன்ற முடியாது என்னும் அளவிற்கு மனிதனின் அழிவு வேலைகள் கனகச்சிதமாக நடந்து கொண்டிருக்கின்றன.

மனிதத் தன்மை கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருகிறது. தயவு செய்து உங்கள் தொழில் நுட்பத்தை இங்கே ஆன்மிகத்தில் உள்ளே கொண்டு வராதீர்கள். ஏற்கனவே போதுமான அளவு அழிவு வேலைகளைச் செய்தாகிவிட்டது. ஞானத்தைத் தொழில் நுட்பம் மூலமாகவோ விஞ்ஞானத்தின் மூலமாகவோ கண்டிப்பாக அடைய முடியாது.

நமது உள்ளொளிப் பயணம் நமது வெகுளித்தனத்தைப் பொறுத்தது என்பதை நாம் அறிய வேண்டும். களங்கமற்ற குழந்தை மனமே அதற்குத் தேவை. ஞானத்தின் வழியில் அறிவுக்கு எந்த வேலையும் இல்லை. நிச்சயமாக

விஞ்ஞானத்திற்கு எந்தப் பங்கும் இல்லை. சத்தியமாக தொழில் நுட்பத்திற்கு அங்கு எந்த வேலையும் இல்லை.

அன்பு. வெகுளித்தனம் மௌனம் இவற்றைச் சார்ந்த விஷயமே ஞானம்.

தியானம் ஓர் உத்தியில்லை. உங்களுக்கு உத்திகளைத்தவிர வேறு எதுவும் புரியாது என்பதால் அதை ஓர் உத்திமாதிரி நான் விளக்குகிறேன். உண்மையிலேயே தியானம் ஓர் உத்தியில்லை. தியானம் என்பது உடற்பயிற்சி போல் ஒரு செயல் அல்ல. காதலில் விழுந்தான் என்று சொல்கிறோம் அல்லவா! அது போல் தியானத்தில் ஆழ்ந்தான் என்றுதான் சொல்ல வேண்டும்.

தியானம் என்பது உங்கள் செய்தொழில் இல்லை. அது ஒரு நிலை. எல்லாச் செயல்களும் அடங்கிவிட்ட உன்னதமான இருப்பு நிலை.

பூரண ஞானம் என்பது செயலற்ற நிலை. எதுவும் செய்யாமல் இருப்பதற்கு என்ன தொழில் நுட்பம் இருக்க முடியும்? தியானம் எப்போது நிகழ்கிறது? உங்களுக்குள் இருக்கும் 'கர்த்தா' அல்லது 'செய்பவன்' முழுவதுமாகச் செயலற்று வெளியேறும் போது, நீங்கள் எந்தவித அழுத்தமும் இல்லாமல் தளர்வாக இருக்கும் போது தியானம் நிகழ்கிறது. தியானம் அங்கே அழகாக மலர்கிறது. அது உங்கள் ஆன்மாவின் அற்புத மலர்ச்சி.

தியானத்தில் நீங்கள் வேறாக ஆவதில்லை. தியானம் சாதனை அல்ல. அது ஒரு முன்னேற்றம் அல்ல. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே இருக்கும் ஒரு சாந்தி நிலை. இதற்கு என்ன புடலங்காய் தொழில் நுட்பம் வேண்டும்?

மக்கள் முட்டாள்கள். அதனால்தான் அவர்களிடம் உத்திகள் பற்றிப் பேச வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். நீங்கள் தியானத்தின் தன்மையைப் புரிந்து கொண்டால் உங்களுக்கு வேறு எதுவும் வேண்டாம்.

மௌனமாக இருங்கள். உங்கள் இயல்பு நிலையிலேயே இருங்கள். எந்தத் திசையிலும் நகராமல் இருங்கள். அப்போது நீங்கள் தியான நிலையை உணர்வீர்கள். ஒரு புனிதத்தன்மையை உணர்வீர்கள்.

தியானம் ஓடும் ஆற்றின் போக்கைப் போல் தன்னிச்சையாக இருந்துவிட்டால் நீங்கள் அதற்காக ஒரு குறிப்பிட்ட முறையில் அமர வேண்டாம். பத்மாசனம் போட்டுக் கொண்டு கிழக்குப் பார்த்து உட்கார வேண்டாம். யாரும் தொந்தரவு செய்யாத வண்ணம் வீட்டில் ஒரு மூலையில் மூச்சைப் பிடித்துக் கொண்டு அமர வேண்டாம்.

நீங்கள் பேசும் போது, நடக்கும் போது செயலில் ஈடுபட்டிருக்கும் போது உண்ணும் போது அந்தத் தியான உணர்வு அப்படியே இருக்கும். அவ்வளவு ஏன் நீங்கள் தூங்கும் போது கூட அந்த உணர்வு உங்களிடம் நிலைத்து நிற்கும். அதை எந்த நேரமும் உணர்வீர்கள். அந்த நிலையில் தியானம் என்பது உங்கள் சுவாசம் போல் -உங்கள் இதயத் துடிப்பு போல்- எப்போதும் உங்கள் கூடவே இருக்கும்.

கபீர் இதைத்தான் 'ஸஹஜ சமாதி' என்று சொல்கிறார். தன்னிச்சையாக விளையும் பரவச நிலை. அதற்கு உத்திகள் தேவையில்லை. இயல்பும் எளிமையுமே போதும்.

அறியாதவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்று நான் அடிக்கடி சொல்வது அதனால்தான். அறியாதவர்களே இறைவனின் ராஜ்ஜியத்துக்குச் சொந்தக்காரர்கள். வெகுளியாக இருங்கள். அறியாதவராக இருங்கள். அறிவைத் தேடி ஓடாதீர்கள்.

மேலை நாடுகளில் இப்போது ஒரு விபரீதம் நடந்து கொண்டு இருக்கிறது. மனித மனத்தை சூழ்ச்சித் திறத்தால் அடக்கியாளப் பார்க்கிறார்கள். அதற்கான உத்திகளைத் தேடிக்கொண்டு இருக்கிறார்கள். இது விஞ்ஞானத்தைவிட ஆபத்தானது. இன்னொரு மனிதனின் மனத்தை அடக்கியாளும் வல்லமை கண்டுபிடிக்கப்பட்டுவிட்டால் மனிதன் இயந்திரன் ஆகிவிடுவான்..

மனிதனையும் அவன் மனதையும் வெளியில் இருந்தே மாற்றலாம் கட்டுப்படுத்தலாம் என்ற நிலை வந்துவிட்டால் நமது சுதந்திரம், நமது தனித்தன்மை எல்லாமே சுவடில்லாமல் அழிந்துவிடும்.

உங்கள் மூளைக்குள் உங்களுக்குத் தெரியாமல் ஒரு மின்முனையைச் (electrode) சொருகி வைத்துவிட்டால் அப்பறம் தள்ளியிருந்தபடியே உங்களை ஆட்டிப் படைக்கலாம். டில்லியிலிருந்து மாஸ்கோவிலிருந்து வாஷிங்டனில் இருந்து கொண்டே உங்களைக் கட்டுப்படுத்தலாம். மின்காந்த அலைகளால் உங்களை அடிமைப் படுத்தலாம்.

நாட்டில் உள்ள மொத்த மக்களையும் இஷ்டம்போல் ஆட்டிப் படைக்கலாம். அவர்களுக்கு ஆணைகள் இடலாம். ஆணை எங்கிருந்து வருகிறது என்று யாருக்குமே தெரியாது. சொல்லப்போனால் அந்த ஆணைகள் உங்களுக்குள் இருந்துதான் வரும்.

உங்களுக்குள் மின்முனை இருக்கிறது. மின்காந்த அலைகள் மூலம் அந்த மின்முனைக்கு ஆணைகள் பிறப்பிக்கலாம். அந்த ஆணைகளுக்கு நீங்கள் கீழ்ப்படிந்தேயாக வேண்டும். உங்கள் சுதந்திரம் பறிபோய்விடும். உங்களை எந்த நேரத்திலும் வசியப்படுத்தலாம்.

உங்களை இனம் புரியாத ஒரு தோற்ற மயக்கத்தில் ஆட்படுத்தலாம். அது உங்களுக்குள் இருந்தே வருவதால் அதை நிஜம் என்றே நினைத்துக் கொண்டிருப்பீர்கள்.

அதன்பின் காவல் துறை தேவையில்லை. நீதிமன்றங்கள் தேவையில்லை. அவற்றைக் கட்டி மேய்க்க செலவு அதிகம் ஆகும். இந்தத் தொழில்நுட்ப வளர்ச்சியின் பின்னணியில் பார்த்தால் அவை எல்லாம் மாட்டு வண்டி ரகத்தைச் சேர்ந்தவை.

காற்றாய்ப் பறக்கும் கார் வந்தபின் மாட்டு வண்டி எதற்கு? ஒவ்வொரு மனிதனின் மனதையும் தூரத்தில் இருந்தே கட்டுப்படுத்தலாம் என்ற அளவிற்கு விஞ்ஞானம் வளர்ந்துவிட்டால்

பின் காவல் துறை, நீதிமன்றங்கள் சிறைச்சாலைகள் இவற்றுக்கு அவசியமே இருக்காது.

அவ்வளவு ஏன்? தர்மம் நியாயம் ஒழுக்கம் இவற்றைப் போதிக்கப் புரோகிதர்களோ பாதிரியார்களோ மடாதிபதிகளோ கூடத் தேவையில்லை.

தலைநகரில் இருந்து. அனைவருக்கும் ஆணைகள் வரும். "நீங்கள் எல்லாரும் சந்தோஷமாக இருக்கிறீர்கள்" அந்த ஆணை உங்கள் தலைக்குள் இருக்கும் மின் முனையை அடைந்தபின் நீங்கள் சந்தோஷமாக இருப்பதாக உணர்வீர்கள்.

"நீங்கள் நிறைவுடன் இருக்கிறீர்கள்" என்று ஆணைகள் வந்தால் நீங்கள் நிறைவுடன் இருப்பதாக உணர்வீர்கள்.

நீங்கள் மரணப்படுக்கையில் இருக்கலாம். கொலைப் பட்டினி கிடக்கலாம். ஆனால் உங்களுக்கு 'சந்தோஷமாக இருக்கிறீர்கள்' என்று ஆணை வந்துவிட்டால் நீங்கள் சந்தோஷமாக இருப்பீர்கள். சாவு என்பதே இல்லை என்று உங்களுக்கு ஆணை வரும். அதுதான் நிஜம் என்று நீங்களும் நம்பத் தொடங்கிவிடுவீர்கள்.

டெல்காடோ (Delgado) அதைத்தான் செய்ய முனைந்திருக் கிறார். அவர் சொல்வதைக் கேளுங்களேன் "அந்த நிலை வந்துவிட்டால் மனிதன் மகிழ்ச்சியாக இருப்பான். யாருமே கவலைப்பட மாட்டார்கள்." ஆனால் அந்த மகிழ்ச்சி நிஜமான மகிழ்ச்சியாக இருக்காது.

மின்சாரத்தைக் கொண்டு உங்கள் மனதில் முதற்கட்ட எண்ண அலைகளை (alpha waves) உருவாக்கும் அளவிற்குத் தொழில் நுட்பம் வளரும். அது இன்னும் ஆபத்தானது. ஏனென்றால் அது உங்களை உண்மை என்ன என்பதை அறியவிடாது. அந்த எண்ண அலைகள் வெளியிலிருந்து உருவாக்கப்படும். அவை உண்மையான எண்ண அலைகளாக இருக்காது.

கடவுளுக்கு எந்தத் தேவையும் இருக்காது என்பதால் அவரும் ஒரு காலகட்டத்தில் மறைந்து போய்விடுவார்.

நீங்கள்தான் வருத்தமாக இல்லையே? பின் எதற்காக மகிழ்ச்சியைத் தேடி அலைய வேண்டும்? உங்களையாளும் அரசியல்வாதிகளும் மதவாதிகளும் எத்தகைய மூட நம்பிக்கைகளை ஆதரிக்கிறார்களோ அவற்றையே நீங்களும் ஆதரிப்பீர்கள். அந்த மூட நம்பிக்கையை நீங்கள் முரட்டுத் தனமாகப் பிடித்துக் கொள்வீர்கள். உங்களுக்கு அதில் எந்தவிதமான ஐயமும் இருக்காது. மனித அறிவு வளர மூலகாரணமாக இருக்கும் ஆரோக்கியமான சந்தேகம் அறவே நீங்கிவிடும். அது மிகவும் ஆபத்தான நிலை.

தியானத்தைத் தொழில் நுட்பம் அளவிற்குத் தாழ்த்த முடியாது. ஞானத்தைக் கொஞ்சம் கூடத் தாழ்த்த முடியாது. ஞானம் என்பது ஒரு விழிப்புணர்வு. எல்லாவற்றையும் காய்தல் உவத்தல் இல்லாமல் பார்க்கும் ஒரு சாட்சி பாவம்

ஞானம் என்பது உடல் சம்பந்தப்பட்டதோ மனம் சம்பந்தப்பட்டதோ இல்லை. அதையும் தாண்டிப் புனிதமானது. இயந்தரத்தனமான இயக்குமுறைகளால் உடலைக் கட்டுப்படுத்தலாம். ஏன் மனதைக் கூடக் கட்டுப்படுத்தலாம். ஆனால் உடல் மனம் அனைத்தையும் தாண்டிப் புனிதமாக இருக்கும் உங்கள் ஆன்மாவை எந்த இயந்திரத்தாலும் எந்த இயக்குமுறையாலும் எந்தக் கருவியினாலும் கட்டுப்படுத்த முடியாது..

"மேலை நாடுகளில் ஞானம் பெறுவதற்கான விஞ்ஞானத்தையும் தொழில் நுட்பத்தையும் உருவாக்க ஆரம்பித்து விட்டார்கள்." என்று நீங்கள் கேட்கிறீர்கள்:

அப்படி உருவாக்குபவர்கள் குற்றவாளிகள். தீவிரவாதிகள். நாச வேலைக்காரர்கள். அவர்கள் ஆபத்தானவர்கள். அவர்களைத் தவிருங்கள். இதே கூட்டம்தான் இருநூறு வருடங்களுக்கு முன்னால் இயற்கையைக் கட்டுப்படுத்தத் தொழில் நுட்பத்தை உருவாக்க ஆரம்பித்தது.

இப்போது இயற்கையை ஏறக்குறைய அழித்து முடித்துவிட்டார்கள். வெளியே அழிவு வேலை முடிந்தவுடன் உள்ளே அதே வேலையைச் செய்யத் தொடங்கிவிட்டது

அந்தக் கூட்டம். உள்ளே இருப்பதையும் அழித்துவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள் இந்தச் சதிகாரர்கள்.

இப்போது உலகமெங்கிலும் சுற்றுச் சூழலைப் பாதுகாக்க ஓர் இயக்கம் இருக்கிறது. இவர்கள் இயற்கையை இயற்கையாக வைத்திருக்கப் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் என்ன செய்வது? காலம் கடந்துவிட்டது. இப்போது செய்வதற்கு ஒன்றும் இல்லை.

சுற்றுச்சூழல் ஆர்வலர்களும் வெறிபிடித்தவர்களைப் போல் நடந்து கொள்கிறார்கள். கொள்கை வெறி பிடித்தவர்களாக இருக்கிறார்கள். மதத்தீவிரவாதிகள் ஜெஹோவாவின் சாட்சிகள் என்று இயக்கம் நடத்துவது போல் இவர்கள் சுற்றுச்சூழல் பாதுகாப்பு இயக்கம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். முடியாததற்கு முனைந்து போராடிக்கொண்டிருக்கும் முட்டாள்களின் கூட்டமாக விளங்குகிறார்கள்.

தொழில் நுட்பம் என்னும் கொடிய எய்ட்ஸ் நோய் மனிதனின் உணர்வுகளுக்குப் பரவும் முன் அதைத் தடுத்து நிறுத்துங்கள். அது கருவில் இருக்கும் போதே கருவறுத்து விடுங்கள்.

“அதற்கான ஒரு தேவை இருப்பது உண்மைதான்” என்று நீங்கள் சொல்கிறீர்கள் அப்படி ஒரு தேவை இல்லை. “அது சாத்தியப்படுமா?” என்று கேட்கிறீர்கள். சாத்தியப்படாது.

ஆனால் மனிதன் ஆபத்தானவன். எது சாத்தியம் இல்லையோ அதுதான் அவனை வசீகரிக்கும். எட்மண்ட் ஹிலாரி எவரெஸ்ட் சிகரத்தின் உச்சத்தை அடைந்தபோது இதைத்தான் சொன்னார்.

யாரோ அவரிடம் கேட்டார்கள்: “ஏன் இந்த முயற்சி? இந்தச் சிகரத்தை அடைந்து என்ன சாதிக்க வேண்டும் என்று நினைத்தீர்கள்?”

ஹிலாரி சொன்னார்: “இதை அவசியம் செய்ய வேண்டிய தேவை எனக்கு இருந்தது. எவரெஸ்ட் சிகரம் அதன் இடத்தில் இருப்பதே எனக்கு ஒரு சவாலாகத் தோன்றியது.

அதனால்தான் அதன் மேல் ஏறி உச்சியைத் தொட வேண்டும் என்று தோன்றியது."

செய்ய முடியாதது மனிதனின் அகங்காரத்திற்கு ஒரு சவாலாக அமைந்துவிடுகிறது.

தொழில் நுட்பத்தைக் கொண்டு ஞானம் பெறுவதற்கான சாத்தியக்கூறேயில்லை. சத்தியமாக அப்படி நடக்காது. ஆனால் இந்தச் சாத்தியமின்மையே சில பைத்தியக்காரர்களுக்கு ஒரு சவாலாகத் தோன்றும். இந்தப் பைத்தியக்காரர்கள் எல்லாவற்றையும் சில உத்திகளுக்குள் அடக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஞானம் பெறுவதற்கான ஒரு தொழில் நுட்பத்தைச் சத்தியமாக இந்த மடையர்களால் உருவாக்க முடியாது. அதற்கான வாய்ப்பேயில்லை. ஆனால் ஞானம் பெற்றுவிட்டோம் என்று மக்களைப் போலியாக நம்பவைத்து ஏமாற்றும் ஒரு தொழில் நுட்பத்தை இவர்களால் உருவாக்க முடியும்.

இன்று போதைப் பொருட்களில் அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. ஞானம் பெறுவதற்கான தொழில் நுட்பம் போதைப் பொருள்கள்தான். போதைப் பொருள்களின் குருவான ஜின்ஸ்பெர்க் என்பவர் "கஞ்சா, போதை மாத்திரை, ஹாஷிஷ் போன்ற பொருள்களைப் பயன்படுத்துவதால் மனதில் ஏற்படும் காட்சிகளைத்தான் உலக ஞானிகள் கண்டு சொல்லியிருக்கிறார்கள்" என்று சொல்கிறார்.

அபத்தம். எந்தப் போதைப் பொருளும் உங்களுக்கு ஞானத்தைக் கொடுக்காது. ஆனால் ஞானமடைந்துவிட்டதைப் போன்ற ஒரு மாயத்தோற்றத்தைக் கொடுக்கும்.

"அப்படி ஒரு தொழில் நுட்பத்தை உருவாக்க நினைப்பது பொறுப்புள்ள செயல்தானா?" ஞானம் என்றால் கிலோ என்ன விலை என்று கேட்பவர்கள்தான் இப்படிப்பட்ட முயற்சி களில் இறங்குவார்கள். ஞானம் பற்றிய அறிவு லவலேசமாவது இருந்தால் இதைப் பற்றி யோசிக்கவே மாட்டார்கள். ஆமாம், அது பொறுப்பற்ற செய்கைதான். சந்தேகமேயில்லை.

குறிப்பாக "அரிகா முறை" சரியான அணுகுமுறைதானா?" என்பது உங்கள் கேள்வி. அரிகா முறை என்பது தொழில்நுட்பம், சில உத்திகள், அன்பு கலக்காத அறிவு. அதனால் அது ஆபத்தானது. அது மக்களை இயந்திரங்களாக ரோபோக்களாக மாற்றிவிடும்.

விடுதலை என்பதுதான் நம் லட்சியம் என்பதை எந்தக் காலத்திலும் மறந்துவிடாதீர்கள். நிபந்தனையற்ற விடுதலைதான் ஆன்மிகத்தின் குறிக்கோள். நீங்கள் மனிதர்களை ரோபோக்களாக எந்திரன்களாக மாற்றலாம். அப்படி மாற்றினால் அவர்களுடைய வருத்தம் எல்லாம் போய்விடும். நீங்கள் ஒரு பரிபூரண எந்திரனாகிவிட்டால் அதன்பின் உங்களுக்கு என்ன கவலை இருக்க முடியும்? ஓர் இயந்திரத்திற்கு வருத்தம் என்பதே கிடையாது. அதே போல் அதற்கு மகிழ்ச்சி என்றால் என்ன என்பதையும் உணரமுடியாது.

அரிகா வழிமுறைகள் அன்பு கலக்காதவை. அன்பை அடிப்படையாகக் கொள்ளாத எந்த வழிமுறையும், ஆபத்தானது தான்.

இதில் இன்னொரு நுட்பத்தையும் நாம் கவனிக்க வேண்டும். ஒரு வழிமுறையை அன்போடு பின்பற்றினால் அர்த்தமுள்ளதாக இருக்கும். அன்பு இல்லாவிட்டால் அதே வழிமுறை அனர்த்தத்தை விளைவிக்கு.ம் இந்த வேறுபாட்டை உணர்வது கொஞ்சம் கடினம்.

அதுபோக வெளியிலிருந்து பார்க்கும் போது அந்த வழிமுறை அன்புடன் பின்பற்றப்படுகிறதா இல்லையா என்று சொல்ல முடியாது.

அரிகாவின் வழிமுறைகள் பல இடங்களிலிருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுக்கப்பட்டவை சூஃபி, குர்ஜிஃப், இந்திய மதங்கள், ஜப்பானிய மதங்கள் என்று எல்லாவற்றையும் கலந்து கட்டி ஓர் அவியல் போல் செய்திருக்கிறார்கள். அது கலவையில்லை கலப்படம். பல மூலங்களிலிருந்து வந்தவற்றை மனம் போன போக்கில் கலந்து செய்யப்பட்ட ஒரு கதம்ப சாதம்.

உலகம் எங்கிலும் இருந்து உத்திகளைக் கடன் வாங்கியிருக் கிறார்கள். அதனால்தான் அரிகா வழிமுறையில் ஓர் இசைவு இல்லை. ஒரு மையம் இல்லை. மையக்கரு இல்லை. அது ஒரு காய்கறிக் குவியல். அது ஒரு கும்பல். குடும்பம் இல்லை. குடும்பம் என்பது உறவு அழுத்தமாக இருக்கும் இசைவு கொண்ட மனிதர்களின் சங்கமம். கும்பல் என்பது எதேச்சையாகத் தெருவில் சேர்ந்துவிட்ட தொடர்பு இல்லாத பலதரப்பட்ட மக்களின் கூட்டம்.

சூஃபி உத்தி ஜென் உத்தியிலிருந்து வேறுபட்டது. இரண்டும் அதன் அதன் இடத்தில் நன்றாகச் செயல்படும். ஆனால் எதுவும் தன் இடத்திற்கு வெளியே செயல்படாது..

ஒரு காரிலிருந்து ஒரு பாகத்தை எடுத்து அதை வேறு ஒரு கம்பெனி தயாரித்த காரில் பொருத்தினால் அது வேலை பார்க்குமா? பார்க்காது. ஆனால் நீங்கள் ஆச்சரியப் படலாம். “இந்தக் காரில் இது ஏன் இயங்க மறுக்கிறது? அந்தக் காரில் நன்றாக இயங்கியதே!”

முதல் காரில் அந்தப் பாகம் நன்றாக இயங்கியது. ஏனென்றால் அந்தப் பாகம் அந்தக் காருக்காகவே தயாரிக்கப் பட்டது.அதனால் அது அந்தக் காருடன் இசைவாக இருக்கும்.

ஜென் முறை ஜென் தத்துவத்திற்குச் சரிப்படும் சூஃபி முறை சூஃபி தத்துவத்திற்குச் சரிப்படும். திபெத் நாட்டு முறை அவர்கள் கடைப்பிடிக்கும் பௌத்த மதத்திற்குச் சரியாக வரும். பதஞ்சலியின் அமைப்பில் யோகப்பயிற்சி சரியாக வரும்.

இவற்றை எல்லாம் ஓரிடத்தில் சேர்த்தால்? புகழ் பெற்ற ரோல்ஸ் ராய்ஸ் காரிலிருந்து சில பாகங்கள். அமெரிக்காவின் லிங்கன் காரிலிருந்து சில பாகங்கள், கெடிலாக் காரிலிருந்து சில பாகங்கள் ஃபியட் காரிலிருந்து சில பாகங்கள் – இவற்றை ஓர் இடத்தில் குவித்து வைத்து ஒரு காரை உருவாக்கினால்? அந்தக் கார் ஆபத்தான காராகத்தான் இருக்கும்.

அந்தக் கார் இருக்கும் இடத்தைவிட்டு ஓர் அடிகூட நகராது. அப்படி நகராமல் இருப்பதே உங்களுக்கு நல்லது. அது நகரத் தொடங்கினால் ஆபத்து இன்னும் அதிகமாகும்.

அரிகா வழிமுறை இப்படி உருவாக்கப்பட்ட ஒரு கார். அது பேராசையில் விளைந்தது. பல மூலங்களில் இருந்து வந்தவற்றைக் கொண்டு ஆக்கப்பட்டது.. அதற்கு மையக்கரு என்று ஒன்றும் கிடையாது. அரிகா வழிமுறை இசைக்குழு அல்ல. அது ஒரு கூட்டுக் கூச்சல். ஒரு காட்டுக் கூச்சல்

முதலில் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது : அரிகா வழிமுறையை நீங்கள் பின்பற்றினால் என்றும் உங்கள் மையத்திற்குள் செல்ல மாட்டீர்கள். மையக்கருவிற்கு வெளியே இருக்கும் வெளிச்சுற்றில் பலவிதமான அனுபவங்கள் உங்களுக்குக் கிடைக்கும். ஆனால் கடைசிவரை உங்களால் அந்த மையத்திற்குச் செல்லவே முடியாது. உங்கள் அனுபவங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையதாக இருக்காது. அங்கொன்றும் இங்கொன்றுமாக சம்பந்தா சம்பந்தமில்லாமல் இருக்கும். அது ஆபத்தானது. நீங்கள் பல பாகங்களாகச் சிதறிப் போகும் அபாயமும் இருக்கிறது.

இரண்டாவதாக, அரிகா வழிமுறைகளில் மையம் இல்லை என்பதால் அன்பும் இல்லை. மையக்கருவிலிருந்துதான் உண்மை யான அன்பு எழும். இப்படிப் பல முறைகளை அவியலாக ஒன்று சேர்க்கும்போது அதில் ஆன்மா இருக்காது. ஆன்மிகமும் இருக்காது. அரிகா முறைகளில் நீங்கள் தேர்ச்சி பெறலாம்.

ஏன் அதில் பெரிய விற்பன்னராகக் கூட ஆகலாம். ஆனால் உங்கள் இதயத்தில் மலர்ச்சி இருக்காது. உங்களிடம் திறமை இருக்கும் ஆனந்தப் பரவசம் இருக்காது. ஆன்மிகத்திற்கே உரிய பேருவகை இருக்காது. உங்கள் கவலைகள் குறையலாம். சோகங்கள் மாறலாம் உங்கள் மன அழுத்தம் குறையலாம் உங்கள் ஆளுமை அதிகரிக்கலாம், உங்கள் அகங்காரம் இன்னும் வலுப்பெறும் என்றாலும் உங்களிடம் ஆன்மா இருக்காது.

அரிகாவின் வழிமுறைகளைத் தனித்தனியாக அதற்குப் பொருத்தமான சூழலில் வைத்துப் பார்த்தால் சிறப்பாகத் தென்படலாம். ஆனால் அரிகாவிற்கு என்று தனியாகத் தத்துவம் என்று எதுவும் கிடையாது..

அரிகா செல்லும் வழியில் சென்று இசையை உருவாக்க முடியாது. இசைவிற்கான வழி நேர்மாறானது.

பௌத்த மதம் எப்போது தோன்றியது? புத்தருக்கு போதிமரத்தடியில் ஞானம் மலர்ந்தபிறகு. ஊன்றிக் கவனியுங்கள். முதலில் ஒரு மையமும் மையக்கருவும் உருவானது. அதன் பிறகு சாதாரண மக்கள் ஞானம் பெற சில உத்திகளை அறிமுகப்படுத்தினார் புத்தர். அவர் ஏற்கனவே அடைந்துவிட்ட மையத்திற்கு மற்றவர்களை அழைப்பதற்காகத்தான் உத்திகளை அறிமுகப்படுத்தினார் அவர். முதலில் மையம் வந்து அதன் பிறகுதான் வெளிச்சுற்றுக்கள் தோன்றின.

ஜலாலுதீன் ரூமி என்ற சூஃபி ஞானியின் கதையும் அதுதான். அவர் முதலில் ஞானியானார். ஞானியானபின் அவர் நடனமாட ஆரம்பித்தார். சாதாரண நடனம் இல்லை அது. சுற்றிச் சுற்றிக் காதல் ஆவேசத்துடன் நடனம் ஆட ஆரம்பித்தார்.

ஆனால் நடனமாடுவது ஞானியாவதற்கான ஓர் உத்தி என்று அவர் ஒருபோதும் சொன்னதில்லை. சொல்லப் போனால் அவர் ஞானியானதே அவருக்குத் தெரியாது.

அவருக்குச் சுழன்று சுழன்று ஆடுவது பிடித்திருந்தது. அப்படி ஆடும்போது அவருக்குள் ஓர் அலாதியான அமைதியை அவரால் உணர முடிந்தது.

அது தற்செயலாக நிகழ்ந்த ஒரு நிகழ்வு. அவ்வளவுதான். அவர் சுழன்று சுழன்று ஆடிக்கொண்டிருக்கும்போது திடீரென்று அவருக்கு ஞானம் வந்தது. ஞானம் வந்தபின் அதை வைத்துக் கொண்டு மற்றவர்களுக்கு எப்படி உதவலாம் என்று யோசிக்க ஆரம்பித்தார். கவனித்துப் பாருங்கள் மையக்கருதான் முதலில் வந்தது. அதன்பிறகுதான் பலதரப்பட்ட சூஃபி வழிமுறைகள் தோன்றின.

பதஞ்சலியின் கதையும் அதுதான்.

ஆனால் அரிகாவில் எல்லாமே தலைகீழாக இருக்கிறது. அதன் நடுவில் ஞானி என்று யாரும் இல்லை. நடுவே இருப்பது ஒரு சாமர்த்தியமான மனிதன். பல சமயங்களில் இருந்து பல சம்பிரதாயங்களில் இருந்து பல மூலங்களில் இருந்து பல முறைகளைச் சேகரித்து வைத்திருக்கும் ஒரு சாமர்த்தியசாலிதான் அதன் நடுவில் இருக்கிறான்.

அரிகாவில் ஞான மையம் இல்லை. அதில் இருப்பதெல்லாம் புற வட்டப் பரப்பு மட்டும்தான். அதனால் அரிகாவிற்குச் செல்பவர்கள் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் புதைமணலில் மாட்டிக் கொள்வது போல் மாட்டிக் கொள்வார்கள். அது உங்களை ஆன்மிகப்பாதையில் சிறிது தூரம் அழைத்துச் செல்லும். அதன்பின் எந்தவிதமான வளர்ச்சியும் இருக்காது.

அதன்பின் நீங்கள் பசுமையில்லாமல் காய்ந்து பாலைவனம் போல் ஆகிவிடுவீர்கள். அன்பு என்னும் ஆறு அங்கே பெருக்கெடுத்து ஓடவில்லையென்றால் மலர்கள் மலராது, மரங்கள் இருக்காது. கடைசி மலர்ச்சி எப்போதும் அன்பாகத்தான் இருக்க வேண்டும். அது அங்கு சுத்தமாக இல்லை.

இரண்டாவது கேள்வி:

*ஓஷோ,*

*ஒரு நாள் நீங்கள் உங்களை அகங்காரம் பிடித்தவன் என்று சொல்லிக்கொண்டீர்கள். இன்னொரு நாள் அகங்காரம் பிடித்தவன் மகிழ்ச்சியாகவே இருக்க முடியாது என்று சொன்னீர்கள். நீங்கள் இப்போது மகிழ்ச்சியாக இருப்பதாகச் சொல்கிறீர்கள். இந்த முரண்பாடுகளைப் பற்றிச் சொல்லுங்களேன்.*

நான் சொல்வதைக் கவனிக்காதீர்கள். என்னைப் பாருங்கள் என்னைக் கவனியுங்கள். வார்த்தைகளைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாதீர்கள். நேராக என்னைப் பாருங்கள். இங்கே அமர்ந்து உங்களுடன் பேசிக் கொண்டிருக்கும் இந்த மனிதனிடம் அகங்காரத்தின் சாயல் ஏதாவது தெரிகிறதா?

நான் சொல்வதை நினைத்துக் கவலைப்படாதீர்கள். அகங்காரத்தின் சாயல் கொஞ்சம் கூட இல்லாதவன்தான் தன்னைப் பெரிய அகங்காரி என்று சொல்லிக் கொள்வான்.

சாதாரணமாக அகங்காரம் தன்னை மறைத்துக் கொள்ள முயற்சிக்கும். யாரையாவது பார்த்து "நீ அகம்பிடித்தவன்" என்று சொல்லிப் பாருங்கள். அவனுக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்துவிடும். அவன் உண்மையிலேயே அகம் பிடித்தவனாக இருக்கலாம். என்றாலும் அவனுக்குக் கோபம் வந்துவிடும். அவனுக்கு எந்த அளவிற்கு அகங்காரம் அதிகமாக இருக்கிறதோ அந்த அளவிற்கு அதிகமாகக் கோபம் வரும்.

அகங்காரம் மனதின் தன்னுணர்வற்ற இருண்ட மூலையி லிருந்து செயல்படுகிறது. அது எப்போதுமே வெளிச்சத்துக்கு வராது. இந்த உலகத்திலேயே நான்தான் பெரிய அகங்காரி என்று நான் தைரியமாகச் சொல்லமுடியும். அதில் எனக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை.

என் அகங்காரம் எல்லாவற்றையும் உள்ளடக்கியது. அகங்காரம் எப்படி எல்லாவற்றையும் சேர்த்துக் கொள்ளும்? அகங்காரம் தன்னது இல்லாதவற்றை விலக்க வேண்டும். அப்படிச் செய்யவில்லையென்றால் அதை அகங்காரம் என்று சொல்லமுடியாது.

அகங்காரம் என்ன சொல்ல வேண்டும்? நீ நீதான். நான் நான்தான். நான் உன்னைவிட உயர்ந்தவன். நான் உன்னைவிடச் சிறந்தவன். வரையறுத்தலையும் வரைமுறையையும் சார்ந்து இருக்கிறது அகங்காரம்.

என் அகங்காரம் உங்களை எல்லாம் உள்ளடக்கியது என்று நான் சொல்லும்போது நான் எதையுமே விலக்கவில்லை. ஏன், சாத்தானைக்கூட என்னிடமிருந்து விலக்கிவைக்கவில்லை. இப்படிப் பார்க்கும்போது "நீ" என்பதே அங்கு மறைந்து போகிறது. "நீ" மறைந்துவிட்டால் அங்கு "நான்" மட்டும் எப்படித் தனியாக இருக்க முடியும்?

இந்தக் கேள்வி ஓர் ஆங்கிலேயரிடமிருந்து வந்திருக்கிறது. அது நான் எதிர்பார்த்ததுதான். ஆங்கிலேயர்களுக்கு நகைச்சுவை

உணர்வு என்பது கொஞ்சம் கூடக் கிடையாது. நான் விளையாட்டாகச் சொன்னதை நிஜம் என்று நினைத்துக் கொண்டுவிட்டார். ஆங்கிலேயர்கள் எப்போதுமே இப்படித்தான். கொஞ்சம் கூட நகைச்சுவை உணர்வு இல்லாதவர்கள். என்னிடம் முரண்பாடுகள் இருக்கின்றன என்று அந்த மனிதர் நினைக்கத் தொடங்கியிருப்பார்.

என்னிடம் விளையாட்டு மனப்பான்மையும் நகைச்சுவை உணர்வும் அதிகம். அதனால் முரண்பாடுகள் வரத்தான் வரும்.

ஆங்கிலேயர்களிடம் ஒரு நகைச்சுவைத் துணுக்கைச் சொன்னால் அதற்கு அவர்கள் மூன்று முறை சிரிப்பார்களாம். முதலில் அதைக் கேட்கும் போது. சத்தியமாக அவர்களுக்கு அந்தத் துணுக்கு புரியாது. என்றாலும் சிரிப்பார்கள். மரியாதை நிமித்தம் சிரிப்பார்கள். அடுத்தவர்கள் மனம் புண்படக்கூடாதே என்பதற்காக அவர்கள் சிரிப்பார்கள். துணுக்கைச் சொன்னவர் தனக்குப் புரியவில்லை என்று நினைத்துக் கொண்டுவிடப் போகிறார்களே என்பதற்காகக் கொஞ்சம் சத்தமாகவே சிரிப்பார்கள்.

இரண்டாவது முறை நடு இரவில் பாதித் தூக்கத்தில் திடீரென்று அந்தத் துணுக்கு அவர்களுக்குப் புரிந்துவிடும். "ஒஹோ இதுதானா!" என்று புரிந்து கொண்டு பலமாகச் சிரிப்பார்கள். பின் மூன்றாவது முறை இரவில் இன்னும் கொஞ்சம் நேரம் கழித்துச் சிரிப்பார்கள். 'சே அந்தச் சாதாரணத் துணுக்குக் கூடப் புரியாமல் எவ்வளவு முட்டாளாக இருந்துவிட்டேன். என்னை ஆங்கிலேயன் என்று சொல்லிக் கொள்ளவே தகுதியில்லை' என்று நினைத்தபடி மூன்றாவது முறை சிரிப்பார்கள்.

மூன்றாவது கேள்வி:

*ஓஷோ:*

*நிரந்தரமான இலக்கை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்ற தாகமும் ஆர்வமும் என்னை உங்கள் முகாமிற்குள் வர வைத்துவிட்டன. ஆர்வமுள்ளவர்களும்,*

*சந்தேகப்பிராணிகளும் நல்ல சீடர்களாக இருக்க முடியுமா? 'உடனே இந்த இடத்தை விட்டு வெளியேறு' என்று தாங்கள் கட்டளையிட்டது வேதனையாக இருக்கிறது. அது கொஞ்சம் கடுமையான தண்டனையல்லவா?*

ஆர்வமும் தாகமும் ஒருநாளும் சேர்ந்து இருப்பதில்லை. ஆர்வம் தாகமில்லை. ஆர்வம் விளையாட்டுப் பிள்ளைகளின் குணம். எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற குணம். அதுவும் ஒரு வகையான அரிப்புதான். அதில் நிஜமான தேடல் இல்லை. அதற்கான விலையைக் கொடுக்க நீங்கள் தயாராக இல்லை. வெறும் ஆர்வம் மட்டுமே இருக்கிறது.

நீங்கள் இந்த ஆன்மிகத் தேடலைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. அதைத் தெரிந்து கொண்டு உங்கள் வாழ்க்கையை, வாழும் முறையை உங்கள் இருப்பு நிலையை எந்தவிதத்திலும் நீங்கள் மாற்றிக் கொள்ளப் போவதில்லை. சும்மா போகும் போக்கில் எதையாவது தெரிந்து கொண்டுவிட வேண்டும் என்று பறக்கிறீர்கள். உங்களுக்கு இதில் மனம் ஒப்பவில்லை.

என்னை நாடி வரும் பலரும் ஒரு கேள்வியை மட்டும் கேட்டுவிட்டுப் போய்விடுகிறார்கள். சிலர் கேட்கிறார்கள் "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? கடவுள் இருக்கிறாரா இல்லையா?" ஒரு முட்டாள்தான் அப்படிப்பட்ட கேள்வியைக் கேட்பான்.

உண்மையான தேடலில் விளையும் கேள்வி இன்னும் பல மடங்கு பிரம்மாண்டமாக இருக்கும். வார்த்தையில் வெளிப்படுத்த முடியாததாக இருக்கும். நீங்கள் அழலாம். கதறலாம். ஆனால் அந்தக் கேள்வியை உங்களால் வார்த்தை வடிவத்தில் கொண்டுவர முடியாது. அது அவ்வளவு பரந்தது.. அவ்வளவு உன்னதமானது.

அதை எப்படிச் சொற்களில் அடக்க முடியும்? அதைச் சொல்வதே அதன் புனிதத்தன்மையைக் குலைப்பது போலாகும்.

அது மிகவும் புனிதமான கேள்வி. அதை நினைக்கும் போதே உங்கள் இதயம் இன்னும் வேகமாகத் துடிக்கும். என்றாலும் அதை உங்களால் வார்த்தைகளின் மூலமாக வெளிப்படுத்த முடியாது.

அப்படிப்பட்டவர்களையும் நான் அறிவேன். என்னிடம் வந்து நிற்பார்கள் நடுங்குவார்கள். பின் தயங்கித் தயங்கி "என்ன கேட்க வேண்டும் என்பதே எனக்குத் தெரியவில்லை" என்பார்கள். சில சமயம் என்னிடம் "உங்களிடம் என்ன கேட்க வேண்டும்?" என்று கேட்பார்கள். அப்படிப்பட்ட மனிதனின் தரமே வேறு.

அவன் மனதில் இருக்கும் கேள்வியை அவனால் வார்த்தையில் வடிக்க முடியவில்லை. ஏன்? வாழ்க்கை அவ்வளவு பிரம்மாண்டமானது. அதைப் பற்றி என்ன கேள்வி கேட்க முடியும்? அதைக் கேள்வி வடிவாக்கினால் சிறுபிள்ளைத்தனமாக இருக்கும். கேள்வி பதில்கள் எல்லாம் பள்ளிக்கூடங்களில்தான் இருக்கின்றன. நிஜ வாழ்க்கையில் இல்லை.

சிலர் என்னிடம் "கடவுள் இருக்கிறாரா?" என்று கேட்கிறார்கள். அவர்கள் ஆம் அல்லது இல்லை என்ற பதிலை மட்டுமே என்னிடம் எதிர்பார்க்கிறார்கள். உங்கள் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் உங்களை கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்குப் பயிற்சி அளிக்கின்றன. என்ன கேள்வி கேட்டாலும் பதில் சொல்ல உங்களைத் தயார்நிலையில் வைத்திருக்கின்றன.

ஆனால் எப்படிக் கேள்விகள் கேட்க வேண்டும் என்று உங்களுக்கு யாரும் பயிற்சி கொடுப்பதில்லை. எப்படிப் பதில் சொல்ல வேண்டும் என்பதற்குத்தான் எல்லாப் பயிற்சியும். தேர்வு எழுதுகிறீர்கள். வினாத்தாளில் இருக்கும் கேள்விகளுக்கு உங்களிடம் பதில்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. கேள்வி முக்கியம் இல்லை. நீங்கள் அளிக்கும் பதில்தான் முக்கியம்.

"கடவுள் இருக்கிறாரா?" என்று வெள்ளந்தியாகக் கேட்டுவிட்டு நீங்கள் பதிலுக்காகக் காத்திருக்கிறீர்கள். அதற்கு இரண்டே

இரண்டு பதில்கள்தான் இருக்க முடியும். ஆம். இல்லை. “ஆமாம் ஐயா. கடவுள் இருக்கிறார்.” என்ற பதில் அர்த்த முள்ளதாக இருக்குமா? அது எந்தப் பிரச்சினையையாவது தீர்க்குமா? அந்தப் பதிலை நீங்கள் ஏற்கனவே கேட்டிருக்கலாம்.

அதற்கு மாறாக “கடவுள் இல்லை” என்று பதில் சொன்னால் அது உங்களுக்கு உதவி செய்யுமா? அந்தப் பதிலையும் நீங்கள் ஏற்கனவே கேட்டிருப்பீர்கள். இரண்டு பதில்களும் உங்களுக்குத் தெரியும். பின் ஏன் அந்தக் கேள்வி?

கேட்பதற்குப் பதில் மௌனமாக இருப்பது சாலச் சிறந்தது. அந்தக் கேள்வியால் உங்கள் இதயம் துடிப்பது இன்னும் உத்தமம். அழுது கதறுங்கள். அது இன்னும் மேலானது. எப்படியாவது உங்கள் இதயத்தைத் திறந்துவிடுங்கள். அந்த உத்வேகம் அந்தத் தாகம் ஆர்வம் அல்ல. ஆர்வக் கோளாறும் அல்ல. பெரிய தாகம் இருக்கும் இடத்தில் வெறும் ஆர்வம் நிச்சயமாக இருக்காது.

நீங்கள் சொல்கிறீர்கள்:

*நிரந்தரமான இலக்கை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்ற தாகமும் ஆர்வமும் என்னை உங்கள் முகாமிற்குள் வர வைத்துவிட்டன.*

நான் அப்படி நினைக்கவில்லை.

ஆர்வம் உங்களை இங்கே கொண்டு வந்திருக்கலாம்.

பாருங்கள் இவரை... தொடர்ந்து முட்டாள்த்தனமாகக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கிறார். கடந்த பத்து நாட்களில் குறைந்த பட்சம் நூறு கேள்விகளாவது கேட்டிருப்பார்.

தீவிரமான தாகம் உங்கள் மனதில் இருக்கும் எல்லாக் கேள்விகளையும் ஒரே கேள்வியாக்கிவிடும். உங்கள் ஆன்மிகத் தாகம் நிஜமாகவே தீவிரமாக இருந்தால் உங்கள் மனதில் இருக்கும் எல்லாக் கேள்விகளும் ஒரே ஒரு கேள்வியில் அடங்கிவிடும் அது என்ன அந்த ஒரு கேள்வி?

"நான் யார்?" என்பதுதான் அந்த ஒற்றைக் கேள்வி. மற்றக் கேள்விகள் பயனற்றவை.

நிஜமான தாகம் உள்ளவனுக்குக் கடவுளைப் பற்றிய கவலை இல்லை. சொர்க்கம் நரகம் இருக்கிறதா என்ற கவலை இல்லை. முந்தைய பிறவிகளைப் பற்றிக் கவலை இல்லை. கர்மவினைக் கோட்பாடுகளைப் பற்றிக் கவலையில்லை. மறுபிறவியைப் பற்றிக் கவலையில்லை. அவன் பிரச்சினை எல்லாம் "நான் யார் என்று அறிந்து கொள்ள வேண்டும்" என்பதுதான். அதுதான் அவனுடைய முதல் கேள்வி. அதுதான் அவனுடைய கடைசிக் கேள்வி.

"எனக்கு இது தெரிந்துவிட்டால் போதும். மற்றதெல்லாம் முக்கியம் இல்லை. அவற்றை எளிதாகத் தெரிந்து கொண்டு விடலாம். ஆனால் எனக்கு என்னைப் பற்றியே தெரியவில்லை என்றால் மற்றவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதால் என்ன லாபம்?"

உண்மையை அறியும் பேரவா மனதில் இருந்தால் உங்கள் மனதில் ஒரே ஒரு கேள்விதான் மிஞ்சி இருக்கும். "நான் யார்?"

இந்த மனிதர் கேட்ட நூறு கேள்விகளில் ஒரு கேள்வி கூட "நான் யார்?" என்ற கேள்விக்குத் தொடர்புடையதில்லை. அந்தக் கேள்வி இவர் மனதில் எழவேயில்லை. இந்த மனிதரிடம் ஆர்வக் கோளாறு மட்டுமே இருக்கிறது. "நிரந்தரமான அந்த இலக்கை எப்படியாவது அடைந்துவிட வேண்டும்" என்று வேறு கூறுகிறார். மனதில் பேராசை வேறு இருக்கிறது.

உங்களுக்கு உங்களையே யார் என்று தெரியவில்லை. இதில் நிரந்தரமான இலக்கை அடைய வேண்டும் என்ற ஆசை வேறு. இந்தப் பேராசை, இந்த அகங்காரம் - இவை இந்த உலகத்தையே விலையாகக் கேட்கும். விட்டால் மறு உலகத்தையும் கேட்கும்.

பேராசை, அகங்காரம் ஆகியவை எப்போதும் பசியுடன் இருக்கும் அரக்கர்கள். இன்னும் பணம் வேண்டும், இன்னும்

பெரிய வீடு வேண்டும், இன்னும் பெரிய கார் வேண்டும் என்று ஆலாய்ப் பறப்பார்கள். பின் சொர்க்கம் வேண்டும். கடவுள் வேண்டும் என்றும் பறப்பார்கள்.

இவர்கள் பேராசைக்காரர்கள். எல்லாம் தங்கள் கைக்குள் இருக்க வேண்டும் என்று எண்ணுபவர்கள்.

சற்றுச் சிந்தித்துப் பாருங்கள் ஒரு சாதாரண மனிதன் நித்தியமான ஒன்றன் மேல் மோகம் கொள்வதா? ஒரு சிறு காய்ச்சல் உங்களைக் கொன்று விடலாம். 98.6 டிகிரி வெப்பம் உங்கள் உடலில் இருந்தால் மட்டுமே உங்களால் உயிர் வாழ முடியும். அதைவிட நான்கைந்து புள்ளிகள் உங்கள் உடல் வெப்பம் குறைந்தால் உங்கள் கதி அதோகதிதான்.

நான்கைந்து புள்ளிகள் கூடினாலும் அதே நிலைதான். 110 டிகிரி உஷ்ணத்தைத்தாண்டி உயிர் வாழமுடியாத நீங்கள் என்றும் சாசுவதமாக இருக்கும் வஸ்துவை ஆசைப்படலாமா? சுவாசம் இல்லாமல் சில நிமிடங்கள் கூட உயிர் வாழ முடியாத நீங்கள் – இன்னும் குறிப்பாகச் சொல்லப்போனால் சுவாசம் இல்லாமல் எட்டு நிமிடம் கூட உயிர் வாழமுடியாத நீங்கள் – காலம் கடந்து நிற்கும் கடவுளைக் கைக்குள் போட்டுக் கொள்ள நினைப்பது சரிதானா?

உடல் இறந்து கொண்டேயிருககிறது. நீங்கள் பிறந்த அந்த நொடியிலிருந்து உங்கள் இறப்பு தொடங்கிவிடுகிறது. யோசித்துப் பாருங்கள். ஒரு மனிதனின் சராசரி வாழ்நாளான 70 வருடம் பிரபஞ்சத்தின் ஆயுளை வைத்துப் பார்த்தால் சில நொடிகள் கூட இல்லை. எழுபது வருடம் மட்டுமே வாழக்கூடிய ஒரு மனிதன் அந்த முடிவின்மையைக் கைக்கொள்ள நினைப்பது அபத்தம் இல்லையா? அப்படியே கைக்கொண்டாலும் அந்த முடிவின்மையை உங்கள் சிறு மண்டையில் எங்கே வைப்பீர்களாம்.?

மொத்த சமுத்திரத்தையும் ஒரு சிறிய கரண்டிக்குள் அடக்கி வைக்க நினைப்பது அறிவீனம் இல்லையா?

இந்தப் பெரிய தத்துவவாதியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறேன். அரிஸ்டாட்டில் என்று நினைக்கிறேன். யாரென்று

சரியாகத் தெரியவில்லை. அவராகத்தான் இருக்கும். அவர் காலைவேளை கடற்கரை ஓரம் நடைபயின்று கொண்டிருந்தார். அங்கே ஒரு பைத்தியக்காரனைப் பார்த்தார். கடலுக்கு அருகே ஒரு சிறு குழியை வெட்டியிருந்தான் அவன்.

ஒரு தேக்கரண்டியால் கடலின் நீரை முகந்து அந்தக் குழியில் ஊற்றிக் கொண்டிருந்தான். நீரைக் குழியில் ஊற்றிவிட்டு மீண்டும் ஒரு தேக்கரண்டி நீரை கடலில் இருந்து முகந்து கொண்டு வந்து ஊற்றினான். அரிஸ்டாட்டில் அவன் அருகில் சென்று "அப்பனே! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"மொத்தக்கடலையும் காலி செய்து இந்தச் சிறிய குழியில் நிரப்பப் போகிறேன்"

"உனக்கு என்ன கிறுக்கா பிடித்திருக்கிறது? இந்தத் தேக்கரண்டியினாலா இவ்வளவு பெரிய கடலைக் காலி செய்து இந்தச் சிறிய குழிக்குள் அடக்கிவைக்கப் போகிறாய்?"

அந்தப் பைத்தியக்காரன் வாய்விட்டுச் சிரித்தான்.

"நீங்கள்தான் பைத்தியம் என்று நான் நினைக்கிறேன். நீங்கள் முதலும் முடிவும் இல்லாத உண்மையைத் தெரிந்து கொள்ள முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். அதை இந்தச் சிறிய தலையில் வைக்கத் திட்டமிட்டுள்ளீர்கள் என்று அறிந்தேன். நான் செய்வது கிறுக்குத்தனம் என்றால் நீங்கள் செய்வது என்னவாம்?"

அந்த மனிதன் ஒரு ஞானியாக இருக்க வேண்டும். அரிஸ்டாட்டிலுக்கே அதிர்ச்சி வைத்தியம் பார்த்துவிட்டானே! அவன் சொன்னது உண்மை. உண்மை எப்போதும் அதிர்ச்சியாகத்தான் இருக்கும். உண்மையை அடைய வேண்டும் என்ற பேராசையை வளர்த்துக் கொள்ளாதீர்கள்.

ஆசையே இல்லாத ஒரு நிலையில்தான் உண்மை உங்களைத் தேடி வரும். பேராசை இல்லையென்றால் உங்களிடம் சிறுமையும் இருக்காது. பேராசைதான் உங்களைச் சிறியவனாக்கு கிறது. பேராசை மறைந்துவிட்டால் உங்கள் எல்லைகளும் மறைந்துவிடும்.

அதன்பின் நீங்கள் மகாசமுத்திரத்தின் அருகே இருக்கும் சிறு குழியல்ல. உண்மை என்பது நீங்கள் சொந்தம் கொண்டாடக் கூடிய ஒரு பொருள் இல்லை. உண்மைதான் உங்களைச் சொந்தம் கொண்டாட வேண்டும். அதற்கு நீங்கள் அனுமதிக்க வேண்டும்.

ஆனால் மனிதனுக்கு அறிவு அதிகமாக இருக்கிறது. உண்மையை உள்ளே வரவிடாமல் அறிவு தடுத்துவிடுகிறது.

இந்த மனிதன் கேட்ட நூறு கேள்விகளிலும் தன் அறிவைப் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கிறான். அவனுக்குத் தெரிந்த வேத வாக்கியங்களை அவன் காதில் விழுந்தவற்றை அவன் தலையில் மற்றவர்கள் உருவேற்றிய விஷயங்களை எல்லாம் தேவையில்லாமல் விளம்பரப்படுத்திக் கொண்டிருக்கிறான்.

ஆர்வமுள்ளவர்களும், சந்தேகப்பிராணிகளும் நல்ல சீடர்களாக இருக்க முடியுமா?

ஆர்வமும் சந்தேகமும் உள்ளவன் முதலின் சீடனாகவே இருக்க முடியாது. பின் நல்ல சீடனாவது எப்படி? முதல் தேவை நம்பிக்கை. இன்னொருவர் துணையுடன் தெரியாததற்குள் நுழைய வேண்டுமென்றால் கொஞ்சமாவது நம்பிக்கை வேண்டும். இந்த மனிதனிடம் கொஞ்சம்கூட நம்பிக்கை இல்லை. இவன் சந்தேகப் பிராணி. இவனிடம் மருந்துக்குக்கூட நம்பிக்கையில்லை.

சந்தேகத்தின் துணையுடன் நீங்கள் உள்ளொளிப் பயணத்தை மேற்கொள்ள முடியாது. விஞ்ஞானத்திற்குச் சந்தேகம் தேவை. ஆரோக்கியமான சந்தேக குணத்தைச் சார்ந்துதான் விஞ்ஞானமே இருக்கிறது. சந்தேகமே விஞ்ஞான உலகத்தின் சாதனம். நம்பிக்கையிருந்தால் விஞ்ஞானத்தில் கொஞ்சம்கூட மேலே போகமுடியாது.

விஞ்ஞானம் கொஞ்சம் எதிர்மறையானது. அதில் முன்னேற உங்களிடம் கொஞ்சம் எதிர்ப்புணர்ச்சி இருக்க வேண்டும். மதமும் ஆன்ம ஞானமும் விஞ்ஞானத்திற்கு நேர் எதிரானவை. இங்கே நம்பிக்கைதான் வழி, சந்தேகமல்ல. நீங்கள் என்னை நம்பினால் என்னுடன் இருக்கலாம். இல்லாவிட்டால் இங்கு இருக்க வேண்டாம்.

கேள்வி கேட்பவர் மேலும் சொல்கிறார்:

'உடனே இந்த இடத்தை விட்டு வெளியேறு' என்று தாங்கள் கட்டளையிட்டது வேதனையாக இருக்கிறது. அது கொஞ்சம் கடுமையான தண்டனையல்லவா?''

கடுமையான தண்டனையா? அப்படியென்றால் உங்களுக்கு ஆசார்யார்களைப் பற்றித் தெரியாது என்றுதான் அர்த்தம். இது கடுமையில்லை. மரியாதை.

ஜென் ஆசிரியர்களைப் பற்றி அறிவீர்களா? என்னிடம் கேட்ட இதே கேள்வியை ஒரு ஜென் ஆசானிடம் கேட்டிருந்தால் அவர் உங்கள்மேல் பாய்ந்திருப்பார்.

உங்களைக் கடித்துக் குதறியிருப்பார். அடித்துத் துவைத்திருப்பார். தன் ஆசிரமத்தை விட்டுத் தூக்கி எறிந்திருப்பார். ஒருநாள் நானும் அதைத்தான் செய்யப்போகிறேன், பார்த்துக் கொண்டேயிருங்கள்.

எதற்கான சந்த், கமல் குருதயாள் போன்ற சீடர்களை வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று நினைக்கிறீர்கள்? எனக்குப் பதிலாக அவர்கள் உங்களைத் துவைத்தெடுப்பார்கள். இன்னும் கொஞ்சம் காத்திருங்கள். இன்னும் கொஞ்சம் என்னை நம்புங்கள். அப்பறம் பார்க்கலாம்.

கடுமையான தண்டனை! என்ன வார்த்தை! அது கடுமையில்லை. உங்கள்பால் நான் காட்டும் கருணை. உங்களுக்கு அந்த அதிர்ச்சி தேவைப்படுகிறது. அறிவு அதிகம் உள்ளவனை அதிர்ச்சி கொடுத்துத்தான் குணப்படுத்த முடியும். உங்களுக்கு மின்சார அதிர்ச்சிகூடத் தரலாம். தப்பில்லை.

உங்கள் அறிவை வளர்ப்பது என் வேலை இல்லை. நீங்கள் வளர்த்துக் கொண்ட அறிவை அழிப்பதுதான் என் வேலை.

தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்புவதைப் போன்றது என் வேலை. அது பார்க்கக் கடுமையாகத் தோன்றலாம். நீங்களே அதை அனுபவித்திருப்பீர்களே! நீங்கள் நன்றாக

உறங்கிக் கொண்டிருக்கும் போது அதிகாலை உங்களை இயக்கநிலை தியானத்திற்கு அழைக்க அலாரம் அடிக்கும். "நாசமாகப் போ" என்று சபிக்கத் தோன்றும். கடிகாரத்தைக் கடாசிவிடலாம் என்று தோன்றும்.

ஒரு நல்ல ஆசிரியர் அலாரம் கடிகாரத்தைப் போன்றவர். அவர் தன் மாணவர்களுக்கு அதிர்ச்சி கொடுக்க வேண்டும். அவர் உங்களை வேரோடு பிடித்து உலுக்க வேண்டும். ஏனென்றால் அவர் இந்த உலகில் லயித்திருக்கும் உங்கள் மனதை வேரோடு பிடுங்கி வேறு உலகத்தில் புதிதாக நட வேண்டும். உங்கள் இருப்பு நிலையின் தன்மைய்ய அடியோடு மாற்ற வேண்டும். அது ஒன்றும் எளிதான காரியம் இல்லை. கடுமையான செயல். வலியை உண்டாக்கும் செயல். அதற்குத் தியாகம் அவசியம்.

தியாகம் செய்யத் தயாராக இருந்தால் மட்டும் இங்கே இருங்கள். இல்லாவிட்டால் போய்விடுங்கள். என் நேரத்தையும் உங்கள் நேரத்தையும் வீணாக்காதீர்கள்.

தியாகம் என்ற வார்த்தை அற்புதமானது. ஆங்கிலத்தில் அதற்கு இணையான சொல்லான sacrifice-இன் வேர் என்ன என்று தெரியுமா? புனிதமாக்குதல் to make something sacred is sacrifice.

நான் கொடுக்கும் அதிர்ச்சிகளை முழு நம்பிக்கையோடு கலப்படமில்லாத அன்போடு ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தால் அந்த அதிர்ச்சிகளுக்கு ஒரு புனிதத் தன்மை வந்துவிடும். அதன்பின் அந்தக் கடுமையான தண்டனை என் கருணையாகத் தெரியும். உங்களை நேசிப்பதால்தான் நான் அப்படிக் கடுமையாகச் சொன்னேன் என்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

இல்லாவிட்டால் நான் ஏன் தேவையில்லாமல் சிரமப்பட வேண்டும்?

நான்காவது கேள்வி:

*ஓஷோ,*

*நீங்கள், புத்தர், ஏகநாதர் எல்லோருமே ஆண்கள்தான். மனமற்ற அந்த உன்னத நிலைக்குப் பெண்கள்தான் ஏற்றவர்கள் என்று நீங்கள் சொல்கிறீர்கள். பின் நீங்கள் ஏன் ஓர் ஆணின் உடலைத் தேர்ந்தெடுத்தீர்கள்? பெண் வர்க்கத்தில் ஏன் ஞானிகளே இல்லை?*

இந்தக் கேள்வி சந்தன் என்ற பெயருடைய பெண்ணிட மிருந்து வந்திருக்கிறது. பெண்ணிய இயக்கத்தைச் சேர்ந்தவள் அவள். முக்கியமான கேள்வி. முதலில் கேள்வியை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

கடந்த காலத்தில் பெண் ஞானிகள் அதிகம் இல்லை. வருங்காலத்திலும் இருக்க மாட்டார்கள். காரணம்: பெண் மனதில் இயல்பாகவே ஆளுமை இல்லை. ஞானியாக ஆசானாக வேண்டுமென்றால் அபரிமிதமான ஆளுமை உணர்வு வேண்டும். இந்த ஆளுமை உணர்வை ஆணாதிக்கத்துடன் குழப்பிக் கொள்ளாதீர்கள். உங்கள் கேள்வி எப்படி இருக்கிறது தெரியுமா?

“ஏன் ஓர் ஆண் எப்போதுமே தந்தையாகவே இருக்கிறான்? ஏன் அவன் தாயாகவே இருப்பதில்லை?”

அதுதான் இயற்கை. அதை மாற்றவே முடியாது. ஒரே ஒருமுறைதான் மாற்றி நடந்திருக்கிறது. இந்தக் கதையைக் கேளுங்கள்.

கடுமையான வயிற்றுவலியால் துடித்துக் கொண்டிருந்தார் ஒரு பாதிரியார். வலி ஏன் வருகிறது என்று மருத்துவரால் சொல்ல முடியவில்லை. சரி ஓர் அறுவை சிகிச்சை செய்து பார்க்கலாம் என்று மருத்துவர் தீர்மானித்தார்.

அதே நேரத்தில் அந்த மருத்துவமனையில் ஓர் இளம் பெண் பிரசவத்திற்காக அனுமதிக்கப்பட்டிருந்தாள். அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவளுக்குத் திருமணம் ஆகவில்லை. “என்னால் இந்தக் குழந்தையை வைத்துக்

கொள்ள முடியாது. நீங்கள்தான் உதவ வேண்டும்'' என்று மருத்துவரைக் கெஞ்சினாள்.

வேகமாகச் சிந்தித்த மருத்துவர் அந்தக் குழந்தையைக் கொண்டுபோய் பாதிரியாரின் படுக்கையருகில் கிடத்தினார். அவருக்கு அப்போதுதான் அறுவை சிகிச்சை முடிந்திருந்தது. மயக்கம் தெளிந்து கண் விழித்த அவரிடம் மருத்துவர் வியப்பு மேலிடக் கூறினார்.

“ஐயா உங்கள் இறை பக்தியால் ஒரு பேரதிசயம் நிகழ்ந்திருக்கிறது. உங்கள் வயிற்றுக்குள் இந்தக் குழந்தை இருந்தது'' என்று சொல்லிக் குழந்தையை அவர் கையில் கொடுத்தார்.

முதலில் பாதிரியாருக்கு அதிர்ச்சியாக இருந்தது பின் தன்னைத் தேற்றிக் கொண்டு குழந்தையை வாங்கிக் கொண்டார். தலைதாழ்ந்து வணங்கினார். அதிசயத்தை நிகழ்த்திய ஆண்டவனுக்கு நன்றி கூறினார். வேறு என்ன செய்ய முடியும்?

வருடங்கள் ஓடின. அந்தப் பாதிரியாரும் அந்தக் குழந்தையும் அப்பா-,மகனாகவே வாழ்ந்து வந்தார்கள். அந்தக் குழந்தை வளர்ந்து பெரியவனாகி கல்லூரிப் படிப்பிற்காக வெளியூர் செல்லும் காலமும் வந்தது. ஊருக்குக் கிளம்பும் முதல் நாள் இரவு பாதிரியார் தன் மகனிடம் தழுதழுத்த குரலில் பேசினார்.

“மகனே இத்தனை நாள் ஓர் உண்மையை உன்னிடமிருந்து மறைத்துவிட்டேன்.''

பையன் புதிருடன் அவரைப் பார்த்தான்.

“நான்தான் உன் தந்தை என்று சொல்லி உன்னை நம்ப வைத்துவிட்டேனடா. உண்மை என்னவென்றால் நான் உன் தாய். பேராயர் (பிஷப்) தான் உன் தந்தை.''

ஆசிரியராக இருக்க ஆளுமை நிறைந்த ஓர் ஆண்மனம் வேண்டும். ஒரு பெண்ணால் ஆளுமையுடன் இருக்க முடியாது. பெண் இயல்பிலேயே பொறுத்துக் கொள்ளும் குணத்தை உடையவள். ஒரு பெண் கருப்பையைப் போன்றவள். எதையும்

பெற்றுக் கொண்டு பாதுகாக்கும் பக்குவம் அவளுக்கு இயற்கையிலேயே உண்டு. ஆண் அப்படியில்லை.

அதனால்தான் ஒரு பெண் சிறந்த சிஷ்யையாக முடியும். ஓர் ஆண் சீடனாவது கொஞ்சம் கடினம். ஒரு நல்ல சீடனிடம் இருக்க வேண்டிய பண்பு ஒரு பெண்ணிடம் இயல்பாகவே அமைந்திருக்கிறது.

ஆசிரியர்-சீடன் உறவு முறையும் ஆண்-பெண் உறவு மாதிரிதான். நீங்கள் இதுவரை அந்தக் கோணத்தில் பார்த்திருக்க மாட்டீர்கள். அப்படிப் பார்க்கும்போது உங்களுக்குப் பல உண்மைகள் புலப்படும். சீடர் எதனையும் ஏற்றுக் கொள்கிறான். சீடன் கருப்பையைப் போன்றவன்.

அதனால்தான் ஆண்கள் சீடர்களாக இருக்கச் சிரமப் படுகிறார்கள். கொஞ்சம் தயக்கம், கொஞ்சம் எதிர்ப்பு, கொஞ்சம் சண்டை கொஞ்சம் அகங்காரம் எல்லாமே இருக்கிறது. அவை யாவுமே ஓர் ஆண்மகனை நல்ல சீடனாகவிடாமல் தடுக்கின்றன..

சீடர்களில் சிறந்தவர்கள் பெண்கள்தான். ஏசுநாதரின் சீடர்களிலேயே சிறந்தவள் மேரி மேக்டலின் என்ற பெண். ஆனால் அவளால் திருத்தூதராக முடியவில்லை. அவளால் ஓர் ஆசானாக முடியவில்லை. பகவான் புத்தரைச் சுற்றிப் பல அழகான பெண்கள் இருந்தார்கள். மகாவீரரைச் சுற்றியும் பல பெண்கள் இருந்தார்கள். அவரிடம் நாற்பதாயிரம் துறவிகள் இருந்தார்கள். அவர்களில் முப்பதாயிரம் பேர் பெண்கள். பத்தாயிரம் பேர் ஆண்கள்.

சீடர்களில் ஆண்-பெண் விகிதாசாரம் மூன்றுக்கு ஒன்று என்றுதான் இருந்திருக்கிறது. நான்கு சீடர்கள் இருந்தால் அதில் மூவர் பெண்கள். ஒருவர்தான் ஆணாக இருப்பார். அந்த ஓர் ஆணையும் நம்ப முடியாது. அவன் அந்த ஆசானைத் தேடி வந்திருக்க மாட்டான். அந்த மூன்று பெண்களுக்காக அங்கு வந்திருப்பான். அந்த அபாயம் வேறு இருக்கிறது.

சிறந்த ஆசிரியர்கள் எப்போதும் ஆண்களாகவே இருந்திருக் கிறார்கள். இதில் ஒரு நுட்பமான முரண்பாடு இருக்கிறது. ஓர் ஆசிரியர் ஆயிரம் வழிகளில் வெளியே சென்று உங்க ளுக்காக உழைக்க வேண்டும்.

ஆசான் என்பவர் வெளிச்செல்ல வேண்டும். உங்களுக்கு உதவ வேண்டும். உங்கள் கைகளைப் பிடித்துக் கொள்ள வேண்டும். உங்களைப் பாதுகாக்க வேண்டும். உங்களுக்கு அவ்வப்போது அதிர்ச்சிகளைத் தர வேண்டும்.

உங்களைத் தெரியாத இடத்திற்கு இழுத்துக் கொண்டு போக வேண்டும், ஞானத்தின் பாதையில் உங்களைத் தள்ளிவிட வேண்டும். ஆளுமை அதிகம் தேவைப்படும் ஆயிரம் செயல்களை ஆசான் செய்தேயாக வேண்டும்.

இதற்கும் சமுதாயத்தில் நிலவும் ஆணாதிக்கத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. வருங்காலத்தில் என்றாவது ஒருநாள் நாம் ஆணாதிக்கக் கொடுமையை முற்றிலுமாக ஒழித்துவிட்டாலும் ஆண்-பெண் சரிநிகர் சமானம் என்ற தத்துவத்தை நிலைநிறுத்தி விட்டாலும் ஆண்தான் தந்தையாக இருப்பான். பெண்தான் தாயாக இருப்பாள். இதில் எந்த அதிசயமும் நடக்க வாய்ப் பில்லை.

ஐந்தாவது கேள்வி:

*ஓஷோ,*

*எங்கும் பூரணத்துவம் நிலவுகிறது. ஆனால் மூன்றாவது உலகப் போர் வரப்போகிறது. உலகத்தை மாற்ற முயற்சிக்காதே என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் இந்த ஆசிரமத்தின் வாசலில் இருக்கும் ஒரு பிச்சைக்காரியின் குழந்தை பட்டினி கிடக்கிறது. என்ன செய்ய?*

எங்கும் பூரணத்துவம் நிலவுகிறது. ஆனால் மூன்றாவது உலகப் போர் வரப்போகிறது.

மூன்றாம் உலகப் போரும் பூரணத்துவம்தான். . அது உலகத்தைப் பூரணமாக அழித்துவிடும். அது ஒரு பூரணமான போராக இருக்கும். எதுவுமே மிஞ்சாது.

இப்போதுதான் பிரச்சினையே வருகிறது. உலகப் போர் வரும்போது நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருப்பீர்கள்? தியானம்? யோகம்? நீங்கள் உலகத்திற்குள் சென்று மூளவிருக்கும் உலகப் போரைத் தடுக்க வேண்டும். செய்வீர்களா?

உங்களால் அது முடியுமா? போரைத்தடுக்க உங்களால் ஏதாவது செய்ய முடியுமா? முடியாது. அந்த முயற்சியில் உங்கள் வாழ்க்கையை வீணாக்கிக் கொள்வீர்கள். உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதோ சிறிய ஆயுட்காலம். நமக்கு மிச்ச மிருப்பவை சில கணங்களே. மூன்றாம் உலகப்போர் வரப் போகிறது என்பதால் இந்தச் சில கணங்கள் மிகவும் மதிப்புள்ளதாகிவிட்டன.

உலகப் போர் வராது என்றால் நாம் சாவகாசமாக எல்லாவற்றையும் செய்து கொள்ளலாம். ஆனால் இப்போது அப்படியில்லை. எந்தக் கணத்திலும் காலம் முடிந்துவிடும். அபாயம் இருக்கிறது. நாளைக் காலை போர் ஆரம்பிக்கலாம். யார் கண்டது.?

அமெரிக்காவின் வாட்டர் கேட் ஊழலில் சிக்கிக்கொண்ட அதிபர் நிக்சனின் மனதில் மூன்றாவது உலகப் போரை உண்டாக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. போரைத் தொடங்கும் சாதனமும் அவர் கட்டுப்பாட்டில்தான் இருந்தது. அந்தச் சமயத்தில் அவர் பெரும் மன உளைச்சலில் இருந்தார்.

என்னதான் ஊழல் பேர்வழியாக இருந்த போதிலும் போரைத் தொடக்க வேண்டும் என்ற ஆசையைக் கட்டுப்படுத்திக் கொண்டதற்காக அவரைப் பாராட்டத்தான் வேண்டும். அவர் மூன்றாம் உலகப்போரை எளிதாகத் தொடங்கியிருக்கலாம். அப்படித் தொடங்கியிருந்தால் அவர்தான் அமெரிக்காவின் கடைசி அதிபராக இருந்திருப்பார். மனிதர்களிலே அவர்தான் மிக அதிக வாலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவராக இருந்திருப்பார். ஆனால் அந்த வரலாற்றை எழுதுவதற்கு யாரும் மிஞ்சியிருக்க மாட்டார்கள் என்பது வேறு விஷயம்.

ஆனால் உலகப் போர் மூண்டிருந்தால் அவர் தன்னுடைய தனிப்பட்ட அவமானத்திலிருந்து தப்பித்திருக்கலாம். அவர்

தன் அகங்காரத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கலாம். அவர் அந்த சபலத்திற்கு இடம் கொடுக்கவில்லை என்பதற்காக அவரைப் பாராட்டத்தான் வேண்டும். அவர் ஒன்றும் செய்திருக்க வேண்டாம்.

மாஸ்கோ நகரின்மேல் சில அணுகுண்டுகளைப் போட்டிருந்தால் போதும்.ம். பதினைந்தே நிமிடங்களில் மொத்த உலகமும் அழிந்து போயிருக்கும். எல்லா மனிதர்களும் இறந்திருப்பார்கள்.

இன்று நம்மிடம் இருக்கும் ஆயுதங்களின் வல்லமையைக் கொண்டு மொத்த பூமியையும் ஏழு முறை அழிக்கலாம். இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனையும் ஏழு முறை கொல்லலாம். அந்த அளவிற்கு அணு குண்டுகளும் ஹைட்ரஜன் குண்டுகளும் நம்மிடம் குவிந்து கிடக்கின்றன.

ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் யாரோ ஓர் அரசியல்வாதிக்குக் கிறுக்குப் பிடித்து உலகப்போரைத் தொடக்கத்தான் போகிறான். அரசியல்வாதிகள் கிறுக்கர்கள்தானே! இல்லாவிட்டால் அவர்கள் ஏன் அரசியலில் இருக்கிறார்கள் சொல்லுங்கள்! நீங்கள் ஓர் எரிமலையின் மேல் உட்கார்ந்திருக்கிறீர்கள். இதுவரை இப்படிப்பட்ட ஓர் ஆபத்து இருந்ததேயில்லை.

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? "ஐயோ உலகம் அழியப் போகும் இந்த நேரத்தில் நான் தியானம் செய்து கொண்டு இருக்கிறேனே"

நீங்கள் வேறு என்ன செய்ய முடியும்? காலம் இருக்கும் வரை தியானியுங்கள். நீங்கள் தியானத்தில் இருக்கும்போது அந்த எரிமலை வெடித்தால் சாவற்ற தன்மையை நீங்கள் ருசி பார்க்கலாம்.

அதே போல் உலகத்தில் உள்ள பலர் தியானம் செய்ய ஆரம்பித்தால் மூன்றாவது உலகப்போர் மூள்வது தடுக்கப்படலாம். இதைப் பல நூற்றாண்டுகளாகக் கவனித்து வந்திருக்கிறார்கள். நூறு பேர் மட்டுமே வசிக்கும் ஒரு கிராமத்தில் ஒரே

ஒருவன் மட்டும் தியானம் செய்யத் தொடங்கினால் அந்தக் கிராமத்தின் மொத்தச் சூழலே மாறிவிடுகிறது..

கவனித்துப் பாருங்கள் ஒரு மனிதன் நூறு பேரில் ஒரு சதவிகிதம்தான். ஆனால் அவனுக்குப் பாக்கியுள்ள 99 பேரிடமும் தொடர்பு இருக்கிறது. ஏதோ ஓர் உறவு இருக்கிறது. ஒருவர் அவனுடைய மாமாவாக இருக்கலாம். ஒரு பெண்மணி அவனுடைய ஒன்றுவிட்ட சகோதரியாக இருக்கலாம். மற்றொருவர் அவன் தம்பியாக இருக்கலாம். இன்னும் சிலர் அவன் மனைவி வழி உறவினர்களாக இருக்கலாம். அவனுக்கு அனைவரிடமும் ஒரு வகையான தொடர்பு, உறவு, சம்பந்தம், அண்மை இருக்கிறது. அவனிடமிருந்து உருவாகும் அதிர்வுகளின் தன்மை மாறுகிறது. தியானத்தின் அதிர்வுகளை அவன் உருவாக்குகிறான். அது அந்தக் கிராமத்தில் நிலவும் மொத்த உணர்வுச் சூழலையும் பாதிக்கிறது.

உலக ஜனத்தொகையில் ஒரு சதவிகிதம் பேர் சரியாகத் தியானம் செய்தாலும் மூன்றாவது உலகப்போர் தடுக்கப்படும் வாய்ப்பு பலமாக இருக்கிறது. மூன்றாவது உலகப் போரை இப்படித் தடுத்தால்தான் உண்டு.

மக்களிடம் ஏன் இவ்வளவு வன்முறை இருக்கிறது? ஏன் அவர்கள் தொடர்ந்து போரிட்டுக்கொண்டே இருக்கிறார்கள்? கடந்த மூவாயிரம் ஆண்டுகளில் மொத்தம் பதினையாயிரம் போர்கள் நடந்திருக்கின்றன. சராசரியாக ஒரு வருடத்திற்கு ஐந்து போர்கள் நடந்திருக்கின்றன. மொத்த மனித இனத்துக்கே கிறுக்குப் பிடித்துவிட்டதோ என்று தோன்றுகிறது.

நாம் போரிட்டதைத் தவிர உருப்படியாக எதுவும் செய்யவில்லை. மூவாயிரம் வருடங்களாகத் தொடர்ந்து நடந்து வந்துகொண்டிருக்கும் வன்முறையில் இப்போது உச்சகட்டத்தை அடைந்திருக்கிறோம். அதுதான் இந்த இறுதிப் போர். எல்லாவற்றையும் பூரணமாக அழித்துவிடும் உச்சகட்ட சண்டை.

நீங்கள் உலகம் முழுவதும் சென்று அரசியல்வாதிகளுக்கு போரின் அபாயங்களை அறிவுறுத்தலாம். இல்லையென்றால்

வாஷிங்டன் நகரிலும் மாஸ்கோ நகரிலும் மூன்றாம் உலகப் போர் எதிர்ப்புப் பேரணி நடத்தலாம். அதனால் எந்தப் பயனும் இல்லை.

ஏன்? இந்தப் பேரணியில் கலந்து கொள்பவர்களிடம்தான் அதிகபட்ச வன்முறை இருக்கும். அவர்கள் போடும் கோஷங்கள், கூச்சல், சண்டை, குழப்பம் எல்லாம் வன்முறையின் வெளிப்பாடே.

அவர்கள் சமாதானத்தின் பக்கம் இருக்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் சமாதானத்திற்காகச் சண்டை போடவும் தயங்க மாட்டார்கள். சண்டைதான் இப்போது பிரச்சினை. நீங்கள் என்ன செய்வீர்கள்? கூச்சல் போடுவீர்கள். கோஷம் போடுவீர்கள். உணர்ச்சி வசப்படுவீர்கள். இன்னும் சூடாவீர்கள். மொத்தத்தில் நீங்கள் போரிடத் தொடங்குவீர்கள்.

அதைத்தான் அரசியல்வாதிகள் செய்து கொண்டிருக்கிறார்கள். ரஷியாவும் போரை விரும்பவில்லை. அமெரிக்காவிற்கும் போரில் நாட்டமில்லை.. இந்த உலகத்தில் அமைதி நிலவ வேண்டும் என்பதற்காகத்தான் போரைத் துவக்க வேண்டி யிருக்கிறது என்று கம்யூனிஸ்ட் சொல்கிறார்.

முதலாளித்துவத்தைச் சார்ந்தவரும் அதே வாதத்தை முன்வைக்கிறார். முதலாளித்துவத்தைச் சேர்ந்தவர், கம்யூனிசத்தை ஆதரிப்பவர் பாசிசவாதி எல்லாரும் ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள். அவர்களுக்குள் எந்த வித்தியாசமும் இல்லை. போருக்கான ஆயத்தங்களைச் செய்தபடியே "அமைதிக்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கிறேன்" என்று நம்மிடம் பீலா விடுகிறார்கள்.

போரை எதிர்த்து ஊர்வலம் போகிறீர்கள். உங்களுக்குள்ளும் வன்முறை இருக்கிறது.

போரை எதிர்த்து நிஜமாகவே நடக்கும் எதிர்ப்புப் பேரணி தியானம்தான். அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்து தீயசக்திகளுக்கு எதிராக தியானசக்தியை உருவாக்குங்கள்.

ஒரு சமயம் இந்த ஆசிரமத்தில் ஒரு கட்டுரைப் போட்டி நடந்தது. போட்டிக்கான தலைப்பு - *தியானநிலையில்*

ஆழ்ந்திருக்கும் ஒருவன் எப்படி இருப்பான்? எதிர்பார்த்தது போலவே முல்லா நசிருதீன்தான் முதற் பரிசு பெற்றார். அவருடைய வர்ணனை மிகவும் அழகாக இருந்தது. தியானநிலையில் ஆழ்ந்திருப்பவனுக்கும் அப்படியில்லாதவனுக்கும் இடையில் இருக்கும் வேறுபாட்டை முல்லா இப்படி விளக்கினார்.

'அந்த நிலையில் இல்லாதவன் ஓர் அடுக்குமாடிக் கட்டடத்தின் உச்சியிலிருந்து கீழே விழ நேர்ந்தால் 'ஊ....ஷ்' என்று வேகமாகக் கீழே போய் சொத் என்று தரையில் மோதிச் செத்துவிடுவான்.

தியானநிலையில் ஆழ்ந்திருப்பவனோ பாதித் தூரம் விழுந்த நிலையில் தன் விரல்களைச் சொடுக்கிக் கொண்டு சந்தோஷமாகச் சொல்வான் "நடந்தவரை நல்லது"

எது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும். கையைச் சொடுக்கி 'நடந்தவரை நல்லது' என்று சொல்கிறீர்கள். நீங்கள் இன்னும் உயிருடன் இருக்கிறீர்கள்.

மூன்றாம் உலகப் போர் இன்னும் ஆரம்பிக்கவில்லை. நடனமாட உங்களுக்குக் கிடைத்த வாய்ப்பை நழுவவிடாதீர்கள். உங்கள் நடனத்தின்மூலம் நீங்கள் ஓர் அலையை உருவாக்கலாம். தியானம் செய்யுங்கள். அதன்மூலம் ஒரு மாறுபட்ட நல்ல சக்தியை நீங்கள் உலகிற்குள் கொண்டுவர முடியும்.

இந்த உலகத்தில் இருப்பவர்களில் ஒரு சதவிகிதத்தைக் காவி உடை அணியும் பைத்தியக்காரர்களாக மாற்றிவிட்டால் போதும். அவர்கள் ஆடுவார்கள் பாடுவார்கள் தியானம் செய்வார்கள். அவர்கள் செயலில் அரசியல் இருக்காது.

எதிர்ப்புப் பேரணி நடத்துபவர்கள் அரசியல்வாதிகள். போருக்கு மூலகாரணமே அரசியல்தான்.

அரசியல்வாதிகள் அல்லாதவர்கள்தான் நமக்குத் தேவை.

என் வாழ்க்கையில் இதுவரை நான் ஓட்டுப் போட்டதே யில்லை. என்னிடம் பலர் சொல்வார்கள் "நீங்கள் விரும்பும் மனிதருக்கு வாக்களிக்கலாமே!"

நான் சொல்வேன் "நான் யாருக்கு வாக்களித்தாலும் அது கடைசியில் ஓர் அரசியல்வாதிக்குத்தான் போய்ச் சேரும். என்னால் அதைச் செய்ய முடியாது. நான் இந்தக் கூத்தில் பங்கேற்க விரும்பவில்லை. அவர்கள் எல்லோரும் ஒரே மாதிரிதான். பெயர்களில்தான் வித்தியாசம்."

போரை எதிர்க்கும் சமாதானவாதியும் ஒரு வகையில் அரசியல்வாதிதான். அரசியல் எண்ணங்கள் இல்லாத சிலரை நீங்கள் உருவாக்க வேண்டும். அரசியல் எண்ணம் இல்லாதவன் தான் உண்மையான மதவாதி. அத்தகைய மதவாதியின் அணுகுமுறை எப்படி இருக்கும்?

"சரி, என்ன நடக்கப் போகிறதோ அது நடந்தே தீரும். அதைத் தடுத்து நிறுத்த நான் ஏன் என் நேரத்தை வீணாக்க வேண்டும்.? நான் தியானம் செய்யப் போகிறேன். நான் மகிழ்ச்சியாக வாழ்க்கையை அனுபவிக்கப் போகிறேன். நடுவே நடனம் ஆடப் போகிறேன். உலகப்போர் வரட்டுமே! அதனால் என்ன? அதற்காக நான் ஏன் நடனத்தை இழக்க வேண்டும்? காலம் பொன் போன்றது அல்லவா? இன்னும் சிறிது காலம்தானே இருக்கிறது?"

நீங்கள் நடனம் ஆட ஆரம்பித்தால், நீங்கள் அன்பு செய்ய ஆரம்பித்தால், நீங்கள் தோழமையுடன் இருக்க ஆரம்பித்தால், நீங்கள் உங்கள் வாழ்க்கையை அனுபவிக்க ஆரம்பித்தால் உலக அமைதிக்கான சக்தியை நீங்கள் உருவாக்கத் தொடங்குவீர்கள். அமைதியைப் பற்றிச் சிந்திக்காமலேயே அமைதிக்கான சக்தியை உருவாக்க முற்படுவீர்கள்.

அதனால்தான் நான் அமைதியைப் பற்றிப் பேசுவதில்லை. மாறாக அன்பைப் பற்றியும் காதலைப் பற்றியும் பேசுகிறேன். அன்பின் சக்தியை அமைதி நிழல் போலத் தொடரும்.

வறுமை இருக்கிறது என்பதை நான் அறிவேன். பிச்சைக் காரர்களைப் பற்றியும் எனக்குத் தெரியும். என்ன செய்வது? நீங்கள் என்ன செய்தாலும் அது அவர்களுக்கு உதவப்

போவதில்லை. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக மக்கள் சேவை நடந்து கொண்டிருக்கிறது. நன்கொடை கொடுக்கிறார்கள். தானம் கொடுக்கிறார்கள். உணவையும் உடையையும் அளிக்கிறார்கள். பிச்சை போடுகிறார்கள். தர்மசிந்தனை தழைத்தோங்கியிருக்கிறது. என்றாலும் எதுவும் மாறவில்லையே! இன்னும் பிச்சைக்காரர்கள் இருக்கத்தானே செய்கிறார்கள்.

கம்யூனிச நாடுகளில் மதம் தோல்வியடைந்துவிட்டது என்று நினைக்கிறார்கள். உள்ளதைச் சொல்லப் போனால் அங்கேயெல்லாம் அவர்கள் மதங்களைச் சரியாகப் பரிசோதித்துப் பார்க்கவில்லை.

மதங்கள் தோல்வி அடைந்துவிட்டன என்று தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். காரணம் - நன்கொடை கொடுப்பவர்கள், தர்மம் செய்பவர்கள் எல்லாரையுமே மதத்தைச் சார்ந்தவர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் மதம் சம்பந்தப்பட்டவர்கள் அல்லர்.

குற்ற உணர்வு சம்பந்தப்பட்டவர்கள்.அவர்களிடம் ஏராளமான குற்ற உணர்வு இருக்கிறது. ஒரு மனிதன் அளவுக்கதிகமாக சொத்து சேர்க்கும்போது அவனிடம் குற்ற உணர்வு அதிகமாகிறது. அந்தக் குற்ற உணர்வைப் போக்க அவன் தர்மம் செய்ய ஆரம்பிக்கிறான். அவனுடைய மனசாட்சிக்கு அவன் செய்து கொள்ளும் சமாதானம் இது. அவ்வளவுதான்.

இது நடந்த நிகழ்வு:

ஆண்ட்ரு கார்னஜி என்ற மிகப்பெரிய கோடீஸ்வரர் பல நூலகங்களுக்கும், கல்லூரிகளுக்கும், பல்கலைக்கழகங்களுக்கும் மருத்துவமனைகளுக்கும் மேலும் பலதரப்பட்ட நிறுவனங்களுக்கும் கோடிக்கணக்கில் நன்கொடை கொடுத்திருந்தார்.

அவர் இறக்கும் தருவாயில் தன் உதவியாளரிடம் கேட்டார் "என் வாழ்க்கையில் நான் மொத்தமாக எவ்வளவு நன்கொடை கொடுத்திருப்பேன்?"

உதவியாளர் அவரது கணக்குப்பிள்ளையிடம் ஓடினார். விவரம் கேட்டார். கணக்குப்பிள்ளை மிகப் பெரிய ஒரு பட்டியலைக் கொடுத்தார். அதை உதவியாளர் கோடீஸ்வரரிடம் படித்துக் காண்பித்தார். மொத்த நன்கொடைத் தொகை பல கோடி டாலர்கள்.

உதவியாளர் சொல்வதைக் கவனமாகக் கேட்ட கோடீஸ்வரர் கண்கள் விரிய ஆச்சரியத்துடன் சொன்னார்: "ஆனால் எங்கிருந்து எனக்கு அவ்வளவு பணம் வந்தது? உண்மையிலேயே நான் அவ்வளவு பணமா கொடுத்தேன்? அந்தப் பணம் எல்லாம் எங்கிருந்து வந்தது? அதை எப்படிச் சம்பாதித்தேன்?"

யாருக்கு நன்கொடை கொடுக்கிறீர்களோ அவர்களிடமிருந்து தான் அந்தப் பணம் வந்தது. ஒரு கையால் மக்களிடம் இருந்து பணத்தை எடுத்து மறு கையினால் அதைத் திருப்பித் தருகிறீர்கள். நீங்கள் எடுத்ததையெல்லாம் திருப்பித் தரப்போவ தில்லை. எடுத்ததில் ஒரு சிறுபகுதியை மட்டும்தான் தருகிறீர்கள். அது ஓர் ஏமாற்று வேலை. அதனால் யாருக்கும் எந்தப் பயனும் இல்லை.

வறுமையை இந்தப் பூமியிலிருந்து ஒழிக்க வேண்டுமானால் முதலில் மனிதனின் பேராசையை ஒழிக்க வேண்டும். நன்கொடைகளாலும் அறக்கட்டளைகளாலும் எந்தப் பயனும் இல்லை. பேராசை ஒழிய வேண்டும். பொருள்களைப் பதுக்கிவைப்பது ஒழிய வேண்டும். அதைத்தான் நான் உங்களுக்குப் போதித்துக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் வாழ்க்கையைக் காதலித்தால் பொருள்களை ஒருபோதும் பதுக்கிவைக்க மாட்டீர்கள். வாழ்க்கை மிகவும் அழகானது. நாளை பற்றி இப்போது ஏன் கவலைப்பட வேண்டும்? அதனால்தான் நான் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இந்தக் கணத்தில் வாழுங்கள். இதைக் கடைப்பிடித்தால் பிச்சைக்காரர்களே இருக்கமாட்டார்கள்.

ஆனால் நீங்கள் உங்கள் வருங்காலத்திற்காக வாழ்கிறீர்கள். அதனால் பொருளைப் பதுக்குகிறீர்கள். அதனால் இன்று

யாருக்கோ உணவோ உடையோ கிடைக்காமல் போய்விடும். அதனல் பிச்சைக்காரர்கள் நிச்சயம் இருப்பார்கள்.

இப்போது வாழ்பவர்களின் இப்போதையத் தேவைகளுக்கு பூமியில் உள்ள செல்வங்கள் போதுமானவை. வருங்காலத்திற்காக யாரும் பொருளைச் சேர்க்காவிட்டால். பதுக்கிவைக்காவிட்டால் வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படாமல் வாழ்ந்தால் எல்லோரும் மகிழ்ச்சியாக வாழலாம். எல்லோருக்கும் போதுமான செல்வம் இருக்கும்.

ஆனால் நீங்களோ சதா வருங்காலத்தைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இப்போது மகிழ்ச்சியாக இல்லை. "நாளை மகிழ்ச்சியாக இருப்பேன்" என்று நினைக்கிறீர்கள். அதன் காரணமாக உங்கள் நிகழ் காலத்தைத் தியாகம் செய்கிறீர்கள். உங்கள் வருங்காலத் தேவைக்காக மற்றவர்களுடைய நிகழ்காலத்தேவைகளையும் நீங்கள் தியாகம் செய்யத் தயங்குவதில்லை.

தெருவில் காணும் பிச்சைக்காரன் ஒரு பிரச்சினையல்ல. அவன் பிரச்சினையின் அறிகுறி. அவன் சமூகத்தின் நோயல்ல. நோயின் அறிகுறி. உங்கள் பேராசைதான் பிரச்சினை. நீங்கள் பிச்சைக்காரனுக்கு ஏதாவது கொடுக்கலாம். நான் தடுக்கவில்லை. அது உங்களுக்கு 'நல்ல காரியம் செய்துவிட்டோம்' என்ற ஆறுதலைக் கொடுக்கும்.

நீங்கள் பிச்சைக்காரனுக்குக் கொடுக்கிறீர்கள். அவனும் உங்களைப் போல்தான் இருக்கிறான். தன்னுடைய வருங்காலத் துக்குத் தனக்கு முடிந்த அளவில் பொருளைப் பதுக்கிவைத்துக் கொண்டிருக்கிறான். பணத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டிருக் கிறான்.

பிச்சைக்காரனை அவன் தோற்றத்தை வைத்து எடை போடாதீர்கள்.

வங்கியில் லட்சக்கணக்கில் பணம் சேர்த்து வைத்திருக்கும் பிச்சைக்காரர்களைப் பற்றி எனக்குத் தெரியும். பிச்சை எடுப்பது

அவனுடைய தொழில். அதற்கு உரிய தோற்றத்தில் அவன் தன்னை வைத்துக் கொண்டிருக்கிறான்.

பசியால் செத்துக் கொண்டிருப்பதாக அவன் உங்கள்முன் நடிக்க வேண்டியிருக்கிறது. அப்போதுதான் உங்கள் கடினமான மனம் கொஞ்சமாவது இளகும். அவன் சாகக்கிடந்தால்தான் நீங்கள் கொஞ்சமாவது பிச்சை போடுவீர்கள். அவன் குளிரில் நடுங்கியபடி அமர்ந்திருக்க வேண்டும். அவனால் ஒரு போர்வை வாங்கிக்கொள்ள முடியும். அவனிடம் பணம் இருக்கிறது.

ஆனால் அவன் போர்வை வாங்கமாட்டான். அவன் வசதியாகப் போர்த்துக் கொண்டிருந்தால் உங்களுக்கு அவன்மேல் இரக்கம் வராதே. உங்கள் குற்ற உணர்வு விழித்துக் கொள்ளாதே! அவன் குளிரால் நடுங்கும் போதுதான் நீங்கள் குற்ற உணர்வால் நடுங்குவீர்கள். அவன் பாசாங்கு செய்தேயாக வேண்டும்.

எனக்குத் தெரிந்த ஒரு மாணவனைப் பற்றிச் சொல்கிறேன். நான் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்தபோது என் வகுப்பில் இருந்தான் அவன். ஒரு நாள் அவனிடம் “நீ எங்கே வசிக்கிறாய்?” என்று கேட்டேன்.

“தயவு செய்து அதை மட்டும் கேட்காதீர்கள் ஐயா. இதுவரை யாரிடமும் நான் வசிக்கும் இடத்தைச் சொன்னதில்லை. அப்பா அதைச் சொல்லக்கூடாது என்று சொல்லியிருக்கிறார். உங்களிடம் சொல்கிறேன். தயவு செய்து யாரிடமும் சொல்லி விடாதீர்கள்.”

“என்ன பிரச்சினை உனக்கு?”

“என் அப்பா ஒரு பிச்சைக்காரர். நீங்கள் அவரைப் பார்த்திருக்கலாம். வழக்கமாக ரயில் நிலையத்தில்தான் அவர் பிச்சை எடுப்பார்.”

“அடப்பாவி! அந்தப் பிச்சைக்காரனா உன் தந்தை?”

"ஆம் ஐயா. எங்களிடம் வேண்டிய அளவு பணம் இருக்கிறது. ஆனால் இது வெளியே தெரிந்தால் பிச்சைக்காரர் என்ற பெயர் கெட்டுவிடும்."

அந்த மாணவன் ஒரு செல்வந்தன் வீட்டுப் பிள்ளையைப் போல்தான் இருப்பான். நான் தினமும் பயணம் செய்ததால் அவன் தந்தையையும் எனக்குத் தெரியும்..

அந்தப் பிச்சைக்காரன் அனுதினம் ஏமாற்றும் நூற்றுக்கணக் கானவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன்.

எப்படியாவது என்னிடம் எதையாவது கறந்துவிடுவான். ஒரு முறை கையில் ஒன்றும் இல்லை. அடுத்த முறை பார்க்கலாம் என்று சொல்லிவிட்டேன்.

அடுத்த முறை என்னைப் பார்த்ததும் ஓடி வந்து ஒப்பாரி வைத்தான்.

"ஐயா நான் செத்துக் கொண்டிருக்கிறேன். என் மனைவி பாவம் கொடிய நோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் இருக்கிறாள். நீங்கள் தானய்யா உதவி செய்ய வேண்டும்."

"சரி உன் மகன் எப்படி இருக்கிறான்?"

"எந்த மகனைப் பற்றிக் கேட்கிறீர்கள்?"

"உன் மகன் என் மாணவன்."

"ஐயா தயவு செய்து இதை வெளியில் சொல்லிவிடாதீர்கள். இனிமேல் உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டேன்."

பிச்சைக்காரர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றினால் தாராளமாகச் செய்யுங்கள். நான் அதைத் தடுக்க மாட்டேன். ஆனால் எனக்கு அதில் அவ்வளவாக உடன்பாடு இல்லை.

பிச்சையிடுவதும் இடாமல் இருப்பதும் உங்கள் பாடு பிச்சைக்காரன் பாடு. நடுவில் நான் எதற்கு? அது நீங்கள்

எடுக்க வேண்டிய முடிவு. அதில் தேவையில்லாமல் என்னை இழுக்காதீர்கள்.

எவ்வளவு வேண்டுமானாலும் பிச்சை போடுங்கள். நீங்களே பிச்சை எடுக்கும் அளவிற்குப் போகும் வரை பிச்சை போடுங்கள். அப்பறம் உங்களுக்கு யாராவது பிச்சை போடுவார்கள். இப்படியேதான் பலகாலமாக நடந்து வந்து கொண்டிருக்கிறது.

தான-தர்மங்கள் உதவவில்லையாதலால் கம்யூனிசம் வந்தது. கம்யூனிசமும் உதவவில்லை. கம்யூனிசம் யாரையும் பணக்காரராக ஆக்கவில்லை. சில பல பணக்காரர்களை ஏழைகளாக்கியிருக்கிறது. அவ்வளவுதான். ஏழை ஏழையாகவே இருக்கிறான். பணக்காரன்தான் மறைந்துவிட்டான்.

அதனால்தான் ரஷியா தன் குடிமக்களை அமெரிக்காவைக் காணக்கூடாது என்று தடையுத்தரவு போடுகிறது.. (இது ரஷியாவில் கம்யூனிசம் தழைத்திருந்த காலத்தில் எழுதப்பட்டது)

ரஷியர்கள் அமெரிக்காவைப் பார்ப்பது ஆபத்தானது. ஏனென்றால் அமெரிக்காவின் ஏழை ரஷியாவின் பணக்காரனைவிட அதிக வசதியுடன் வாழ்கிறான். அது ஆபத்தானது. ரஷியாவில் பணக்காரர்கள் என்ற இனமே அழிந்துவிட்டது. அங்கு எல்லாரும் ஏழைகளே. சமதர்ம சமுதாயம் அங்கே வந்துவிட்டது.; காரணம் அவர்கள் எல்லோரும் ஒரே மாதிரி ஏழையாக இருக்கிறார்கள்.

அங்கு பணக்காரனே இல்லை என்பது உண்மைதான். ஆனால் வறுமை மாறவில்லை. பேராசை ஒழியவில்லை. அங்கே அரசாங்கத்திடம் பேராசை இருக்கிறது. அங்கே அரசாங்கம் வருங்காலத்திற்காகத் திட்டம் போடுகிறது. அவர்கள் நிதி ஆதாரங்களில் எழுபது சகிதம் அவர்கள் ராணுவம் போர் செய்ய ஆயத்த நிலையில் இருப்பதற்காகச் செலவிடப்படுகிறது.

நாட்டில் பசியும் பட்டினியும் தலைவிரித்து ஆடுகிறது. மக்கள் அணியக் காலணிகள் இல்லை. ஆடைகள் இல்லை.

ஆனால் மொத்த வருமானத்தில் எழுபது சதவிகிதம் ராணுவச் செலவு. எப்போதோ வரப்போகும் மூன்றாம் உலகப் போருக்காகச் செலவிடப்படுகிறது. அதுதான் கம்யூனிசம்.

கம்யூனிசம் தோல்வியடைந்துவிட்டது. தான தருமங்களைவிட இன்னும் மோசமாகத் தோல்வியடைந்துவிட்டது. கம்யூனிசம் ஒரு புது வகுப்பையே உருவாக்கிவிட்டது. அங்கு செல்வந்தன் இல்லை. அரசு அதிகாரி தழைத்துக் கொண்டிருக்கிறான். மேல்தட்டு வகுப்பினர் என்று யாரும் இல்லை.

அதிகாரிகள் வர்க்கம் ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கிறது. செல்வந்தன் இல்லை. கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினன் இருக்கிறான். இப்போது அவன்தான் அங்கே மேல் ஜாதி. முன்னாளில் ஏழைகளின்மேல் நடத்தப்பட்ட அடக்குமுறை இன்னும் மோசமான முறையில் தொடர்ந்து கொண்டிருக்கிறது. ரஷியாவிலும் சீனாவிலும் இருப்பதுபோல் அடிமைத்தனம் ஒரு காலத்திலும் ஒரு நாட்டிலும் இருந்ததில்லை.

"என்ன செய்வது?" என்று கேட்கிறீர்கள். என் யோசனை: மூன்றாம் உலகப் போரை உங்களால் தடுக்க முடியும் என்று நினைக்காதீர்கள். வறுமையை ஒழிக்க முடியும் என்று கனவு காணாதீர்கள். உங்களால் உங்களை மட்டும்தான் மாற்றிக் கொள்ள முடியும். உங்கள் பேராசையை உதறித்தள்ளுங்கள்.

உங்கள் வருங்காலத்தைப் பற்றிய கவலைகளை உதறித் தள்ளுங்கள். உங்கள் மனதை உதறித் தள்ளுங்கள். இன்னும் அன்புடையவராக மாறுங்கள். இதயத்தில் இன்னும் ஈரமுடைய வராக மாறுங்கள். இதயம் சொல்வதைக் கேட்டு வாழுங்கள்.

அதிகம் பேர் அப்படி வாழ்வதுதான் உலகை மாற்ற நமக்கு இருக்கும் ஒரே வழி.

உலகத்தை நேரடியாக மாற்ற முடியாது. ஏனென்றால் உலகத்திற்கு ஆன்மா இல்லை. தனி மனிதனிடம்தான் ஆன்மா இருக்கிறது. தனிமனிதனை மட்டும்தான் மாற்ற முடியும்.

நீங்கள் பேராசையுடன் பொருள்களைப் பதுக்கிவைத்துக் கொண்டேயிருந்தால் இந்த உலகம் இப்படியேதான் இருக்கும். நீங்கள் பிச்சைக்காரனுக்குப் பணம் கொடுக்கலாம். ஆனால் அவன் எப்போதும் பிச்சைக்காரனாகவே இருப்பான். ஏனென்றால் பணத்தால் எதையும் மாற்ற முடியாது. நான் பல கோடீஸ்வரர்களைப் பார்த்திருக்கிறேன். மனதளவில் அவர்கள் இன்னும் பிச்சைக்காரர்களாகவே இருக்கிறார்கள். வடிகட்டின கஞ்சர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சம்பாதித்த கோடிகளால் அவர்களுக்கு எந்தப் பயனும் இல்லை.

இதை நான் கேட்டிருக்கிறேன்:

இரண்டு யூத அகதிகள் அமெரிக்க கோடீஸ்வரர் ராக்ஃபெல்லரின் இல்லத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

"அவரிடம் இருக்கும் செல்வம் எனக்கு இருந்தால் நான் அவரைவிடப் பணக்காரனாக இருப்பேன்."

"அது எப்படி முடியும்? அவரிடம் இருக்கும் செல்வம் உன்னிடம் இருந்தால் அவர் அளவு பணக்காரனாக இருப்பாய் என்று சொல்."

"உனக்கு இதெல்லாம் புரியாது மூடனே! அவ்வளவு செல்வத்தையும் வைத்துக் கொண்டு நான் நடுவில் ஹீப்ரு மொழி வகுப்புக்கள் எடுத்துச் சம்பாதிப்பேனே. அவருக்குத்தான் ஹீப்ரு தெரியாதே!"

ஒரு பிச்சைக்காரன் கடைசிவரை பிச்சைக்காரனாகத்தான் இருப்பான். ராக்ஃபெல்லரின் சொத்துக்கள் அவனிடம் இருந்தாலும் இடையே ஹீப்ரு சொல்லிக் கொடுத்து கால் காசு அரைக்காசு சம்பாதித்துக் கொண்டிருப்பான்.

மக்கள் மாறவே மாட்டார்கள். பணம் எதையும் மாற்றாது. நீங்கள் மாறினால் அது வேறு விஷயம். கருணையே கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் உங்கள் கருணையால் உலகம் மாறப்போகிறது என்று நினைக்காதீர்கள். அது நிச்சயம் நடக்காது.

உங்களால் எவ்வளவு செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்க முடியுமோ கொடுங்கள். ஆனால் நீங்கள் கொடுப்பது அன்பின் அடிப்படையில் இருக்க வேண்டும். உலகத்தை மாற்றப் போகிறேன் போன்ற அரசியல் எண்ணங்களை உள்ளே கொண்டு வராதீர்கள். அப்படிச் செய்தால் வெறுப்பும் விரக்தியும்தான் மிஞ்சும்.

எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள். வழியில் ஒரு பிச்சைக்காரனைப் பார்த்தால் என்ன தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள்.

எதுவும் செய்ய வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. உலகத்தை மாற்றிவிடலாம் என்ற நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளாதீர்கள் என்று மட்டும்தான் சொன்னேன். எதையுமே மாற்ற முடியாது.

உலகத்தை மாற்ற ஒரே வழி உங்கள் உணர்வுநிலையை மாற்றுவதுதான். அந்த மாற்றத்தை உங்களுக்குள் மட்டும்தான் நீங்கள் நிகழ்த்த முடியும். அதை வெளியில் உள்ள யாரிடத்திலும் நடத்த முடியாது. உங்கள் உணர்வுநிலையை மாற்றிக் கொண்டால் மற்றவர்களை மாற்றும் அதிர்வுகள் தாமாகவே உங்களிடமிருந்து வெளிப்படும். மற்றவர்கள் தாங்கள் மாறுகிறோம் என்பதை அறியாமலேயே மாறிவிடுவார்கள்.

உலகத்தின் இப்போதைய தேவை வேறுபட்ட சூழல்தான் - வேறுபட்ட சமுதாயம் இல்லை. முற்றிலும் வேறுபட்ட ஆன்மிகத் தாக்கங்கள் தேவைப்படுகிறது.

அதனால் தான் எனக்கு இந்த உலகத்தை மாற்றும் வேலையிலெல்லாம் கொஞ்சம் கூட நாட்டம் இல்லை. உங்களைச் சமூகச் சேவகர்களாக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்கு இல்லை. உங்களை மதப் பிரசாரத்தில் ஈடுபடுத்தும் சிந்தனையும் இல்லை. உங்களைச் சுயநலம் மிக்கவர்களாக ஆக்க வேண்டும் என்பதுதான் என் எண்ணம்.

முதலில் நீங்கள் யாரென்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். இதுதான் சுயநலத்தின் முதல் தத்துவம். பின் அன்பு காட்ட

முயற்சி செய்யுங்கள். இது சுயநலத்தின் இரண்டாவது தத்துவம். உங்களை நீங்களே நேசியுங்கள். அப்போதுதான் நீங்கள் மற்றவர்களை நேசிக்க முடியும்.

சுயநலத்தின் மூன்றாவது தத்துவம்: இந்த நொடியைப் பேரானந்தத்துடன் கொண்டாடுங்கள்.

இப்படிச் செய்தால் உங்கள் மூலம் ஏதோ ஒன்று நடக்கத் தொடங்கும். பிரபஞ்ச அளவில் நடக்க விருக்கும் ஒரு பெரிய நிகழ்வுக்கான உந்து சக்தி உங்களிடமிருந்து ஜனிக்கும்.

ஒரு புத்தர் பிறக்கும்போதெல்லாம் பிரபஞ்ச அளவில் ஒரு பெரிய நிகழ்வு தொடங்குகிறது. ஒரு புத்தராக மாறுங்கள். அதுதான் உங்களால் செய்ய முடியும்.

கடைசிக் கேள்வி.

*இது சுவாமி யோக சின்மயாவிடமிருந்து:*

*ஓஷோ,*

*கபீர் அன்பின் பாதையைப் பற்றிப் பாடுகிறார். இந்தத் தருணத்தில் ஓர் அந்தரங்கமான கேள்வியை எழுப்புதற்காக மன்னிப்புக் கோருகிறேன்.*

*கடைசியாகப் பெண் தோழியிடம் எப்போது இருந்தீர்கள்? கடைசியாக ஏற்பட்ட காதல் உறவை விளக்க முடியுமா?*

கேள்வி கேட்டவன் மாயமாக மறைந்துவிட்டானே! அவனை இங்கு காண முடியவில்லையே! எப்போது கேள்வி கேட்டாலும் இப்படித்தான் மறைந்து கொள்கிறான். அன்று முதல் வரிசையில் நடுநாயகமாக அமர்ந்திருந்தான். இன்று ஆளையே காணோம்.

இங்கே இருக்கும் ஆண்கள் உட்பட நீங்கள் எல்லாருமே எனக்குத் தோழிகள்தான். ஆனால் இது கேள்வி கேட்டவருக்குப் போதாது. அவருக்கு என்னைப் பற்றிய ரகசியங்கள் - கொஞ்சம் சுவாரசியமான ரகசியங்கள் - வேண்டும். அதனால்

அவருக்கு மட்டும் சொல்கிறேன். மற்றவர்கள் யாரும் இதைக் காது கொடுத்துக் கேட்காதீர்கள். இது சுவாமி யோக சின்மயாவிற்கு மட்டும்தான்.

சின்ன வயதில் எனக்கு ஒரு பெண் தோழி இருந்தாள். அப்பறம் ஒரு நாள் அவள் இறந்து போனாள். அவள் மரணப்படுக்கையில் இருந்தபோது நான் எப்படியும் திரும்பி வருவேன் என்று என்னிடம் சொன்னாள். எனக்குப் பயமாக இருந்தது. சொன்னமாதியே அவள் திரும்பி வந்தாள்.

அவள் பெயர் சசி. அவள் 1947இல் இறந்தாள். அவள் எங்கள் கிராமத்தில் இருந்த மருத்துவர் சர்மாவின் மகள் அவரும் இப்போது உயிருடன் இல்லை. அவள்தான் இப்போது விவேக் வடிவில் வந்து என்னை நன்றாகப் பார்த்துக் கொள்கிறாள். விவேக்கிற்கு இது தெரியாது. சசியை நான் செல்லமாக ‘குடியா’ என்று அழைப்பது வழக்கம். இப்போது விவேக்கையும் குடியா என்றுதான் அழைக்கிறேன் - ஒரு தொடர்ச்சி இருக்க வேண்டும் என்பதற்காக..

வாழ்க்கை ஒரு மகத்தான நாடகம். அது ஒரு பிறவியில் தொடங்கி அடுத்த பிறவிவரை தொடர்கிறது.

இது சின்மயாவிற்கு மட்டும்தான். மற்றவர்கள் இதைக் கேட்டிருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்.

இது நிஜமாகவே கடைசிக் கேள்வி:

*ஓஷோ,*

*நீங்கள் நடக்கும்போது உங்கள் கால்கள் தரையைத் தொடுவதில்லை என்று கேள்விப்பட்டேன். அதைப் பற்றி நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள்?*

அது முற்றிலும் உண்மை. நான் நடக்கும்போது என் கால்கள் தரையைத் தொடுவதில்லை - ஆனால் அதில் எந்த அதிசயமும் இல்லை. நான் காலணிகள் அணிந்து

கொண்டிருக்கிறேனே. பின் என் பாதங்கள் எப்படித் தரையைத் தொடும்?

இந்தப் பதில் உங்களுக்குத் திருப்தி அளிக்கவில்லையென்றால் ... உங்கள் குரு அற்புதங்களை நிகழ்த்துபவராக இருக்க வேண்டும் என்று நீங்கள் ஆசைப்பட்டால் -உங்கள் திருப்திக்காக இதைச் சொல்கிறேன்.

நான் விழிப்புணர்வு என்ற காலணிகளை அணிந்து கொண்டிருப்பதால்தான் என் கால்கள் தரையில் பாவுவதில்லை. நீங்களும் இந்த விழிப்புணர்வுக் காலணிகளை அணிந்து கொண்டால் கால்கள் தரையில் பாவாது.

இதில் எந்த ஆச்சரியமும் இல்லை. இது ஓர் அற்புதமும் இல்லை. இது சாதாரண நிகழ்வு. அவ்வளவுதான்.

அதைப் பற்றி நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள்?

இது ஆபத்தான கேள்வி. நேரம் முடிந்துவிட்டது. அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஏதாவது சொல்லியே ஆக வேண்டும் என்றால்...

அதற்கு 90 நிமிடம் ஆகும். இப்போது நேரம் இல்லை. நான் அவசரமாக சிறுநீர் கழிக்கப் போக வேண்டும். என்னை மன்னியுங்கள்.

இன்றைக்கு இது போதும்.

புனிதத் தீர்த்தங்களில் தண்ணீர்தான் இருக்கிறது.

அவற்றால் எந்தப் பயனும் இல்லை.

நான் அவற்றில் எல்லாம் குளித்திருக்கிறேன்

உருவங்களுக்கு உயிர் இல்லை; அவை பேசாது

எனக்குத் தெரியும் நான் அவற்றிடம் சத்தமாகக் கதறியிருக்கிறேன்.

புராணங்கள், குரான் - இவை எல்லாம் வெறும் வார்த்தைகளே

நான் திரையை விலக்கிப் பார்த்திருக்கிறேன்.

கபீர் தன் அனுபவத்தை மட்டுமே பேசுவான்

அவனுக்கு நன்றாகத் தெரியும்

மற்றவை எல்லாம் பொய் என்று.

தண்ணீரில் வாழும் மீன் தாகம் என்று சொல்வதைக் கேட்டால்

எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.

உங்கள் வீட்டில் இருக்கும் நிஜத்தைப் பார்க்க மறுக்கிறீர்கள்

ஒரு காட்டிலிருந்து இன்னொரு காட்டுக்கு

வெட்டியாக அலைந்து கொண்டிருக்கிறீர்கள்.

இதோ உண்மையைச் சொல்கிறேன்.

*காசி மதுரா எங்கு வேண்டுமானாலும் போங்கள்*
*உங்கள் ஆன்மாவை நீங்கள் பார்க்கவில்லையென்றால்*
*இந்த உலகம் உங்களுக்குப் பொய்யே.*

மனிதனின் தேடல் நிரந்தரமானது. அவன் சதா மெய்ப்பொருளைத் தேடிக்கொண்டிருக்கிறான். அது தொடக்கமற்ற ஒரு தீர்த்த யாத்திரை. அது ஒருநாள் முடிவிற்கு வரலாம். ஆனால் அதற்கு ஆரம்பம் இல்லை.

பல நூற்றாண்டுகளாக இந்தத் தேடல் தொடர்ந்து கொண்டிருக்கிறது. சிலசமயம் அது சில பரிணாமங்களில் இருக்கிறது. சில சமயம் வேறு பரிணாமங்களில் இருக்கிறது.

சிலருக்குத் தாங்கள் தேடிக்கொண்டிருக்கிறோம் என்பதுகூடத் தெரியாது. ஆனாலும் அவர்களும் தேடிக் கொண்டுதான் இருக்கிறார்கள். உண்மை குறித்த இந்தத் தேடல்தான் மனிதனின் வாழ்க்கை.

இதுதான் மனிதனின் துயரம். இதுதான் மனிதனின் பெருமை. வேறு எந்த உயிரினமும் இப்படித் தேடுவதில்லை. அவை எல்லாம் இருக்கும் நிலையிலேயே திருப்தியடைந்து விடுகின்றன.

ஒரு நாய் நாய்தான். அது வேறு எதுவாகவும் ஆக முயற்சி செய்வதில்லை. அப்படி ஆக வேண்டும் இப்படி ஆக வேண்டும் என்று அது ஒருபோதும் நினைப்பதில்லை. நாய் தன் நிலையைப் பரிபூரணத் திருப்தியுடன் ஏற்றுக் கொள்கிறது. அதன் வாழ்க்கையும் குழப்பமில்லாமல் இருக்கிறது.

நாய்கள் தீர்த்தயாத்திரை போவதில்லை. பயணம் மேற்கொள்வதில்லை. வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. எல்லா விலங்குகளும் அப்படித்தான் இருக்கின்றன.

மனிதன் வித்தியாசமானவன். விநோதமானவன். அவனுக்குத் திருப்தி என்பதே இல்லை. அதிருப்திதான் அவனது ஆன்மா. அவன் சதா பயணம் செய்து கொண்டேயிருக்கிறான். ஓர் இடத்தை விட்டு மற்றொரு இடத்திற்கு ஒரு நிலையிலின்றும்

வேறொரு நிலைக்கு என்று பயணம் தொடர்கிறது. அவன் எங்கும் தேங்கி நிற்பதில்லை. எப்போதும் இயக்க நிலையிலேயே இருக்கிறான்.

அவன் நீரின் போக்கு.. அவன் ஓடும் ஆறு. எப்போதும் கடலைத் தேடிப் பிரவாகமெடுத்து ஓடிக் கொண்டிருக்கும் நதி. அவன் எப்போதும் தேடுபவனாகத்தான் இருக்கிறான். மனிதனால் வேறு எப்படியும் இருக்கமுடியாது.

மனிதன் இரண்டு முடிவின்மைகளுக்கு நடுவில் கட்டப்பட்ட கயிறு என்கிறார் நைட்ஷே என்ற தத்துவவாதி. இயற்கை என்ற முடிவின்மைக்கும் இறைவன் என்ற முடிவின்மைக்கும் நடுவே கட்டப்பட்ட கயிறு. மனிதன் ஒரு பாலம். மனிதனாகப் பிறந்துவிட்டால் நீங்கள் ஓய்வு எடுக்கமுடியாது. பயணித்துக் கொண்டேயிருக்க வேண்டும். சிறிது நேரம் ஓய்வு எடுக்கலாம். ஆனால் ஓய்வே வாழ்க்கையாகிவிட முடியாது. நீங்கள் போய்க் கொண்டே இருக்க வேண்டும். மனிதன் ஒரு நிலையில்லை. வழி.

ஒரு நாய்க்கு இருப்புநிலை இருக்கிறது. ஒரு பாறைக்குக்கூட இருப்பு நிலை இருக்கிறது. மனிதனுக்கு இல்லை. அந்த இருப்புநிலை அவனிடம் மலர வேண்டும். அதை அவன் அடைய வேண்டும். மனிதன் முரண்பாடுகள் மிக்கவன். இருக்கிறான், இல்லை என்ற இரண்டு நிலைகளும் அவனுக்கு உண்டு. அவனுடைய கவலையே அதுதான்.

மனிதத்தன்மையை ஓர் அதல பாதாளம் சூழ்ந்துள்ளது. முடிவில்லாத பாதாளத்தை மனிதன் எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிறான். தான் இல்லாமல் போய்விடுவோமோ என்ற அச்சம் அவனிடம் எப்போதும் இருக்கிறது. அவன் இன்னும் இருப்புநிலையை எய்தவில்லை.

மனிதன் ஒரு வாக்குறுதி. ஒரு சாத்தியக்கூறு. இருப்புநிலையை அடையும் ஆற்றல் அவனுக்கு இருக்கிறது.. ஆனால் இன்னும் அடையவில்லை. எனவே நம்பிக்கையும் இருக்கிறது. பயமும் இருக்கிறது. வாய்ப்பும் இருக்கிறது

கவலையும் இருக்கிறது. அது நடக்கலாம் நடக்காமல் போகலாம். எதுவும் நிச்சயம் இல்லை.

இந்த உண்மைத் தேடலில் நான்கு கட்டங்கள் உண்டு. அந்த நான்கு கட்டங்களைப் பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும் என்பது என் ஆசை. அந்த நான்கு நிலைகளில், நீங்கள் எங்காவது இருப்பீர்கள்.

முதல் கட்டம் காடு. இரண்டாவது வனம். மூன்றாவது தோட்டம். நான்காவது வீடு.

காடு என்பது ஆழ்ந்த தூக்க நிலை. மனிதன் சுய உணர்வுடன் தேடலில் இறங்குவதில்லை. பெரும்பான்மையினர் இந்தக் கட்டத்தில்தான் இருக்கிறார்கள். தேடல் இருக்கிறது. ஆனால் அதை இவர்கள் உணர்வதில்லை. அது அவர்களுக்கு என்னவென்றே தெரியாது. கும்மிருட்டில் எதையோ தட்டித் தடவிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கட்டத்தில் தேடல் தற்செயலாக நடக்கும் ஒரு நிகழ்வு. ஒரு விபத்து. அவ்வளவுதான்.

சில சமயம் ஒரு ஜன்னல் தட்டுப்படலாம். அதன்வழியாக எதாவது காட்சி தெரியலாம். ஆனால் அதைச் சீக்கிரமே தவறவிட்டுவிடுவார்கள். எப்போதும் இருட்டில் தட்டித் தடுமாறிக் கொண்டேயிருப்பதால் இந்தக் காட்சிகள் மனதில் தங்காது.

சில சமயம் நீங்கள் கனவு காணும்போது எதையாவது பார்க்கலாம். சிலசமயம் நீங்கள் காதல்வயப்பட்டிருக்கும்போது ஒரு கதவு திறந்து மூடலாம். ஆனால் அந்தக் கதவு எப்படித் திறந்தது எப்போது மூடியது என்று உங்களுக்குத் தெரியாது.

சிலசமயம் அழகான ஒரு சூரிய அஸ்தமனத்தைப் பார்க்கும்போது மிக அழகான ஏதோ ஒன்று உங்களைச் சூழ்ந்திருப்பதை உணரலாம். வேறு உலகம் உங்களை ஊடுருவிவிட்டது என்று உணரலாம். அப்படி நடந்ததா என்று உங்களால் நம்பக்கூட முடியாது. ஏனென்றால் நீங்கள் மனமறிந்து தேடவில்லை.

பலமுறை நீங்கள் கடவுளை நேருக்கு நேர் சந்திப்பீர்கள். கவனமாகக் கேளுங்கள். உங்கள் வாழ்க்கையின் பல காலகட்டங்களில் கடவுளைப் பார்ப்பீர்கள். ஆனால் உங்களால் அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியாது. ஏனென்றால் நீங்கள் கடவுளைத் தேடவில்லை.

குறிப்பாக ஒரு பொருளை நீங்கள் தேடாவிட்டால் அது முன்னால் இருந்தாலும் உங்களுக்குத் தெரியாது. நீங்கள் இன்னது வேண்டும் என்று தேடினால்தான் அதைப் பார்க்கமுடியும்.

அது உங்களை உரசிக்கொண்டு போகலாம். ஆனால் நீங்கள் அதைக் குறிப்பாகத் தேடாவிட்டால் அதைப் பார்க்க முடியாது. ஒன்றைப் பார்க்க வேண்டுமென்றால் குறிப்பாக அதைத் தேடிக்கொண்டிருக்க வேண்டும்.

முதல் நிலை ஒரு காட்டைப் போன்றது. ஆழ்ந்த, இருண்ட அடர்த்தியான புதர் மண்டிக் கிடக்கும் புராதனமான ஆதிமுதல் நிலமை அது. காட்டின் நடுவே பாதைகளே இருக்காது. ஒற்றையடிப்பாதைகூட இருக்காது. காட்டின் நடுவே நடந்து கொண்டிருக்கும் மனிதன் தட்டுத் தடுமாறி ஓர் இருண்ட மூலையிலிருந்து இன்னொரு இருண்ட மூலைக்குச் சென்று கொண்டிருப்பான். ஒரே இடத்தையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பான்.

பெரும்பான்மையான மனிதர்கள் இந்த காடு போன்ற நிலையில்தான் இருக்கிறார்கள். தன்னுணர்வற்ற நிலையில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார்கள். இல்லை தூக்கத்தில் என்ன செய்கிறோம் என்பதை உணராமல் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

புத்தர் ஏசு கபீர் குர்ஜிஃப் போன்றவர்களின் கருத்து இதுதான். பெரும்பான்மையினர் வாழ்வதில்லை. சும்மா இருக்கிறார்கள். சாகிறார்கள். அவ்வளவுதான்.

நீங்கள் விழிப்பாக இருப்பதுபோல் உங்களுக்குத் தோன்றும். ஆனால் உங்களிடம் விழிப்புணர்வு இல்லை. அடர்ந்த

பனிமூட்டத்தின் நடுவே வாழ்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை இயந்திரத்தனமாக இருக்கிறது. உங்களுக்குள் ஏதோ நடக்கிறது என்பது உண்மைதான். ஆனால் ஓர் இயந்திரத்துக்கு நடக்கும் நிகழ்வுகள்தான் உங்களுக்கும் நடக்கிறது. ஒரு விசையை அழுத்தினால் ஓர் இயந்திரம் ஓடத் தொடங்குவது போன்ற தன்னுணர்வற்ற நிகழ்வுகள்.

யாரோ விசையை அழுத்துகிறார்கள். உங்களுக்குள் கோபம் வருகிறது. இன்னொருவர் மற்றொரு விசையை அழுத்துகிறார். சந்தோஷம் தோன்றுகிறது. வேறு ஒருவர் வேறு ஒரு விசையை அழுத்துகிறார். வேறு ஓர் உணர்வு தோன்றுகிறது. விசையை அழுத்துவதற்கும் உங்களுக்குள் உணர்வுகள் எழுவதற்கும் அரை நொடி கால இடைவெளிகூட இல்லை. எல்லாமே இயந்திரத்தனமாக நிகழ்கிறது. நீங்கள் முதலாளி இல்லை. அடிமை. அந்த விசையை அழுத்துபவர்களின் கொத்தடிமை.

குர்ஜிஃப் மனிதனை ஒரு ரதத்திற்கு ஒப்பிடுகிறார். தேரோட்டி குடிமயக்கத்தில் இருக்கிறான். ரதத்தின் எஜமானன் உள்ளே ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறான். ரதத்தை இழுக்கும் நான்கு குதிரைகள் யாருக்கும் அடங்காதவை. ஒவ்வொன்றும் ரதத்தை ஒவ்வொரு திசையில் இழுத்துச் செல்ல முயற்சி செய்கின்றன.

வழியில் செல்லும் எவனும் ரதத்திற்குள் குதித்து அதனை ஓட்டலாம். தேரோட்டிதான் குடிமயக்கத்தில் இருக்கிறானே. எஜமானன் தூங்கிக் கொண்டிருக்கிறானே. அத்து மீறி உள்ளே நுழைந்து ரதத்தைக் கட்டுப்படுத்துபவனைத் தடுக்க யார் இருக்கிறார்கள்?

இதுதான் உங்கள் வாழ்க்கையின் உண்மை நிலை. உங்கள் உள்ளே ஆழத்தில் இருக்கும் மையக்கரு தூங்கிக் கொண்டிருக்கிறது. உங்கள் விழிப்புணர்வு குடிமயக்கத்தில் இருக்கிறது. உங்கள் உடல்தான் அந்த ரதம். எந்த சிறிய ஆசை, எண்ணம் உள்ளே புகுந்தாலும் உடல் என்னும் ரதத்தை அது ஆட்டி வைக்கிறது. அது உங்களை எங்கோ

ஓர் இடத்துக்கு இழுத்துச் செல்கிறது. பின் அங்கேயே அம்போ என்று விட்டுவிட்டுப் போய்விடுகிறது. பின் வேறொரு ஆசை வேறொரு எண்ணம் உள்ளே புகுந்து அது உங்களை வேறு எங்கோ இழுத்துச் செல்லத் தொடங்குகிறது.

இதே ரீதியில் நீங்கள் வளைந்து நெளிந்து போய்க் கொண்டிருக்கிறீர்கள். கல்லிலே முட்டிக்கொண்டும் மரத்தில் மோதிக் கொண்டும் உங்கள் பயணம் தொடர்ந்து கொண்டிருக்கிறது. இருட்டில் முட்டிக்கொண்டும் மோதிக்கொண்டும் பயணம் செய்வதால் நீங்கள் காயப்படுகிறீர்கள். வலியைக் கொடுக்கும் ரணங்கள் உண்டாகின்றன. உங்கள் மொத்த வாழ்க்கையும் ஒரு பயங்கரமான கெட்ட கனவாகப் போய்விடுகிறது.

இந்த நிலையின் தன்மைகளை அறிந்து கொள்ள முயலுங்கள். இதைத்தான் யூங் (Jung) என்ற மனவியல் நிபுணர் ஒட்டுமொத்த உணர்வின்மை என்று சொல்கிறார். சிக்மண்ட் ஃப்ராய்ட் (Sigmund Freud) என்ற நிபுணரோ உணர்வின்மை என்று சொல்கிறார்.

இது உணர்வின் அடிமட்ட நிலை. இந்த நிலையில் தேடல் இருக்க வாய்ப்பேயில்லை. உங்கள் வாழ்க்கை உங்கள் கையில் இல்லை. விபத்துகள்தான் உங்கள் வாழ்வை நிர்ணயிக்கின்றன.

ஒரு தேடலின் விளைவாக இல்லாமல் தற்செயலாக என்னிடம் வந்து சேர்ந்தவர்கள் பலர். அவர்கள் என்னிடம் வந்ததே ஒரு விபத்தாகத்தான் இருக்கும். யாராவது நண்பர்கள் அல்லது தெரிந்தவர்கள் என்னிடம் வருவார்கள். இவர்களும் அவர்களுடன் தொத்திக்கொண்டு வருவார்கள். "அப்படி இந்த ஆளிடம் என்னதான் இருக்கிறது என்று பார்ப்போமே" என்று வருவார்கள்.

இல்லை, புத்தகக்கடையில் என் புத்தகத்தைப் பார்ப்பார்கள். அதில் இருக்கும் என் புகைப்படத்தைப் பார்த்துவிட்டு அதனால் வசீகரிக்கப்பட்டு வரலாம். இல்லையென்றால் புத்தகத்தின் தலைப்பு அவர்கள் ஆவலைத் தூண்டிவிட்டிருக்கும். அதனால் என்னிடம்

வரலாம். ஆனால் இது மனப்பூர்வமான தேடல் இல்லை. உணர்வுநிலை சம்பந்தப்படாத தேடல்.

நீங்கள் உங்கள் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கவில்லை. அது எப்படி இருக்க வேண்டும் என்று தியானிக்கவில்லை. அது என்னவாக இருக்க வேண்டும் எதை நோக்கிப் போக வேண்டும் என்று நீங்கள் யோசிக்கவில்லை.

உங்களின் சின்னச் சின்ன ஆசைகள்கூட உங்களை அடக்கி ஆள்கின்றன. உங்களுக்கு எஜமானனாக இருக்கின்றன. நீங்கள் கோபப்படும்போது கோபம் உங்கள் எஜமானனாகிறது. அது உங்களை முழுவதுமாக ஆக்கிரமித்துக் கொள்கிறது.

நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள் என்பதில்லை. நீங்கள் அந்தக் கோபமாகவே மாறிவிடுகிறீர்கள் என்பதுதான் உண்மை. கோபத்தின் பிடியில் நீங்கள் இருக்கும்போது செய்யும் செய்கைக்கு நீங்கள் பின்னால் வருத்தப்படலாம்.

இதுதான் முரண்பாட்டின் தொடக்கம். உங்களுக்குள் இருக்கும் ஒரு "நான்" செய்த காரியத்துக்காக இன்னொரு "நான்" வருத்தப்படுகிறது. வேடிக்கையான முரண்பாடு. அந்தக் கோபம் எதையோ செய்தது யாரையோ காயப்படுத்தியது அதன்பின் மறைந்துவிட்டது.

அது மறைந்தபிறகுதான் நீங்கள் செய்தது தவறு என்று உங்களுக்குத் தெரிகிறது. இப்படி உணர்வது வேறு ஒரு மனிதன். வேறு ஒரு "நான்" வேறு ஓர் ஆசை. வேறு ஒரு நிலை, வேறு ஒரு மனநிலை.

இப்போது நீங்கள் வேதனைப்படுவீர்கள். கோபத்தில் யாரைக் காயப்படுத்தினீர்களோ அவர்களிடம் போய் மன்னிப்புக் கேட்பீர்கள்.

கோபப்பட்டது வேறு ஆள். மன்னிப்புக் கேட்பது வேறு ஆள். இருவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. கோபத்தில் சிவந்த கண்கள் எங்கே, கறுத்த முகம் எங்கே துடித்த உடல் எங்கே? கொல்லத் தயாராக இருந்த மனம் எங்கே? அவை எல்லாம் போய்விட்டன.

ஒருமுறை ஒருவன் புத்தர்பிரான் மேல் எச்சில் துப்பிவிட்டான். அவன் பயங்கரக் கோபமாக இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் புத்தர் மேல் துப்புவது முடியாத செயல். சாந்தமே உருவாக அமர்ந்திருக்கும் அந்தக் கருணா மூர்த்தியின் மேல் எப்படித் துப்ப முடியும்?

புத்தர் தன் கையிலிருந்த துண்டால் அதைத் துடைத்தார். “என்னிடம் வேறு ஏதாவது நீ சொல்ல விரும்புகிறாயா?” என்று கேட்டார்.

அந்த மனிதன் கூனிக்குறுகினான். அவனால் ஒரு வார்த்தைகூடப் பேசமுடியவில்லை. சத்தம் போடாமல் நழுவி விட்டான். அன்று இரவு அவனால் அரை நொடி கூடத் தூங்க முடியவில்லை. மறுநாள் காலை புத்தரைத் தேடி வந்தான். அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான்.

“என்னை மன்னித்துவிடுங்கள். நான் செய்தது மடத்தனம்.. நான் கிறுக்கனாக இருந்துவிட்டேன்.”

புத்தர் சொன்னார்:

“இல்லையப்பா. நீ அப்படியெல்லாம் இல்லை. அதனால்தான் அந்தச் செயலை உன்னால் செய்ய முடிந்தது.. நீ உன்னை உணரும் நிலையில் இல்லை. அதனால் உன் செயலுக்கு நீ பொறுப்பாளி இல்லை. அதனால் கவலைப்படாதே. வேறு யாரோ ஒருவன் என்மேல் எச்சில் துப்பினான். நீ வேறு யாரோ.

அந்த மனிதன் கோபத்தில் இருந்தான். அவன் பைத்தியக்காரன். ஆனால் நீ நல்லவன். தெளிந்த அறிவு உடையவன். பணிவாகப் பேசுகிறாய் காலில் விழுந்து வணங்குகிறாய். உங்கள் இருவருக்கும் இடையே நிறைய வேறுபாடுகள் இருக்கின்றன. என்னால் உங்கள் இருவரையும் தொடர்புபடுத்திப் பார்க்கமுடியவில்லை.

காடு என்ற கட்டத்தில் இருக்கும் ஒரு மனிதன் தனிமனிதன் அல்லன். அவன் ஒரு கூட்டம். உங்களுக்குள் பலர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் தொடர்பில்லாமல்

பலர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உடைந்த துண்டுப்பகுதிகளாக முழுமை பெறாமல் பலர் உங்களுக்குள் இருக்கிறார்கள். உங்களிடம் ஆன்மா இல்லை. ஞானி குர்ஜிஃப் சொல்கிறார். "மனிதன் ஆன்மாவுடன் பிறப்பதில்லை."

மனிதனுள்ளே பல "அகங்கள்" பல "நான்கள்" இருக்கின்றன. ஆனால் ஆன்மா மட்டும் இல்லை. இந்த அகங்களும் நான்களும் ஒன்றாக உருகி, ஒன்றாக இணைந்து ரசாயன மாற்றங்கள் நிகழ்ந்து ஒரு பொருளாக சங்கமிக்குமே யானால் அந்த ஒரு பொருள்தான் உங்கள் ஆன்மா.

உங்கள் அகங்கள் மகாசமுத்திரத்தில் விழுந்து தங்களுடைய தனித்தன்மையை இழந்து ஒருமித்த நிலையை அடையும் போது உங்களுக்குள் ஆன்மா உருவாகிறது.

எல்லா மனிதர்களிடமும் ஆன்மா இருப்பதில்லை. நீங்கள் பிறக்கும்போது உங்களிடம் ஆன்மா இருக்காது.

இது ஒரு மிக முக்கியமான ஆழமான பொருள் கொண்ட மகாவாக்கியம்.

நீங்கள்தான் ஆன்மாவாக மாறவேண்டும். உங்களுக்குள் இருக்கும் பல மனிதர்களை ஒன்றாக்க வேண்டும். தங்களுக் குள்ளேயே சண்டை போட்டுக் கொண்டிருக்கும் இந்த மனிதர் களைத் திரட்டி உருக்கி ஒரு மனிதனாக மாற்ற வேண்டும்.

இந்த நிலையில் மக்களுக்குக் கேள்விகளை விட பதில்களில் தான் அதிக நாட்டம் இருக்கிறது. பதில் எவ்வளவு மடத்தனமான தாக இருந்தாலும் அவர்கள் திருப்தியடைந்துவிடுகிறார்கள். சொல்லப்போனால் அவர்கள் கேள்வியையே இன்னும் சரியாகக் கேட்கவில்லை. அதற்குமுன் பதிலை ஏற்றுக் கொள்கிறார்கள். இந்தமாதிரிதான் சிலர் இந்துக்களாக இருக்கிறார்கள். சிலர் முகமதியர்களாக இருக்கிறார்கள். இன்னும் சிலர் கிறிஸ்துவராக இருக்கிறார்கள்.

நீங்கள் கேள்வி கேட்கும் முன்பே உங்களுக்குப் பதில் கொடுக்கப்பட்டுவிட்டது. அந்தப் பதிலைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள். "நான் யூதன்! நான் இந்து! நான்

முகமதியன் நான் சமணன்!" என்று சொல்வதன் அர்த்தம் என்ன?

நீங்கள் கேள்வியைக் கேட்டீர்களா இல்லை பதிலை மட்டும் இரவல் வாங்கிக்கொண்டீர்களா? கேள்வியே கேட்காமல் நீங்கள் ஏசுநாதரை புத்தரை கிருஷ்ண பரமாத்மாவை முகமது நபிகளை கண்மூடித்தனமாக நம்பத் தொடங்கிவிட்டீர்கள். அது வடிகட்டின முட்டாள்தனம். கேள்வியே கேட்காமல் பதிலை எப்படிப் பெற முடியும்?

காடு என்ற நிலையில் இருப்பவர்கள் கேள்வி கேட்காமலேயே பதில்களை நம்புகிறார்கள். கேள்வி கேட்பது கடினமான செயல். மனதை வருத்தும் செயல். இரவல் வாங்கிய பதில்களை நம்புவது சுலபம்.

கேள்வி கேட்க வேண்டுமென்றால் ஒருவன் துன்பப்பட வேண்டும். தனக்குள்ளேயே பயணம் போக வேண்டும்.; இதை எல்லாம் செய்யாமல் வசதியாக பதிலை மட்டும் இரவல் வாங்கிவிட்டீர்கள்.

காடு நிலையில் இருப்பவர்கள் பெரிய அறிவாளிகளாக இருக்கிறார்கள். பண்டிதர்கள் புரோகிதர்கள் பாதிரியார்கள் எல்லாரும் இந்த நிலையில் இருப்பவர்கள்தாம்.

அவர்களே இருண்ட அடர்ந்த காடுகளில் வாழ்ந்து கொண்டு மற்றவர்களை இன்னும் அடர்ந்த இன்னும் இருண்ட காடுகளுக்கு இழுத்துப் போய்க் கொண்டிருக்கிறார்கள். காட்டின் நிலையில் இருக்கும் மக்கள் உலக வாழ்க்கையை அனுபவிப்பதில் அதிகமான ஈடுபாடு காண்பிப்பார்கள். என்றாலும் தங்களுக்கு ஆன்மிக உணர்வு இருப்பதாகக் காட்டிக் கொள்வார்கள்.

பாசாங்கு செய்வதில் பலே கில்லாடிகளாக இருப்பார்கள். தேவாலயத்திற்குப் போவார்கள். மசூதிக்குப் போவார்கள். கோயிலுக்குப் போவார்கள். குருத்வாராவிற்குப் போவார்கள். எல்லாம் வெளி வேஷம். அங்கெல்லாம் போக வேண்டும் என்ற உண்மையான உந்துதல் அவர்களிடம் கிடையாது. உதட்டளவில் இறைப்பணி செய்வார்கள். உள்ளன்போடு செய்ய

மாட்டார்கள். எதாவது நடந்துவிட்டால் எதற்கும் இருக்கட்டுமே என்று ஒரு பயத்தோடு இறைவழிபாடு செய்வார்கள். ஒருவேளை இறைவன் இருப்பது நிஜமென்றால்.. எல்லாம் "ஒருவேளை" தான். அவர்கள் மனதில் உறுதியில்லை. இறைவழிபாடு அவர்களைப் பொறுத்தமட்டில் ஒரு சமுதாயச் சடங்கு.. கடவுள் பக்தி இருப்பதாகக் காட்டிக் கொள்வது நல்லது என்று நினைப்பவர்கள் இவர்கள்.

"ஞாயிற்றுக்கிழமை மதம்" அதாவது ஞாயிற்றுக்கிழமை நல்லபிள்ளை போல் தேவாலயம் செல்வது (அல்லது வெள்ளிக்கிழமை நல்லப்பிள்ளை வேஷத்துடன் கோயிலுக்குச் செல்வது) உங்களுக்கு சமுதாய மதிப்பைக் கொடுக்கும். அது ஒருவிதத்தில் வசதியானதுதான். அவர்களிடத்தில் எந்தவிதத் தேடலும் இல்லை. ஏனென்றால் அவர்கள் பயப்படுகிறார்கள். அவர்களிடம் இருப்பது இரவல் வாங்கப்பட்ட போலியான செல்லுபடியாகாத அறிவு என்று அவர்களுக்கே தெரியும். அதனால்தான் அவர்கள் பயப்படுகிறார்கள். அவர்களுக்கு எதிராகப் பேசுபவர்கள்மீது பாய்கிறார்கள். "நீ எங்கள் மனதில் சந்தேகத்தை விளைக்கிறாய்" என்று சண்டைக்குப் போகிறார்கள். சந்தேகம், கேள்வி கேட்பது போன்றவை அவர்களுக்குத் தேவையில்லை.

பெற்றோர்களோ, இந்தச் சமுதாயமோ இல்லை அவர்கள் அரசாங்கமோ அவர்களுக்குக் கொடுத்த நம்பிக்கைகளைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருக்கிறார்கள். அந்த நம்பிக்கை ஆட்டம் கொள்வதை அவர்கள் விரும்பவில்லை.

ஒரு போலியான உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் பழைமைவாதிகள். சம்பிரதாயங்களை விட்டு விலகமாட்டார்கள்.

இப்படிப்பட்டவன் கடந்த காலத்தை வைத்தே வாழ்கிறான். வருங்காலத்தையோ நிகழ்காலத்தையோ திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. 'அவை பொன்னான நாட்கள். அந்த மாதிரி வருமா?' என்று இறந்தகாலத்திற்காக ஏங்கிக் கொண்டிருக்கும்

கூட்டம் இது. ஏசுநாதர் நடந்த காலத்திற்காகவும் புத்தர் வாழ்ந்த காலத்திற்காகவும் கிருஷ்ண பரமாத்மா குழலூதின காலத்திற்காகவும் ஏங்கிக் கொண்டிருப்பார்கள்.

இவர்களின் பொற்காலம் எப்போதும் இறந்த காலமாகத்தான் இருக்கும். அவர்களுடைய கனவு உலகம் கடந்த காலத்தில்தான் இருக்கும்.

"ஆஹா! அன்று எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! அந்த உன்னத நிலையிலிருந்து நாம் விழுந்துவிட்டோம்!" என்று சதா புலம்பிக் கொண்டிருப்பார்கள்.

மனிதன் தன் மேலான நிலையிலிருந்து எப்போதோ கீழே விழுந்துவிட்டான் என்பதுதான் அவர்களின் வாதம்.

எதிர்காலத்தில் இவர்களுக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கை கிடையாது. கடந்தகாலத்தையே பிடித்துத் தொங்கிக் கொண்டிருப் பார்கள்.

இவர்கள் இறந்து போனவர்கள். செத்துப் போன நம்பிக்கைகளையும் நடைமுறைகளையும் பிடிவாதமாகப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பவர்கள். அவர்களுடைய மதம் ஓர் இயக்கமில்லை. அது ஒரு தேக்கம். இயக்கமற்ற நிலை. இவர்கள் மதத்தின் விதிகள் ஒழுங்காக முறைப்படுத்தப் பட்டுவிட்டன. தெள்ளத்தெளிவாகச் சீரமைக்கப்பட்டுவிட்டன. ஆனால் அவற்றில் உயிர் இல்லை.

இவர்களின் மதம் செத்த பிணத்தைப் போன்றது. இந்தமாதிரி மனிதர்கள் பூசாரியை நம்புவார்கள், பாதிரியார்-பேராயரை நம்புவார்கள், போப்பாண்டவரையும் சங்கராச்சாரியாரையும் நம்புவார்கள். இவர்கள் வேறு எங்கும் எதையும் தேட மாட்டார்கள்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

அமெரிக்காவின் அர்க்கான்சாஸ் மாகாணத்தில் உள்ள ஒரு சின்ன தேவாலயத்தில் இருந்த பாதிரியார் ஒரு நாள் இரவு தேவாலயத்தில் இருந்த பணத்தை எல்லாம் மது மாது

கூத்து கும்மாளம் என்று செலவு செய்துவிட்டார். காவல்துறை அவருக்காகப் பெரிய வலை விரித்தது. ஒரு வாரத்தில் அவர் கைது செய்யப்பட்டார்.

அவரைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து ஊருக்கு மத்தியில் நிறுத்திய காவல்துறை அதிகாரி சொன்னார்: "இவன் நம் பணத்தையெல்லாம் செலவு செய்துவிட்டான். இவனிடம் இப்போது கால் காசு கூட இல்லை. என்றாலும் அவனைப் பிடித்து இழுத்து வந்திருக்கிறேன். ஏன் தெரியுமா? கொள்ளை யடித்த காசை இவன் உபதேசம் செய்தே கழிக்கட்டும்."

இந்த மாதிரி ஒரு பாதிரியார் இருந்தால்கூடத் தேவலை; ஏனென்றால் மதம் என்பது இவர்களுக்கெல்லாம் ஒரு சடங்கு. அவ்வளவுதான். ஒரு பக்காத்திருடனைக் கூட "எனக்கு பையிலில் உள்ளவற்றை உபதேசம் செய்" என்று வற்புறுத்தலாம்.

அந்தப் பாதிரியாரின் மனச் சுத்தத்தைப் பற்றி யாருமே கவலைப்படவில்லை. மத போதனையில் அவருக்கு ஏற்கனவே இருக்கும் பயிற்சியே போதுமானது. அந்தப் போதனையை அவர் தன் வாழ்வில் கொஞ்சம்கூடக் கடைப்பிடிக்கவில்லை என்பதுகூட இரண்டாம் பட்சம் தான்.

காடு என்ற முதற் கட்டத்தில் இருப்பவர்கள் அர்த்தமற்ற சடங்குகளில் மயங்கிக் கிடக்கிறார்கள். இவர்களுக்கு மதம் என்பதே ஒரு சடங்குதான். பூசாரி சொல்லிக் கொடுத்த மந்திரங்களைக் கிளிப்பிள்ளை போல் ஒப்பித்தால் போதும் என்று நினைக்கிறார்கள்.

பூசாரியே இன்னும் ஞானம் பெறவில்லை. என்றாலும் அவர் மந்திரங்களை உபதேசித்துக் கொண்டேயிருக்கிறார். மக்களிடம் மந்திரங்களை விநியோகித்துக் கொண்டேயிருக்கிறார்; பார்க்கும் மக்களிடத்திலெல்லாம் சாவிகளை வழங்கிக் கொண்டேயிருக்கிறார். என்றாலும் அவர் இன்னும் தன் வீட்டுக்கதவையே திறக்கவில்லை. மக்களிடம் உள்ள அதே அறியாமை அவரிடமும் இருக்கிறது. ஆனால் அவரிடம் ஒன்று அதிகமாக இருக்கிறது. அது என்ன? பல

நூற்றாண்டுகளாக அதே தொழிலைச் செய்து வருவதால் கிடைக்கும் பெயர் இருக்கிறது.

"ஐயாயிரம் வருடங்களாக எங்கள் குடும்பத்தினர் பூசாரிகளாக இருந்து வந்திருக்கிறார்கள்" என்று ஓர் இந்து மத பூசாரி பீற்றிக் கொள்ளலாம். அதற்கு சந்தையில் விலைமதிப்பு இருக்கத்தான் செய்கிறது.

உலகத்திலேயே புராதனமான புனித நூல்கள் எங்கள் வேதங்கள் என்று ஓர் இந்து சொல்லலாம். பழமையாக இருப்பதாலேயே அவற்றுக்கு ஒரு மதிப்பு வந்துவிடுகிறது. உண்மை என்னவென்றால் ஒரு நூல் பழையதாக ஆக ஆக அது செத்துச் செல்லாக் காசாயிருக்கும்.

மதம் புதுமையானது. மதம் இளமையானது. அதிகாலையில் புல்லின் தலையில் நிற்கும் பனித்துளி போல் மதத்தில் புத்துணர்வு இருக்கிறது., வசந்த காலத்தில் மரத்தில் புதிதாக முளைத்த இலை போல் மதம் புதுமைமிக்கது. ஒவ்வொரு கணமும் மதம் புதிதாகப் பிறக்கிறது. கடந்தகாலத்திற்கும் அதற்கும் கொஞ்சம் கூட சம்பந்தம் இல்லை.

உண்மையான சமய உணர்வுகளால் தூண்டப்பட்டவன் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் புத்தரைத் தேடிப் போகிறான். இன்றைய தேதியில் மக்களிடையே வாழ்ந்து கொண்டிருக்கும் ஏசுவைத் தேடிப் போகிறான். எந்த முகமது நபியின் மூலமாக இன்றளவும் குரான் வந்து கொண்டிருக்கிறதோ அந்த தீர்க்கதரிசியை நோக்கி ஓடுகிறான்.

ஆனால் காடு என்ற கட்டத்தில் வாழ்பவன் எங்கும் போவதில்லை. அவன் பூசாரியையும் பழைய மதத்தையும் பழைய தேவாலயத்தையும் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான். அவனுடைய பிறப்பு ஒரு விபத்து. அந்த விபத்து நிகழ்ந்தபோது அவன் எந்தத் தேவாலயத்தைச் சார்ந்திருந்தானோ அதைவிட்டு அவன் விலகுவதில்லை. அங்கேயே இருக்கிறான். அங்கேயே வாழ்கிறான். அங்கேயே செத்து மடிகிறான்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு ஹாலிவுட் கவர்ச்சி நடிகை ஏழாவது முறையோ எட்டாவது முறையோ திருமணம் செய்துகொள்ளத் திட்டமிட்டாள். குறிப்பிட்ட நாளன்று மணமக்கள் தேவாலயத்தில் கூடினார்கள். கையில் இருந்த புத்தகத்தை வைத்து ஜெபங்களைச் சொல்லிக் கொண்டிருந்த பாதிரியார் பத்திரிகைக்காரர்கள் புகைப்படக்காரர்கள் ரசிகர்கள் கூட்டம் ஏற்படுத்திய அமளிதுமளியிலும் ஆரவாரத்திலும் ஜெபப் புத்தகத்தில் தான் படித்துக் கொண்டிருந்த பக்கத்தைத் தவற விட்டு விட்டார். எந்த இடத்தில் விட்டோம் என்று தட்டித் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பலமுறை திருமணம் செய்து அனுபவம் பெற்ற அந்தக் கவர்ச்சி நடிகை எரிச்சலுடன் பாதிரியாரைப் பார்த்துக் கத்தினாள்.

"முட்டாளே 84ஆம் பக்கத்திலிருந்து வாசி"

அந்தக் கவர்ச்சி நடிகைக்குக் கூடத் தெரிந்திருக்கிறது எந்தப் பக்கத்தில் எந்த ஜெபம் இருக்கிறது என்று. அவள்தான் ஏழெட்டு முறை திருமணம் செய்து கொண்டவள் ஆயிற்றே! எல்லாம் முன்அனுபவம்தான்.

இந்தச் சடங்காச்சார மதம் இயந்திரத்தனமானது. தினம் தினம் ஒரே மந்திரத்தைச் சொல்வதால் பூசாரிக்கு அது மனப்பாடமாகத் தெரியும். நீங்களும் தினம் தினம் அதையே சொல்லிக் கொண்டிருந்தால் அது உங்களுக்கும் மனப்பாடமாகி விடும்.

திரும்பத் திரும்பச் சொல்வதால் ஏற்படும் ஒரு சாதாரண விளைவு அது. மனப்பாடமாக மந்திரத்தைச் சொல்வதை ஞானமென்றோ உங்களுக்கு மட்டுமே காண்பிக்கப்பட்ட திவ்யக் காட்சியென்றோ நினைத்துக் கொள்ளாதீர்கள். அது உங்களுக்குள் பிறக்கவில்லை. நீங்கள் அதில் பிறக்கவில்லை. அது மேலோட்டமானது.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு வயதான, கன்னி கழியாத பெண் இறந்தாள். அவளுடைய வயதான இரண்டு தோழிகளும் அவளுடைய

கல்லறையில் நல்ல வாசகங்கள் அடங்கிய ஒரு கல்லைப் பதித்து வைக்க வேண்டும் என்று எண்ணினார்கள்.

"என்ன எழுத வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?" என்று கல்தச்சர் கேட்டார்.

"கன்னியாகப் பிறந்தாள். கன்னியாக வாழ்ந்தாள். கன்னியாகவே இறந்தாள் என்று எழுதலாமா"

"எழுதலாம். ஆனால் அதே பொருள் வரும்படி இன்னும் சுருக்கமாக எழுதினால்

உங்களுக்குச் செலவு குறையுமே!"

"எப்படி?"

"திறந்து பார்க்காமல் திருப்பி அனுப்பப்பட்டாள்."

அதுதான் காடு என்ற நிலையில் வாழும் மனிதனுக்கு நிகழ்கிறது. உலகத்திற்குள் வருகிறான். ஆனால் வாழ்வதில்லை. வாழ்க்கை ஆபத்தானது. அவனால் ஆபத்தை எதிர்கொள்ள முடியாது. வாழ்க்கை என்பது புதுமையில் நிகழும் ஒரு சாகசம். ஆனால் இவன்தான் பழையதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறானே! என்ன செய்வது?

வாழ்க்கை அறியப்படாதது. அறியமுடியாதது. அவன் தன் அறிவைப் பணயம் வைக்க முன்வரவில்லை. அதனால் அவன் அந்த முதிர்கன்னியைப் போல் திறந்து பார்க்காமல் திருப்பி அனுப்பப்படுகிறான்.

வந்தான், வாழ்ந்தான், இறந்தான் என்ற மூன்று சொற்களில் அவன் வாழ்க்கையே முடிந்துவிட்டது. . உண்மை என்னவென்றால் அவன் வரவேயில்லை வாழவேயில்லை, சாகவேயில்லை. அவன் இருப்புநிலையே ஓர் ஆழ்ந்த தூக்கம்தான். அவன் இன்னும் மனிதனாகும் உரிமையைப் பெறவில்லை.

இந்த மனிதனை 'பன்றித்தலையன்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று

அடம் பிடிக்கும் பிடிவாத குணம் படைத்த அடி மடையன். அவன் மற்றவர்களிடம் பேசும்போது தான் அவர்களை விட உயர்ந்தவன் என்ற அவன் எண்ணம் வெளிப்படும். அவன் தன்னை ஒழுக்கமானவனாக நினைத்துக் கொண்டிருக்கிறான். ஆனால் அவனுக்கு ஒழுக்கத்தின் அனா ஆவன்னா கூடத் தெரியாது. சமுதாய ஒழுக்கவிதிகளைப் பிடிவாதமாகப் பிடித்துக் கொண்டிருப்பான். ஆனால் அதைத்தாண்டி அரையங்குலம்கூட மேலே போக மாட்டான். ஒழுக்கம் என்பது அவனைப் பொறுத்த மட்டில் சில விதிகளைக் கடைப்பிடிப்பதுதான். ஒழுக்கமில்லாத ஒரு சமுதாயத்தைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பவனை எப்படி ஒழுக்கமானவன் என்று சொல்ல முடியும்?

உண்மையிலேயே ஒழுக்கமான மனிதன் சமுதாயத்தை எதிர்ப்பான். அவனால் சமுதாயத்திற்குச் சாதகமாக நடந்து கொள்ள முடியாது. வரலாற்றின் பக்கங்களைப் புரட்டிப் பாருங்கள். ஒழுக்கம் நிறைந்த மனிதன் சமுதாயத்தின் எதிரியாகத்தான் என்றுமே இருந்திருக்கிறான்.

ஏசுநாதர், புத்தர் பிரான், கபீர்தாஸ் இவர்கள் எல்லோருமே சமுதாயத்தின் எதிரிகள். உண்மையிலே ஒழுக்கமானவர்கள் ஏன் சமுதாயத்தை எதிர்க்கிறார்கள்? சமுதாயத்திற்குக் கொஞ்சம் கூட ஒழுக்கமில்லை.

சமுதாயத்தோடு ஒத்துப் போனால் உங்கள் ஒழுக்கம் கெட்டுவிடும். ஒழுக்கமில்லாத சமுதாயத்தோடு ஒத்துப்போகும் ஒருவரால் எப்படி ஒழுக்கமானவராக இருக்க முடியும்? சமுதாயம் உபதேசிக்கும் ஒழுக்கம் எல்லாம் வெறும் கண்துடைப்பு. பாசாங்கு. நடிப்பு. போலி. அதற்கும் உண்மையான ஒழுக்கத்திற்கும் சம்பந்தம் இல்லை. சமுதாயம் பெரிய அளவில் பாசாங்கு செய்கிறது. அதன் அடிமட்டத்தில் இருப்பதெல்லாம் ஒழுக்கக்கேடு மட்டுமே.

கிறிஸ்துவர்களைப் பாருங்கள். பகைவனையும் நேசி என்று சதா உபதேசித்துக் கொண்டேயிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் தான் மற்றவர்களை விட அதிகமாக மதப் போர்களில்

ஈடுபட்டார்கள். கிறிஸ்துவ மதத்தின் வரலாறே ரத்தம் தோய்ந்த தாகத்தான் இருக்கிறது. இஸ்லாம் என்ற சொல்லின் உண்மையான பொருள் சமாதானம். முகமதியர் என்றும் சமாதானமாகப் போனதாகச் சரித்திரமேயில்லை.

இந்த மோசடிகளை எல்லாம் நாம் எப்படிப் பொறுத்துக் கொண்டோம் என்று என்னால் இன்னும் நம்பமுடியவில்லை. ஏன் அவர்களுடைய உண்மையான நோக்கத்தை நாம் பார்க்கவில்லை? தேவாலயம் நமக்கு அழிவைத்தான் தந்திருக்கிறது. என்றாலும் அதுதான் நமக்குப் பாதுகாப்பு என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். மனிதன் என்ன செய்யவேண்டும் என்று உலகெங்கிலும் உள்ள தேவாலயங்கள் உபதேசித்துக் கொண்டே யிருக்கின்றன. காடு என்ற நிலையில் வாழும் மனிதனை ஏமாற்றுவதற்காகவே இந்த உபதேசங்கள் நிகழ்கின்றன.

இந்தச் சிறிய உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்களேன். இன்று உலகில் ஜனத்தொகை பெருத்துவிட்டது. கருத்தடை, கருச்சிதைவு என்பது இந்தச் சூழ்நிலையில் ஒழுக்கத்தின் விதி யாக இருக்க வேண்டும் இந்தச் சூழ்நிலையில் கண்மூடித்தனமாகக் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டே போவதுதான் ஒழுக்கக்கேடு.

ஏனென்றால் மேலும் மேலும் ஜனத்தொகை கூடினால் பஞ்சமும் பட்டினியும் தலைவிரித்தாடும். அதனால் போர்கள் வரலாம். வறுமை இன்னும் அதிகமாகும். அதற்கு நீங்களே காரணமாக இருப்பீர்கள். ஆனால் இந்தப் போப்பாண்டவரைப் பாருங்கள். 'கத்தோலிக்கர்கள் யாரும் கருச்சிதைவு செய்து கொள்ளக்கூடாது' என்று சொல்லிக் கொண்டு திரிகிறார். இது மகா பாவம். இதே பாவத்தை இந்து மதத் துறவியான சங்கராச்சாரியாரும் செய்கிறார்.

இந்த உலகின் ஜனத்தொகையைக் கூட்டுவது மிகவும் ஒழுக்கக்கேடான விஷயம். ஏற்கனவே ஜனத்தொகை மிகவும் அதிகமாகிவிட்டது. இந்தச் சூழ்நிலையில் ஒரு குழந்தைப் பிறப்புக்கு நீங்கள் காரணமாக இருந்தால் இந்த உலகத்திற்கு மட்டும் நீங்கள் தீங்கு செய்யவில்லை; அந்தக் குழந்தைக்கும் துரோகம் செய்கிறீர்கள். அவனை ஒரு மோசமான உலகில்

தவழ விடுகிறீர்கள். அவன் வருங்காலம் சோகம் நிறைந்ததாக இருக்கும்.

ஆனால் இந்தப் பழைய கோட்பாடுகளுக்கு யதார்த்த நிலையைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலை இல்லை. யாரோ எப்போதோ அரைத்த மாவை திருப்பித் திருப்பி அரைத்துக் கொண்டிருக்கிறார்கள். எப்போதோ இந்த உலகில் ஜனத்தொகை மிகவும் குறைவாக இருந்த காலத்தில் மக்களின் இறப்பு விகிதம் மிகவும் அதிகமாக இருந்த காலத்தில் அவர்கள் சொன்னதற்கு அர்த்தம் இருந்தது. இன்றைய சூழ்நிலையில் அவர்கள் பேச்சு பைத்தியக்காரனின் பிதற்றல்.

உண்மையான மதம் காலத்திற்குத் தகுந்தாற்போல் மாற வேண்டும். இந்த மாதிரியான மனிதன் பிடிவாதமாக பழையதையே பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பான். அவன் மாறவே மாட்டான். மாற்றத்திற்கு அவன் தயாராக இல்லை. அவன் மாற்றத்தை எதிர்க்கிறான். புரட்சியை எதிர்க்கிறான்.

இவன் ஒரு வெறியன். ஒரு பாசிசவாதி. வன்முறைக்கு எப்போதும் தயாராக இருப்பவன். அவனிடம் இருக்கும் வன்முறைக்கு மூலகாரணம் என்ன தெரியுமா? அவனுக்குத் தன்மேல் நம்பிக்கை இல்லை. தன் மதத்தின் மேல் முழுமையான நம்பிக்கை இல்லை. அவனுடைய மதம் அவனுடைய அனுபவத்தால் விளைந்ததல்ல என்பதால் அதன்மேல் எப்படி அவனுக்கு முழுமையான நம்பிக்கை இருக்க முடியும்?

நீங்கள் அவனுடன் வாதிட ஆரம்பித்தால் அவன் உடனே கத்தியைக் காட்டுவான். கத்திதான் அவன் முன்வைக்கும் வாதம்.

இந்த மனிதனுக்குப் பகுத்து அறியும் அறிவு கொஞ்சம்கூடக் கிடையாது. ஆனால் அது அதிகமாக இருப்பதுபோல் பேசுவான். தன் முரட்டுத்தனமான மூட நம்பிக்கைகளுக்குப் பகுத்தறிவுச் சாயம் பூசுவதில் வல்லவன்.

உங்களையே உற்றுப் பாருங்கள். உங்கள் அடியாழத்தில் எங்கேயோ இந்தக் காடு இருக்கும். சிலருக்கு இந்தக்

காட்டுப் பகுதி பெரிதாக இருக்கும். சிலருக்குச் சிறியதாக இருக்கும். வித்தியாசம் அளவில்தானேயொழியத் தன்மையில் இல்லை. அனைவரிடமும் இந்தக் காடு இருக்கிறது.

இது உங்களின் உணர்வின்மை நிலை: உங்களுக்குள் இருக்கும் ஓர் இருண்ட இரவு. இந்த இரவிலிருந்து பல உணர்வுகள், ஆசைகள், உத்வேகங்கள், தாகங்கள், வெறிகள், கிறுக்குத்தனங்கள் எல்லாம் கிளம்பி உங்களை முழுவதுமாக ஆக்கிரமிக்கலாம். உங்கள் உணர்வு நிலையோ மிகவும் மெல்லியதாக உடைந்துவிடும் கண்ணாடி போல் இருக்கிறது. உங்கள் உணர்வின்மை 99 சதவிகிதம் இருக்க உணர்வு நிலை ஒரு சதவிகிதம் மட்டுமே இருக்கிறது.

உங்கள் உணர்வின்மையைக் கூர்ந்து நோக்குங்கள். ஆனால் அதை ஆதரிக்காதீர்கள். அதனுடன் ஒத்துழைக்காதீர்கள். ஏதாவது நடந்து உங்கள் உணர்வின்மை உங்கள் உணர்வு நிலையை ஆட்டிப்படைக்க ஆரம்பித்தால் உன்னிப்பாகக் கவனியுங்கள். விழிப்புணர்வுடன் செயல்படுங்கள்.

உதாரணமாக உங்களுக்குக் கோபம் வருகிறது. அது உணர்வின்மை பகுதியிலிருந்து வருகிறது.

உணர்வின்மையிலிருந்து கிளம்பும் புகையானது கொஞ்சம் கொஞ்சமாக உணர்வுநிலையை மேக மூட்டம் போல் மூடிக் கொள்ளும் அதன் பின் உங்கள் அறிவு உங்கள் வசம் இருக்காது. குடிகாரனைப் போல் தன் வசமிழந்து செயல்களைச் செய்வீர்கள்.

கோபத்தின் பிடியில் இருக்கும் அந்த நேரத்தில் பயங்கரமான செயல்களைச் செய்வீர்கள். அத்தகைய செயல்களை நீங்கள் நல்ல அறிவுடன் இருக்கும்போது கற்பனை செய்துகூடப் பார்க்க மாட்டீர்கள்.

பொறுங்கள் - இப்போது நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம். ஒரு வார்த்தை பேச வேண்டாம். கதவைச் சாத்துங்கள். அமைதியாக அமருங்கள். உங்களுக்குள் கோபம் எழுவதைக் கவனியுங்கள். இப்போது உங்களுக்கு ஒரு சாவி கிடைத்துவிட்டது.

நீங்கள் கோபம் எழுவதைப் பார்த்தால் கொஞ்சம் கொஞ்சமாக அந்தக் கோபம் வடிந்துவிடும். கோபம் அப்படியே இருக்க முடியாது. அதற்கென்று ஒரு குறிப்பிட்ட சக்தி உண்டு. குறிப்பிட்ட நேரம்வரை செயல்படும் வீரியம் உண்டு. அந்த சக்தி வடிந்தவுடன் அந்த வீரியம் செயலிழந்தபின் அது மீண்டும் உங்களுக்குள் போய் விடுகிறது. அப்போது உங்கள் நிலையில் ஓர் அற்புதமான மாற்றத்தை உணர்வீர்கள். உங்கள் விழிப்புணர்வு இன்னும் அதிகமாகும்.

எந்த சக்தி சினமாக வெளிப்பட்டு விரயமாக்கப்பட இருந்ததோ அதை உங்கள் உணர்வு நிலை உறிஞ்சிக்கொண்டு விட்டது. அது இப்போது இன்னும் அதிக சக்தியுடன் அதிக வீரியத்துடன் இருக்கிறது. அழிவு சக்தி ஆக்க சக்தியாக மாறிவிட்டது.

இதுதான் விஷத்தை அமுதமாக்கும் வழி.

உங்களிடம் காம உணர்வு மிகும்போது - நான் செக்ஸை எதிர்க்கவில்லை - அதீதமான காம உணர்வை, அந்த வெறியைத்தான் எதிர்க்கிறேன் - ஒன்றும் செய்யாதீர்கள்.

கதவை மூடுங்கள் உங்களுக்குள் எழும் அந்த காமத்தைத் தியானம் செய்யுங்கள். அதைத் தடுக்காதீர்கள். அது தானாக எழுந்து மேலே மேலே வரட்டும். உங்களுக்குள் இருக்கும் அந்த இருண்ட இரவுப் பகுதியிலிருந்து. அந்தக் காட்டுப் பகுதியிலிருந்து எழுந்து அது மேலே வரட்டும். அது கொஞ்சம் கொஞ்சமாகப் பரவட்டும்.

அதைக் உன்னிப்பாகக் கவனியுங்கள். கவனிக்க மட்டும் செய்யுங்கள். தடுக்க முற்படாதீர்கள். அதன் போக்கை மாற்ற முனையாதீர்கள். உங்கள் கவனம் கூர்மையானதாக இருக்கட்டும். நிலையாக எரியும் ஜோதி போல் உங்கள் விழிப்புணர்வுத் தீ ஒருமுகமாக எரியட்டும்.

விரைவிலேயே அந்த அதீதக் காம உணர்வு உங்களுக்குள் மீண்டும் போய்விடும். உங்கள் உணர்வு நிலை அதனை உறிஞ்சிக் கொண்டுவிடும். பின் உணர்வு நிலை இன்னும்

பிரகாசமாக எரியத் தொடங்கும். இப்போது விஷம் அமுதமாகி விட்டது.

நான் செக்ஸை எதிர்ப்பவன் இல்லை. உங்களிடம் வழிபாட்டுணர்வு மிகும்போது உங்களிடம் உள்ள அன்பு நிரம்பி வழியும்போது நல்ல வாய்ப்புக் கிடைத்தால் செக்ஸ் சுகத்தை அனுபவியுங்கள். தவறில்லை. ஆனால் காமத்தால் வெறி பிடித்து அலையாதீர்கள். வித்தியாசத்தைப் பாருங்கள். உங்களிடம் அன்பு மீதூறும்போது செக்ஸின் தன்மை வேறு. நீங்கள் மகிழ்ச்சியைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் வேளையில் உங்கள் சக்தியை நீங்கள் நேசிக்கும் ஒருவரிடம் பகிர்ந்து கொள்ள விரும்பினால் தாராளமாக அவருடன் உடலுறவு கொள்ளுங்கள்.

இது காமத்தின் வெளிப்பாடு அல்ல. இது அன்பின் வெளிப்பாடு. நேசத்தின் உச்சகட்டம். இதை அடுத்தவரோடு பகிர்ந்து கொள்வதில் தவறில்லை.

இதைக் கவனித்திருக்கிறீர்களா? கணவன் - மனைவி இடையே சண்டை ஏற்பட்டால் முடிவில் அவர்கள் உடலுறவு வைத்துக் கொள்வார்கள். அது ஒரு சடங்காகவே ஆகிவிட்டது. முதலில் அவர்கள் சண்டை போடுகிறார்கள். பின் கோபம் கொள்கிறார்கள். பின் அவர்களுக்குள் காமம் எழுகிறது. கோபம் காமத்தைத் தூண்டிவிடுகிறது.

தங்களுடைய காதலனோ காதலியோ நான்கு சாத்து சாத்தினால்தான் சிலருக்குக் காம உணர்வுகளே வருகின்றன.

சேட் (de Sade) என்பவரைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்கள். அவருடைய பையில் கருவிகள் எப்போதும் தயாராக இருக்கும். திடீரென்று ஒரு காதலி கிடைத்துவிட்டால் என்ன செய்வது?

அது சரி அவை என்ன கருவிகள் என்று கேட்கிறீர்களா? காதலியைச் சித்திரவதை செய்யும் கருவிகள். சித்திரவதை இல்லாமல் காமம் வராது என்பது அவர் கொள்கை.

உங்களைச் சாட்டையால் யாராவது அடித்தால் உடனே காம உணர்வுகளும் எழுகின்றன.

சேடுடன் உறவு கொண்ட பெண்கள். மற்ற யாரோடு உறவு கொண்டாலும் அந்த சுகம் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். மற்றவர்களோடு உறவு கொள்ளவே முடியவில்லை என்றும் சொன்னார்கள். ஏன்? சேட் முதலில் அவர்களைச் சாட்டையால் அடிப்பார். அவர்கள் உடல்களைச் சூடாக்குவார். அவர்கள் வலியிலும் கோபத்திலும் அலறுவார்கள். அங்கும் இங்கும் ஓடுவார்கள்.

அவர்களுக்குள் காம உணர்வுகள் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கும். அதன்பின் அந்த மகானுபாவர் அவர்களுடன் உறவு கொள்ளுவார். ஆமாம் காட்டின் வழிமுறை இதுதான்.

இது ஒரு விபரீதத்தின் எல்லை என்றால் அதன் மற்றொரு எல்லையில் மஸோக் (Masoch) இருந்தார். அவர் தன்னைத் தானே சாட்டையால் அடித்துக் கொள்வார். தன்னிடம் வரும் பெண்களைத் தன்னை அடிக்கச் சொல்வார். சாட்டையடி பெற்று வலியால் துடித்து அங்கும் இங்கும் ஓடும்போது அவர் முகம் சிவக்கும். கோபத்தில் கத்துவார். அதற்குப் பிறகுதான் அவர் ஓர் ஆணாக வருவார். சாட்டையடியும் வலியும் இல்லாவிட்டால் அவரிடம் ஆண்மையே இருக்காது.

இதைத்தான் தம்பதியினர் ஒரு சிறிய அளவில் செய்கிறார்கள். என்ன செய்கிறோம் என்று தெரியாமலேயே செய்கிறார்கள். தம்பதிகள் சண்டை போடுகிறார்கள். வாதம் செய்கிறார்கள். கோபப்படுகிறார்கள். கோபப்படுத்துகிறார்கள். அதன்பின் உறவு கொள்கிறார்கள். அதன்பின் தூங்கிவிடுகிறார்கள். இது காட்டில் நடக்கும் செயலாகும். இது செக்ஸ் இல்லை. காமம். வன்புணர்ச்சி.

இயல்பான செக்ஸ் என்பது தியான நிலையைப் போன்று இருக்கும். அதில் அன்பின் வெப்பம் இருக்கும். காமத்தின் காய்ச்சல் இருக்காது. காமம் என்பது ஒரு ஜூரம். ஒரு பைத்தியக்கார நிலை. அன்பின் மென்மையான வெப்பம் அதில் இருக்காது. சுட்டெரிக்கும் ஜூரம் தான் இருக்கும்.

முழு விழிப்புணர்வோடு உங்களால் உடலுறவு கொள்ள முடிந்தால் அந்தச் செய்கை உங்களை உங்கள் மையத்திற்கு அருகே கொண்டு போகும். உங்கள் விழிப்புணர்வு பன்மடங்கு அதிகரிக்கும்.

இதுவரை நான்கு நிலைகளில் முதல் நிலையான காடு என்பதைப் பற்றி விரிவாகப் பார்த்தோம்.

அடுத்து "வனம்" என்ற நிலையைப் பற்றிப் பார்ப்போம். வனமும் காடும் ஏறக்குறைய ஒன்றுதான். ஒரே ஒரு வித்தியாசம் உண்டு. வனத்தின் நடுவே சில பாதைகள் இருக்கும். ஒற்றையடிப்பாதைகளாவது இருக்கும். ராஜபாட்டை இருக்காது. ஆனால் மனிதர்கள் நடந்து செல்வதற்கான ஒற்றையடிப்பாதைகள் இருக்கும்.

காட்டில் அந்த ஒற்றையடிப்பாதைகள் கூட இருக்காது. காடு என்பது ஆதி முதலில் இருக்கும் தொடக்க நிலை. காட்டில் மனிதர்கள் நுழைந்ததேயில்லை.

ஆனால் வனங்களில் மனிதர்கள் நுழைந்திருக்கிறார்கள். சில பாதைகள் இருக்கின்றன. உங்களால் வழியைக் கண்டுபிடிக்க முடியும்.

வனம் என்பது கனவைப் போன்றது. காடு என்பது ஆழ்ந்த உறக்கத்தைப் போன்றது. வனம் என்பது நம் ஆழ்மனதைப் போன்றது. அது ஓர் இடைப்பட்ட பிரதேசம். இரவும் இல்லாமல் பகலும் இல்லாமல் இருக்கும் சந்தி வேளை. எல்லாம் மேக மூட்டமாக இருக்கிறது. ஆனால் இருள் இல்லை. உங்களால் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது பார்க்க முடியும். கொஞ்சமாவது நகர முடியும். கொஞ்சம் விழிப்புணர்வு இருக்கும்.

கண்களில் நட்சத்திரத்தை வைத்துக் கொண்டு உலகம் எல்லாம் அலையும் ஹிப்பிக்கள் இந்த வகையைச் சேர்ந்தவர்கள். போதைப் பொருளுக்கு அடிமையானவர்கள். நான் வாழ்க்கையைத் தேடிக்கொண்டிருக்கிறேன் பேர்வழி என்று கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று திரிபவர்கள் இவர்கள். எப்படியாவது

வனத்தைவிட்டு வெளியேறிவிட வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறார்கள் இவர்கள். குறுக்குவழியிலாவது வெளியேற வேண்டும் என்று துடிப்பவர்கள்.

இந்த நிலையில்தான் தேடல் தொடங்குகிறது. பெரும் தயக்கத்துடன் தொடங்குகிறது. இது காட்டைவிட மேலான நிலை.

பழைமைவாதியைவிட ஹிப்பி மேலானவன். குறைந்தபட்சமாக அவன் தேடிக்கொண்டாவது இருக்கிறானே! சில சமயம் அவன் தவறான பாதையில் போகிறான். தியானத்தைத் தேடிப் போய் போதைப் பொருளுக்கு அடிமையாகிவிடுகிறான். காரணம் தியானம் கொடுக்கும் அந்த உணர்வின் மெல்லிய சாயலை போதைப்பொருளும் கொடுக்கிறது. ஆனால் அவன் தேடுகிறானே! அவன் பாதையில் ஒரு பக்கமாக நகர்ந்து கொண்டிருக்கிறானே! அவன் தவறுகள் செய்யலாம். ஆனாலும் ஏதோ ஒரு திசையில் நகர்ந்து கொண்டுதான் இருக்கிறான்.

காட்டில் இருப்பவன் நகர்வதே இல்லை. அவன் தவறுகள் செய்யாமல் இருக்கலாம்.. ஆனால் அவன் நகரவேயில்லை.

நகராமல் இருப்பதுதான் தவறுகளில் எல்லாம் மிகப்பெரிய தவறு. நகருங்கள். வாழ்க்கையில் தவறு செய்துதான் கற்றுக் கொள்ள முடியும்.

இந்த இரண்டாவது நிலையில் பல பாதைகள் கண் முன் விரிகின்றன. சொல்லப் போனால் மிக அதிகமான எண்ணிக்கையில் பாதைகள் பிரிகின்றன. தேடுபவன் குழம்பி விடுகிறான். திக்குமுக்காடிப் போகிறான்.

காட்டில் எந்தக் குழப்பமும் இல்லை. அங்குதான் பாதையே இல்லையே. நகர்தலே இல்லையே. அங்கு எல்லாம் தெள்ளத் தெளிவாக இருக்கிறது. இருட்டாக இருந்தாலும் நம்பிக்கைகள் தெளிவாக இருக்கின்றன. சிலர் இந்துக்களாக இருக்கிறார்கள். சிலர் முகமதியர்களாக இருக்கிறார்கள். சிலர் கிறிஸ்துவர்களாக.

எல்லாம் தெளிவாக இருக்கிறது. கிறிஸ்துவன் பாதிரியாரிடம் போகிறான். இந்து பூசாரியிடம். முகமதியன் அவன் மதப்

பூசாரியிடம். அவரவருக்கான புனிதப்புத்தகம் தயாராக இருக்கிறது. பைபிள், குரான், வேதங்கள் எல்லாமே தெளிவாக இருக்கின்றன. மக்களிடம் குழப்பம் இல்லை. செத்த பிணங்களாக வாழ்கிறார்கள் என்றாலும் எந்த விதமான குழப்பமும் இல்லாமல் வாழ்கிறார்கள்.

உயிருடன் வாழ முற்படும் போதுதான் குழப்பம் தொடங்குகிறது. அந்தக் குழப்பத்திலிருந்துதான் நட்சத்திரங்கள் தோன்றுகின்றன.

இரண்டாவது வகையில் கவிஞர்கள், ஓவியர்கள், கலைஞர்கள், பாடகர்கள், நடனக் கலைஞர்கள் போன்றோர் இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் புரட்சிக்காரர்கள். முதல் வகையினர் பழைமைவாதிகள் என்றால் இரண்டாவது வகையினர் புரட்சிக் காரர்கள். முதல் வகையினர் சம்பிரதாயங்களையும் சடங்குகளையும் பற்றித் தொங்கிக்கொண்டிருக்கிறார்கள். இரண்டாம் வர்க்கத்தினர் எப்போதோ வரப்போகும் கற்பனை உலகத்திற்காக ஏக்கத்துடன் காத்திருக்கிறார்கள்.

முதலாமவர் இறந்தகாலத்தில் இருக்கிறார் என்றால் இரண்டாமவர் வருங்காலத்தில் இருக்கிறார்.

முதல் வகையினரின் பொற்காலம் எப்போதோ முடிந்து விட்டது. இரண்டாவது வகையினரின் பொற்காலம் இன்னும் வரவேயில்லை.

அவர்கள் டேரோ (Tarot) அட்டைகளில் சித்திரிக்கப் பட்டிருக்கும் முட்டாளைப் போன்று இருப்பார்கள்.

அந்த முட்டாள் மலை உச்சியில் ஒரு செங்குத்தான பாறையின் முனையில் நின்று கொண்டிருப்பான். ஒரு கால் தரையில் பாவாமல் ஆடிக் கொண்டிருக்கும். கரணம் தப்பினால் மரணம் என்ற நிலையில் அவன் மிகவும் சந்தோஷமாக இருப்பான். கீழே பார்க்காமல் வானத்தைப் பார்த்துக் கனவு கண்டுகொண்டிருப்பான். தூர இருக்கும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருப்பான். மரணத்தின் நுழைவாயிலில் நிற்கும்

அந்த நேரத்தில்கூட அவன் மனதில் கனவுகள் நிறைந்திருக்கும். அது ஆபத்தான நிலை.

இந்த இரண்டில் எதைத் தேர்ந்தெடுக்கலாம் என்று நீங்கள் கேட்டால் நான் இரண்டாவதைத்தான் தேர்ந்தெடுக்கச் சொல்வேன். முட்டாளாக இருங்கள் என்றாவது ஒருநாள் அறிவு வரலாம். பண்டிதனாக இருக்காதீர்கள். கடன் வாங்கப்பட்ட போலி அறிவில் திளைத்துக் கொண்டு பண்டிதனாக இருப்பதைவிட அறிவில்லாத முட்டாளாக இருப்பது ஆயிரம் மடங்கு மேல்.

இரண்டாவது வகையைச் சேர்ந்தவன் ஒரு முட்டாள். இந்த நிலைக்கு நான் ஒரு பெயர் வைத்திருக்கிறேன். கலிபோர்னியா நிலம் என்று. ஆம் அது மனித ஆன்மாவின் கலிபோர்னியா. அங்கேதான் பொருள்களுக்கான பேரங்காடிகளும் இருக்கின்றன. ஆன்மிக விஷயங்களுக்கான பேரங்காடிகளும் இருக்கின்றன. எல்லா உத்திகளும் வழிமுறைகளும் வரை படங்களும் வல்லுனர்களும் இருக்கிறார்கள்.

இந்த இரண்டாவது நிலையில்தான் மனிதனின் நிஜமான தேடல் தொடங்குகிறது. அவன் பிறந்த மதத்தில் திருப்தியில்லாமல் போகிறது. அவன் அதை விட்டு வெளியே நகர்கிறான். விநோதமான விபரீதமான வழிகளைப் பரிசோதிக்கத் தொடங்குகிறான். இந்த நிலையில் தான் ஒருவன் மாணவனாகி நல்ல ஆசிரியருக்காக ஏங்கத் தொடங்குகிறான். தேடல் இன்னும் ஆழமாகச் செல்லவில்லை. என்றாலும் அது தொடங்கி விட்டது. விதை முளைவிட்டு விட்டது. இன்னும் போக வேண்டிய தூரம் அதிகம் இருக்கிறது. ஆனால் இப்போது போவதற்கான சாத்தியம் வந்துவிட்டது.

முதல் வகை ஆள் செத்துவிட்டான். இரண்டாவது வகைக்காரரான் மிகவும் உயிர்ப்போடு இருக்கிறான். அவனுடைய அதீத உயிர்ப்பே ஆபத்தாக இருக்கிறது. முதல் வகை ஆள் ஒரு மூலையில் இருக்கிறான் என்றால் இரண்டாவது வகை ஆளோ நேர் எதிர் மூலையில் இருக்கிறான்.

இரண்டாம் வகையினரிடம் சமநிலை என்பது இல்லை. சமநிலை மூன்றாவது நிலையில்தான் வரும்.

முதலாமவன் செத்த வாக்கியங்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான். இரண்டாமவன் எதையும் பிடித்துக் கொள்ளாமல் இருக்கிறான். அவனுக்கு என்று ஓர் ஊர் ஓர் இடம் இல்லை. அவன் ஒரு நாடோடி. சதா பயணம் செய்து கொண்டேயிருக்கிறான்.

முதலாமவன் சம்சாரி என்றால் இரண்டாமவன் ஒரு நாடோடி. ஆனால் இரண்டாமவன் உருண்டு ஓடிக் கொண் டிருக்கும் கல்லைப் போன்றவன். அதிலும் ஒரு நன்மை இருக்கிறது. உருண்டு கொண்டிருக்கும் கற்களைப் பாசி பிடிப்பதில்லை.

அவன் தன் மையத்திற்குள் வருவதில்லை. ஒரு குருவிட மிருந்து இன்னொரு குருவுக்கு மாறிக் கொண்டேயிருக்கிறான். ஒரு புத்தகத்திலிருந்து இன்னொரு புத்தகத்திற்கு மாறிக்கொண்டே யிருக்கிறான்.

முதல் வகைக்காரன் தன் புத்தகத்தை மட்டுமே நம்புகிறான். இரண்டாம் வகையைச் சேர்ந்தவனோ உலகில் உள்ள எல்லாப் புத்தகங்களையும் படிக்கிறான். பைபிளைப் படிக்கிறான். குரானைப் படிக்கிறான். பகவத் கீதையைப் படிக்கிறான். குழப்பத்தில் அவன் தலை சுற்றுகிறது. அவனுக்கு என்ன ஏது என்று ஒன்றுமே புரிவதில்லை.

முதல் வகையைச் சேர்ந்தவன் ஓட்டைவாயன். தொணதொண வென்று சதா பேசிக்கொண்டேயிருப்பான். இரண்டாவது வகை ஆள் மௌனமாகவே இருப்பான். ஒரு ஹிப்பியிடம் பேசிப் பார்த்திருக்கிறீர்களா? அவன் என்ன சொல்ல வருகிறான் என்பதே உங்களுக்குத் தெரியாது. அவனுக்கே அவன் என்ன சொல்கிறான் என்று தெரியாது. இதற்கிடையில் அவன் உங்களிடம் “உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்பான். அவனுக்கு எதுவும் தெரியாது. என்றாலும் “உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் பாருங்கள்” என்று சொல்வான். அவனே எதையும் பார்க்கமாட்டான்.

வார்த்தைகளில் சொல்லாமல் சத்தங்களால் சொல்ல முயற்சிப்பான் அந்த ஹிப்பி. குழந்தை உண்டாக்கும் சத்தங்கள் போல் சத்தங்கள் போடுவான். பேச்சு குறைவாக இருக்கும்.

முதலாமவன் அறிவை நம்பி வாழ்பவன். இரண்டாமவன் தலையை விட்டு இறங்கி இதயத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறான். அவன் உணர்ச்சிகளில் வாழ்பவன். முதலாமவனுக்கு விழிப்புணர்வு கொஞ்சம்கூட இல்லை. தனது சிந்தனைதான் தன் விழிப்புணர்வு என்று நினைத்துக் கொண்டிருக்கிறான்.

இரண்டாமவன் தன் உணர்வுகளின் மூலத்திற்கு இன்னும் செல்லவில்லை. உணர்ச்சி வசப்படுதல் அல்லது உணர்ச்சிகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்தலே உணர்வுகளின் மூலம் என்று தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறான்.

ஹிப்பி சிரிக்கிறான். அழுகிறான். சில சமயம் கிறுக்குத் தனமான. விசித்திரமான விபரீதமான செயல்களில் ஈடுபடுகிறான். என்றாலும் முதலாமவனைவிட இவன் சிறந்தவன்.

முதல் வகையைச் சேர்ந்தவனிடம் அரசியல்வாதித்தனம் இருக்கிறது. இவனிடம் அது இல்லை.

முதலாமவன் போரை மட்டுமே நம்புகிறான். இரண்டாமவன் அமைதியை நம்ப ஆரம்பித்திருக்கிறான்.

முதலாமவன் பொருள்களைச் சேகரிக்கிறான். இரண்டாமவன் மனிதர்களை நேசிக்கத் தொடங்குகிறான். இது ஓர் அழகிய வேறுபாடு.

முதலாமவன் திருமணத்தை நம்புகிறான். இரண்டாமவன் காதலை நம்புகிறான். முதலாமவன் பாதுகாக்கப்பட்ட ஒரு வாழ்க்கையை வாழ்கிறான். நாளை எங்கே இருக்கப் போகிறான் என்று இரண்டாமவனுக்குத் தெரியாது.

நல்லது - மனிதன் நகரத் தொடங்கிவிட்டானே! இயங்கத் தொடங்கிவிட்டானே. தவறான பாதையில் நகரலாம். ஆனால் சரியான பாதையில் நகரவும் சம அளவு வாய்ப்பு இருக்கிறதே.

இயக்கம் நல்லது. பயணம் நல்லது. ஆனால் இப்போது அந்தப் பயணத்திற்கு ஓர் இலக்கு வேண்டும். ஒரு நல்ல வழி வேண்டும்.

முதலாமவன் உலக வாழ்க்கையில் திளைத்திருக்கிறான். வங்கியில் இருக்கும் பணத்தையும் ஆயுள் காப்பீட்டையும் அதிகம் நம்புகிறான். இன்னும் வல்லமை வேண்டும் இன்னும் பணம் வேண்டும் என்ற பேராசை அவன் மனதில் நிரந்தரமாக இருக்கிறது.

இரண்டாமவன் பாதுகாப்பை நம்புவதில்லை. ஆயுள் காப்பீட்டைவிட வாழ்க்கையை அதிகமான நம்புகிறான்.

வங்கியில் இருக்கும் பணம் தரும் பாதுகாப்பைவிட அன்பு அதிகமாகப் பாதுகாப்பு தரும் என்பது அவனுடைய கொள்கை.

பணம் சேர்ப்பது அவன் நோக்கம் இல்லை. அவன் பொருள்களைப் பதுக்குவதில்லை.

முதலாமவன் கடைப்பிடிக்கும் ஒழுக்க விதிகளை இரண்டா மவன் கடைப்பிடிப்பதில்லை. ஆனால் இரண்டாமவனிடத்தில் ஒரு புரட்சிகரமான, ஒரு புதுவிதமான தனிமனித ஒழுக்கம் தென்படுகிறது.

முதலாமவனின் ஒழுக்கம் சமுதாயரீதியானது. இரண்டாமவ னின் ஒழுக்கம் தனிமனித வகையைச் சேர்ந்தது. முதலாமவனின் ஒழுக்கம் போதனையைச் சார்ந்தது. இரண்டாமவனின் ஒழுக்கம் மனசாட்சியைப் பொறுத்தது.

இரண்டாமவன் சுற்றி முற்றிப் பார்க்கிறான். என்ன செய்ய வேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் செய்கிறான். அவன் தன் செயலை மட்டுமே செய்கிறான். அவன் ஒரு தனிமனிதன்.

முதலாமவன் ஒரு கூட்டத்தின் பகுதி. கூட்டு நனவிலியின் (collective unconscious) வெளிப்பாடு. ஆழ்மனம் தனிமனிதன் சம்பந்தப்பட்டது.

இதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? கனவு காணும் போது நீங்கள் தனியாகத்தான் இருப்பீர்கள். உங்கள் கனவிற்குள் யாரையும் உங்களால் கூட்டிக் கொள்ள முடியாது. உங்கள் காதலியை, மனைவியைக் கூட அழைத்துக் கொள்ள முடியாது. அவள் உங்கள் பக்கத்தில் அதே படுக்கையில்தான் படுத்திருப்பாள். என்றாலும் நீங்கள் உங்கள் கனவைக் காண்பீர்கள். அவள் தன் கனவைக் கண்டுகொண்டு இருப்பாள். ஒவ்வொருவரும் அவரவர் கனவை மட்டுமே காண்பார்கள். அதனால்தான் நான் இந்த ஆழ்மன நிலையை கனவு நிலை என்று அழைக்கிறேன்.

முதலாம் வர்க்கத்தைச் சேர்ந்தவனுக்குக் கேள்விகள் கேட்பதில் சுவாரசியம் இல்லை. அவனுக்குத் தேவை எல்லாம் பதில்கள்தான்.

ஓர் இந்துவிடம் பதில்கள் இருக்கின்றன. அவை இந்து பதில்கள். ஒரு சமணனிடம் பதில்கள் இருக்கின்றன. அவை சமண பதில்கள்.

இரண்டாமவனும் கேள்விகளை நாடுவதில்லை. ஆனால் அவனிடம் பல பதில்கள் இருக்கின்றன. முதலாமவனிடம் ஒரு பதில்தான் இருக்கிறது. இரண்டாமவனிடம் பல பதில்கள் இருக்கின்றன. என்றாலும் இரண்டாமவனுக்கு இன்னும் கேள்வி கேட்பதன் மகத்துவம் புரியவில்லை. இன்னமும் பதில்தான் முக்கியம் என்று இருக்கிறான். ஆனால் அவனிடம் பல பதில்கள் இருக்கின்றன. இது ஒரு நல்ல மாற்றம். இரண்டாமவன் முதலாமவனைப் போல் தான் பிடித்த முயலுக்கு மூணே கால் என்று அடம் பிடிக்க மாட்டான்.

“நான் இந்து. ஆகையால் பைபிள் தப்பான நூல்.” என்று சொல்ல மாட்டான். “நான் கிறிஸ்துவன் என்பதால் பகவத் கீதை படிக்கக்கூடாத புத்தகம்” என்று அடம்பிடிக்க மாட்டான்.

அவனிடம் மனிதத்தன்மை அதிகமாக இருக்கிறது. எம்மதமும் சம்மதமே என்ற போக்கு அவனிடம் தென்படுகிறது.

அவன் பகவத் கீதையையும் படித்திருக்கிறான். பைபிளையும் படித்திருக்கிறான். இரண்டிலும் ஆங்காங்கே உண்மைகள் இருப்பதை உணர்ந்திருக்கிறான். அவனிடம் பல பதில்கள் இருக்கின்றன.

முதலாமவனிடம் ஆணவம் கலந்த பிடிவாதம் இருக்கிறது. பழைய கடவுள் கோட்பாடுகள் இருக்கின்றன. இரண்டாமவனிடம் தத்துவம் இருக்கிறது.

மூன்றாம் நிலை "தோட்டம்."

தோட்டம் என்பது விழிப்பு நிலை. முதலாமவன் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கிறான். இரண்டாமவன் கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். மூன்றாமவன் விழித்திருக்கிறான். இந்துக்கள் முதல் நிலையை ஸுஷுப்தி என்கிறார்கள். இரண்டாவது ஸ்வப்னம். மூன்றாவது ஜாக்ரதி.

மூன்றாமவன் விழிப்புணர்வோடு இருக்கிறான். நாள் விடிந்துவிட்டது. புத்தகங்கள், வழிகாட்டிகள் பூசாரிகள் எதுவும் அவனுக்குத் தேவையில்லை. தன்னுடைய குருவை அவன் கண்டுபிடித்துவிட்டான்.

முதலாமவன் பூசாரியை நம்புகிறான். இரண்டாமவனுக்கு எங்கே போவது என்று தெரியவில்லை. அவனிடம் வழிகாட்டுக் கருவிகள் இல்லை. அவனுக்குத் திசைகள் தெரியாது. அவன் எல்லோரிடமும் போகிறான். ஒரு நாய்க்குப் பயிற்சி கொடுத்து இதுதான் உன் குருதேவர் என்று அவனிடம் சொல்லுங்கள். அதன் காலில் சரணடைந்துவிடுவான். கொஞ்சம் விளம்பரம் கொடுங்கள். அந்த நாய்க்குக்கூட சீடர்கள் சேர்வார்கள். இரண்டாமவன் எந்த குருவின் காலிலும் விழத் தயாராக இருக்கிறான். கொஞ்சம் அவசரப்படுகிறான் என்றே சொல்ல வேண்டும்.

முதலாமவன் தயாராக இல்லை. இரண்டாமவன் அதீதத் தயார்நிலையில் இருக்கிறான். முதலாமவன் தனது பூசாரியைத் தவிர வேறு யார் காலிலும் விழ மாட்டான்.

இரண்டாமவன் கண்களுக்கு எல்லாருமே பூசாரிகளாகத் தெரிவார்கள். அவன் கண்கள் அங்கும் இங்கும் அலைபாய்ந்து கொண்டேயிருக்கும்.

"நான்தான் உன் வழிகாட்டி. நான்தான் உன் ஆசான். உன் குருதேவன். நான்தான் இந்த உலகத்திற்கே ஆசான்" என்று பறைசாற்றிக்கொள்ளும் எவன் காலிலும் விழத் தயாராக இருப்பான்.

மூன்றாமவனுக்குக் குருமார்கள்மேல் நம்பிக்கை இல்லை. அவன் மாணவன் இல்லையே! அவனுக்கு அந்தரங்கத் தொடர்பு வேண்டும். அவனுக்கு ஒரு குரு வேண்டும். அவருடைய சீடனாக இருக்க விரும்புவான். குரு என்ன சொல்கிறார் என்பதைப் பற்றி அவனுக்குக் கவலை இல்லை. தன்னைச் சுற்றி குரு ஏற்படுத்தும் தாக்கம்தான் அவனுக்குத் தேவை. குருவின் கொள்கைகள்மீதோ தத்துவங்கள்மீதோ அவனுக்கு நாட்டம் இல்லை. அவனுக்கு குருவின் மேல் அவரது இருப்பின்மேல்தான் அதீத நாட்டம்.

ஒருவரின் இருப்பின்மேல் நாட்டம் வந்தால்தான், ஒருவரின் உள் ஆழத்தில் இருக்கும் அந்த மையக்கருவை நேரடியாகப் பார்க்க முடிந்தால்தான் நீங்கள் அவரது சீடனாக முடியும். நீங்கள் தத்துவார்த்தமான பதில்களைத் தேடி அலையவில்லை. இப்போது கேள்வி முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. "நான் யார்?" என்ற கேள்வி.

இரண்டாமவன் கற்கத் தயாராக இருக்கிறான். முதலாமவன் அதற்கும் தயாராக இல்லை. மூன்றாமவனோ கற்றதை மறக்கத் தயாராக இருக்கிறான்.

கவனமாகக் கேளுங்கள். நான் மீண்டும் சொல்கிறேன். முதலாமவன் பிடிவாதக்காரன். எல்லாம் எனக்குத் தெரியும் என்ற மனநிலை உள்ளவன். புதிதாக எதையும் கற்கத் தயாராக இல்லாதவன். இரண்டாமவனோ எங்கிருந்து வேண்டுமானாலும் கற்கத் தயாராக இருக்கிறான். பின் அவன் அநேகம் விஷயங்களைக் கற்கிறான். - ஒன்றுக்கு ஒன்று

முரணானவை, நல்லவை தீயவை முட்டாள்த்தனமானவை - அனைத்தையும் கற்றபின் குழப்பமடைகிறான்.

மூன்றாமவன் கற்றதை மறக்கத் தயாராக இருக்கிறான். அவன் அறிவைத் தேடவில்லை.

"முழு ஞானம் பெற்ற ஒருவரை நான் தேடிக் கொண்டிருக்கிறேன். அவர் சொல்வது தத்துவ ரீதியாக உண்மையா, அவர் தன் பக்க வாதங்களை நன்றாகச் செய்கிறாரா என்பது பற்றி எனக்குக் கவலையில்லை. எனக்கு அவருடன் நெருங்கிய உறவு வேண்டும்."

ஆசிரியருக்கும் மாணாக்கனுக்கும் உள்ள தொடர்பு அந்தரங்கமானது இல்லை. ஆனால் ஓர் ஆசார்யனுக்கும் சீடனுக்கும் உள்ள தொடர்பு அந்தரங்கமானது. அது ஒரு வகையான காதல். அதை ஒருவன் இதயபூர்வமாக உணர வேண்டும். ஆச்சாரியரின் முன்னிலையில் இருக்க வேண்டும். அவரைக் கவனிக்க வேண்டும். தன்னுடைய மனம் அங்கு வந்துவிடாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். மனதைத் தள்ளிவைத்துவிட்டு ஆச்சாரியரை உணர்வு பூர்வமாக அறிய வேண்டும்.

ஒரு ஜென் துறவி இவ்வாறு சொல்வார்:

"நான் என் குருதேவரை அடைந்தபின் மூன்று வருடங்கள் அவர் பக்கத்தில் அமர்ந்திருந்தேன். அப்போது அவர் என்னைப் பார்க்கக்கூட மாட்டார். மூன்று வருடங்கள் கழித்துத்தான் அவர் என்னை முதன் முதலில் பார்த்தார். நான் எப்படி சந்தோஷப்பட்டேன் தெரியுமா?

இன்னும் மூன்று வருடங்கள் கழிந்தன. அவர் என்னைப் பார்த்துப் புன்னகை செய்தார். அது ஒரு பெரிய வரப்பிரசாதம். பேரருள்.

அடுத்த மூன்று வருடங்கள் ஓடி மறைந்தன. ஒரு நாள் என் தலையில் தன் கையால் செல்லமாகத் தட்டினார். அப்பா! என்ன வரம்! என்னால் நம்பவே முடியவில்லை.

இன்னும் மூன்று வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் என் குருதேவர் என்னை நெஞ்சாரத் தழுவிக் கொண்டார். அன்று நான் மறைந்தேன். அவர் மறைந்தார். இருந்ததெல்லாம் ஒருமை மட்டும்தான்.

குருதேவரை அடைவது என்பது இறைமைக்கு மிக அருகில் இருக்கும் ஓர் இடத்திற்குச் செல்வதற்கு ஒப்பாகும். இறைமை இருக்கும் இடத்தில் திறக்கும் கதவுதான் குருதேவர். அவர் ஏற்கனவே இறைமை அடைந்தவர்.

அது சரி அதை எப்படி முடிவு செய்வீர்கள்? நீங்கள் ஆத்மார்த்தமாக உணர வேண்டும். மனம் உங்களுக்கு உதவாது. உங்கள் எண்ணங்கள் உங்களைத் தவறான வழியில் கூட்டிச் செல்லலாம்.

நீங்கள் குருதேவரை உணர வேண்டும். பொறுமையுடன் இருக்க வேண்டும். அவர் முன்னிலையில் இருக்க வேண்டும். அவருடைய அண்மையைச் சுவைக்க வேண்டும். அதனால் போதை தலைக்கேற வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவு பிறக்கும். உங்கள் மனம் கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே போகும்போது தெளிவும் ஞானமும் தன்னால் பிறக்கும்.

அவர் குருதேவராக இருக்கலாம். - இல்லாமலும் இருக்கலாம். எப்படி இருந்தாலும் அது உங்களுக்கு ஒரு பெரிய வெளிப்பாடாக இருக்கும். அவர் குருதேவராக இருந்தால் அவருள் நீங்கள் மொத்தமாக மூழ்கிவிடலாம். இல்லையென்றால் நீங்கள் அவரை விட்டு நகர்ந்து வேறு ஒருவரைத் தேட வேண்டும். எது நடந்தாலும் நீங்கள் ஒரு தீர்க்கமான முடிவிற்கு வந்திருப்பீர்கள்.

சில நேரங்களில் அவர் சிறந்த குருதேவர்தான் என்பதை உணர்வீர்கள். ஆனால் அவர் உங்கள் குருதேவர் இல்லை என்பதையும் உணர்வீர்கள். அப்போது நீங்கள் அவரைவிட்டு வெளியேற வேண்டும். உங்களுக்கும் உங்கள் குருதேவருக்கும் முழுப் பொருத்தம் இருந்தால்தான் அவரால் உங்களுக்கு உதவ முடியும். அவருக்கு நீங்கள் உங்களுக்கு அவர்

என்ற அளவிற்கு பொருத்தம் இருந்தால்தான் நீங்கள் அவரிடம் இருக்க வேண்டும்.

புத்தரும் மகாவீரரும் பெரிய ஆச்சாரியார்கள். இருவரும் சமகாலத்தவர்கள். சில சீடர்கள் புத்தரிடம் வருவார்கள். அவருடன் பல வருடம் ஒன்றாக அமர்ந்திருப்பார்கள். பின் ஒரு நாள் திடீரென்று மறைந்துவிடுவார்கள். மகாவீரரிடம் போய்ச் சேர்வார்கள்.

அதே போல்தான் மகாவீரர் இடத்திலும் நடக்கும். ஒரு சீடன் வருவான். பல வருடங்கள் மகாவீரருடன் இருப்பான். பின் ஒரு நாள் அங்கிருந்து போய் புத்தர் கட்சியில் சேர்ந்து விடுவான்.

இப்படி ஏன் நடந்தது என்று பௌத்தர்களும் சமணர்களும் பல நூற்றாண்டுகளாக வாதிட்டுக் கொண்டிருக்கிறார்கள். சமணர்கள் என்ன சொல்வார்கள்? மகாவீரர்தான் உண்மையான குரு. அதனால்தான் புத்தரிடமிருந்து பலர் வந்து அவரிடம் சேர்ந்தார்கள். மகாவீரரிடம் இருந்து பிரிந்து போய் புத்தரிடம் சேர்ந்தவர்களைப் பற்றி அவர்கள் வாயே திறக்க மாட்டார்கள்.

மகாவீரரை விட்டுவிட்டு புத்தரிடம் வந்த சீடர்களைப் பற்றி மட்டுமே பௌத்தர்கள் பேசுவார்கள். புத்தரிடமிருந்து மகாவீரரிடம் போனவர்களைப் பற்றி மூச்சு விடமாட்டார்கள்.

ஒரு குருவிடமிருந்து இன்னொரு குருவிற்கு சீடர்கள் இடம் பெயர்ந்திருக்கிறார்கள். காரணம் - இருவரில் புத்தர்தான் சிறந்தவர் என்பதோ மகாவீரர்தான் சிறந்தவர் என்பதோ அல்ல.

சில சமயங்களில் ஒரு குருதேவரோடு உங்கள் மனம் இணையும். சில சமயம் இணையாது. புத்தரிடமிருந்து விலகிப் போன சீடர்கள் அவரது கால்களைத் தொட்டு வணங்கி அவருக்கு மனமார நன்றி சொல்லிவிட்டு மகாவீரரிடம் செல்வார்கள். புத்தர்பிரான் தங்களுக்கு உகந்த குரு அல்லர்; தாங்கள் புத்தருக்கு உகந்த சீடர் அல்லர் என்ற ஞானமும்

புத்தரின் முன்னிலையில்தான் உதித்திருக்கிறது. தங்கள் வாழ்நாள் முழுவதும் புத்தருக்கு நன்றி உடையவர்களாக இருப்பார்கள்.

மகாவீரரிடம் போய் அவர் முன்னிலையில் ஞானம் பெற்றாலும் புத்தருக்கு நன்றியறிதலுடன் இருப்பார்கள்.

நான் "தோட்டம்" என்று அழைக்கும் இந்த மூன்றாவது நிலையில் ஒரு புதிய கண்ணோட்டம் பிறக்கிறது. இந்தக் காலகட்டத்தில்தான் "நான் யார்?" என்ற கேள்வி முக்கியத்துவம் பெறுகிறது. நீங்கள் பதில் தெரிய வேண்டும் என்பதற்காக இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை. வெளியிலிருந்து வரும் எந்த பதிலையும் நீங்கள் ஏற்கத் தயாராக இல்லாத நிலை இது. உங்கள் குருதேவர் உங்களுக்கு இந்தக் கேள்விக்கான விடையைக் கொடுக்கப் போவதில்லை. சொல்லப்போனால் அவர் உங்கள் விடைகளை எல்லாம் அழிக்கப் போகிறார். அதைத்தான் நான் இங்கே செய்து கொண்டிருக்கிறேன். உங்கள் மனதில் இருக்கும் விடைகளை எல்லாம் அழிக்கப் போகிறேன்.

நீங்கள் இந்து என்றால் நான் இந்து மதக் கோட்பாடுகளை அழிக்கப் போகிறேன். நீங்கள் முகமதியர் என்றால் முகமதிய மதக் கோட்பாடுகளைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போடப் போகிறேன். நீங்கள் கிறிஸ்துவர் என்றால் உங்கள் மதக் கோட்பாடுகளை துவம்சம் செய்யப் போகிறேன். அதுதான் என் பணி. உங்கள் விடைகளை எல்லாம் அழித்துவிட்டால் உங்களிடம் கேள்வி மட்டுமே மிஞ்சும். அந்த நிலையில் நீங்கள் தூய்மையாக கன்னித்தன்மை உள்ளவராக இருப்பீர்கள்.

அந்தச் சமயத்தில் ஒரு கேள்வி மட்டுமே உங்களிடம் மிஞ்சும்.

அந்தக் கேள்வி ஓர் அம்பைப் போல் உங்கள் இருப்புநிலையின் ஆதாரத்தைத் துளைத்துக் கொண்டிருக்கும். அங்கேதான் அதற்கான விடை இருக்கிறது. ஆனால் விடை வார்த்தை வடிவத்தில் இல்லை. அது ஒரு கோட்பாடு இல்லை. அது முற்றிய ஞானம். அது ஓர் உணர்தல்.

நீங்கள் ஞானத்தில் வெடிக்கிறீர்கள். உங்களுக்குத் தெரியும். ஆனால் அது அறிவு இல்லை. அது ஓர் இருப்புநிலை. இருப்புநிலையைச் சார்ந்த ஓர் உன்னத ஞானம்.

முதல் மனிதன் பிடிவாதம் பிடிக்கும் மதவெறியன். இரண்டாமவன் தத்துவவாதி. மூன்றாவது மனிதனிடம்தான் உண்மையான மத உணர்வு இருக்கிறது. அவன் இருப்புநிலையைச் சார்ந்து இருக்கிறான்.

நான்காவது கட்டம் "வீடு."

இந்துக்கள் இதை துரிய நிலை அல்லது நான்காவது நிலை என்று சொல்கிறார்கள். இந்த நிலைக்கு வந்துவிட்டால் உங்கள் பயணம் முற்றுப் பெற்றுவிட்டது என்று அர்த்தம். சேரும் இடத்தில் போய்ச் சேர்ந்துவிட்டீர்கள் என்று வைத்துக் கொள்ளலாம்.. உங்கள் இருப்பு நிலையின் மையக்கருவிற்கு வந்து சேர்ந்துவிட்டீர்கள். அதுதான் வீடு, ஞானம், சமாதி, ஸடோரி, நிர்வாணம் என்று சொல்லப்படும் உச்ச நிலை.

குருதேவரும் சீடரும் மறைந்து போகும் நிலைக்கு வந்து விட்டீர்கள். கடவுளும் பக்தனும் மறைந்து போகும் அந்த நிலைக்கு வந்துவிட்டீர்கள். தேடுபவனும் தேடப்படும் பொருளும் இல்லாத நிலை அது. த்வந்தம் என்று இந்துக்கள் சொல்லும் இரட்டை மறைந்துவிடுகிறது. நீங்கள் அந்த இரட்டையைக் கடந்து சென்று விட்டீர்கள். ஒன்றாக மாறிவிட்டீர்கள்.

இதுதான் நாம் அனைவரும் தேடும் இடம். இதில் வியப்பு என்னவென்றால் இந்த இடம் இங்கேயேதான் இருக்கிறது. நீங்கள் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்துவிட்டால் 'ஆஹா! இந்த வீட்டில்தானே இத்தனை காலமும் இருந்தோம்' என்று நினைப்பீர்கள். வீட்டிலிருந்துகொண்டு கடந்து வந்த பாதையைப் பார்த்தால் உங்களுக்குச் சிரிப்புதான் வரும். இவ்வளவு நாள் இருந்த காடு மறைந்து போயிருக்கும். அது உங்களுடைய உணர்வின்மையின் வெளிப்பாடுதான் என்று தெரியும். வீட்டிலிருந்து பார்க்கும்போது வனம் இருக்காது. அது நீங்கள் கண்ட கனவு என்பதை அறிவீர்கள். தோட்டமும் இருக்காது. அது உங்களுடைய விழிப்பு நிலைதான்.

வீடுதான் உங்களுடைய உண்மையான இருப்பு நிலை. அதுதான் சத். அதுதான் சித். அதுதான் ஆனந்தம். அதுதான் சச்சிதானந்தம். அதுதான் நீங்கள் உங்களுடைய அடி ஆழத்தில் இருக்கும் ஸ்வபாவம், தாவோ - அல்லது வேறு எந்தப் பெயர் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் அது பெயரற்றது.

காடு, வனம், தோட்டம் வீடு - இதுதான் அந்த நான்கு நிலைகள். நான்கு கட்டங்கள். அவற்றைப் பற்றி விரிவாகச் சொன்னேன். அப்போதுதான் உங்களால் கபீரின் இந்த சூத்திரங்களையும் இனி வரப் போகும் சூத்திரங்களையும் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும்.

இப்போது சூத்திரங்களைப் பார்ப்போம்:

*புனிதத் தீர்த்தங்களில் தண்ணீர் தான் இருக்கிறது.*

*அவற்றால் எந்தப் பயனும் இல்லை.*

*நான் அவற்றில் எல்லாம் குளித்திருக்கிறேன்*

கபீர் இப்போது காடு என்ற அந்த முதல் நிலையைப் பற்றிச் சொல்கிறார்.

*புனிதத் தீர்த்தங்களில் தண்ணீர் தான் இருக்கிறது.*

*அவற்றால் எந்தப் பயனும் இல்லை.*

*நான் அவற்றில் எல்லாம் குளித்திருக்கிறேன்*

கங்கையில் குளிப்பதால் ஒருவன் தூய்மை அடைய மாட்டான். அந்த எண்ணமே முட்டாள்த்தனமானது. - காரணம் அழுக்கு உங்கள் உடலில் இல்லை.

ஆமாம், கங்கை நதியால் இதை நிச்சயம் செய்ய முடியும். உங்கள் உடலைச் சுத்தமாக்க முடியும். உடல் தூய்மையையும் புத்துணர்வையும் கொடுக்க முடியும். ஆனால் பிரச்சினை உடலில் இல்லை. அதனால் தீர்வும் அங்கே இருக்க முடியாது. உங்களிடம் உள்ள அழுக்கு இன்னும் ஆழத்தில் உள்ளது. எந்த கங்கையாலும் அதைப் போக்க முடியாது.

கபீர் சொல்கிறார் : "நான் அவற்றில் எல்லாம் குளித்திருக்கிறேன்" அதாவது நானும் 'காடு' என்ற அந்த நிலையில் இருந்திருக்கிறேன். சடங்குகள், பிடிவாதமான மதக் கொள்கைகள், புனித நூல்கள், பூசாரிகள், பாதிரியார்கள், கோயில்கள், மசூதிகள், ஞாயிற்றுக்கிழமை மதங்கள் - அவற்றில் எல்லாம் இருந்திருக்கிறேன். எந்தப் பயனும் இல்லை.

*உருவங்களுக்கு உயிர் இல்லை; அவை பேசாது*

*எனக்குத் தெரியும் நான் அவற்றிடம் சத்தமாகக் கதறியிருக்கிறேன்.*

மேலும் கபீர் சொல்கிறார். கோயில்களில் இருக்கும் உருவங்களை வழிபட்டிருக்கிறேன். அவற்றிற்கு உயிர் இல்லை. அவை நமக்கு உதவாது. நான் அவற்றிடம் சத்தமாகக் கதறியிருக்கிறேன் அவை ஏன் என்று கேட்டதில்லை. என் கதறல்களுக்குச் செவி சாய்த்ததில்லை. அவை எல்லாம் மனிதனால் உருவாக்கப்பட்டவை. மனிதனால் உருவாக்கப்பட்ட கடவுளால் நமக்கு எந்தப் பயனும் இல்லை.

மனிதனால் கடவுளைப் படைக்க முடியாது. கடவுள்தான் மனிதனைப் படைத்தார்.

நீங்கள் எப்படிக் கடவுளைப் படைக்க முடியும்? வழிபாட்டு இடங்களில் இருப்பவை எல்லாம் வெறும் அடையாளங்களே! அடையாளங்கள் எல்லாமே ஆபத்தானவை. காரணம், அந்த அடையாளத்தையே நீங்கள் நிஜம் என்று நினைத்துவிடும் அபாயம் இருக்கிறது.

அடையாளம் நிஜம் இல்லை. கடவுளை எந்த உருவத்திலும் கொண்டுவர முடியாது. எந்த வார்த்தையாலும் உண்மையை வெளிப்படுத்த முடியாது.

'கடவுள்' என்ற வார்த்தை கடவுள் இல்லை. 'நெருப்பு' என்ற வார்த்தை நெருப்பிற்குச் சமம் இல்லை. அது ஓர் அடையாளம். ஒரு குறியீடு. அவ்வளவுதான். உணவுப் பட்டியலைச் சாப்பிட்டு நீங்கள் பசியாற முடியாது. உணவுப் பட்டியல் உணவு இல்லை.

எல்லா அடையாளங்களும் குறியீடுகளும் இந்த உணவுப் பட்டியலைப் போலத்தான். இன்று பலரும் பசிக்கும் போது உணவுப் பட்டியலைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் பசி இன்னும் ஆறவில்லை. அவர்கள் இன்னும் துன்பப்பட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அதுதான் வயிறு நிறைய உணவுப்பட்டியல்களை முழுங்கிவிட்டோமே இன்னும் ஏன் துன்பப்படுகிறோம்? என்று சொல்லி ஆச்சர்யப் படுகிறார்கள்.

உருவங்கள், புனித நூல்கள், சிக்கலான கோட்பாடுகள் - எல்லாக் குறியீடுகளும் பயனற்றவை.

*உருவங்களுக்கு உயிர் இல்லை; அவை பேசாது*

*எனக்குத் தெரியும் நான் அவற்றிடம் சத்தமாகக் கதறியிருக்கிறேன்.*

*புராணங்கள், குரான் - இவை எல்லாம் வெறும் வார்த்தைகளே.*

*நான் திரையை விலக்கிப் பார்த்திருக்கிறேன்.*

புத்தகங்களாலும் எந்தப் பயனும் இல்லை. குரான், புராணங்கள், இந்துமதத்தின் புனித நூல்கள், யூதர்கள் கிறிஸ்துவர்களின் புனித நூல்கள் - எதாலும் எந்தப் பிரயோ ஜனமும் இல்லை. கபீர் சொல்கிறார்: நான் திரையை விலக்கிப் பார்த்திருக்கிறேன்.

வார்த்தைகள் தத்துவங்கள் இவற்றாலான திரையை விலக்கிப் பார்த்திருக்கிறேன் என்கிறார். திரையை விலக்கி அதன் பின் இருக்கும் மெய்ப்பொருளைப் பார்க்கும்போது அதற்கும் வார்த்தை களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்கிறார் கபீர். மெய்ப்பொருள் வார்த்தையற்றது. வார்த்தையைத் தாண்டி நிற்பது.

உண்மையை ஒரு கோட்பாட்டிற்குள் கட்டிப் போட முடியாது. உண்மை பிரம்மாண்டமானது. கோட்பாடுகள் எல்லாம் மிகவும் குறுகலானவை.

உண்மைதான் எல்லாம். உண்மைதான் மொத்தமாக இருக்கும் முழுமை. பூரணத்துவம். அதை எப்படி சில கோட்பாடுகளில் அடக்க முடியும்?

கோட்பாடுகள் எல்லாம் சிறிய பெட்டிகள் போன்றவை. உண்மையோ எல்லையில்லா வானத்தைப் போன்றது. சிறிய பெட்டிக்குள் எப்படி வானத்தை வைக்க முடியும்?

*நான் திரையை விலக்கிப் பார்த்திருக்கிறேன்.*

*கபீர் தன் அனுபவத்தை மட்டுமே பேசுவார்*

*அவருக்கு நன்றாகத் தெரியும்*

*மற்றவை எல்லாம் பொய் என்று*

கபீர் சொல்கிறார்: உங்கள் நேரடி அனுபவத்தைத் தவிர வேறு எதையும் நம்பாதீர்கள் என்று. நேரடியான இருப்புநிலை அனுபவம் மட்டுமே உண்மையைக் காட்டும். அழகு, நன்மை, உண்மை - இவை அனைத்தையும் அனுபவித்தே உணர வேண்டும். அதுவும் நீங்களே நேரடியாக அனுபவிக்க வேண்டும்.

புத்தருக்குச் சில அனுபவங்கள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அதற்கும் உங்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவருடைய அனுபவங்கள் உங்களுடையதாகாது. ஏசுநாதருக்கு அந்த அனுபவம் ஏற்பட்டது. அதனால் உங்களுக்கென்ன லாபம்? அவர் அனுபவம் அவருக்கே சொந்தம். அதை அடுத்தவருக்கு அவரால்கூட மாற்ற முடியாது.

நான் பார்த்திருக்கிறேன். நான் அறிந்திருக்கிறேன். நீங்களும் அந்த அனுபவத்தில் பங்கு கொள்ள வேண்டும் என்று விழைகிறேன். யாருக்காவது அந்த அனுபவத்தைக் கொடுக்க வேண்டும் என்று எனக்கு ஆசை இருக்கிறது. ஆனால் அது நடவாத காரியம். உங்களால் என் கண்கள் மூலமாகப் பார்க்க முடியாது. என் இதயம் மூலமாக உணர முடியாது. நான் அந்த அனுபவத்தைச் சொல்வது எல்லாம் உங்களுக்கு ஓர் அடையாளமாக ஒரு குறியீடாக மட்டுமே இருக்கும்

நான் சொல்வது உங்களுக்கு ஒரு தாகத்தை உண்டாக்க வேண்டும். இன்னும் அறிய வேண்டும் என்ற தாகத்தை இல்லை. அதே அனுபவத்தைப் பெற வேண்டும் என்ற தாகத்தை. இந்தத் தாகம் இல்லையென்றால் உங்களால் வீடு வந்தடைய முடியாது.

உங்கள் வீடு தொலைவில் இல்லை. சொல்லப்போனால் வெகு தொலைவில் இருப்பது காடு. அதைவிட அருகில் இருப்பது வனம். அதைவிட அருகில் இருப்பது குருதேவரின் தோட்டம். அந்தத் தோட்டத்திற்குள்ளே நடுநாயகமாக இருப்பது உங்கள் வீடு. அதுதான் உங்களுக்கு மிகவும் அருகில் இருக்கிறது. அப்படித்தான் இருக்க முடியும். அது உங்களின் இருப்பு நிலையல்லவா?

எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. என்கிறார் கபீர்.

*தண்ணீரில் வாழும் மீன் தாகம் என்று சொல்வதைக் கேட்டால்*

*எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.*

உங்களைப் பார்த்தால் நீங்கள் தாகமாக இருப்பதைப் பார்த்தால் கபீருக்குச் சிரிப்பு வருகிறதாம்,. நான் சிரிப்பதற்குக் காரணம் - இப்படி அபத்தமான ஒரு நிகழ்வு நடந்துவிட்டதே என்பதுதான். -தண்ணீருக்குள் இருக்கும் மீனுக்குத் தாகமாம்! எப்படி இருக்கிறது கதை?

நீங்கள் தண்ணீருக்குள் இருந்தபடியே தாகம் தாகம் என்று பிதற்றுகிறீர்கள். இருக்க வீடில்லையே என்று தவிக்கும் உங்களுக்குள் ஒரு வீடு - உங்கள் வீடு - இருக்கிறது. எப்போதும் நீங்கள் சுமந்து கொண்டிருக்கும் ஒன்றை உலகம் முழுவதும் தேடிக் கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் மெய்ப்பொருளைக் கருவுற்றிருக்கிறீர்கள். ஆனால் அந்த மெய்ப்பொருளைத் தேடி நாலாபக்கமும் அலைந்து கொண்டிருக்கிறீர்கள்.

*தண்ணீரில் வாழும் மீன் தாகம் என்று சொல்வதைக் கேட்டால்*

*எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.*

*உங்கள் வீட்டில் இருக்கும் நிஜத்தைப் பார்க்க மறுக்கிறீர்கள்*

*ஒரு காட்டிலிருந்து இன்னொரு காட்டுக்கு*

*வெட்டியாக அலைந்து கொண்டிருக்கிறீர்கள்.*

*இதோ உண்மையைச் சொல்கிறேன்.*

'இந்த நொடி' என்பதுதான் உண்மை. நீங்கள்தான் உண்மை. உண்மைதான் உங்களுடைய இருப்பு நிலை.

*இதோ உண்மையைச் சொல்கிறேன்.*

*காசி மதுரா எங்கு வேண்டுமானாலும் போங்கள்*

*உங்கள் ஆன்மாவை நீங்கள் பார்க்கவில்லையென்றால்*

*இந்த உலகம் உங்களுக்குப் பொய்யே*

நீங்கள் ஒரு மாய உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். காரணம் நீங்கள் இன்னும் உங்களுக்குள் இருக்கும் உண்மையைத் தொடவில்லை. உண்மையாகவே மாறுங்கள். இந்த உலகம் உங்களுக்கு உண்மையாகும். நீங்கள் பொய்யாக இருப்பதால்தான் இந்த உலகம் உங்கள் பொய்யிலிருந்து உருவாக்கப்பட்டிருக்கிறது. உங்கள் பொய்தான் உங்கள் உலகத்திற்கு ஆதாரம்.

காடு என்ற நிலையில் வாழும் மனிதன் எப்போதும் ஆழ்ந்த உறக்கத்திலேயே இருக்கிறான். தூக்கம்தான் அவன் உலகம். வனத்தில் வசிப்பவன் சதா கனவிலேயே சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். கனவுதான் அவன் உலகம்

தோட்டத்தில் வாழ்பவன் விழிப்புணர்வோடு வாழ்கிறான். கொஞ்சம் கொஞ்சமாக அவன் வீட்டை நெருங்கிக் கொண்டிருக்கிறான். வீட்டைப் பற்றிய முழுமையான விழிப்புணர்வும் அவனிடம் இருக்கிறது. வீட்டு வாசலில் அவன் நின்று கொண்டிருக்கிறான். ஒரு தட்டுத் தட்டினால் போதும். கதவு திறந்துவிடும்.

அதைத்தான் ஏசுபிரானும் சொன்னார். தட்டுங்கள் திறக்கப்படும் கேளுங்கள் கொடுக்கப்படும் தேடுங்கள் கண்டடைவீர்கள்.

மூன்றாமவன் தோட்டத்திற்குள் வந்துவிட்டான். அவனுக்கு வீடு தெரிகிறது. ஆனால் அவன் இன்னும் வீட்டை அடையவில்லை. நீங்கள் வீட்டிற்குள் நுழையும்போது அது தூக்க நிலை (ஸுஷுப்தி) இல்லை கனவு (ஸ்வப்னம்) இல்லை விழிப்பு நிலை (ஜாக்ரதி) இல்லை. அது ஸ்வபாவம் - உங்கள் உண்மையான இயல்பு. உன்னதமான உணர்வு நிலை. பேரண்ட உணர்வு நிலை. முதல் மூன்று நிலைகளையும் நீங்கள் கடந்து விட்டீர்கள்.

இதுதான் இறைமை. இதுதான் ஓஷோ. இதுதான் அல்லாஹ். அல் ஹில்லாஜ் மன்சூர் "நானே மெய்ப்பொருள்" என்று முழங்கிய போது இந்த நிலையில்தான் இருந்தார்.

"நானும் என் தந்தையாகிய இறைவனும் ஒருவரே" என்று ஏசுபிரான் சொன்னபோது இருந்த நிலையும் இதுதான். உபநிஷத்துக்களை யாத்த ரிஷிகள் "அஹம் பிரம்மாஸ்மி. நானே முழுமை" என்று உறுமிய போது இருந்த நிலையும் இதுதான்.

உங்களுக்குள் ஓஷோ இருக்கிறான். இறைமை உங்களுக்குள் இருக்கிறது. கடவுளின் சாம்ராஜ்ஜியம் உங்களுக்குள் கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கிறது. நீங்கள்தான் அதைத் தேட வேண்டும். கண்டுபிடிக்க வேண்டும். இல்லாத ஒன்றைக் கண்டுபிடிப்பதைப் போன்றது அல்ல அது. அது உங்களிடம் ஏற்கனவே இருக்கிறது. நீங்கள் திரையை விலக்கினாலே போதும்.

நான் திரையை விலக்கி உண்மையைப் பார்த்திருக்கிறேன் என்கிறார் கபீர். வார்த்தைகளில் வெளிப்படுத்த முடியாத உண்மையை நான் பார்த்திருக்கிறேன். என்றும் மாறாத உண்மையை நான் உணர்ந்திருக்கிறேன்.

இங்கே நான் உங்கள் இருப்புநிலையைத் தவிர வேறு எதையும் கற்றுக் கொடுக்கவில்லை. உங்கள் இருப்பு நிலைக்கு அருகில் உங்களைக் கொண்டுவர முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். நான் உங்களையே உங்களுக்கே திருப்பித்

தருகிறேன். வாழ்க்கையில் நீங்கள் எதையுமே தவறவிடவில்லை. உங்களுக்குள் இருக்கும் பொக்கிஷத்தைத்தான் நீங்கள் மறந்து போய்விட்டீர்கள். உள்ளே எப்படிப் பார்ப்பது என்பதையும் மறந்துவிட்டீர்கள்.

மறுபடியும் டேரோ அட்டைகளில் சித்தரிக்கப்பட்ட முட்டாளை நினைத்துக் கொள்ளுங்கள்.

அந்த டேரோ அட்டைகளை நீங்கள் தியான நிலையுடன் பார்த்தால்...

அவை தியானத்திற்குரிய அட்டைகள்தான். தியானம் செய்வதற்கு ரகசியமான வழிகள் அவை. பழைய ரகசியங்கள்.

அந்த அட்டையில் முட்டாள் ஒரு செங்குத்தான பாறையின் உச்சியில் நின்று கொண்டிருக்கிறான். ஒரு கால் அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருக்கிறது. ஆனால் அது அவனுக்குத் தெரியவில்லை. தன் காலின் கீழ் இருக்கும் அபாயத்தை உணராமல் வானில் இருக்கும் விண்மீன்களைப் பார்த்து சந்தோஷமாக இருக்கிறான். அவன் மனம் கனவுகளால் நிரம்பியிருக்கிறது.

அவன் தன் முதுகில் நான்கு புனிதமான குறியீடுகளைச் சுமந்து கொண்டிருக்கிறான். அவை என்னவென்றுகூட அவனுக்குத் தெரியாது. அவன் அந்தக் குறியீடுகளைச் சுமந்து கொண்டிருக்கிறான் என்பதுகூட அவனுக்குத் தெரியாது.

அந்த நான்கு புனிதமான சின்னங்கள் இவைதான் - காடு, வனம், தோட்டம் வீடு.

இப்போது எல்லாம் உங்கள் கையில் இருக்கிறது. நீங்கள் திரும்பினால். .. லேசாகத் திரும்பினால் போதாது முழுவதுமாக 180 டிகிரி திரும்ப வேண்டும். அதுதான் உண்மையான மாற்றம். அதுதான் சந்நியாசம்.

நீங்கள் மட்டும் திரும்பினால் உவகையின் சிகரத்தை பேரின்பத்தை கழிபேருவகையை ஒரு நொடிகூட இழக்கவில்லை என்பதை உணர்வீர்கள். நீங்கள் உங்கள் வீட்டைவிட்டு அரை

அங்குலம் கூட வெளியே போகவில்லை. வெளியே போய்விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் வீட்டில் இருக்கிறீர்கள். அதைவிட்டு வெளியில் போனதே இல்லை. இதை உணரும்போது நீங்கள் ஒரு புத்தனாக, ஓர் ஏசுபிரானாக, ஒரு கிருஷ்ண பரமாத்மாவாக மாறுகிறீர்கள். இதுதான் உங்கள் விதி. உங்கள் நல்லூழ்.

அதை அடையும்வரை உங்களிடம் அமைதி இருக்காது. மகிழ்ச்சி இருக்காது. ஒரு மனிதன் சதா பரபரவென்று அமைதியற்ற நிலையில்தான் இருக்க வேண்டும்.

மனிதன் என்பவன் ஒரு பாலம். அவன் இன்னும் தன் இருப்புநிலையை அடையவில்லை. அவன் அதை அடைவதற்கான ஒரு சாத்தியக்கூறு அவ்வளவுதான்.

இன்று இது போதும்.

முதல் கேள்வி

ஓஷோ,

*கடவுளை நீங்கள் ஏன் "அவன்" என்று குறிப்பிடுகிறீர்கள்?. உயிர்கள் எல்லாவற்றிலும் விரவி நிற்கும் முழுமையை, அறிவுக்கு அப்பாற்பட்ட அந்த அன்பை என்றும் இருக்கும் அந்த இருப்புத்தன்மையை.. .. .. கடவுளை அது என்று சொன்னால் இன்னும் தெளிவாக இருக்குமே. கடவுளை அவன் என்று நீங்கள் சொல்லும்போது அது ஒரு மனிதனை அல்லது ஓர் ஆளுமையைக் குறிக்கிறது. ஓர் அதிகாரத்தை அல்லது ஒருவகையான உறுதியை மனத்திட்பத்தைக் குறிக்கிறது. அதுதான் என்னை உறுத்துகிறது.*

*அதனால் என்னால் கடவுளை நேசிக்க முடியாமல் போய்விடுகிறது.*

*இந்தக் கேள்வி எனக்குள் இருக்கும் என் பிரச்சினையின் வெளிப்பாடு. ஓஷோ, நான் எப்படி உங்கள் அதிகாரத்தை நம்ப முடியும்? அதிகாரம் செலுத்தும் உங்களை எப்படி நேசிக்க முடியும்?*

கடவுளை எந்த வார்த்தையாலும் குறிப்பிட முடியாது. "அவன்" என்று சொன்னாலும் அந்தச் சொல் அவனருகில் போகாது. "அவள்" என்று குறிப்பிட்டாலும் கடவுளுக்கு அருகில் அந்தச் சொல் போகாது. . "அது" என்ற சொல் இன்னும் அதிக தூரத்திலேயே நின்றுவிடுகிறது. "அவன்" என்ற சொல் ஆளுமையைக் குறிக்கும் என்றால் "அது" என்ற சொல் ஒரு ஜடப் பொருளைக் குறிக்கும்.

"அவன்" உங்களுக்கு ஓர் ஆணை நினைவூட்டினால் "அவள்" உங்களுக்கு ஒரு பெண்ணை நினைவூட்டலாம். - ஏனென்றால் எல்லாச் சொற்களும் மனிதன் உபயோகிப்பதற்காகப் படைக்கப்பட்டவை. கடவுள் மனிதனின் படைப்பல்ல. அவனை எந்தச் சொல்லில் அழைத்தாலும் அது ஒரு குறியீடாகத்தான் இருக்க முடியும்.

உங்களுக்கு எந்தக் குறியீடு பிடிக்கிறதோ அதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். "அது" என்று அழைக்க விருப்பமா? அப்படியே செய்யுங்கள். ஆனால் "அது" என்ற சொல்லைப் பயன்படுத்துவதிலும் சில சிக்கல்கள் இருக்கின்றன என்பதை மறந்துவிடாதீர்கள்.

"அது" என்பது பொருளைக் குறிக்கும் வார்த்தை. செத்த, ஜடப் பொருள்களைக் குறிக்கும் சொல். அதில் இன்னொரு சிக்கலும் உண்டு. "அது" என்பது ஆண்பாலும் பெண்பாலும் இல்லாமல் நடுவில் நிற்கும் ஒரு நிலையைக் குறிக்கும் சொல். அதனிடம் ஏதாவது சொன்னால் அது மறுமொழி பகராது. மனிதன் மட்டுமே மறுமொழி பகர முடியும். அன்பிற்கு மறுமொழி தேவை.

நீங்கள் ஒரு சுவரிடம் பேசலாம். ஆனால் சுவர் பதில் சொல்லாது. நீங்கள்தான் பேசிக் கொண்டேயிருக்க வேண்டும். அது உரையாடலாக இருக்காது. அப்படிக் கற்பனை செய்து கூடப் பார்க்கமுடியாது.

நாம் அவனிடம் செய்யும் பிரார்த்தனை ஓர் உரையாடலாக இருக்கட்டுமே என்றுதான் கடவுளை "அவன்" என்று அழைக்கிறேன். . இல்லையென்றால் அந்தப் பிரார்த்தனை ஒருவழிப் பேச்சாக ஒரு பைத்தியத்தின் பிதற்றலாக இருக்கும். "அது" உங்களுக்கு மறுமொழி சொல்லாது. "அது" உங்கள் பேச்சை செவிமடுக்காது. "அதற்கு" உங்களைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை. அந்த "அது" ஒரு மந்தமான நடுநிலைப் பொருள். நீங்கள் ஜெபம் செய்கிறீர்களா இல்லையா என்பது பற்றி அதற்கு அக்கறை இருக்காது. அது வெறும் கல்லாக மட்டுமே இருக்கும்.

கடவுளை அவன் என்று அழைப்பதால் உங்களுக்குப் பிரச்சினை என்றால் கடவுளை அது என்று அழைப்பதால் பிரச்சினை இன்னும் அதிகமாகத்தான் இருக்கும். "அதன்" மேல் நீங்கள் எப்படி அன்பு காட்ட முடியும்? "அதை" சொந்தமாக வைத்துக் கொள்ளலாம். "அதைப்" பயன்படுத்தலாம். ஆனால் அதை எப்படிக் காதலிப்பீர்கள்?

அந்த வழியில் பார்த்தால் "அவன்" என்று அழைப்பதே சிறந்தது என்று தோன்றுகிறது. நான் சொல்லும் விளக்கங்களைக் கவனமாகக் கேளுங்கள். அவன் என்ற சொல் கடவுளுக்கு ஓர் ஆளுமையைத் தருகிறது. கடவுள் மனிதனாகிறார். அஃறிணைப் பொருளில் இருந்து உயர்திணையாக மாறுகிறார்.

இதயத்துடிப்பும் சுவாசமும் நாடித்துடிப்பும் உள்ள உயிருள்ள மனிதராகக் கடவுளை உருவகப்படுத்துகிறோம்.

நீங்கள் அவனை அழைக்கலாம். மறு அழைப்பு வரும் என்று நம்பலாம். நிங்கள் அவன் உருவத்தைப் பார்க்கலாம்., அவன் இருப்பதை உணரலாம் அவனும் உங்களை உணர்வுபூர்வமாக அறிவான் என்பதை நம்பலாம். அவன் என்ற சொல்லில் இருக்கும் அந்த ஆளுமை அவனோடு உறவு கொள்ள வைக்கிறது. அவனை வழிபடச் செய்கிறது.

கடவுளுக்கு ஓர் ஆளுமை இல்லை என்றால் அவர் உங்கள் அறிவுக்கு மிகவும் அப்பால் இருப்பார். அவருடைய இருப்பை உங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

நீங்கள் ஆளுமை உள்ள ஒரு மனிதர். உங்களுக்கு மனித ஆளுமை உள்ள கடவுள்தான் தேவை. ஏனென்றால் உங்களால் ஒரு மனிதனுடன்தான் உறவு கொள்ள முடியும். நீங்கள் ஆள்சார்பற்ற நிலையில் இருந்தால்தான் உங்களால் ஆள்சார்பற்ற ஒரு கடவுளிடம் உறவு கொள்ள முடியும்.

கீழைநாடுகளில் கடவுளைப் பற்றிப் பேசவே பேசாத மதங்களும் இருந்திருக்கின்றன. புத்த மதமும் சமண மதமும் கடவுளைக் கண்டுகொள்வதில்லை. அந்த மதங்களால்

வழிபாட்டைப் பற்றியோ அன்பைப் பற்றியோ உரிமையோடு பேசமுடியாது.

கடவுள் கொள்கையை விட்டெறிந்துவிட்டால் தனிமனிதக் கடவுள் இல்லையென்றால். ஆக்கியோன் என்று யாரும் இல்லையென்றால் அங்கே வெறுமைதான் மிஞ்சும். உங்களைப் பார்த்துக் கொள்ள, துன்பம் நேர்கையில் உங்கள் கைகளைப் பிடித்துக்கொள்ள, உங்களைத் தழுவிக்கொள்ள அன்பே உருவான ஆண்டவன் இருக்கமாட்டான்.

கடவுளே இல்லையென்றால் பின் பிரார்த்தனை, ஜெபம் இவை எதுவும் இருக்காது.

ஆடல், பாடல், வழிபாடு கண்ணீர் மல்க வேண்டிக் கொள்ளுதல் எதுவும் இருக்காது. யாருக்காகப் பாட வேண்டும் யாருக்காக ஆட வேண்டும்? யாரை நினைத்துக் கண்ணீர் சிந்த வேண்டும்? யாருமே இல்லையே!

இருப்புநிலை பிரம்மாண்டமானது. கடவுளை ஏன் இருப்புநிலை என்று சொல்லக்கூடாது என்று கேட்கிறீர்கள். "இருப்புநிலையோடு" எப்படி உறவு கொண்டாட முடியும்? அந்தப் பிரம்மாண்டத்தை அணைத்துக் கொள்ள முடியுமா என்ன?

இறைவனை "அவன்" என்று அழைக்கும்போது அவன் உங்கள் அளவிற்கு சிறியவன் ஆகிவிடுகிறான். அவன் கையை நீங்கள் பற்றிக் கொள்ளலாம். பிரம்மாண்டமான இருப்புநிலையின் கைகளை எப்படிப் பற்றுவீர்கள் சொல்லுங்கள். இறைவனை அவன் என்று அழைக்கும்போது அதில் அன்பின் மென்சூடு இருக்கிறது. இருப்புநிலை பிணத்தைப் போல் சில்லிட்டுக் கிடக்கும். நீங்கள் குளிரில் உறைந்து போவீர்கள். சமணமும் சாக்கியமும் தத்துவப் பிரச்சினைகள் வந்ததால் கடவுள் கொள்கையைக் கைவிட்டுவிட்டன.

மொழி, இலக்கணம், தர்க்கம் போன்றவற்றால் பிரச்சினை ஏற்படலாம் என்று கடவுள் என்ற கோட்பாட்டையே ஒட்டு மொத்தமாகக் கைகழுவிவிட்டார்கள் அவர்கள். கூடவே பிரார்த்தனையும் போய்விட்டது. அதனால் சமண மதத்திற்கு

வறுமை வந்து சேர்ந்தது. தியானம் மட்டும் மிஞ்சியிருந்தது. அந்தத் தியானத்தின் தனிமை அவர்களைச் சுட்டெரிக்கத் தொடங்கியது.

நீங்கள் தனியாகத் தியானம் செய்யலாம் ஆனால் கூட்டமாகச் சேர்ந்துதான் வழிபாடு செய்ய வேண்டும். வழிபாடு என்பது தோழமை தோய்ந்த ஒரு கூட்டு முயற்சி. கிறிஸ்துவர்கள், யூதர்கள், முகமதியர்கள் ஆகியோர் வழிபாட்டின் வலிமையை நன்கறிவார்கள். சமணமும் சாக்கியமும் வழிபாட்டு உணர்வையே தொலைத்துவிட்டன.

வழிபாட்டு உணர்வுக்கென்று தனியாக ஓர் அழகு இருக்கிறது. தியானம் செய்பவன் தன்னைத் தனக்குள் வைத்துப் பூட்டிவிடுகிறான். அவன் தனிமையில் தகித்துக் கொண்டிருக்கிறான். அவன் மௌனமாக இருக்கலாம். ஆனால் பரவசநிலையை ஒருநாளும் அடைய முடியாது.

இருவர் இருந்தால்தான் பரவச நிலை கைகூடும். இருவராவது இருந்தால்தான் அன்பைப் பரிமாறிக்கொள்ள முடியும். நீங்கள் தனியாக இருக்கும்போது மௌனமாக இருக்கலாம். ஆனால் மகிழ்ச்சியில் துள்ளிக் கொண்டு இருக்க முடியாது. உங்களால் நடனம் ஆட முடியாது.

சூஃபி ஞானி கடவுளைக் கூப்பிடுகிறான். அதனால்தான் நடனமாடுகிறான். கடவுளைத் தனிப்பட்ட முறையில் அவன் அழைக்க முடியும்.

இந்தக் கோணத்தில் பார்த்தால் சமணமும் சாக்கியமும் வறுமையில் வாடும் மதங்களாகத் தோன்றுகின்றன.

புத்த மதம் இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்குப் பரவிய போது அவர்கள் புத்தரைக் கடவுளாகச் சித்தரித்தார்கள். அதன்மூலம் வழிபாட்டு முறைகள் அந்த மதத்திற்குள் நுழைந்தன. புத்த மதமும் வேகமாகப் பரவியது.

வழிபாடு சமண மதத்தில் நுழையவேயில்லை. அதனால்தான் அந்த மதம் வேகமாகப் பரவவில்லை. அது ஒரு காலாவதியான

சிறுபான்மை மதமாகவே இன்றும் இருக்கிறது. அது மனிதத் தன்மையில்லாத மதமாகத்தான் இருக்கிறது.

இருப்புநிலை, முழுமை, பரிபூரணத்துவம் – எல்லாம் பெரிய வார்த்தைகள்தான். ஆனால் உயிரில்லாத வார்த்தைகள். முழுமையோடு எத்தனை பேரால் உறவு கொண்டாட முடியும் சொல்லுங்கள். பரிபூரணத்துவத்தை எப்படி பெயரிட்டு அழைப்பீர்கள்? அதனுடன் எப்படித் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வீர்கள்? நீங்கள் ஓர் எறும்பு போல் சிறிதாக இருக்கும் போது பிரம்மாண்டமான முழுமையுடன் எவ்வாறு உறவு வைத்துக் கொள்வீர்கள். அந்த வார்த்தை கோடிட்டுக் காட்டும் பிரம்மாண்டத்தில் நீங்கள் தொலைந்து போய்விடுவீர்கள்.

கடவுளை ஒரு மனிதாபிமானத்துடன் அணுக வேண்டும். இறைவனை "அவன்" என்று அழைப்பது மனிதத்தன்மை. அவனை நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கி உணர்ந்தபின் உணர்ந்து உள்வாங்கிக் கொண்டபின் "அவன்" என்று அழைப்பதை விட்டுவிடலாம். அதற்கு அவசியம் இருக்காது. அவனுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டபின் அவனுடைய எல்லைகளும் உங்களுடைய எல்லைகளும் ஒன்றாக இணைந்தபின் அவனை அழைக்க வேண்டிய அவசியமே இருக்காது.

எந்தச் சொல்லையும் பயன்படுத்தாமல் அவன் முன்னால் நீங்கள் தலை வணங்கினால் போதுமானது. நீங்கள் மௌனமாக அமர்ந்திருந்தால் போதும்; அதில் ஒரு சன்னமான வழிப்பாட்டுணர்வு தோன்றும். ஜெபம் இல்லாமல் பிரார்த்தனை இல்லாமல் ஏன் வார்த்தையே இல்லாமல்கூட உங்கள் வழிபாடு தொடர்ந்து நடந்துகொண்டிருக்கும். எந்தக் குறிப்பிட்ட வழிபாடும் இல்லாமல் இறைவனை வழிபட்டுக் கொண்டிருப்பீர்கள். ஆனால் அது பின்னால் நடக்கப் போகும் நிகழ்வு. முதலில் அவனைப் பெயரிட்டு அழைக்கவில்லையென்றால் எதையோ இழந்தது போல் இருக்கும். அவனிடமிருந்து சற்று விலகியிருப்பது போல இருக்கும்.

இப்போது உங்களுக்கு இரண்டு வழி இருக்கிறது. இறைவனை "அவன்" இல்லை "அவள்" என்று பெண்பாலிட்டு

அழைக்கலாம். இரண்டு வழிகளிலும் இறைவனை அழைத்திருக் கிறார்கள். சூஃபி ஞானிகள் இறைவனை "அவள்" என்று அழைக்கிறார்கள். இறைவனைப் பெண்மையின் வடிவாக, காதலின் வடிவாகப் பார்க்கிறார்கள். கிறிஸ்துவர்களும் யூதர்களும் இறைவனை "அவன்" என்று அழைக்கிறார்கள்.

இதில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பது உங்களைச் சார்ந்தது. இரண்டு வழிகளுக்கும் வேறு வேறு குணங்கள் இருக்கின்றன.

இறைவனை "அவன்" என்று அழைக்கத் தொடங்கிவிட்டால் அவனைத் தேடி நீங்கள் போக வேண்டாம். அவன் உங்களைத் தேடி வருவான். அவன்தான் ஆண் ஆயிற்றே! அதுதான் அதில் உள்ள அழகு.. காதலனுக்காகக் காத்திருக்க வேண்டியவள் பெண்தானே!

நீங்கள் மட்டும் கடவுளைத் தேடிக் கொண்டிருக்கவில்லை. கடவுளும் உங்களைத் தேடிக்கொண்டிருக்கிறார் என்று யூதர்கள் சொல்கிறார்கள். அது தான் "அவன்" என்ற சுட்டுச் சொல்லின் மகாத்மியம். இந்தக் குறியீட்டு மொழி முக்கியத்துவம் வாய்ந்தது. உங்கள் ஆன்மிகப் பயணத்திற்குப் பேருதவி செய்யும் வல்லமை கொண்டது.

யூதர்கள் மேலும் சொல்கிறார்கள்: இறைவன் உங்களைத் தேடிக்கொண்டிருக்கிறான். நீங்கள் காதல் வயப்பட்ட ஒரு பெண்ணைப் போல் அவன் வரவுக்காகக் காத்திருக்கலாம். அந்தக் காத்திருத்தலே மிக உன்னதமான வழிபாடாக அமைந்து விடலாம். அந்தக் காத்திருத்தல் ஒரு கதவு. அதன் வழியாகத் தான் அந்த அன்பு விருந்தாளி உங்களுக்குள் நுழைய வேண்டும். விருந்தாளி வந்து கொண்டிருக்கிறான். எப்போதும் பெண்ணைத் தேடி ஆண் வருவான். உங்களைத் தேடி அவன் வருவான்.

சூஃபிகள் கடவுளைப் பெண்பாலாகக் கொள்கிறார்கள். அப்போது இந்தப் பயணமே மாறிவிடுகிறது. அதன்பின் நீங்கள்தான் அவளைத் தேட வேண்டும். நீங்கள்தான் அவன்

எங்கிருக்கிறான் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். சில நேரங்களில் இந்தப் பயணம் கடினமாகிவிடுவதும் உண்மைதான். கடவுளைத் தேடிக் கொண்டு கிளம்பினால் அந்தத் தேடலில் வெற்றி பெறுவது ஏறக்குறைய அசாத்தியம்தான்.

அவனை எப்படித் தேடுவீர்கள்? உங்களுக்குத்தான் விலாசம் தெரியாதே? அவன் உங்கள் வழியில் வந்தாலும் உங்களால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியாது. அவன் ஓர் அந்நியனாகத்தான் தென்படுவான். அவனைத்தான் நீங்கள் பார்த்ததேயில்லையே பின் பார்த்தால் எப்படி இனம் கண்டுகொள் வீர்கள்?

அவன் எப்படி இருப்பான் என்றே தெரியாத போது "ஓ இதுதான் கடவுள்." என்று எப்படி முடிவு செய்வீர்கள்? அது கஷ்டம்.

எங்கே போய் அவனைத் தேடுவீர்கள்? காசி, மதுரா, மெக்கா ஜெருசலம்? எங்கே போவீர்கள்? இமயமலைக்கா? எப்படி நகர்வீர்கள்? எந்தத் திசையில் செல்வீர்கள்? ஆரம்பத்தி லிருந்தே குழப்பம்தான்.

அவனைத் தேடிப் போவதைவிட அவனுக்காகக் காத்திருப்பது சாலச்சிறந்தது. நம்பிக்கையுடன் பிரார்த்தனையுடன் காத்திருங்கள். அவனை உங்கள் பக்கம் வரவிடுங்கள். அதுதான் இறைவனை "அவன்" என்று அழைப்பதன் தாத்பர்யம். அப்போதுதான் அவன் உங்களிடம் வருவான். நீங்கள் பெண்ணாக மாறுங்கள். அவன் ஆணாகவே இருக்கட்டும். காதல் தொடங்கட்டும்.

நீங்கள் ஆணாக மாறினால் கடவுளைத் தேடும் பொறுப்பு உங்களுக்கு வந்துவிடும். சூஃபி கடவுளிடம் செல்கிறான். யூதனிடம் கடவுள் வருகிறார்.

அதைத் தீர்மானிக்க வேண்டியது நீங்கள். கடவுளை "அவன்" என்று கூப்பிடவேண்டும் என்று நான் சொல்லவில்லை. என்னைக் கேட்டால் 'அவன்' சுருக்கமாகவும் இருக்கிறது. அழகாகவும் இருக்கிறது.

ஆனால் நீங்கள் பெண்ணிய இயக்கத்தைச் சேர்ந்தவர் என்றால் அவனை "அவள்" என்றே அழைக்கலாம். ஆனால் அதன் விளைவுகளை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அது வெறும் இலக்கணம்-மொழியியல் சம்பந்தப்பட்ட விஷயமில்லை. அது ஒரு மனப்பாங்கு. கடவுளை அவன் என்று அழைக்கும்போது உங்களை நீங்கள் பெண் என்று பாவிக்கிறீர்கள்.

அதன் பின் உங்கள் ஆன்மிகப் பயணமே வேறு திசையில் இருக்கும். கடவுளை "அவள்" என்று அழைக்கும்போது உங்களை நீங்கள் ஆண் என்று பிரகடனப் படுத்துகிறீர்கள். ஆண் ஆளுமை மிக்கவன். இறைவனை "அவள்" என்று அழைக்கும்போது உங்களிடம் ஆளுமையும் ஆக்ரோஷமும் அதிகரிக்கும். கடவுளை வெல்ல வழியிருக்கிறதா என்று பார்ப்பீர்கள். கடவுள் உங்களிடம் சரணடைய வேண்டும். என்று நினைப்பீர்கள். அதன்பின் நீங்கள் எப்படி இறைவனிடம் சரண்புக முடியும்? ஆளுமைமிக்க ஆண்மனத்தை ஆக்ரோஷமாக வைத்துக் கொண்டு அல்லல் பட்டுக் கொண்டிருப்பீர்கள்.

கடவுளை "அவன்" என்று அழைத்தால் நீங்கள் அவனிடம் சரண் புக வேண்டும். அவன் உங்களை வெல்ல வேண்டும். உங்கள் தோல்வியில்தான் நீங்கள் வெற்றி காண வேண்டும். அவன் வந்து உங்களை அடக்கி ஆண்டு தடயமில்லாமல் அழித்துவிட வேண்டும். பின் மீண்டும் உருவாக்க வேண்டும்.

நான் நினைப்பது இதுதான். கடவுளை "அவன்" என்றே அழையுங்கள். அதில் ஆயிரம் நன்மை இருக்கிறது. நீங்கள் ஆசீர்வதிக்கப்படுவீர்கள்.

இந்த முதல் கேள்வியிலேயே இரண்டாவது கேள்வியும் இருக்கிறது.

*இந்தக் கேள்வி இன்னும் ஆழமாக இருக்கும் எனது பிரச்சினைக்கான நுழைவுவாயில் அவ்வளவுதான். ஓஷோ, நான் எப்படி உங்கள் அதிகாரத்தை நம்ப முடியும்? அதிகாரம் செலுத்தும் உங்களை எப்படி நேசிக்க முடியும்?*

எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. நீங்கள் என் அதிகாரத்தை நம்ப வேண்டாம்.. நான் ஒரு மனிதன். ஒரு நிகழ்வு. அவ்வளவுதான். நான் அதிகாரம் இல்லாதவன். நான் உங்களிடம் எதையும் நிரூபணம் செய்ய முயலவில்லை. நான் எந்தத் தத்துவத்தையும் உபதேசிக்கவில்லை. உங்களை எதையாவது நம்ப வைக்கவேண்டும் என்று நான் நினைத்ததில்லை.

நான் எந்த மரபையும் சாராதவன். அதனால்தான் எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. மரபுகளுக்குத்தான் அதிகாரம் இருக்கிறது. ஓர் இந்துவிற்கு அவனுடைய வேதங்கள், உபநிஷத்துகள் பகவத் கீதை போன்றவை அதிகாரத்தைக் கொடுக்கின்றன. முகமதியனின் அதிகாரம் குரானிலிருந்து வருகிறது. கிறிஸ்துவனின் அதிகாரம் பைபிளில் இருந்து போப்பாண்டவரிடமிருந்து வருகிறது.

மரபிலிருந்துதான் அதிகாரம் வருகிறது. நான் எந்த மரபையும் சாராதவன். நான் இன்ன மரபின் வழி வந்தவன் என்று எப்போதும் உரிமை கொண்டாடியதில்லை. நான் தனியாளாக வந்திருக்கிறேன். எனக்கு எந்த மரபும் அதிகாரம் வழங்கவில்லை.

"நான் சொல்வதுதான் சரி. ஏனென்றால் வேதங்கள் இதைத்தான் சொல்கின்றன" என்று நான் உரிமை கொண்டாட முடியாது.

'நான் சொல்வதெல்லாம் சரி. ஏனென்றால் ஏசுநாதரும் முகமது நபிகளும் இதைத்தான் சொன்னார்கள்.' என்று என்னால் சொல்ல முடியாது.

நான் யாருடைய ஆதரவையும் நம்பி இருக்கவில்லை. நான் சொல்வதெல்லாம் நான் சொல்வதுதான். எனக்குத் தெரிந்ததை தெரிந்த மாதிரிச் சொல்கிறேன். நான் ஒரு தனி மனிதன். ஒரு தனி நிகழ்வு. என் அதிகாரத்தை நீங்கள் நம்ப வேண்டாம். நான் ஒரு வல்லுனன் இல்லை. விற்பன்னன் இல்லை. நான் ஒரு புரட்சிக்காரன். புரட்சிக்காரனுக்கு என்ன அதிகாரம் இருக்க முடியும்?

நீங்கள் என்னைப் பார்க்கலாம். என்னுள் பார்க்கலாம். என் கண்களை நேருக்கு நேராகப் பார்க்கலாம். என்னை உணரலாம். என்னைப் பருகலாம். அதன்பின் நான் யாரென்று தீர்மானம் செய்து கொள்ளலாம்.

நம்மிடையே இருக்கும் உறவு அதிகாரம் படைத்தவனுக்கும் அதிகாரமே இல்லாதவனுக்கும் இடையில் இருக்கும் உறவு இல்லை. அறிவாளிக்கும் அறிவிலிக்கும் இடையில் உள்ள உறவு இல்லை. ஆசிரியனுக்கும் மாணவனுக்கும் இடையில் உள்ள உறவு இல்லை.

பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் பேராசிரியருக்கு அதிகாரம் இருக்கிறது. மாணவன் அவரிடமிருந்துதான் படிக்க வேண்டும். எது சரி எது தவறு என்று பேராசிரியருக்குத் தெரியும். மாணவன் ஒன்றும் பேசாமல் அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

எனக்கு எந்த உரிமையும் கிடையாது. நான் இங்கிருக்கிறேன். நான் ஒரு பிரகடனம். ஒரு வெளிப்பாடு. நீங்கள் என்னைக் கவனிக்கிறீர்கள். என்னை உள்வாங்கிக் கொள்கிறீர்கள். என்னைப் பருகுகிறீர்கள். என்னைச் சுவைக்கிறீர்கள்.

அந்தச் சுவை உங்கள் மனதில் ஏதாவது தீர்மானங்களை விதைத்தால் நல்லது. இல்லாவிட்டால் நான் உங்களுடையவன் இல்லை. நீங்கள் என்னுடையவர் இல்லை. எனக்கு டாட்டா காட்டிவிட்டு வெளியே செல்லுங்கள். நீங்கள் இங்கு இருக்க வேண்டிய தேவை இல்லை. அது பயனற்றது.

இது ஒரு காதல் கதை. நீங்கள் ஒருவனைக் காதலித்தால் அவனுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று கேட்க மாட்டீர்கள். காதல் கிறுக்குத்தனமானது. காதல் ஒரு மாபெரும் பைத்தியக்காரத்தனம்.

என்னிடம் கிறுக்குத்தனமாக இருக்கும் தைரியசாலிகளுக்காகத் தான் நான் இங்கு முகாமிட்டிருக்கிறேன். விசித்திரமானவர் களுக்காகத்தான் நான் இருக்கிறேன். தேர்ந்தெடுக்கப்பட்ட வெகு சிலருக்காகத்தான் நான் இங்கு இருக்கிறேன். காவல், பாதுகாப்பு, அதிகாரம் புனித நூல்கள் மரபு ஆகிய எல்லை

களைக் கடந்து வருபவர்களுக்காகத்தான் நான் காத்திருக்கிறேன். என்னுடன் கூட இருட்டில் நடந்து வருபவர்களுக்காகத்தான் நான் இருக்கிறேன். அபாயங்கள் நிறைந்த வழியைத் தேர்ந்தெடுப்பவர்களுக்காகத்தான் நான் இருக்கிறேன்.

கவனமாகக் கேட்டுக் கொள்ளுங்கள். நான் உங்களுக்கு எந்த உறுதிமொழியையும் கொடுக்கவில்லை. உள்ளபடிக்கு இந்தச் சூழலில் இந்த விஷயத்தில் எந்த உறுதிமொழியும் தர முடியாது. மெய்ப்பொருள் கிடைக்கும் என்று யாரும் உறுதிமொழியளிக்க முடியாது. நீங்கள்தான் அதை உணர வேண்டும். அதிகாரம் நம் அறிவிற்கு - நம் மூளைக்கு - ஏற்றதாக இருக்கலாம். நான் உங்கள் அறிவிற்கு மனுச் செய்யவில்லை. இதயத்திற்கு மனுச் செய்கிறேன். இதயம் அதிகாரத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

ஒரு பெண்ணின் மேல் காதல் வயப்படும்போது நீங்கள் அவள் அதிகாரத்தைப் பற்றிக் கேட்பீர்களா என்ன? அவள் அழகாக இருப்பதற்கு எகிப்து நாட்டின் கிளியோபாட்ரா அவளுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறாளா என்ன? அவளிடம் சான்றிதழ்கள் கேட்பீர்களோ? வல்லுனர்கள் அவளைப் பரிசோதித்துப் பார்த்து 'இவள் அழகிதான்' என்று சான்றிதழ் கொடுத்திருக்கிறார்களா என்ன?

அவளை மருத்துவரிடம் அழைத்துச் சென்று அவள் அழகைப் பரிசோதிக்கச் சொல்வீர்களா? இல்லை அழகின் தத்துவம் உணர்ந்த ஒரு ஞானியை அவள் அழகுக்குச் சான்றுரைக்கச் சொல்வீர்களா?

ஒட்டு மொத்த உலகமும் ஒரு கட்சியாகச் சேர்ந்து கொண்டு 'இவள் அழகி இல்லை' என்று சொன்னாலும் நீங்கள் என்ன சொல்வீர்கள்? "உங்களை யார் கேட்டது? நான் அவளைக் காதலிக்கிறேன். என் கண்களுக்கு அவள் அழகாக இருக்கிறாள்."

நீங்கள் அவளைக் காதலிப்பதால் அவள் அழகாக இருக்கிறாள். அவள் அழகாக இருப்பதால் நீங்கள் அவளைக் காதலிக்கவில்லை.

நீங்கள் என்னை நேசித்தீர்கள் என்றால் எனக்கு உரிமை இருக்கும். இல்லையென்றால் இருக்காது. எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று நீங்கள் கேட்கத் தொடங்கினால் அதன்பின் என்னை நீங்கள் நேசிக்கவே மாட்டீர்கள். அந்தச் சூழ்நிலையில் நாம் பிரிவதுதான் நல்லது. எவ்வளவு சீக்கிரம் பிரிகிறோமோ அவ்வளவு நல்லது.

நான் எந்த உரிமையும் கொண்டாடப் போவதில்லை. எனக்கு எந்த உரிமையும் கிடையாது. நீங்கள் ஆளைத்தான் பார்க்க வேண்டும்; அதிகாரத்தை அல்ல. நீங்கள் எனக்குள்ளே பார்க்க வேண்டும். என் இருப்புநிலையை உள்ளபடி பார்க்க வேண்டும். அதை அன்யோன்யத்துடன் உணர வேண்டும்.

அதனால்தான் உங்களுக்குத் துணிச்சல் தேவை என்று சொல்கிறேன். துணிச்சல் உள்ளவன்தான் காதலிக்க முடியும். உலகிலேயே மிகவும் துணிச்சலான செயல் அன்பு காட்டுவதுதான். ஏனென்றால் அது எதையும் சார்ந்து நிற்பதில்லை. ஓர் ஊகத்தை ஓர் உள்ளுணர்வை மட்டுமே நம்பித்தான் அன்பு காட்டுகிறோம். காதலிக்கிறோம். அன்பிற்கு வேறு ஆதாரங்கள் இல்லை. அன்பு வேறு ஆதாரங்களைக் கேட்பதில்லை. தன்னையன்றி வேறு ஆதாரத்தை அதனால் கொடுக்க முடியாது.

யூதர்கள் ஏசுநாதரை நிராகரிக்க வேண்டியிருந்தது. ஏன்? ஏசுநாதரிடம் எந்த அதிகாரமும் இல்லை.

"எந்த உரிமையில் இப்படிப் பேசுகிறீர்கள்? யார் உங்களுக்கு இந்த அதிகாரத்தைக் கொடுத்தது?" என்று ஏசுநாதரை மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஏசுபிரானுக்கு யார் உரிமை கொடுப்பது? யூதர்களின் கேள்விக்கு ஏசுநாதரின் பதில் அபத்தமாக இருந்தது.

"அதிகாரம்? ஆபிரகாமுக்கு முன்னால் தோன்றியவன் நான்."

ஆபிரகாம் யூதர்களின் மிகப் புனிதமான மனிதர். அவர்கள் வழிபடும் தீர்க்கதரிசி. ஏசுநாதர் சொல்கிறார்

"ஆபிரகாமுக்கும் முற்பட்டவன் நான். அவர் கூட எனக்கு அதிகாரத்தை வழங்க முடியாது. நான் அவரைப் பின் தொடரவில்லை. அவருக்கும் முன்னால் இருக்கிறேன்."

இது அபத்தமானது. இருவருக்கும் உள்ள கால இடைவெளி மிக மிக அதிகம். ஏசுநாதர் பிறப்பதற்கு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்தவர் ஆபிரகாம். ஏசு சொல்கிறார் "ஆபிரகாமுக்கு முன்னால் நான் இருக்கிறேன். என் இருப்புநிலை ஆபிரகாமுக்கு முற்பட்டது. யார் எனக்கு அதிகாரம் வழங்க முடியும்?"

அவர் சொல்வது சரிதான். அவர் தனக்குள் இருந்த மூலத்தைத் தொட்டவர். அது காலம் கடந்தது; என்றும் இருப்பது. அவர் தொட்ட அந்த மூலத்தை நிரூபணம் செய்ய எந்த அதிகாரமும் தேவையில்லை. மாறாக ஆபிரகாம் சொன்னது சரிதான் என்பதற்கான அதிகாரத்தை ஏசுநாதர் தந்தார். இது நம்பமுடியாத ஒரு கூற்று.

அதைத்தான் நானும் சொல்கிறேன். கிருஷ்ண பரமாத்மா சரி என்பதற்கு நான்தான் சான்று. புத்தர் சரி என்பதற்கு நான்தான் ஆதாரம். ஏசுநாதர் சரி என்பதற்கு நான்தான் சான்று. எனக்கு அவர்கள் யாருமே அதிகாரம் கொடுக்கவில்லை.

முடிவாகச் சொல்கிறேன். எனக்கு எந்த உரிமையும் இல்லை. எந்த அதிகாரமும் இல்லை. நான் இங்கே இருக்கிறேன். வேண்டுமென்றால் வாருங்கள். இல்லையென்றால் உங்கள் வழியைப் பார்த்துக் கொண்டு போங்கள்.

இரண்டாவது கேள்வி:

*ஓஷோ*

*அறிவுதான் புரிந்துணர்வு என்று நான் தெரிந்து கொண்டிருக்கிறேன். ஞானிகளின் ஞானம்தான் கால காலமாய் நிற்கும் ஞானம். அந்த ஞானத்திற்கு அழைத்துச் செல்லுங்களேன்.*

ஒரே கேள்வியில் மூன்று கேள்விகள் இருக்கின்றன. முதல் கேள்வி: "அறிவுதான் புரிந்துணர்வு என்று நான்

புரிந்து கொண்டிருக்கிறேன்." இல்லை, ஐயா, அறிவு எப்போதும் புரிந்துணர்வு ஆகாது. அறிவு என்பது புரிந்துணர்வின் மோசமான போலி. ஏமாற்று வேடம். அறிவு என்பது செல்லாக்காசு, புரிந்துணர்வின் மோசமான மாற்று. அறிவு கடன் வாங்கப்பட்டது. புரிந்துணர்வு என்றும் கடன் வாங்கப்படமாட்டாது.

புரிந்துணர்வு உங்களுடையது. அறிவு அடுத்தவர்களுடையது. விழிப்புணர்வால் புரிந்துணர்வு ஏற்படுகிறது. கல்வியால் ஏற்படுவது அறிவு. இரண்டுக்குமான நடைமுறைகள் முற்றிலும் வேறுபட்டவை. ஒன்றுக்கு ஒன்று நேர் எதிரானவை.

உங்களுக்குப் புரிந்துணர்வு வேண்டுமென்றால் நீங்கள் கற்றதை எல்லாம் மறக்க வேண்டும். அறிவு ஒரு தடுப்புச் சுவராகவே செயல்படுகிறது. அறிவை நழுவவிட வேண்டும். அறிந்தவை அகன்றால்தான் அறியாதவை உங்களுக்குள் மலரும்.

அறியாதவற்றைப் பற்றியது புரிந்துணர்வு. தெரிந்தவற்றைப் பற்றியது அறிவு. அறிவு உங்கள் ஞாபகசக்தி சம்பந்தப்பட்டது. புரிந்துணர்வு உங்கள் இருப்புநிலை சம்பந்தப்பட்டது. அறிவு என்பது கடன் வாங்கப்பட்ட வெளிச்சம். பிரதிபலிக்கப்படும் ஒளி. அறிவு நிலவைப் போன்றது. புரிந்துணர்வு சூரியனைப் போன்றது. நிலவிற்கு ஒளி சொந்தமில்லை. அது சூரியனின் ஒளியால்தான் ஒளிர்கிறது. சூரியனுக்குத்தான் எல்லா ஒளியும் சொந்தம்.

நீங்கள் சொல்கிறீர்கள்: "அறிவுதான் புரிந்துணர்வு என்று நான் புரிந்து கொண்டிருக்கிறேன்." நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் ஐயா.

இரண்டாவது "ஞானிகளின் ஞானம்தான் கால காலமாய் நிற்கும் ஞானம்.." இல்லை. நிச்சயமாக இல்லை. ஞானிகளின் ஞானத்திற்கும் காலத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அது காலகாலமாய் நிற்கும் ஞானம் இல்லை. அது வேறு. காலகாலமாய் நிற்கும் ஞானம் மக்களுடைய அறிவின் கூட்டுத்தொகை. மனித இனத்திற்கு ஏற்படும் அனுபவங்களின் மொத்த விளைவு.

மக்கள் வாழ்கிறார்கள். அனுபவங்களைப் பெறுகிறார்கள். அவற்றிலிருந்து அறிவை அனுமானிக்கிறார்கள்.

காலகாலமாய் இருக்கும் ஞானம் மக்கள் கூட்டத்தின் மூலமாக வருகிறது. அது கூட்டு அறிவு. அது காலத்தின் விளைவு. அனுபவத்தின் விளைவு. ஞானிகளின் ஞானம் காலத்தினால் வருவது அல்ல. அது காலம் கடந்த நிலையிலிருந்து வருகிறது. ஒரு மனிதன் காலம் கடந்து செல்லும் போதுதான் அவன் ஞானியாகிறான். அவன் காலத்திற்குள் செயல்பட்டால் அறிவாளியாகிறான். ஒரு வயதான மனிதன் தன் அனுபவத்தால் அறிவாளியாக இருக்கலாம். ஆனால் ஞானியாக இருக்கமாட்டான். வயதானவன் ஞானியாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஞானி வயதானவனாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை.

ஆதிசங்கரர் இளைஞர். அவர் இறக்கும்போது அவருடைய வயது 33. ஆனாலும் அவர் பெரிய ஞானியாகத் திகழ்ந்தார். புத்தர் ஞானம் பெற்றபோது அவருக்கு நாற்பது வயதுகூட ஆகியிருக்கவில்லை. முகமது நபிகளுக்கு ஞானம் கிடைத்தபோது அவருடைய வயது நாற்பது. அவர்கள் தங்களைவிட வயதானவர்களை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது.

ஞானம் பெற்றவுடன் புத்தர் தன் தந்தையிடம் அதைப் பகிர்ந்து கொள்ளப் போனார். ஒரு தந்தை அந்தச் சூழ்நிலையில் எப்படி நடந்து கொள்வாரோ அப்படியே நடந்து கொண்டார் புத்தரின் தந்தை. புத்தரின் மூடத்தனத்தைப் பார்த்துச் சிரித்தார்.

“என்ன? நீ எனக்கு போதிக்கப் போகிறாயா? நீ என் மகன். நான் உன்னைவிட வயதில் பெரியவன். நான் உன் தந்தை. நான் இந்த உலகை நன்கு அறிவேன். எனக்கு வாழ்க்கையைப் பற்றியும், அதன் சுக துக்கங்களைப் பற்றியும் நன்றாகத் தெரியும். நிச்சயமாக உன்னைவிட அதிகமாகவே எனக்குத் தெரியும்.”

புத்தர் அமைதியாகச் சொன்னார்:

“அதை நான் மறுக்கவில்லை, தந்தையே! அறிவு என்று வந்துவிட்டால் உங்களுடையதுதான் அதிகம். உங்கள் நினைவுகள் என் நினைவுகளைவிடப் பல மடங்கு பெரியவை. ஆனால் நான் உங்களுக்கு அறிவைக் கொண்டு வரவில்லை. புதிதாக ஒன்றை எடுத்து வந்திருக்கிறேன். எனக்குள் ஒளி வந்திருக்கிறது. அது ஒரு தீக்கனல். நீங்கள் இன்னும் இருட்டிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறீகள் என்று எனக்குத் தெரிகிறது.”

தந்தை காயப்பட்டார். அவர் அகந்தைக்கு அடி விழுந்தது. அவருக்குக் கோபம்தான் வந்தது.

ஏசுநாதருக்கும் வயது அதிகம் இல்லை. வயதான யூத ரேபிக்கள் (யூத பூசாரிகள்) அவரை ஏற்றுக் கொள்ளாததில் வியப்பில்லை. உலகம் அறியாத ஒரு பாலகனின் வார்த்தையை அவர்கள் ஏன் கேட்க வேண்டும்? இன்னும் வாழவே ஆரம்பிக்காத இளைஞனின் சொற்களை அவர்கள் ஏன் கேட்க வேண்டும்?

ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டபோது அவருடைய வயது 33. அவருக்கு 30 வயதானபோது அவர் போதிக்க ஆரம்பித்தார்.

தனது தந்தையின் மரக்கடையில் ஏசுநாதர் மரத்தை இழைத்து வேலை பார்த்துக் கொண்டிருந்தது மக்களுக்குத் தெரியும். அவர் ஒரு தச்சு வேலைக்காரனின் மகன் மகன் ஞானியாவான் என்று அவர்கள் கனவிலும் கருதவில்லை.

ஒரு நாள் திடீரென்று ஏசுநாதர் ‘நான் இறைத்தூதன். நான் கடவுளின் மைந்தன்’ என்று தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டால் மக்கள் எப்படி அவரை நம்புவார்கள்? அவரை ஒரு தச்சுவேலைக்காரார் என்றுதான் அவர்கள் அறிவார்கள். அவர்களுக்காக மரச்சாமான்கள் செய்து கொடுத்துவந்தவர், ஊரில் சின்னச் சின்ன வேலைகள் பார்த்துக் கொண்டிருந்தவர் திடீரென்று தன்னை இறைவனின் தூதன் என்று சொல்லிக் கொண்டால்.. .. .. ‘பாவம் இந்த இளைஞனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது’ என்று நினைப்பார்கள்..

இதை மட்டும் நன்றாக மனதில் வாங்கிக் கொள்ளுங்கள். எப்போதும் ஞானம்தான் சிலுவையில் அறையப்படும். ஞானத்தைத்தான் கழுவில் ஏற்றுவார்கள். ஏனென்றால் மெத்தப் படித்த மேதாவிகளால் ஞானத்தைச் சகித்துக் கொள்ள முடியாது. அது அவர்களுக்குக் கசப்பானது.

ஞானம் காலத்திற்கு அப்பாற்பட்டது. அதற்கும் உங்கள் வாழ்க்கை அனுபவங்களுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. எதை நீங்கள் 'காலகாலமாய் நிற்கும் ஞானம்' என்று அழைக்கிறீர்களோ அது வேறு வகையைச் சேர்ந்தது. அது வெகுஜன அறிவு.

இந்தப் பூமியில் மனிதர்கள் பல்லாயிரம் ஆண்டுகள் வசித்து வந்திருக்கிறார்கள். வாழும் காலத்தில் பலவற்றை அனுபவித்திருக்கிறார்கள். அந்த அனுபவங்களிலிருந்து அறிவு பெற்றிருக்கிறார்கள். அந்த அறிவைப் பயன்படுத்திச் சில முடிவுகளை எடுத்திருக்கிறார்கள்.

ஞானம் ஒரு முடிவு அல்ல. அது அனுபவத்திலிருந்து பிறந்ததல்ல. ஒளிரச் செய்வது ஞானம்.

ஞானம் ஒரு வெளிப்பாடு. அது மின்னலைப் போல் திடீரென்றுதான் வரும். அதற்குச் சான்றுகள் இல்லை. அதை இன்னொரு பொருளைக் கொண்டு நிரூபிக்க முடியாது. அதன் தன்மை அப்படிப்பட்டது. நிரூபணத்திற்கும் தர்க்கத்திற்கும் அப்பாற்பட்டது ஞானம்.

ஒன்று நீங்கள் அதை நேசிக்க வேண்டும். இல்லை அதன் பக்கத்திலேயே போகக்கூடாது. திடீரென்று வரும் ஞானத்திற்கும் உங்கள் வாழ்க்கைச் சூழலுக்கும் சம்பந்தம் இல்லை. ஞானத்துக்கும் நீங்கள் பெற்ற அனுபவங்களுக்கும் சம்பந்தம் இல்லை. பின் ஞானத்தை எப்படி நிரூபிக்க முடியும்? ஏசுநாதர் எந்த ஆதாரத்தை உங்களுக்குக் காண்பிப்பார்? அவர் உங்களுக்காகத் தன் உயிரைக் கொடுக்க முடிந்ததே யொழிய தன் ஞானத்தை நிரூபிக்க முடியவில்லை.

உங்களுக்கு ஏசுநாதர் கதை நினைவிருக்கிறதா? அவரைச் சிலுவையில் அறையும் முன் ரோம் நாட்டின் ஆளுநர் அவரை என்ன கேட்டார் தெரியுமா?

பாண்ட்டியஸ் பைலேட் என்ற பெயருடைய அந்த ஆளுநர் "எது உண்மை?" என்று ஏசுபிரானிடம் கேட்டார். ஏசுநாதர் மௌனமாக இருந்தார். அவர் ஆளுநரின் கண்களை உற்றுப் பார்த்தார். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஏன் அவர் பேசவில்லை? அவர் ஏதாவது சொல்லியிருக்கலாம். ஆனால் உண்மையை வார்த்தையால் விளக்க முடியாது.

அது மட்டுமல்ல ஏசுநாதர் போன்ற ஒரு மனிதரிடம் "எது உண்மை?" என்று கேட்பது முட்டாள்த்தனம். ஏனென்றால் ஏசுநாதர்தான் உண்மை. அவரே பல முறை சொல்லியிருக்கிறாரே

"நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன்."

அதைச் சொல்வதால் என்ன பயன்? ஏசுநாதர் பாண்ட்டியஸ் பைலேட் முன் நிற்கிறார். உண்மையே உருவெடுத்து ஆளுநர் முன் நிற்கிறது. அப்போது பைலேட் "எது உண்மை?" என்று கேட்கிறார்.

ஏசுநாதர் ஒரு பண்டிதரோ பேராசிரியரோ அல்லர். அவர் தத்துவவாதியும் அல்லர். உண்மையைப் பற்றி அவரிடம் ஒரு கோட்பாடு கிடையாது. அவர்தான் உண்மை என்னும்போது கோட்பாட்டினால் என்ன பயன்? ஏசுநாதர் அங்கு மௌனமாக நின்றார். "என்னை நீ பயன்படுத்திக் கொள்ளலாம். என் இருப்புநிலை உனக்கு இப்போது கிடைத்திருக்கிறது.. அதை வைத்துக்கொண்டு நீ கேட்ட உண்மை நான்தான் என்பதை நீ தெரிந்து கொள்ளலாம்.." என்று சொல்லாமல் சொன்னார் ஏசுபிரான்.

ஆனால் பாவம் ஆளுநருக்கு அது புரியவில்லை. அவரால் முன்னால் நிற்கும் உண்மையைப் பார்க்க முடியவில்லை. ஏசுநாதரிடமிருந்து வரும் வார்த்தைகளுக்காக அவர் ஏங்கிக் கொண்டிருந்தார். ஆனால் ஏசுபிரான் ஒரு வார்த்தை கூட பேசவில்லை. என்றாலும் எது உண்மை என்பதைத் தெளிவாக

வெளிப்படுத்தினார். உண்மையைப் பற்றி என்னவெல்லாம் சொல்ல முடியுமோ அதைத் தன் மௌனத்தாலேயே சொன்னார் ஏசுநாதர்.

ஏசுநாதர் தான் இருப்பதாகக் காட்டிக் கொண்டார். அவர் அங்கு இருந்தார். அவருடைய இருப்பு நிலை அங்கு இருந்தது. அவருடைய தாக்கம் அங்கு இருந்தது. எது உண்மை என்று கேள்வி கேட்ட ஆளுநர் கொஞ்சம் புரிந்துணர்வுடன் செயல்பட்டிருந்தால் அவருக்கு உண்மை புரிந்திருக்கும்.

மெய்ப்பொருள் என்பது காலகாலமாக வரும் அனுபவத்தால் விளைவதல்ல. உண்மை அனுபவம் இல்லை. எல்லா அனுபவங்களும் மறைந்து, அனுபவிப்பவன் மட்டுமே தூய உணர்வுநிலையில் திளைத்திருக்கும் போதுதான் உண்மை புலப்படுகிறது.. உள்ளே எதுவும் இல்லாத உணர்வு நிலைதான் உண்மை. அது அனுபவம் இல்லை.

உண்மையை உணரும்போது நீங்கள் எதையும் அனுபவிப்ப தில்லை. அனுபவிக்க ஒன்றுமேயில்லை. எந்தப் பொருளும் இல்லாத தூய்மையான ஆகாசம் மட்டுமே இருக்கிறது. உண்மையை உணர்ந்து கொண்ட தனிமனிதனின் சிலிர்ப்பும் அவனுடைய ஆனந்த நடனமும் மட்டுமே மிஞ்சும்.

ஆம், மெய்ப்பொருள் என்பது உள்ளடக்கம் இல்லாத தூய்மையான உணர்வு நிலை. அது ஓர் அனுபவம் இல்லை.

இறையுணர்வு என்பது ஓர் அனுபவம் அல்ல. அனுபவங்களை எல்லாம் தாண்டிய ஓர் உணர்வு. இந்த உலகம் ஓர் அனுபவம். இறையுணர்வு அனுபவம் இல்லை. பகல்-இரவு, இன்பம்-துன்பம், நன்மை-தீமை போன்ற இரட்டைகள் இருந்தால்தான் அனுபவம் உண்டாகும். நான் உங்களிடமிருந்து தனியாக இருந்தால்தான் உங்களைப் பற்றிய அனுபவம் எனக்கு ஏற்படும். நானும் நீங்களும் ஒன்றாக இருந்தால் உங்களை எப்படி நான் அனுபவிக்க முடியும்?

இருப்பது ஒன்றானால் அதை எப்படி அனுபவம்-அனுபவிப்பவன், அறியப்படுவது-அறிபவன், பார்க்கப்படுவது-பார்ப்பவன் என்று பிரித்துப் பார்க்க முடியும்? அது சாத்தியம் இல்லை. எழுவாயும் செயப்படுபொருளும் தங்கள் எல்லைகளைத் தொலைத்துவிட்டு ஒன்றாக இணைந்துவிட்டன. யார் அறிபவன்? எது அறியப்பட்டது?

ஞானம் என்ற அந்த மின்னல் அறிபவனையும் அறியப்படுவதையும் ஒன்றாக இணைத்துவிடுகிறது. பார்ப்பவனும் பார்க்கப்படும் பொருளும் ஒன்றானால் இரட்டைகள் மறைந்து ஒன்றே ஒன்று மட்டும் அங்கே நிலைத்து நிற்கும். அனுபவத்திற்குக் குறைந்த பட்சம் இரண்டாவது வேண்டும். அனுபவம் இன்னொன்றை நோக்கியே இருக்கும்.

நீங்கள் சொல்கிறீர்கள்: ஞானிகளின் ஞானம்தான் கால காலமாய் நிற்கும் ஞானம்.

இல்லை. நிச்சயமாக இல்லை. ஞானிகளின் ஞானம் காலம் கடந்து நிற்பது. அது அனுபவத்திற்கு அப்பாற்பட்டது. காலகாலமாய் நிற்கும் ஞானம் இம்மைப் பொருள். காலத்தின் பாற்பட்டது. அனுபவத்தைச் சார்ந்து இருப்பது.

மூன்றாவதாக நீங்கள் கேட்பது: அந்த ஞானத்திற்கு அழைத்துச் செல்லுங்களேன்.

அது நடக்காது. அதற்கான வாய்ப்பே இல்லை. வேறு ஒருவர் உங்களை அழைத்துப் போக முடிந்தால் அது ஞானமில்லை. வெறும் அறிவு மட்டுமே. நீங்கள் அறிவு என்ற சிறைக்குள் மாட்டிக் கொள்வீர்கள். ஞானத்தின் பாதையில் யாரும் உங்களை வழிநடத்திச் செல்லமுடியாது. அழைத்துச் செல்லும் அந்த இன்னொரு நபர் உங்கள் அறிவுக்குக் காரணமாக இருப்பார். உங்கள் ஞானத்திற்கு நீங்கள் மட்டுமே காரணமாக இருக்க முடியும்.

இப்போது நீங்கள் என்னைப் பார்த்துக் கேட்கலாம் "பின் நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?"

நான் உங்களை ஞானத்திற்கு அழைத்துச் செல்ல மாட்டேன். என்னால் செய்ய முடிந்ததெல்லாம் ஒன்றுதான் அதுவும் எதிர்மறையானது. நான் உங்கள் அறிவை அழிக்கப் பாடுபடுகிறேன். நான் தடுப்புச்சுவரை இடிக்க முயல்கிறேன். தடைக்கல்லைத் தள்ளிவைக்கிறேன். உங்கள் பாதையை மறித்துக் கொண்டு கிடக்கும் அந்தப் பெரிய பாறாங்கல்லைத் தள்ளி வைக்க முயற்சி செய்கிறேன். அவ்வளவுதான்.

அந்தப் பாறாங்கல்தான் அறிவு. அந்தப் பாறாங்கல் அகற்றப்பட்டால் நீங்கள் ஞானத்தில் பாதையில் ஒரு நதியைப் போல் பாய்ந்து ஓடத் தொடங்குவீர்கள். அந்தப் பாறாங்கல்தான் நீருற்றைத் தடுத்துக் கொண்டிருக்கிறது.

உங்கள் ஞானம் உங்களிடம்தான் இருக்கிறது. அதுதான் உங்கள் உயிர்ச்சத்து. அது தான் உங்கள் மூலாதாரம்.

இதுநாள்வரை நீங்கள் சேகரித்த அறிவை உதறித்தள்ளும் துணிச்சல் உங்களுக்கு வந்துவிட்டதென்றால்...

மீண்டும் வெகுளியாக இருக்கும் அளவிற்கு உங்களுக்குத் தைரியம் இருந்ததென்றால்

மீண்டும் அறியாதவனாக இருக்கும் துணிச்சல் இருந்ததென்றால்...

உங்களால் "எனக்கு ஒன்றும் தெரியாது" என்று தைரியமாகச் சொல்ல முடிந்ததென்றால்.. .. ..

"எனக்கு எதுவும் தெரியாது. என்னிடம் இருப்பதெல்லாம் போலி அறிவு என் அறிவு மற்றவர்களிடம் இரவல் வாங்கிய செல்லாக்காசு" என்று உங்களால் மார்தட்டிச் சொல்ல முடியுமென்றால்.. .. ..

உங்களுக்குள் ஞானம் மலரும்.

நான் உங்களை ஞானத்திற்கு அழைத்துப் போக மாட்டேன். ஞானம் உங்களுக்குள் தானாகவே மலரும். உங்கள் இருப்பு நிலையை அது சூழ்ந்து கொள்ளும். ஒரே ஒரு விண்ணப்பம். நீங்கள் சுமந்து கொண்டிருக்கும் அந்தப் பாறாங்கல்லைத்

தயவு செய்து கீழே போட்டுவிடுங்கள். அந்தப் பாறாங்கல்தான் உங்கள் அறிவு.

அறிவுதான் புரிந்துணர்வு என்று தப்பாகப் புரிந்து கொண்டிருந்தால் எப்படி உங்களால் பாறையைக் கீழே போட முடியும்? நீங்கள் பாறையைப் பாதுகாக்கத் தொடங்குவீர்கள். உலக அறிவை நீங்கள் ஞானம் என்று தப்பாக நினைத்துக் கொண்டிருந்தால் உங்கள் கண்ணுக்கு நான் அந்த அறிவை அபகரிக்கும் பகைவனாகத் தோன்றுவேன்.

உங்கள் குருதேவர் உங்களுக்கு எதிர்மறையாகத்தான் ஏதாவது கொடுக்க முடியும். நேரடியாக எதுவும் தரமுடியாது.

அதைத் தருகிறேன் இதைத் தருகிறேன் என்று நேர்மறை யாகப் பேசும் ஆசான்களிடம் கொஞ்சம் எச்சரிக்கையாகவே இருங்கள். அத்தகையவர்களைத் தவிர்த்துவிடுவதே நல்லது. குருதேவர் உங்களுக்குள்ளே நீங்களே கட்டிக்கொண்ட தடுப்புச்சுவரைத் தகர்த்தெறிய உதவி செய்வார் அவ்வளவுதான்.

குருதேவருடைய வழி எதிர்மறையாகத்தான் இருக்கும். அவர் கொடுக்க மாட்டார். எடுத்துக் கொள்வார். "இது உண்மையில்லை. இது உண்மையில்லை." என்று எல்லாவற்றையும் கழித்துக் கொண்டே வருவார். ஒரு நாள் பார்த்தால் உங்கள் பற்றுக்கோடுகளை எல்லாம் எடுத்துக் கொண்டிருப்பார். பற்ற எதுவும் இல்லாமல் நீங்கள் ஞானத்திற்குள்தான் விழுவீர்கள்.

உங்கள் தடைகளை எல்லாம் அவர் அகற்றியபின் திடீரென்று ஒரு நாள் உங்களுக்குள் அது சம்பவிக்கும். ஒரு மின்னலைப் போல் திடுதிப்பென்று தோன்றும். அதுதான் ஞானம். அதுதான் உங்களின் உண்மையான இயல்பு. உங்களின் அடியாழத்தில் இருப்பது. அதை யாராலும் உங்களுக்குக் கொடுக்க முடியாது.

இந்த உலகத்தில் மூன்றுவகையான குருதேவர்கள் இருக்கிறார்கள் - வசீகரமான குரு, முறைசார்ந்த குரு மற்றும் இயற்கையான குரு. நோய் நீக்கல் துறையில் உள்ளவர்களையும்

இதேமாதிரிப் பாகுபடுத்தலாம். - வசீகரமானவர், முறைசார்ந்தவர் மற்றும் இயற்கையானவர்.

இந்தப் பிரிவுகளை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

வசீகரம் என்ற சொல்லிற்கான ஆங்கில வார்த்தை charisma. இதன் மூலம் உற்சாகம் துடிப்பு போன்ற சொற்களிலிருந்து வருகிறது. வசீகரமான தலைவர்கள் பலரைப் பார்த்திருக்கிறோம். அவரிடம் பொங்கிவரும் உற்சாகத்தில் நாம் அவர் அருகில் இருந்தோமேயானால் அவருடைய அடிமைகளாகி விடுவோம். அவர் உங்களைத் தன் ஆணைக்கீழ் கொண்டுவந்துவிடுவார். அவர் உங்களைப் பற்றிக் கவலைப்பட மாட்டார். உங்களைத் தன் உற்சாகத்தால் மெல்ல மெல்லத் தன் பக்கம் இழுத்துக் கொள்வார். தன் தேவைகளுக்காக உங்களை ஆட்டி வைக்கவும் தயங்க மாட்டார். அவர் உங்களுக்குத் தலைவராக இருப்பார். உங்களை வழிநடத்திச் செல்வார்.

நான் தலைவன் இல்லை. நான் ஒரு வசீகரமான குரு இல்லை. வசீகரமான குரு ஆபத்தானவர். அவர் உங்கள் தனித்தன்மையைக் கொன்றுவிடுவார். உங்களை இல்லாமல் செய்துவிடுவார். ஒரு வசீகரமான குருவின்கீழ் இருப்பது ஒரு பெரிய மரத்தின் நிழலில் வளர முயற்சிப்பதைப் போன்றது. அது சாத்தியமில்லை. அந்தப் பெரிய மரம் பாதுகாப்பானது என்று நினைக்கலாம். ஆனால் அதன் நிழலில் எதுவும் வளராது.

பெரிய ஓக் மரத்தைப் பார்க்கிறீர்கள். அதன் பழங்களிலிருந்து ஆயிரக்கணக்கான விதைகள் கீழே விழும். விழுந்தவுடன் இறந்து போகும். அந்த விதைகள் வளருவதில்லை. அவற்றால் வளர முடியாது. தாய்மரத்தின் அடியிலேயே இருப்பதால் பாதுகாப்பாக இருக்கலாம் என்று அந்த விதைகள் தங்களைத்தாங்களே ஏமாற்றிக் கொள்ளலாம். ஆனால் அந்தப் பாதுகாப்புதான் அந்த விதைகளுக்கு விஷம்.

ஓக் மரத்தின் விதைகள் தாய்மரத்தை விட்டு விலகி வெகுதூரம் செல்ல வேண்டும். சுதந்திரமாக வளர முயற்சிக்க

வேண்டும். இல்லாவிட்டால் அந்த விதைகள் முளைக்கவே முளைக்காது.

வசீகரமான குருமார்கள் ஆபத்தானவர்கள். மக்கள் அவர்கள்பால் ஈர்க்கப்படுகிறார்கள். வசீகரம் மிக்கவன் உண்மையான குருவாக இருக்க முடியாது. அவன் அடிமைகளை மேய்ப்பவனாக வேண்டுமானால் இருக்கலாம். வசீகரமான குரு அரசியல்வாதியைப் போன்றவன். அவனால் ஒரு நல்ல குருவாக இருக்க முடியாது.

ஹிட்லர் முசோலினி போன்றவர்கள் எல்லாம் வசீகரமான தலைவர்கள். வெற்றி பெற்ற தலைவர்கள் அனைவரும் இந்த வகையைச் சேர்ந்தவர்களாகத்தான் இருப்பார்கள். அவர்கள் அப்படியிருந்தால்தான் மக்களை அடிமைகளாக்கிக் கொள்ள முடியும். மக்கள்மேல் தங்களுடைய எதேச்சாதிகாரத்தைச் செலுத்த முடியும்.

இரண்டாவது வகை குரு முறைசார்ந்தவர். இவர் பலமுறைகளைச் சொல்லித்தருவார். தனது உற்சாகத்தையும் ஆளுமையையும் பயன்படுத்தமாட்டார். தன் வசீகரத்தால் உங்களை ஆட்கொள்ள மாட்டார். சில முறைகளை மட்டும் சொல்லித்தருவார். இவர் முதலாமவரைவிடச் சிறந்தவர். ஏனென்றால் இவர் உங்களை அடிமை கொள்ளமாட்டார்.

முறை என்பதற்கான ஆங்கில வார்த்தை "method". அது பின்பற்றுதல் என்ற பொருளுடைய மூலத்திலிருந்து வருகிறது.

இந்த இரண்டாவது வகையான குருதேவர்-தலைவர்-நோய் நீக்குபவர்- தன் சீடனை, தொண்டனை, நோயாளியைப் பின்பற்றுவார். அவர் ஒரு முறையைக் கொடுப்பார். உங்களை வழிநடத்திச் செல்லமாட்டார். உங்களுக்குப் பின்னால் வருவார்.

இந்த வகையைச் சேர்ந்த நோய் நீக்குபவர் நோயாளியைப் பின்பற்றுவார். நோயாளி சொல்வதைக் கவனமாகக் கேட்பார். நோயாளியின் தேவை என்ன என்பதை அறியப் பாடுபடுவார்.

இந்த வகையைச் சேர்ந்த குருதேவர் தன் சீடன் சொல்வதைக் கவனமாகக் கேட்பார். அவனை நன்றாகப் பார்ப்பார். அவன் தேவை என்ன என்பதை அறிய முயற்சிப்பார். பின்னால் இருந்துகொண்டு வழிகாட்டுவார். என்றும் உங்களுக்கு முன்னால் இருக்க மாட்டார். அவர் உங்களைத் தள்ளிவிடுவார். இழுத்துக் கொள்ள மாட்டார். கட்டளையிட மாட்டார். வற்புறுத்திச் சொல்வார்.

இரண்டாவது வகை குருதேவர் முதலாம் வகையைவிடச் சிறந்தவர். ஆனால் பாருங்கள் பலரும் முதல் வகை குருமார்களால் வசீகரிக்கப்பட்டு அவர்களிடம் போய்ச் சேர்வார்கள். வெகு சிலரே இரண்டாவது வகை குருமார்களைத் தேடி வருவார்கள்.

மூன்றாவது வகை இயற்கையான இயல்பான குருதேவர். இயல்பாக நோய் நீக்குபவர். அவர் உங்களை வழிநடத்தவும் மாட்டார். பின்பற்றவும் மாட்டார். உங்களுடன் பயணிப்பார். உங்கள் கைகளைப் பற்றிக் கொள்வார். அவர் உங்கள் தோழர்.

புத்தர் பெருமான் ஓர் இடத்தில் சொல்கிறார் "அடுத்த முறை இந்த உலகில் வரும்போது என் பெயர் மைத்ரேயன் - நண்பன் - என்று இருக்கும்." இது மிக முக்கியமான ஒரு கூற்று.

புத்தர் கௌதம புத்தராக உலா வந்த வாழ்க்கையில் மிகவும் வசீகரம் மிக்கவராக இருந்தார். அளவிட முடியாத உற்சாகமும் சக்தியும் பெற்றிருந்தார். அதனால் பல மக்களை அவரால் ஆட்கொள்ள முடிந்தது.

மகாவீரரோ முறை சார்ந்தவராக இருந்தார்.

புத்தர் சொல்கிறார். "அடுத்த முறை இந்த உலகில் வரும் போது என் பெயர் மைத்ரேயன் - நண்பன் - என்று இருக்கும்."

அவர் சொல்வதன் உட்பொருள் என்ன?

"அடுத்த முறை நான் உங்களுடன் சேர்ந்து பயணிப்பேன். உங்கள் நண்பனாக இருப்பேன். முன்னால் நின்று உங்களை வழிநடத்திச் செல்ல மாட்டேன். பின்னால் இருந்து தள்ளிவிடவும் மாட்டேன். உங்கள் கையைப்பிடித்துக் கொண்டு உங்களுடன் நடப்பேன்."

இது இயல்பானது. இயற்கையானது.; இதுதான் இருப்பதிலேயே சாலச் சிறந்தது. இந்த வகை குருதேவர் மிகவும் அரிதானவர்.

ஆனால் இவரால் மக்கள் கவரப்படமாட்டார்கள். இதில் குருதேவர் எளிமையாக சாதாரணமாக இருப்பார். அவரிடம் எந்த வசீகரத் தன்மையும் இருக்காது. அவர் தன் ஒளி கொண்டு உங்கள் கண்களைக் கூச வைக்க மாட்டார். அவர் எந்த முறையையும் சார்ந்து இருக்க மாட்டார். விஞ்ஞானம் தொழில்நுட்பம் இதற்கெல்லாம் அவரிடம் வேலை இருக்காது. கவித்துவமாகச் செயல்படுவார். சில சமயம் குழப்பவாதியாகவும் இருப்பார். இயல்பாக இருப்பார். இயற்கையின் அமைப்பில் எப்படிக் குழப்பங்கள் இருக்கிறதோ அப்படியே அவரிடமும் இருக்கும்.

நான் ஓர் இயல்பான மனிதன். என்னிடம் எந்த வசீகரமும் இல்லை. வசீகரத்தை நான் நம்புவதும் இல்லை. நான் முறை சார்ந்த வழிகள் எதையும் நம்புவதில்லை. அவற்றைச் சில சமயம் பயன்படுத்துவது உண்மைதான். ஆனால் அவற்றை என்றுமே நம்ப மாட்டேன்.

நான் மிகவும் சாதாரணமானவன். ஒரு கூட்டத்தில் நான் தொலைந்து போனால் என்னை நீங்கள் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். நான் உங்களை வழி நடத்திச் செல்லவில்லை. உங்கள் கையைப் பிடித்துக் கொண்டு உங்களுடன் கூடவே நடந்து வருகிறேன். நான் உங்கள் நண்பன்.

மூன்றாவது கேள்வி:

*ஓஷோ,*

*கார்ல் மார்க்ஸின் தத்துவம் உயர்வு தாழ்வு இல்லாத. ஒரு சமுதாயத்தைப் பரிந்துரைக்கிறது. மறைமுகமாக அவர் மதங்களை ஆதரிக்கிறாரா?*

மறைமுகமாகவோ நேர்முகமாகவோ அவர் மதம் சார்ந்த ஒரு சமுதாயத்தை ஆதரிக்கவில்லை.

உயர்வு-தாழ்வுகள் இல்லாத ஒரு சமுதாயம் அதாவது வகுப்புக்களே இல்லாத சமுதாயத்தை உருவாக்க அவர் கூறும் வழிகள் அபத்தமானவை. அரசாங்கத்தின்மூலம் அத்தகைய சமுதாயத்தை உருவாக்கிவிடலாம் என்று அவர் நினைக்கிறார்.

அவர் சொல்கிறார்: "முதலில் அரசாங்கத்தின் கை ஓங்கவேண்டும். சாதாரண மக்களின் சர்வாதிகார ஆட்சி மலர வேண்டும். அதன்பின் ஒரு நாள் மக்களாட்சி முழுவதுமாக வெற்றி பெற்றபின் அந்த சர்வாதிகாரம் தானாகவே உதிர்ந்துவிடும்." முட்டாள்த்தனமான கொள்கை.

யாருமே அதிகாரத்தை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். அரசிடம் அதிகாரங்கள் குவியக் குவிய அது இன்னும் சக்தியுடையதாகிவிடும். அதன் பின் சமுதாயம் மறைந்தாலும் மறையுமே தவிர அரசாங்கம் என்றும் மறையாது. அதுதான் இன்று ரஷ்யாவிலும் சீனாவிலும் நடந்து கொண்டிருக்கிறது. மார்க்ஸின் ஜோஸ்யம் பொய்த்துவிட்டது.

ஊழலின் ஊற்றுக்கண் அதிகாரம்தான். மட்டற்ற அதிகாரம் மட்டற்ற ஊழலுக்குத்தான் வழிவகுக்கும்.

பாவம் கார்ல் மார்க்ஸுக்கு மனிதனின் மனதைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவருக்குச் சமுதாயத்தின் கட்டமைப்பு, பொருளாதாரக் கட்டமைப்பு நன்றாகத் தெரியும். ஆனால் மனித மனத்தின் கட்ட.மைப்பைப் பற்றிக் கொஞ்சம்கூடத் தெரியாது. ஆனால் இருப்பதிலேயே மனித மனத்தின் அமைப்பு தான் அதிமுக்கியமானது இறுதியில் வெற்றி தோல்வியை நிர்ணயிப்பது அதுதான்.

ஸ்டாலினைப் போன்ற ஒருவர் பிறப்பார் என்று அவருக்குத் தெரியாது. சீனாவில் மா சே துங்கைப் போல் ஒருவர் வருவார் என்று அவருக்குத் தெரியாது. அமெரிக்காதான் முதல் கம்யூனிச நாடாக மாறும் என்று ஆரம்பத்திலேயே தப்புக் கணக்குப் போட்டார்.

அமெரிக்காவைப் போன்ற வளம் மிக்க முதலாளித்துவ சமுதாயம்தான் முதலில் கம்யூனிசக் கொள்கைகளைத் தழுவும் என்று அவர் சொன்னார். ஏனென்றால் முதலாளித்துவ சமுதாயத்தில்தான் பணக்காரனுக்கும் ஏழைக்கும் இடையே இருக்கும் பெரிய இடைவெளி ஏழைகளைப் புரட்சி செய்யத் தூண்டும் என்று தப்புக்கணக்குப் போட்டார்.

அவர் நினைத்ததற்கு நேர்மாறாக நடந்தது இருப்பதிலேயே ஏழையான இரண்டு நாடுகள் கம்யூனிசக் கொள்கைகளைக் கடைபிடித்தன. ஒன்று ரஷ்யா. மற்றொன்று சீனா. இரண்டும் ஏழை நாடுகள். ரஷ்யா கம்யூனிச நாடாகும் என்று அவர் கனவுகூடக் காணவில்லை. ஏன் அமெரிக்கா அப்படி ஆகவில்லை என்று அவரால் புரிந்து கொள்ளமுடியவில்லை.

நடைமுறை நேர் மாறாக இருந்தது. ஏழை-பணக்காரன் இடைவெளி கூடவில்லை. குறைந்தது. அமெரிக்காவில் ஏழை மக்கள் மேலும் வளம் பெற்றார்கள். ஏழை-பணக்காரன் இடையே வித்தியாசம் இருக்கிறது. ஆனால் முன் போல் அதிகமாக இல்லை. இப்படியே போனால் ஒரு நாள் அமெரிக்காவே வகுப்புகள் இல்லாத சமுதாயமாக மாறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஏழை-பணக்காரன் வேறுபாடுகள் இயற்கையான காரணங் களால் குறைந்து கொண்டே வருகின்றன. வளம் பெருகுகிறது. செல்வம் பெருகுகிறது. செல்வத்திற்குத் தட்டுப்பாடு இருப்பதால்தான் உங்கள் மனதில் பேராசை இருக்கிறது. செல்வம் ஏராளமாக இருந்தால் அதை ஏன் பதுக்க வேண்டும்? நீங்கள் காற்றையோ தண்ணீரையோ பதுக்கி வைப்பதில்லையே! எல்லாமே அளவில் லாமல் கிடைத்தால் பதுக்கல் ஒழிந்துவிடும். அதுதான் இயல்பான முன்னேற்றம்.

கம்யூனிசம் இயற்கைக்கு எதிரானது. அது கருவிலேயே சிதைந்த ஒரு கொள்கை.

முதலாளித்துவம் இயற்கையானது. அது தான் போகிற போக்கில் ஒரு நாள் இந்த உலகத்தைவிட்டு மறைந்துவிடும்.

அது இயற்கையான காரணங்களால் நிகழ்ந்த ஒரு மரணமாக இருக்கும். மரணப்படுக்கையில் நோயுடன் போராடிக்கொண்டிருக்கும் ஒரு மனிதன் கொஞ்சம் கொஞ்சமாகச் சாவதைப் போல் முதலாளித்துவம் ஒரு நாள் மறைந்துவிடும்.

அது மாரடைப்பிலோ சாலை விபத்திலோ நிகழும் திடீர் மரணமாக இருக்காது.

இயற்கையான மரணமே சிறந்தது. அதிலிருந்துதான் இயற்கையான பிறப்பு நிகழும்.

நான் கார்ல் மார்க்ஸை எதிர்க்கிறேன். அவரே சாமானியர் கூட்டத்தில் ஒருவர் இல்லை. பெரிய பணக்காரர். கம்யூனிசத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டுமானால் நீங்கள் பெரிய செல்வந்தராக இருக்க வேண்டும்.

கார்ல் மார்க்ஸ் தன் வாழ்நாள் முழுவதையும் இங்கிலாந்து நாட்டின் அரும்பொருள் காட்சியகத்தில் கழித்தார். அவர் ஒன்றுமே செய்யவில்லை. நாள் முழுவதும் பழைய புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்தார்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

அது கம்யூனிஸ்ட்களின் சொர்க்கம். உள்ளே நுழையப் போன ஒருவனை புனித பீட்டர் (நம் சித்திரகுப்தனுக்குச் சமமானவர்) வாசலில் நிறுத்திக் கேட்டார்.

"உள்ளே நுழைய உனக்கு என்ன தகுதி இருக்கிறது?"

"என் தந்தை ஒரு பெரிய தொழிலதிபர். என் தாய் மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்தவள். நான் ஒரு வெற்றி பெற்ற எழுத்தாளன். தந்தை வழியாகப் பல கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் எனக்கு வந்தது. ஒரு பணக்காரச் சீமாட்டியைத் திருமணம் செய்து கொண்டேன்."

புனிதருக்குப் பயங்கரமாகக் கோபம் வந்தது.

"கம்யூனிஸ்டுகளின் சொர்க்கத்துக்கு நுழைய இவையா தகுதிகள்?"

"இவை மட்டும் இல்லை புனிதரே. என் பெயரைச் சொன்னால் நீங்கள் புரிந்து கொள்வீர்கள்."

"உன் பெயர் என்ன?"

"கார்ல் மார்க்ஸ்"

மார்க்ஸ் ஏழையில்லை. கம்யூனிசத்தைப் பற்றிக் கனவு காண்பதற்குக்கூட நிறைய செல்வம் வேண்டும். கம்யூனிசம் சாமானிய மக்களின் சிந்தனையில் பிறந்ததல்ல. நடுத்தர மக்களின் இயலாமையில் பிறந்தது. உலகத்திலேயே மிகுந்த வெறுப்பில் இருப்பவர்கள் இந்த நடுத்தர வர்க்கத்தினர்தான்.

ஏழைக்கு அவ்வளவு வெறுப்பு இருக்காது. அவன் ஏழையாக இருந்தாலும் தன் இல்லாமையை ஒரு மாதிரியாக ஏற்றுக் கொண்டிருப்பான்.

செல்வந்தனுக்கு வெறுப்பு இருக்காது. அவன் சந்தோஷமாக தன் வளமையை ஏற்றுக் கொண்டிருப்பான்.

இந்த நடுத்தரவர்க்கத்திற்குத்தான் பிரச்சினை. அந்த வர்க்கத்தினன் செல்வந்தனாக வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பான். அந்த நம்பிக்கை அவனுக்கு இருக்கும். ஆனால் நிழல் போல் வறுமை அவனைத் தொடர்ந்து கொண்டேயிருக்கும்.. அவன் அங்கும் இங்கும் இல்லாமல் ஓர் இரண்டுங்கெட்டான் நிலையில் இருப்பான்.

இந்த நடுத்தர வர்க்கத்தினன் ஆபத்தானவன். அவன் ஏழைகள் கூட்டத்திலும் இருப்பான். செல்வர்கள் கூட்டத்திலும் இருப்பான். அவன் ஏழையாக இருப்பதை விரும்ப மாட்டான். செல்வந்தனாக வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பான். அவனால் செல்வம் சேர்க்க முடியவில்லையென்றால் இந்த சமுதாயத்தையே அழிக்கவும் தயங்கமாட்டான். மற்றவர்கள் செல்வந்தர்கள் ஆவதை அவனால் பொறுத்துக் கொள்ளமுடியாது.

அமெரிக்காவில் ஓர் அற்புதம் நடந்து கொண்டிருக்கிறது. பணக்காரர்கள் மறைந்து கொண்டிருக்கிறார்கள். ஏழைகள் மறைந்து கொண்டிருக்கிறார்கள். மத்தியதரவர்க்கம் பெரிதாகிக் கொண்டே

போகிறது. இது மார்க்ஸின் எண்ணத்திற்கு நேர் எதிரானது. செல்வர்கள் இன்னும் பெரிய செல்வர்கள் ஆவார்கள். ஏழைகள் இன்னும் வறியவர்கள் ஆவார்கள் என்று அவர் நினைத்தார்.

மத்தியதர வர்க்கம் நடுவில் இரண்டாகப் பிளந்து அதில் வசதியானவர்கள் செல்வர்கள் கூட்டத்திலும், வசதி குறைந்தவர்கள் வறியவர்கள் கூட்டத்திலும் சேர்வார்கள் என்று நினைத்தார். மொத்தச் சமுதாயமும் இருப்பவர்கள் இல்லாதவர்கள் என்று இரண்டாக பிளவுபடும் என்று கணக்குப் போட்டார். அப்படி நடக்கும் போது புரட்சி ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது என்றும் நினைத்தார். அவர் சொன்னபடி நடக்கவில்லை. நடக்கவும் நடக்காது.

அதற்கு நேர்மாறாக நடந்து கொண்டிருக்கிறது. மத்தியதர வர்க்கம் வர வர இன்னும் பெரிதாகிக் கொண்டே போகிறது. இப்போது அதன் ஒரு முனையில் செல்வந்தர்கள் இருக்கிறார்கள். மறுமுனையில் ஏழைகள் இருக்கிறார்கள். மத்தியதர வர்க்கம் மட்டுமே இப்போது மிஞ்சியிருக்கிறது. இந்த ஒரு வர்க்கமே பின்னால் வர்க்கமற்ற சமுதாயத்திற்கு வழிவகுக்கப் போகிறது.

வர்க்கமற்ற சமுதாயம் வரத்தான் போகிறது. ஆனால் மார்க்ஸ் சொன்ன வழியில் அது வராது. முதலாளித்துவம் என்ற இயற்கையான முறையில் அது வரப்போகிறது. கம்யூனிசம் மூலமாக அது சத்தியமாக வராது.

மார்க்ஸுக்கும் மதத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அவர் மதத்தை எதிர்த்தவர். அதுவும் மதம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ளாமலேயே அதை எதிர்த்தவர். அவருக்குத் தெரிந்ததெல்லாம் யூதர்களின் மதமும் கிறிஸ்துவ மதமும்தான். அவர் ஒரு யூதர். அதை முதலில் நாம் நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். மார்க்ஸ், விஞ்ஞானி ஐன்ஸ்ட்டீன், மனவியல் நிபுணர் ஃப்ராய்டு - இந்த உலகத்தை ஆட்டிப் படைத்த இந்த மூவருமே யூதர்கள்தான். யூதர்கள் வாழ்க்கையில் எவ்வளவோ துன்பம் அனுபவித்தவர்கள். அதனால் அவர்களுக்குள் எப்போதுமே ஒரு கோபம் இருக்கும். அவர்களுடைய கோபம் பல வழிகளில் வெளிப்படும்.

சமுதாயத்தின்மேல் மார்க்ஸுக்கு இருந்த கோபம் யூதரல்லாத உலகத்தின்மேல் ஒரு யூதனுக்கு இருந்த கோபம். இந்த லட்சணத்தில் அவருக்குத் தெரிந்ததெல்லாம் இரண்டே இரண்டு மதங்கள்தான். யூதர்களின் மதம். கிறிஸ்துவ மதம். இரண்டுமே நன்கு வளர்ச்சியடையாத மதங்கள். அவருக்குப் பௌத்த மதத்தைப் பற்றித் தெரிந்திருந்தால், பதஞ்சலியின் யோக சூத்திரங்களை அவர் படித்திருந்தால் இந்திய நாட்டின் உபநிஷத்து களை அவர் கற்றிருந்தால் அவர் எண்ணங்கள் வேறு மாதிரி இருந்திருக்கும்.

அவருக்குப் பாவம் விழிப்புணர்வு இல்லை. விழிப்புணர்வு வேண்டும் என்ற ஆர்வமும் இல்லை. மதங்களைப் பற்றி அவருக்கு ஒன்றும் தெரியாது. அவர் ஒரு பொருளாதார வல்லுனர். அவ்வளவுதான்.

மதத்திற்கும் சமுதாயத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அதனால்தான் கார்ல் மார்க்ஸ் மதத்தை எதிர்த்தார். மதங்கள் தனி மனிதனுக்கானவை. மார்க்ஸ் ஒரு சமுதாய விஞ்ஞானி. அதனால்தான் அவர் சொன்னார் "மதம் என்பது மக்கள் கூட்டத்தின் போதைப் பொருள்." மதம் தனிமனிதனுக்கானவை. அதனால்தான் மதங்கள் தனிமனித சுதந்திரத்தை வலியுறுத்து கின்றன. பரம ஞானம் மலரப் போவது தனிமனிதனுக்குத்தானே யொழிய சமுதாயத்திற்கு இல்லை. ஒரு சமுதாயமே மதத்தைச் சார்ந்து இருந்ததாய் நாம் கேள்விப்பட்டதில்லை. இங்கே ஒரு புத்தர் அங்கே ஒர் ஏசுநாதர் வேறு எங்கோ மோசஸ் என்று மத உணர்வுகள் தனி மனிதர்களிடம்தான் மலர்ந்திருக்கின்றன.

சமுதாய அளவிலே மத உணர்வுகள் மலர வாய்ப்பே யில்லை. ஒரு கூட்டத்திற்கே ஞானம் மலர்ந்ததாய் வரலாறு இல்லை. மத உணர்வு தோன்றுவதே ஒரு பெரிய பரிணாம வளர்ச்சி. உங்கள் மொத்த ஆற்றலின் ஊற்றுக்கண்ணைத் திறந்துவிடுவது மதம். அது ஒரு கூட்டத்திற்கு ஒட்டுமொத்தமாக நிகழ வாய்ப்பேயில்லை.

எல்லாரும் டா வின்சி அல்லது பிகாசோவைப் போல் ஓவியர்களாக வாய்ப்பேயில்லை. மொத்தச் சமுதாயமும்

பீத்தோவன், மோஸார்ட், வாக்னர் போல் இசை மேதைகளாகும் சாத்தியக்கூறு கொஞ்சம் கூட இல்லை. ஐன்ஸ்டீன், ப்ளான்க், எடிங்டன் போல் ஒரு சமுதாயமே விஞ்ஞான மேதைகளாகும் வாய்ப்பு கொஞ்சம் கூட இல்லை. நீங்கள் அப்படி அபத்தமாக யோசிக்கக்கூட மாட்டீர்கள். பின் எப்படி சமுதாய மொத்தமும் புத்தர், ஏசுபிரான், மோஸஸ், மகாவீரர், முகமது நபிகளைப் போல் மத ஸ்தாபகர்களாக முடியும்? அப்படி நடக்க வாய்ப்பேயில்லை.

பொதுவாக மக்கள் கூட்டம் இருட்டில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. அது காடுகளில் வசிக்கிறது. மிகச் சிலரே காடுகளில் இருந்து தப்பித்து வனத்தில் புகுகிறார்கள். அதில் மிகச்சிலரே தோட்டத்தில் நுழைகிறார்கள். பலரும் வனத்தின் அழகில் லயித்துப் போய் அதிலேயே தங்கிவிடுகிறார்கள். அது அப்படியே இருக்கட்டும்.

காடுகளில் இருப்பவர்களில் பத்து லட்சத்தில் ஒருவர்தான் அதிலிருந்து தப்பி வனத்துக்குப் போகிறார்கள். வனத்திற்குப் போகிறவர்களில் பத்து லட்சத்தில் ஒருவர்தான் அங்கிருந்து தப்பித் தோட்டத்திற்குப் போகிறார்கள். தோட்டத்தில் போகிறவர்களில் பத்து லட்சத்தில் ஒருவர்தான் அங்கிருந்து தப்பி வீடுபேறு அடைகிறார்கள். இதுவரையில் இந்த விகிதாச்சாரம் இப்படியேதான் இருந்திருக்கிறது. இனியும் இது இப்படித்தான் இருக்கும்.

மதம் என்பது அனைவருக்கும் இல்லை. வெகு சிலருக்கு மட்டுமே. இப்படிச் சொன்னால் நீங்கள் காயப்படலாம். நீங்கள் மதத்தைப் பொது உடைமையாக்கவேண்டும் என்று நினைக்கலாம். ஆனால் அதற்கு வாய்ப்பேயில்லை. எல்லாரும் சங்கீத வித்துவான்கள் ஆகமுடியாது. எல்லோரும் ஓவியர்கள் ஆக முடியாது. எல்லாராலும் நடனமாட முடியாது. பிறகு எப்படி எல்லோராலும் மதத்தை உணர்ந்து கொள்ள முடியும்? கம்யூனிச உலகத்தில் மதத்திற்கான சாத்தியக்கூறேயில்லை. ஏனென்றால் கம்யூனிசத்தில் தனிமனித சுதந்திரம் என்பது கிடையவே கிடையாது. கம்யூனிசம் தனி மனிதத் தன்மையை

அனுமதிப்பதில்லை. மக்கள் கூட்டத்திலிருந்து ஒருவன் மாறுபட்டிருந்தால் அதீதத் திறமை பெற்றிருந்தால் அதை கம்யூனிசம் ரசிப்பதில்லை.

ரஷ்ய நாட்டைப் பற்றிய இந்தக் கதையை நான் பலமுறை கேட்டிருக்கிறேன்.

ஒரு மனிதனுக்குப் பயங்கரமான வயிற்று வலி. நோய் தீர்க்க ஒவ்வொரு ஊரிலும் ஒரு பிரம்மாண்டமான வெள்ளைக் கட்டடம் கட்டப்பட்டிருந்தது. அவன் தன் ஊரில் இருந்த அத்தகைய கட்டடத்திற்குப் போனான். உள்ளே நுழைந்தவுடன் முன்னால் இரண்டு கதவுகள் தெரிந்தன. ஒன்றில் "ஆண்" என்றும் மற்றொன்றில் பெண் என்றும் எழுதப்பட்டிருந்தது. அவன் ஆண் என்பதால் தனக்குரிய கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனான்.

மீண்டும் ஓர் அறை. மீண்டும் இரண்டு கதவுகள். ஒன்றில் "21 வயதிற்குக் கீழ்" இன்னொன்றில் "21 வயதிற்கு மேல்" என்று எழுதப்பட்டிருந்தது. அவனுக்கு 52 வயது என்பதால் அதற்குரிய கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனான்.

மீண்டும் ஓர் அறை. மீண்டும் இரண்டு கதவுகள். ஒன்றில் "தாளமுடியாத நோய்" என்றும் மற்றொன்றில் "சிறு உபாதை" என்றும் இருந்தது. அதற்குள் அவனுடைய வயிற்று வலி தாளமுடியாமல் போய்விட்டது. "தாளமுடியாத நோய்" என்று எழுதப்பட்டிருந்த கதவைத் திறந்து தட்டித் தடுமாறி முக்கல் முனகலுடன் உள்ளே போனான்.

மீண்டும் ஓர் அறை. இரண்டு கதவுகள். ஒன்றில் "நாத்திகவாதிகள்" என்றும் மற்றொன்றில் "ஆத்திகவாதிகள்" என்றும் எழுதப்பட்டிருந்தது. அவன் கடவுளை நம்புபவன் ஆகையால் "ஆத்திகவாதிகள்" கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான். அடுத்த நிமிடம் அவன் வேறொரு தெருவில் நின்று கொண்டிருந்தான்.

கம்யூனிச உலகத்தில் மதத்தை நம்புபவனுக்கு இடமேயில்லை. அவனுக்கு அங்கே அனுமதியில்லை. கம்யூனிஸ்டுகள்

சமுதாயத்தின் ஆதிக்கத்தை நம்புகிறார்கள். அந்த ஆதிக்கத் திற்குத் தனிமனிதன் ஆபத்தானவன் என்பதுதான் அவர்கள் கொள்கையின் ஆணி வேர். சமுதாயத்திலிருந்து தனித்து நிற்கும் எவனும் சமுதாயத்தின் எதிரியாகத்தான் கருதப்படுவான்.

யாருமே தனித்து நிற்கக்கூடாது. எல்லோரும் கூட்டத்தோடு கூட்டமாகத்தான் நிற்க வேண்டும். சாதாரண விஷயங்களில்கூட யாரும் தனித்துவத்தைக் காட்டக்கூடாது. நீங்கள் சீனாவிற்கும் ரஷ்யாவிற்கும் போனீர்களென்றால் எல்லாருடைய ஆடைகளும் கார்களும் கூட ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். எல்லாரும் ஒரே மாதிரியாகத்தான் இருக்க வேண்டும். யாரும் தன்னுடைய தனிமனித விருப்பு வெறுப்புகளைச் சின்னச் சின்ன விஷயங்களில்கூடக் காட்டிக்கொள்ளக் கூடாது.

கம்யூனிசம் தனி மனிதனுக்கே அனுமதி கொடுக்க வில்லையே? அது எப்படி மதத்தை அனுமதிக்கும்?

தனிமனித மலர்ச்சியே மதம். எங்கு தனிமனித சுதந்திரம் இருக்கிறதோ எங்கு தான் தானாக இருக்கும் உரிமை இருக்கிறதோ எங்கு உங்கள் சுதந்திரத்தில் மற்றவர்கள் தலையிடமாட்டார்களோ, எங்கே நீங்கள் உங்கள் விருப்பம்போல் செயல்படமுடியுமோ அங்கேதான் மதம் தழைக்கும்.

நீங்கள் அடுத்தவர்களின் வாழ்க்கையில் குறுக்கிட்டால்தான் சமூகம் உங்கள் வாழ்க்கையில் குறுக்கிடும். இல்லாவிட்டால் உங்களை உங்கள் போக்குக்கு விட்டுவிடும். நீங்கள் அடுத்தவருக்குத் தீங்கு விளைவிக்கவில்லையென்றால் உங்கள் உரிமையில் யாரும் குறுக்கிட மாட்டார்கள். அத்தகைய ஒரு சமுதாயத்தில்தான் மதம் தழைக்கும்.

இதெல்லாம் ஒரு ஜனநாயகச் சமுதாயத்தில்தான் நடக்கும். ஒரு முதலாளித்துவ நாட்டில்தான் நடக்கும். எனக்கு முதலாளித்துவமும் ஜனநாயகமும்தான் பிடிக்கும். ஏழையாக இருந்தாலும் சுதந்திரமாக இருப்பது மேல். கல்வியறிவு இல்லாவிட்டாலும் கருத்து சுதந்திரம் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் உங்கள் வயிறு மட்டும்தான் நிரம்பும். ஆன்மா பசியோடு இருக்கும்.

அந்தக் கேள்வியின் இரண்டாவது பகுதி:

கம்யூனிசம் சரியில்லை என்றால் மனிதனை மனிதன் சுரண்டாமல் இருப்பதற்கு எந்தச் சமுதாய அமைப்பு சிறந்தது?

மனிதனின் தேவைக்கு அதிகமாகச் செல்வம் இருந்தாலொழிய மனிதனை மனிதன் சுரண்டிக்கொண்டுதான் இருப்பான். அது சமுதாய அமைப்பைச் சார்ந்த விஷயம் இல்லை. கம்யூனிசம், சோஷலிசம், முதலாளித்துவம் - எந்த அமைப்பிலும் சுரண்டல் தொடரும்.

தேவைக்குமேல் செல்வத்தை உருவாக்குங்கள். ஆக்கும் திறனை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள். செல்வத்தைப் பெருக்க என்ன என்ன வழிகள் இருக்கின்றனவோ அனைத்தையும் பயன்படுத்துங்கள். அது முதல் படி.

இரண்டாவது - நிகழ்காலத்தில் வாழுங்கள். "நாளை" பற்றிக் கவலைப்படாதீர்கள். ஏசுபிரான் என்ன சொல்கிறார் என்பதைக் கேளுங்கள். வயலில் பூத்துக் குலுங்கும் லில்லி மலர்களைப் பாருங்கள். அவை நூற்பதில்லை நெய்வதில்லை.. வேலை செய்வதில்லை. அடுத்த நாளைப் பற்றி நினைப்பதில்லை. - என்றாலும் எவ்வளவு அழகாக இருக்கின்றன! அனைத்துச் செல்வங்களோடும் பெருமைகளோடும் வாழ்ந்த அரசன் சாலமன்கூட அவ்வளவு அழகாக இல்லை.

நிகழ்காலத்தில் வாழுங்கள். வருங்காலத்தில் வாழ முற்படும்போது பேராசை உண்டாகிறது. பேராசை பொருள்களைப் பதுக்கி வைக்கச் சொல்கிறது. பதுக்கி வைப்பது வறுமைக்கு வழிவகுக்கிறது.

ஓர் உண்மையான மதம் சார்ந்த சமுதாயத்தில் பலரும் மத உணர்வுகளோடு இருக்கிறார்கள். குறைந்த பட்சம் நல்ல சமய உணர்வுகளைப் பெற முயற்சி செய்து கொண்டு இருக்கிறார்கள். பலரும் தியானம் செய்கிறார்கள். வழிபாடு செய்கிறார்கள். மக்கள் அன்போடும் அக்கறையோடும் பழகுகிறார்கள். பொதுவாக சமுதாயத்தில் கருணை மிகுந்து இருக்கிறது. பேராசை பதுக்கல் போன்றவை எதுவும் அங்கு

இருக்காது. எல்லோரும் நிகழ்காலத்தில் வாழ்கிறார்கள். வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஒவ்வொரு நொடிப்பொழுதையும் பேருவகையில் கழிக்கிறார்கள். அத்தகைய சமுதாயத்தில்தான் சுரண்டல் என்பது சுத்தமாக இருக்காது.

இந்த நிலை வந்தாலொழிய சுரண்டல் நம்மிடமிருந்து மறையாது.

நீங்கள் சமுதாய அமைப்பைத் தலைகீழாக மாற்றலாம். ரஷ்யாவில் மாற்றினார்கள். என்ன ஆயிற்று? பழைய சுரண்டல் காரர்கள் போய்ப் புதிய சுரண்டல்காரர்கள் தோன்றினார்கள். புதியவர்கள் இன்னும் ஆபத்தானவர்கள். ஏனென்றால் இவர்களிடம் இன்னும் நவீனமான தொழில்நுட்பம் இருக்கிறது.

பழைய அமைப்பிலும் பணக்கார்ரர்கள் இருந்தார்கள். ஏழைகளைச் சுரண்டினார்கள். ஜார் மன்னன் இருந்தான். அவனும் சுரண்டினான். ஆனால் சர்வாதிகாரி ஸ்டாலினையும் அவரது ஆட்களையும் பார்க்கும்போது பழைய சுரண்டல்காரர் களுக்குக் கோயில்தான் கட்ட வேண்டும். புதியவர்களிடம் அதிகமான சுரண்டல் சாதனங்கள் இருந்தன. ஜார் மன்னனிடம் அவை இல்லை. அதனால்தான் அக்டோபர் புரட்சி சாத்தியமானது.

(இவை அனைத்தும் அந்தக்கால கம்யூனிச ரஷ்யாவைப் பற்றி எழுதப்பட்டது)

இன்றைய ரஷ்யாவில் புரட்சிக்கு வழியே இல்லை. புரட்சியை யோசித்துக்கூடப் பார்க்க முடியாது. ஏனென்றால் அரசாங்கத்தின் ஆதிக்கம் அவ்வளவு அதிகமாக இருக்கிறது. அரசாங்கத்தின் கையில் இருக்கும் சுரண்டல் சாதனங்களில் வல்லமையை நினைத்துப் பார்த்தால் தனிமனிதன் புரட்சியைப் பற்றிச் சிந்திக்கக்கூட முடியாது என்றுதான் தோன்றுகிறது.

புரட்சியைப் பற்றி யோசிக்கக்கூட முடியாது. ஏனென்றால் அங்கே சுவருக்குக் கூட கண் இருக்கிறது. உங்கள் மனைவி யோடுகூட நீங்கள் நிம்மதியாகப் பேச முடியாது. யார் கண்டது. அவளே அரசாங்கத்திற்கு ஒற்று வேலை பார்க்கலாம்.

உங்கள் மகனிடம்கூட சுதந்திரமாகப் பேச முடியாது. அவன் இளைஞர் கம்யூனிஸ்ட் கட்சியின் அங்கத்தினனாக இருக்கலாம்.

ரஷ்யாவில் மக்களுக்கு நாட்டுப்பற்றைத் தீவிரமாகப் போதித்துக் கொண்டிருக்கிறார்கள். நாட்டுக்காகத்தான் வாழ வேண்டும்., குடும்பத்திற்காக அல்ல என்று மக்களுக்கு உருவேற்றிக் கொண்டிருக்கிறார்கள். சமுதாயம்தான் அவர்களுடைய லட்சியம். அது நிறைவேற வேண்டுமானால் குடும்பத்தைச் சீர்குலைக்க வேண்டும்.

அங்கு கட்சிகள் கொள்கைகள் எதுவும் கிடையாது. புத்தகமோ பத்திரிகையோ வெளியிடமுடியாது. இந்தச் சூழ்நிலையில் அங்கே எப்படி புரட்சி ஏற்படும்? அங்கே அரசுக்கு சர்வாதிகாரம் இருக்கிறது. எதிர்ப்புச் சக்தியை முளையிலேயே கிள்ளி எறிந்துவிடும் வல்லமை இருக்கிறது.

அங்கே இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் தெரியுமா? முதலில் தங்கள் எதிரிகளைக் கொன்றுகொண்டு இருந்தார்கள். இப்போது அதைச் செய்வதில்லை. இப்போது அவர்களிடம் இன்னும் ஆபத்தான ஆயுதங்கள் இருக்கின்றன. ஆட்களைக் கொல்வதில்லை. மூளைச்சலவை செய்கிறார்கள். மின்சார அதிர்ச்சி, இன்சுலின் அதிர்ச்சி என்று புதிது புதிதாக அதிர்ச்சி வைத்தியம் செய்கிறார்கள்.

இப்போது ரஷ்யக் குடிமகன் சிறைச்சாலையிலிருந்து வீடு திரும்புவதில்லை. மருத்துவமனையிலிருந்துதான் திரும்புகிறான். சர்வ முட்டாளாக அறிவில்லாதவனாக ஆனபின்புதான் அவனை வீட்டுக்கு அனுப்புகிறார்கள். அவன் அதுவரை அறிந்தவற்றை எல்லாம் மறந்து போகிறான். அவனால். சரியாக யோசிக்கக் கூட முடியாது. மீண்டும் ஏ. பி. சி. டி என்று ஆரம்பிக்க வேண்டியதுதான். புரட்சியைப் பற்றி எப்படி அவனால் யோசிக்க முடியும் சொல்லுங்கள்.

நான் இங்கே விவரிக்கப் போகும் விஷயங்கள் ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் கம்யூனிச நாட்டில் நடக்கத்தான் போகின்றன. பிரசவ ஆஸ்பத்திரியில் குழந்தை

பிறந்தவுடன் அதன் மூளையில் ஒரு மின்முனையைப் பொருத்திவிடுவார்கள். அது போதும். அதன்பின் அந்தக் குழந்தை என்ன நினைக்கிறது என்பது கூட அரசாங்கத்திற்குத் தெரியும்.

யாராவது குற்றம் செய்ய வேண்டும் என்று நினைக்கிறார்களா என்று காவல்துறைக்குத் தெரிந்துவிடும். நீங்கள் தவறாக நினைத்தால் பக்கத்தில் இருக்கும் காவல்நிலையத்தில் உங்கள் எண்ணிற்கு எதிரில் ஒரு விளக்கு எரியும். முப்பத்தி ஒன்றாம் எண்ணில் விளக்கு எரிந்தால் 31 மாட்டிக் கொள்வான். இன்றைய தொழில் நுட்ப வளர்ச்சியில் இவை சாத்தியமே.

மனிதர்கள் ஆபத்தானவர்கள் என்பதை நீங்கள் மறந்துவிடக்கூடாது. தொழில் நுட்பத்தில் ஒன்று சாத்தியம் என்றால் அதை உடனே முயற்சி செய்து பார்ப்பார்கள். அந்த விஷயத்தில் மனிதனுக்குப் பிடிவாதம் அதிகம்.

கடைசி கேள்வி

*ஓஷோ,*

*என்னால் உங்களிடம் வர முடிகிறது. ஆனால் ஓர் ஏழையால் வர முடியாதே! இந்தக் குற்ற உணர்வு என்னை வாட்டுகிறது.*

குற்ற உணர்வு வேண்டாம். தயவு செய்து என்னிடம் வராதீர்கள். இந்தத் துணுக்கைக் கேளுங்கள்.

மார்த்தா என்ற பெயருடைய அந்தப் பெண் மரணப் படுக்கையில் கிடந்தாள். இன்னும் சில நிமிடங்கள்தான் இருக்கப் போகிறாள் என்ற நிலையில் தன் கணவன் அபேயிடம் சொன்னாள்:

"அபே, நான் சாவதற்குமுன் ஒரு முறை ஒரே ஒரு முறை என்னுடன் உடலுறவு கொள்ளுங்களேன்."

"என்னால் முடியாது மார்த்தா! உன்னால் எப்படி இந்த மாதிரியெல்லாம் கேட்க முடிகிறது?"

“சாகும்போது கடைசி ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் உரிமை ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. என்னுடைய கடைசி ஆசை இதுதான். நீங்கள் எனக்காக இதைச் செய்தேயாக வேண்டும்.”

“அப்படியானால் சரி” என்று சொன்ன அபே அவள் ஆசையை நிறைவேற்றி வைத்தான்.

உடலுறவு முடிந்தவுடன் மார்த்தா படுக்கையிலிருந்து துள்ளிக்கொண்டு எழுந்தாள். நேராக சமையலறைக்குப் போய் அன்றைய சமையலைச் செய்யத் தொடங்கினாள். அங்கிருந்த படியே வேறு அறையில் இருந்த தன் குழந்தைகளிடம் பெருங்குரலில் சொன்னாள். “இன்னும் ஒரு மணி நேரத்தில் சாப்பாடு தயாராகிவிடும்”

குழந்தைகளுக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. நேராக மாடிக்கு ஓடினார்கள். அவர்களுடைய அப்பா ஒரு நாற்காலியில் அமர்ந்து அழுது கொண்டிருந்தார்.

“அப்பா நீங்கள் ஏன் அழுது கொண்டிருக்கிறீர்கள்? அதிசயத்திலும் அதிசயம். அம்மா பிழைத்துவிட்டாள். “

மார்த்தாவின் கணவனான அபே சொன்னான்:

“எனக்குத் தெரியும். திருமதி ரூஸ்வெல்ட்டுக்கு இதைச் செய்யமுடியாமல் போய்விட்டதே என்றுதான் அழுது கொண்டிருக்கிறேன்.”

உங்களுக்குப் புரிந்ததா? திருமதி ரூஸ்வெல்ட்களுக்காகக் கவலைப் படாதீர்கள். தேவையில்லாமல் அழாதீர்கள்.

உங்களுக்கு வெட்கமாக இருந்தால் என்னிடம் வராதீர்கள். குற்ற உணர்வு மிகவும் மோசமானது. என்னிடம் வரும் யாருக்கும் அது இருக்கக்கூடாது என்று நினைக்கிறேன்.

நீங்கள் இங்கே வர வேண்டுமென்றால் வெளி உலகத்தை மறக்க வேண்டும்.. உலகத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தால் நீங்கள் என்மேல் கவனம் செலுத்த முடியாது. என்னைப் புரிந்து கொள்ள முடியாது.

உங்கள் வாழ்நாள் மிகவும் குறைவு. அடுத்த விநாடி நீங்கள் இருக்கப் போகிறீர்களா இல்லையா என்று உங்களுக்குத் தெரியாது.

ஏழைகளுக்காக வருந்தாதீர்கள். ஏழைகள் இங்கே வர விரும்புகிறார்கள் என்று உங்களுக்கு யார் சொன்னது? எனக்கு ஏழைகளைத் தெரியும். நான் இந்த நாட்டில் தொடர்ந்து பயணம் செய்து கொண்டிருக்கிறேன். நான் இந்த நாட்டில் பிறந்தவன். எனக்கு ஏழைகளைப் பற்றி நன்றாகத் தெரியும்.

அவர்கள் என்னிடம் வேறு காரணங்களுக்காக வருகிறார்கள். நான் எந்த வகையில் அவர்களுக்கு உதவ முடியுமோ அதற்காக அவர்கள் வருவதில்லை.

அவர்கள் மகனுக்கு வேலை கிடைக்காமல் இருக்கும். "ஓஷோ இவனை ஆசீர்வதியுங்கள். நல்ல வேலை கிடைக்கட்டும்" என்று சொல்வார்கள்.

மனைவிக்கு உடல்நலம் சரியில்லாமல் இருக்கும். அதற்காக வருவார்கள். குழந்தை பிறக்காமல் இருக்கும் அதற்காக வருவார்கள். "ஆசீர்வாதம் செய்யுங்கள். இவள் உடல் குணமாகட்டும். இவளுக்குக் குழந்தை பிறக்க வேண்டும்" என்று சொல்வார்கள்.

வேறு ஏதோ காரணங்களுக்காக என்னைத் தேடி வருகிறார்கள். அவை எதுவும் மதம் சம்பந்தப்பட்ட காரணங்கள் இல்லை. ஓர் ஏழைக்கு உண்மையான மத உணர்வு இருக்காது. வயிற்றுக்கு இல்லாமல் பட்டினி கிடக்கும்போது யாரும் மதத்தைப் பற்றி யோசிக்க மாட்டார்கள்.

ஏழையின் பிரச்சினை மதம் இல்லை. வயிறு. பணக்கார னுக்குத்தான் மதம் சம்பந்தப்பட்ட பிரச்சினை இருக்கும். மதம் என்பது வாழ்க்கையில் வளம் பெருகும்போது ஏற்படும் ஓர் உணர்வு. பலருக்கும் அது ஓர் ஆடம்பரம்தான்.

உணவு உடை உறையுள் என்ற உங்கள் அடிப்படைத் தேவைகள் பூர்த்தியானபின்தான் மனவியல் பிரச்சினைகள் கிளம்பும். ஏழைக்கு மனவியல் பிரச்சினைகள் இருக்காது.

எந்த ஏழையும் மனவியல் மருத்துவரைத் தேடிப் போக மாட்டான். உங்கள் உடலின் தேவைகள் பூர்த்தியானவுடன் உங்கள் பிரச்சினைகள் மாறுகின்றன. அவை அடுத்த கட்டத்திற்குச் செல்கின்றன. இன்னும் அதிக உயரத்திற்குப் போகின்றன. மனவியல் பிரச்சினைகளாக உருவெடுக்கின்றன.

"எங்களுக்கு எந்த மனவியல் பிரச்சினையும் கிடையாது" என்று இந்தியர்கள் மகிழ்ச்சியுடன் சொல்கிறார்கள். இந்தியாவில் மனவியல் மருத்துவர்கள் தேவையில்லை. அமெரிக்காவில் ஏன் இவ்வளவு மனவியல் மருத்துவர்கள் இருக்கிறார்கள் என்று அவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்.

"பாவம் அமெரிக்கர்கள். மனநோயால் பீடிக்கப்பட்டு அவதிப்படுகிறார்கள்." என்று அமெரிக்கர்களுக்காகப் பரிதாபப் படுகிறார்கள்.

மனவியல் பிரச்சினை ஓர் ஆசீர்வாதம் என்று பாவம் இந்தியர்களுக்குத் தெரியாது. ஒருவனுக்கு மனவியல் பிரச்சினை இருக்கிறது என்றால் அவனுடைய அடிப்படைத் தேவைகள் எல்லாம் பூர்த்தியாகி அவன் அடுத்த படிக்கு வந்துவிட்டான் என்று பொருள். இது இந்தியர்களுக்குப் புரிவதில்லை. அமெரிக்கர்களுக்கு மனவியல் பிரச்சினைகளைக் கொண்டாடும் அளவிற்குச் செல்வ வளம் பெருகியிருக்கிறது என்று இந்தியர்களுக்குப் புரியாது.

மனதின் தேவைகள் நிறைவேற்றப்பட்டபின்தான் மதத்தின் தேவை உண்டாகும்.

எனவே ஏழைகளுக்காக வருந்தாதீர்கள்.

ஒரு சிறிய குழந்தை விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறீர்கள்.

"ஐயோ பாவம் இந்தக் குழந்தையால் செக்ஸ் சுகத்தை அனுபவிக்க முடியாதே!" என்று வருத்தப்படுவீர்களா?

குற்ற உணர்வு கொள்ள வேண்டும் என்று நினைத்தால் தாராளமாகச் செய்யுங்கள். அது உங்கள் தெரிவு. நீங்கள்

செக்ஸ் உறவு கொள்வதை நிறுத்த வேண்டுமென்றால் தாராளமாகச் செய்யுங்கள். அதற்காகப் பழியைக் குழந்தைகள் மேல் போடாதீர்கள். "பாவம் குழந்தைகளால் செக்ஸ் சுகத்தை அனுபவிக்க முடியாதே! அதனால் எனக்கும் வேண்டாம்." என்று அபத்தமாகப் பேசாதீர்கள்.

குழந்தைகள் வளருவார்கள். பருவமடைவார்கள். அவர்கள் செக்ஸ் சுகத்தை அனுபவிக்கும் காலம் ஒரு நாள் வரும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு காலத்தில் பழுத்துப் பக்குவம் அடைகிறார்கள். ஓர் ஏழைக்கு உண்மையிலேயே சமய உணர்வு இருந்தால் அவன் எப்படியும் என்னைத் தேடி வந்துவிடுவான். அவனை யாராலும் தடுக்க முடியாது.

இங்கே பல ஏழைகள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்கென்று ஒரு வழியைக் கண்டுபிடித்துக் கொள்வார்கள். அவர்களுடைய தேவையின் தீவிரமே அவர்களை இங்கே கொண்டு வந்து சேர்த்துவிடும். உங்கள் பச்சாதாபம் அவர்களுக்கு உதவி செய்யாது. உங்கள் பரிதாப உணர்வால் ஒன்றே ஒன்றுதான் நடக்கப் போகிறது. நீங்கள் என்னைத் தவறவிடப் போகிறீர்கள்.

ஒரு யூதத் தொழிலதிபர் மீன் பிடித்துக் கொண்டிருந்தார். மிகவும் வித்தியாசமான ஒரு மீன் சிக்கியது. அதுவரை அப்படி ஒரு மீனை அவர் பார்த்ததேயில்லை. தங்கச் செதிள்களும் தகதகக்கும் உடலும்.. அப்பப்பா.. அவர் அசந்து விட்டார். திடீரென்று அந்த மீன் பேசத் தொடங்கியது.

"என்னை மீண்டும் நீரில் போட்டால் உங்களுக்கு நான் மூன்று வரங்கள் தருவேன்.".

தொழிலதிபர் பேச்சு வார்த்தை நடத்திப் பழக்கப்பட்டவர். நெடுநேரம் யோசித்துப் பின்,

"ஐந்து வரங்கள் தாயேன்."

"இல்லை மூன்றுக்கு மேல் என்னால் தர முடியாது."

"சரி, நான்கரை வரங்கள்?"

"இல்லையப்பனே மூன்றுதான் என் உச்ச வரம்பு."

"சரி உனக்கும் வேண்டாம். எனக்கும் வேண்டாம். நான்காகக் கொடுத்துவிடு."

இந்த முறை அந்த மீன் பதிலளிக்கவில்லை. அது இறந்து போயிருந்தது.

வாழ்நாள் மிகவும் குறுகியது. நாம் இங்கே நிரந்தரமாக இருக்கப் போவதில்லை. உங்களுக்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்புகளை எவ்வளவு முடியுமோ அவ்வளவு பயன் படுத்திக் கொள்ளுங்கள்.

உங்கள் உள்ளே கனன்று கொண்டிருக்கும் நெருப்பு இன்னும் பிரகாசமாக எரியட்டும். அதன் பின் நீங்கள் ஏழைகளிடம் சென்றால் உங்களால் அவர்களுக்கு நிஜமாகவே உதவ முடியும். ஆனால் இப்போது உங்களிடம் குற்ற உணர்வு மட்டுமே மிஞ்சியிருக்கிறது. இந்தக் குற்ற உணர்வால் அவர்களுக்கு எந்தப் பயனும் இல்லை.

நீங்கள்தான் எதையோ தவறவிடப் போகிறீர்கள்.

கடைசி, கடைசியாக ஒரு கேள்வி

*ஓஷோ,*

*கிறிஸ்துமஸ் தாத்தா - சாண்ட்டா கிளாஸ் - ஞானம் பெற்றவரா?*

அவர் ஞானியில்லை என்றால் வேறு யார்தான் ஞானி?

ஞானம் பெறுதல் என்பது ஒரு விளையாட்டு. அது கனமான ஒரு விஷயம் இல்லை. கிறிஸ்துமஸ் தாத்தா ஒரு புத்தர். ஓர் ஏசுபிரான். நகைச்சுவையின் ஒரு பரிணாமம். ஞானம் நகைச்சுவையானதுதான். அது கவலைப்பட வேண்டிய கனமான விஷயம் இல்லை. அது வேடிக்கை. மகிழ்ச்சி. பேருவகை. பரவசம்.

இன்று இது போதும்.

ஏ சாது! உன் தேகத்தை எளிமையான வழிகளில் தூய்மைப் படுத்து!

ஆலமரத்திற்குள் விதை இருக்கிறது

அந்த விதையில் மலர்கள், பழங்கள், நிழல் எல்லாமே இருக்கின்றன

அது போல் உடலுக்குள் உயிர் இருக்கிறது

அந்த உயிருக்குள் உடல் இருக்கிறது

காற்று, நீர், பூமி வெளி எதுவும்

அவனுக்கு வெளியே இல்லை

பண்டிதனே இதை நன்றாக நினைத்துப்பார்

ஆன்மாவில் இல்லாதது என்ன இருக்கிறது?

நீர் நிறைந்த வாளியை நீரின்மேல் வைத்தால்

அதன் உள்ளும் நீரிருக்கும். வெளியிலும் நீரிருக்கும்.

அதனைப் பெயரிட்டு அழைக்க முடியாது

அழைத்தால் ஒரே உண்மையை இரண்டு என்றறியும்

இருபொருள் வாதத் தவறு ஏற்படும்

கபீர் சொல்கிறான்:

வார்த்தையைக் கவனி உண்மையை உணர்

அதுதான் உன் சாரம்

*அவன் தனக்குள்ளே பேசிக்கொள்கிறான்*
*அவனே ஆக்கியோன்*
*வேர்களற்ற ஒரு விநோதமான மரம் இருக்கிறது*
*அது மலராமல் பழுக்கும்*
*அதற்குக் கிளைகள் இல்லை இலைகள் இல்லை*
*அது முழுவதும் ஒரு தாமரையே*
*இரண்டு பறவைகள் அங்கே பாடுகின்றன*
*ஒன்று குரு. மற்றது சீடன்*
*சீடன் வாழ்க்கையின் பல்வேறு பழங்களை ருசிக்கிறான்*
*அதைப் பரவசத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார் குரு*
*கபீர் சொல்வதைப் புரிந்து கொள்வது கடினம்*
*அந்தப் பறவை தேடலுக்கு அப்பாற்பட்டது*
*என்றாலும் அது தெளிவாகத் தெரிகிறது*
*உருவங்களுக்கு மத்தியில் அருவம் ஒளிந்து கொண்டிருக்கிறது*
*நான் உருவங்களின் உன்னதத்தைப் பாடுகிறேன்.*

உண்மை ஒரு மிகப்பெரிய சவால். விசாரிப்பது ஒரு சவால், தேடுவது ஒரு சவால் ஏன் இருப்பதே ஒரு சவால்தான். உண்மை என்பது என்றோ ஒருநாள் நீங்கள் உரிமை கொண்டாடப் போகும் பொருள் இல்லை. ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் நீங்கள் ஆகவேண்டிய நிலையே உண்மை. நீங்கள் ஏற்கனவே எதுவாக இருக்கிறீர்களோ அதுவாகத்தான் ஆக முடியும்.

உண்மையின் சவால் என்பது உங்களுக்குள் அடியாழத்தில் தோன்றும் சவால், உங்களை உங்கள் வீட்டிற்கு உரிமையுடன் அழைக்கும் சவால், மையத்திற்கு உங்களை அழைத்துச் செல்லும் சவால். உங்களை நீங்களே அடையாளம்

கண்டுகொள்ளும் ஒரு சவால், உங்களை நீங்களே சந்திக்க உங்களை நீங்களே அறிந்து கொள்ள விடுக்கப்பட்ட ஓர் அறைகூவல்.. அது ஒரு கடினமான பாதை.

உங்களை நீங்களே எதிர்நோக்குவதுதான் இருப்பதிலேயே மிகவும் கடினமானது. ஏனென்றால் நாம் நமது அறியாமையில் மிகவும் அதிகமாக முதலீடு செய்திருக்கிறோம். நமது சுய அறியாமையில் எக்குத்தப்பாக முதல் போட்டிருக்கிறோம். அதனால்தான் சுய அறிவு பெறுவது மிகவும் கடினமாகிவிட்டது.

பலரும் அழைக்கப்படுகிறார்கள். ஆனால் சிலர் காதுகளில் மட்டுமே அந்த அழைப்பு விழுகிறது. அதைக் கேட்டவர்களில் பலர் அதைத் தவறாகப் புரிந்து கொள்கிறார்கள். தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

சரியாகக் கவனிப்பவர்கள்கூட சரியாக நடந்து கொள்வதில்லை. சரியாக நடந்து கொள்பவர்கள் தொடர்ந்து அதில் ஈடுபடுவதில்லை. அதனால்தான் பலர் அழைக்கப்பட்டாலும் வெகு சிலரே வந்தடைகிறார்கள்.

சொல்லப்போனால் எல்லோருக்குமே அழைப்பு வருகிறது. கடவுளின் சவால் அனைவருக்கும் பொதுவானது. அது மனித இனத்துக்கே விடப்படும் அறைகூவல்.

அந்தச் சவாலை ஏற்றுக் கொள்ளத்தான் நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள். இது அக்னிப் பரீட்சை. உங்கள் ஆன்மாவைத் தூய்மையாக்கும் அக்னிப் பரீட்சை.

இன்னொரு வகையில் பார்த்தால் இது ஒரு சூதாட்டம். உங்கள் உடைமைகள் அனைத்தையும் வைத்து ஆடும் சூதாட்டம். இதில் வேடிக்கை என்னவென்றால் உங்களிடம் வைத்தாட ஒன்றுமே இல்லாதபோது பணயம் வைக்க அஞ்சுகிறீர்கள். உங்களிடம் இழக்கப் பொருள் இருந்தால் அதை இழக்கும் துணிச்சல் தானாக வரும்.

இதுதான் என்னுடைய அன்றாட அனுபவம். கையில் ஏதாவது பொருள் வைத்திருப்பவன் சரணடையத் தயாராக இருக்கிறான். கையில் ஒன்றுமே இல்லாதவன் சரணடைய

அஞ்சுகிறான். இது ஒரு புரியாத புதிர். ஒன்றும் இல்லாதவன் சரணடைய அஞ்சுவது ஒரு விளங்காத விடுகதை. ஒரு வேளை சரணடைந்துவிட்டால் தன் இல்லாமையை நேருக்கு நேர் சந்திக்க வேண்டியிருக்குமோ என்று பயப்படுகிறானோ? அவன் போட்டுக் கொண்டிருக்கும் பாதுகாப்புக் கவசங்களைக் கழற்றிவிட்டால் தன் உள்ளே இருக்கும் சூனியத்தை- தன் வறுமையைச் சந்தித்தாக வேண்டுமே!.

அதற்குப் பதிலாகத் தன்னைப் பணக்காரன் என்று பாசாங்கு செய்து கொள்வது சுலபம். அப்போது தனக்குள்ளே போய்ப் பார்க்க வேண்டிய அவசியமே இருக்காதே!

“என்னிடம் நிறைய செல்வம் இருக்கிறது. நான் எப்படி சரணடைவதாம்?” என்று தொடர்ந்து கனவு கண்டுகொண்டே யிருக்கலாம்.

இதற்கு ஒரு விதிவிலக்கைக் கூட இதுவரை நான் பார்த்ததில்லை. விதி இதுதான். பொருள் இருப்பவர்கள் சரணடையத் தயாராக இருக்கிறார்கள். அவர்களுக்குப் பயமில்லை.

ஏசுபிரான் என்ன சொல்கிறார் என்பதைக் கேளுங்கள்: “இருப்பவர்களுக்கு மேலும் கொடுக்கப்படும். இல்லாதவர்களுக்கு.. அவர்களிடம் இருக்கும் கொஞ்ச நஞ்சமும் பறிக்கப்படும்.”

உங்களிடம் பொருள் இருக்கும்போது அதை வைத்தாடும் துணிச்சலும் கூடவே வருகிறது. பணயம் வைக்கும் துணிச்சல் வரும்போது நீங்கள் மேலும் பொருள் ஈட்டுகிறீர்கள். உங்கள் கையில் இருக்கும் பொருளை எல்லாம் மொத்தமாக எந்த நிபந்தனையும் இல்லாமல் பணயம் வைக்க முன்வரும் போது இறைமை என்ற பரிசைப் பெற நீங்கள் தயாராகிறீர்கள். உங்களுக்குள் ஏசுபிரான் பிறப்பார். நீங்கள் சிலுவையில் அறையப்படுவீர்கள். ஆனால் நிச்சயமாக மீண்டெழுவீர்கள்.

இந்த உலகத்தில் உள்ள மக்களை எல்லாம் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை என்ன என்பதை அறியும் முன்னால் இன்னொரு அடிப்படை உண்மையை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

எல்லாருமே சிலுவையில் அறையப்படுகிறார்கள் என்றாலும் அதில் வெகு சிலருக்கே. மரணத்திலிருந்து உயிர்த்தெழுவதற்கான சாத்தியம் இருக்கிறது. சிலுவையில் அறையப்பட்டு அப்படியே கிடப்பவர்கள் அல்லலுறுகிறார்கள். காரணம் இல்லாமல் துன்பப் படுகிறார்கள். அவர்களின் துன்பத்திற்குப் பொருள் இல்லை.; அது தேவையில்லாத துன்பம். பொருத்தமில்லாத துன்பம்.

உங்கள் துன்பமும் வேதனையும் அர்த்தமற்றது. எதற்காகத் துன்பப் படுகிறீர்கள்? அதிலிருந்து உங்களுக்கு என்ன கிடைக்கிறது?

நீங்கள் துன்பப்படுகிறீர்கள். அவ்வளவுதான். அது விழலுக்கு இறைத்த நீர். நீங்கள் தரிசு நிலம். அதைத் துன்பத்தால் உழுவதால் என்ன பயன்?

துன்பப்படுபவர்கள் எல்லோரும் சிலுவையில் அறையப்படு பவர்களே! இறைவனுக்காகத் துன்பப்படுபவர்களே உயிர்த்து எழுகிறார்கள். அப்போதுதான் அவர்களின் துன்பத்திற்கு ஓர் அர்த்தம் கிடைக்கிறது. ஒரு முக்கியத்துவம் கிடைக்கிறது.

வாழ்க்கை மறையப் போவதில்லை. அது நிச்சயம். மரணம் சம்பவிக்கத்தான் போகிறது. அதுவும் நிச்சயம். நீங்கள் சும்மா சாகப் போகிறீர்களா? இல்லை இறைவனுக்காகச் சாகப் போகிறீர்களா என்பதுதான் கேள்வி.

நீங்கள் சும்மாத்தான் சாகப் போகிறீர்கள் என்றால் நீங்கள் சிலுவையில் அறையப்படுவீர்கள். அவ்வளவுதான். உயிர்த்தெழுதல் கிடையாது. நீங்கள் இறைவனுக்காகச் சாகப் போகிறீர்கள் என்றால் உங்கள் சாவு அவன் பாதத்தில் காணிக்கையாக இருக்கும் தியாகமாக ஜொலிக்கும் நீங்கள் மறுபடியும் உயிர்த்தெழுவீர்கள்.

அனைவரும் சிலுவையில் அறையப்படுகிறார்கள். வெகு சிலரே சிலுவையிலிருந்து இறங்கி வந்து புது வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். அந்த வாழ்க்கையை ஏசுபிரான் "வளங்கள் கொட்டிக் கிடக்கும் வாழ்க்கை" என்று வர்ணிக்கிறார். அது புனிதமானது. முடிவற்றது. முழுமையானது. வெகு சிலரே

சிலுவையிலிருந்து இறங்கி வந்து பரவச நிலையை அடைகிறார்கள். அவர்களின் சாவு சாதாரண மரணம் இல்லை, மரணமில்லாப் பெருவாழ்வு.

எல்லாம் உங்கள் கையில் இருக்கிறது. நீங்கள் இந்த சவாலை ஏற்றுக் கொண்டால் உயிர்த்தெழுவீர்கள். உங்களுக்குள் ஓர் ஏசுநாதர் ஜனிப்பார். இல்லை ஒரு புத்தரோ கிருஷ்ண பரமாத்மாவோ ஜனிப்பார்கள். இவையெல்லாம் வெறும் பெயர்கள்தான்.

ஒன்றை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். - "கிருஷ்ணர்" "புத்தர்" "ஏசுபிரான்" இவையெல்லாம் ஆட்களின் பெயர்கள் அல்ல. ஒரு குறிப்பிட்ட நிலையைக் குறிக்கும் சொற்கள். ஏசு என்ற பெயர் தன்னைத்தானே அறிந்து கொண்ட ஓர் உன்னத நிலையைக் குறிக்கும் சொல். தன்னை அறிந்து கொண்டதன்மூலம் முழுமையையும் அறிந்து கொண்ட ஒரு நிலை. வீடுபேறு பெற்றுவிட்ட ஒரு நிலை. "நானே கடவுள்" என்று கர்ஜிக்க வைக்கும் ஒரு நிலை. இதே கூற்று கிருஷ்ணபரமாத்மாவிற்கும் மகாவீரருக்கும் கூடப் பொருந்தும்.

நீங்கள் உங்களை விட்டு விலகிப் போய்க் கொண்டிருக்கிறீர்கள். ஒவ்வொரு நாளும் இன்னும் அதிக தூரம் விலகிப் போகிறீர்கள். மையத்தை விட்டு வெளிச்சுற்றை நோக்கி விரைவாகப் போய்க் கொண்டிருக்கிறீர்கள். கூடவே வெளிச்சுற்றை இன்னும் பெரிதாக்கிக் கொண்டே போகிறீர்கள். இன்னும் வெளியே போகிறீர்கள். தொலைவில் இருக்கும் தொடுவானத்தைத் தொட்டுவிடலாம் என்ற நினைப்பில் போய்க் கொண்டேயிருக்கிறீர்கள். தொடுவானத்தைத் தொட முடியாது. தொடுவானம் என்ற ஒன்று இல்லவே இல்லை. அது ஒரு மாயத்தோற்றம். மையம் மட்டும்தான் இருக்கிறது.

அதனால்தான் கபீர் சொல்கிறார். "சாதுக்களே துறவிகளே எங்கும் போகாதீர்கள். கடவுள் இங்கேயே இருக்கிறார். நீங்கள் இருக்கும் இடம்தான் கடவுள் இருக்கும் இடம். அவரை வேறு எங்கும் தேடாதீர்கள். அவர் கிடைக்க மாட்டார்."

அந்த சவால் உங்களுக்கு வெளியிலிருந்து வரவில்லை. உள்ளேயிருந்து வருகிறது. ஆனால் சிலசமயம் உங்களுக்கு அது வெளியில் இருந்து வருவதைப் போல் தோன்றும். உங்களின் உட்புறமே வெளிப்புறம் போல் தோன்றும்.

உங்கள் விழிப்புணர்வு மிகவும் மோசமடைந்துவிட்டது. அதனால்தான் உங்களுக்குள் இருக்கும் ஆன்மாவில் இருந்து வரும் அழைப்பு வெளியிலிருந்து யாரோ அழைப்பதைப் போல் தோன்றுகிறது. உங்கள் குருதேவர் உங்களை அழைக்கும்போது அவர் உங்களுக்குள் இருக்கும் குரலை உங்களுக்குத் தெரியப்படுத்துகிறார். அவர் வழியாக அழைப்பு வருகிறது. அவரிடமிருந்து வரவில்லை. உங்கள் குருதேவர் வெளியில் இல்லை.

அன்று ஒரு கேள்வி வந்தது: "குருதேவர் சொல்வதை எப்போது கேட்க வேண்டும்? எப்போது அவர் வார்த்தைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்? எப்போது மறுக்க வேண்டும்?"

ஒரு குருதேவருக்கும் அவர் சீடனுக்கும் உள்ள உறவை நீங்கள் புரிந்து கொண்டால் குருவும் இல்லை சீடனும் இல்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள். குருவின் கூற்றை மறுக்கும் போது நீங்கள் உங்கள் கூற்றைத்தான் மறுக்கிறீர்கள்.

அவர்தான் நீங்கள்.

பிரச்சினை குருவிற்கும் சீடனுக்கும் இல்லை. உங்களின் மையத்திற்கும் உங்களின் வெளிச் சுற்றுக்கும்தான் பிரச்சினை.

நீங்கள் சீடன் சொல்வதை அங்கீகரித்து குரு சொல்வதை மறுத்தால் வெளிச்சுற்றுக்கு அடிபணிந்து மையக்கருவை உதாசீனம் செய்கிறீர்கள் என்று பொருள். மாறாக குருவை அங்கீகரித்து சீடனை எதிர்த்தால் மையக்கருவை ஆதரித்து வெளிச்சுற்றை உதறிவிட்டீர்கள் என்று பொருள். குருவும் சீடனும் தனித்தனியாக இல்லை. அதனை இந்தப் பாடலில் பார்ப்போம்.

கபீர் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்: "இரண்டு பறவைகள். ஒன்று குருதேவர். ஒன்று சீடன். சீடன் உருவங்களா

லான உலகைத் துய்க்கத் தீர்மானித்துவிட்டான். மையத்தைப் புறக்கணித்து சுற்றளவில் திரியத் தீர்மானித்து விட்டான்.''

குருதேவர் மையக்கருவில் அமரத் துணிந்துவிட்டார். புயலின் மையக்கண்ணில் அமர்ந்திருக்கிறார் அவர். தன்னைச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும் உலகை ரசித்துக் கொண்டிருக் கிறார். தன் சீடன் சுற்றளவில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறான் என்பதில் அவர் மகிழ்ச்சியே அடைகிறார்.

ஒரு நாள் அந்தச் சீடன் திரும்பி வருவான். அவன் திரும்பி வந்தேயாக வேண்டும். வெளிச்சுற்றில் திருப்தியடைய வாய்ப்பே இல்லை. அங்கே பேருவகை கொள்ள வழியேயில்லை. அங்கே இருப்பதெல்லாம் துன்பம் தான். நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருக்கும் துன்பம் தவிர வேறு எதுவும் இல்லை.

முதலில் நினைவில் கொள்ள வேண்டியது: உங்களுக்கு வரும் அழைப்பு. நான் ஒரு தூண்டுதல். நான் உங்களை அழைக்கிறேன். என்னைக் கவனியுங்கள். என் அழைப்பைச் செவிமடுங்கள். செயல்படுங்கள். அதோடு நிற்காமல் சவாலை ஏற்றுக் கொண்டு பயணத்தைத் தொடக்குங்கள்.

இது கடினமான பயணம். தெரியாத இடத்திற்குப் போவது கஷ்டம்தான். காரணம் நீங்கள் உங்கள் பாதுகாவலை, உங்கள் வசதிகளை உங்கள் சொந்தங்களை உங்கள் உடமைகளை இவைகள் அனைத்தாலும் ஆன உங்கள் சுயத்தை தியாகம் செய்ய வேண்டும். அப்படி தெரிந்த இடத்திலிருந்து விலகிப் போனால்தான் உங்களிடமே நீங்கள் திரும்பி வந்து சேருவீர்கள்.

இதுவரை எதைச் சரி என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ அது உங்கள் இயல்பு இல்லை. அது உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்ட ஒரு போலி முகம். அது மயக்கம். சுயவசியம்.

உஸ்பென்ஸ்கி என்ற ரஷ்ய ஞானி "விதைகளின் விதி'' என்பதைப் பற்றிப் பலமுறை பேசியிருக்கிறார். அதைப் புரிந்து கொள்வது அத்தியாவசியம். ஒரு பெரிய ஓக்

மரத்தைப் பார்த்திருக்கிறீர்களா? அதன் வாழ்நாளில் கோடிக்கணக்கான விதைகளை அது உருவாக்கும். ஆனால் எல்லா விதைகளும் ஓக் மரமாகாதது. ஒரு கோடி விதைகளில் ஒரு விதை மரமானால் அதிகம். மற்ற விதைகள் எல்லாம் ஒன்றும் இல்லாமல் போய்விடும். பின் ஏன் அத்தனை கோடிவிதைகளை இயற்கை படைக்க வேண்டும்? ஒன்றுதான் மரமாகப் போகிறது என்றால் கோடானு கோடி விதைகளைப் படைத்து இயற்கை ஏன் விரயம் செய்ய வேண்டும்? அதுதான் இயற்கையின் விதி. கோடி மக்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டாலும் அதில் ஒருவர்தான் அழைப்பை ஏற்றுக் கொள்வார் என்ற அடிப்படையில்தான் இயற்கையும் இயங்குகிறது. ஓர் ஓக் மரத்தை உருவாக்க ஒரு கோடி விதைகள் தேவை படத்தான் செய்கிறது.

கோடானு கோடி மக்கள் பிறக்கிறார்கள். அவர்களில் கோடியில் ஒருவர்தான் கிருஷ்ண பரமாத்மாவாக ஏசுபிரானாக புத்தர் பெருமானாக வளர்ச்சியடைகிறார். இதுதான் விதைகளின் விதி.

இந்த உதாரணத்தைப் பாருங்கள். ஒரு சாதாரண மனிதன் தன் வாழ்நாளில் நான்காயிரத்திலிருந்து ஆறாயிரம் முறை விந்துவை வெளியேற்றுவான். ஒவ்வொரு முறை அவனிடமிருந்து வெளியேறும் விந்துவில் கோடிக்கணக்கான உயிரணுக்கள் இருக்கும். அந்த கோடிக்கணக்கான உயிரணுக்களில் ஒன்றே ஒன்று மட்டும்தான் பெண்ணுடலில் உற்பத்தியாகும் முட்டையைச் சென்றடையும். மனிதனாக மாறும். பல நூறு கோடி சாத்தியக் கூறுகளில் ஒன்று மட்டுமே வெற்றி பெறுகிறது. மனிதனாகிறது.

நீங்கள் இதைக் கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள். ஓர் ஆணின் உடலில் உருவாகும் உயிரணுக்கள் அனைத்துமே பெண்கள் கருப்பையில் உருவாகும் முட்டைகளோடு சேருமே யானால் .. மொத்த உலகமும் ஜனத்தொகையால் நிரம்பிவிடும். ஏனென்றால் ஒரு முறை விந்து வெளியேறும்போது கோடிக் கணக்கான உயிரணுக்கள் வெளியே செல்கின்றன. ஓர் ஆண்மகன் தன் வாழ்நாளில் சராசரியாக 4000 முதல் 6000

தரம் தன் விந்துவை வெளியேற்றுகிறான். இங்கே நான் சாதாரண, சராசரி மனிதனைப்பற்றிதான் பேசுகிறேன். அசாதாரண மனிதர்களைப் பற்றிப் பேசவில்லை. அசாதாரண மனிதன் விந்துவை வெளியேற்றுவதில்லை. அவனுடைய சக்தி வேறு பரிமாணத்தில் செல்கிறது.

சில நாட்களுக்கு முன்னால் புதிதாகத் திருமணம் செய்து கொண்ட ஒரு பெண்ணிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருந்தது.

"என் கணவன் ஒரு செக்ஸ் வெறியன். என்னைத் தனியாக இருக்க விடுவதேயில்லை. நாள் முழுவதும் என்னைத் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறான். நான் குளிக்கும் போது, சமைக்கும் போது, படுக்கையைச் சீர் செய்யும்போது ஏன் பின்னால் திரும்பிக்கொண்டு குனியும்போதுகூட என்னை என்னை.. நான் என்ன செய்வது? இப்படிக்கு - உடலுறவால் களைத்துக் கந்தலாகிப் போன ஒரு பாவப்பட்ட ஜீவன்.

அவள் பெயரை எழுதியிருக்கிறாள். ஆனால் நான் அதை இங்கே சொல்லமாட்டேன். ஏனென்றால் அவள் கணவன் இந்தக் கூட்டத்தில்தான் இருக்கிறான்.

போதாக்குறைக்கு கடிதத்திற்கு ஒரு பின்குறிப்பு வேறு எழுதியிருக்கிறாள். "எழுத்து ஆடி அசங்கி கோணல் மாணலாக இருப்பதற்கு என்னை மன்னியுங்கள். காரணத்தைத்தான் கடிதத்தில் எழுதியிருக்கிறேனே!

நான் இந்த மாதிரி செக்ஸ் வெறியர்களைப் பற்றிப் பேசவில்லை. ஒரு சாதாரண ஆண்மகன் தன் உடலில் இருந்து உயிரணுக்களை வைத்து இந்த உலகத்தையே மக்களால் நிரப்பிவிடலாம் என்றுதான் சொன்னேன். இவனைப் போன்ற செக்ஸ் வெறியர்கள்... பல பூமிகளை மக்களால் நிரப்பி விடுவார்கள் - இவர்களிடம் வெளியேறும் ஒவ்வொரு உயிரணுவும் கருமுட்டையோடு சேரும் பட்சத்தில்!

இந்த வெறியர்கள் உடலுறவில் இயந்திரத்தனமாக ஈடுபடு கிறார்கள். அவர்கள் செக்ஸ் இயந்திரங்களாக இருக்கிறார்கள்.

உயிரணுக்களை உற்பத்தி செய்வதைத்தவிர வேறு எதுவும் செய்யாத இயந்திரங்களாக மாறிவிடுகிறார்கள்.

அவர்கள் உயிரைப் படைப்பதில்லை. உயிரணுக்களை மட்டுமே படைக்கிறார்கள். ஓர் இயல்பான சாதாரண மனிதன் உயிரணுக்களையும் படைக்கிறான். உயிரையும் படைக்கிறான்.

ஆனால் ஓர் அசாதாரண மனிதன், ஒரு ஞானி தன்னிடம் இருக்கும் உயிர்ச்சத்தை வைத்துக் கொண்டு தன் உயிரின் புதிய சிகரங்களைத் தொடுகிறான். அவனுடைய சக்தி கீழே இறங்குவதற்குப் பதிலாக மேல் நோக்கிப் போகிறது. அந்த சக்தி புவியீர்ப்புச் சக்தியால் பாதிக்கப் படுவதில்லை. அந்த சக்தி உயர உயரப் பறக்கத் தொடங்குகிறது. அது முழுமை பெற்றுவிடுகிறது.

இந்த விதைகளின் விதியை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். பலர் பிறக்கிறார்கள். என்றாலும் சிலர்தான் அந்த நிலையை அடைகிறார்கள். சரி, மற்ற விதைகள் என்ன ஆகின்றன? அழுகிப் போகின்றன. மறைந்துவிடுகின்றன. இல்லையென்றால் அவை மீண்டும் விதைகளாக இதே உலகத்தில் எறியப்படுகின்றன. வளர்வதற்கு இன்னொரு வாய்ப்பைப் பெறுகின்றன.

கிடைக்கும் வாய்ப்பைத் தவற விடாதீர்கள். விதையாக இருப்பது நமக்குக் கிடைத்த மிகப்பெரிய வாய்ப்பு. ஏனென்றால் விதை என்பது ஒரு சாத்தியக்கூறு. ஒரு பெரிய ஆலமரமாகும் அழகான சாத்தியக்கூறு ஆலாகத் தழைத்து வளரும் வாய்ப்பு உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. என்றாலும் அந்த விதை பல விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஆயிரம் தடைகளைத் தாண்ட வேண்டும்; ஆயிரம் தடுப்புச் சுவர்களை உடைத்துக் கொண்டு வளர வேண்டும். ஆயிரமாயிரம் மாற்று வழிகளைக் கைவிட வேண்டும். அப்போதுதான் நீங்கள் உங்கள் வளர்ச்சிப் பாதையில் முன்னேற முடியும்.

வளர்ச்சி என்பது ஓர் அபூர்வமான நிகழ்வு. அது இயல் பானதுதான் என்றாலும் அபூர்வமானது.; விதை சரியான

மண்ணை இனம் கண்டுகொண்டுவிட்டால் வேகமாக வளர்கிறது. அது இயற்கையின் விதி. ஆனால் சரியான மண்ணை இனம் கண்டு கொள்வதில்தான் சிக்கல் இருக்கிறது.

இன்று நாம் பார்க்கப் போகும் பாடலில் கபீர் இரண்டு தெளிவான வேறுபாடுகளை விளக்குகிறார். அவற்றைப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

*ஏ சாது! உன் தேகத்தை எளிமையான வழிகளில் தூய்மைப்படுத்து!*

சாது என்ற வார்த்தை மிகவும் அழகானது. அதை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். இன்று அது தவறான அர்த்தத்தில் வழங்கப்படுகிறது. இந்த வார்த்தை பொருள் செறிந்தது. சாது என்றால் எளிமையானவர், இயல்பானவர், வெகுளி என்று பொருள்.

ஆனால் இந்தியாவிற்குப் போய் சுற்றிமுற்றிலும் உள்ள சாதுக்களைப் பார்த்தால் அவர்கள் அப்பாவிகள் அல்லர் என்பதை உணர்வீர்கள். அவர்கள் மிகவும் குழப்பமானவர்கள். சம்சாரிகளை விடவும் குழப்பமானவர்கள். எங்கிருந்து இந்தக் குழப்பம் வந்தது?

அவர்கள் சாதுக்கள் என்ற பெயரில் உலாவரும் போலிகள். போலிகள் எப்போதும் இயல்பாக இருக்க மாட்டார்கள். இயற்கைக்குப் புறம்பானவற்றையே செய்து கொண்டிருப்பார்கள். இயற்கைக்கு எதிராக நீச்சல் போடுவதையே தொழிலாகக் கொண்டுள்ளனர் இந்தப் போலிச் சாமியார்கள். ஆற்றுப் போக்கோடு போகாமல் அதன் போக்கையே மாற்ற முயற்சி செய்கின்றனர். அதனால் இயற்கையின் எதிரிகளாகிவிட்டார்கள்.

சாதுவின் முதல் அறிகுறி தன் அறியாமையைப் புரிந்து கொள்வது. அறியாமைதான் வெகுளித்தனத்திற்கு முன்னோடி. அறிவு உங்களைக் குழப்புகிறது. ஊழலுக்குத் தூண்டுகிறது. நீங்கள் மனப்பூர்வமாக "எனக்குத் தெரியாது" என்று சொல்லும் போதுதான் நீங்கள் சாதுவாக மாறுவதற்கான முதல் படியில் காலடி எடுத்து வைக்கிறீர்கள்.

உங்களிடம் யாரோ ஒருவர் "கடவுள் இருக்கிறாரா இல்லையா?" என்று கேட்கிறார். "எனக்குத் தெரியாது." என்று நீங்கள் சொன்னால் நீங்கள் சாது.

புத்தர் தன்னைத் தேடி வருபவர்களிடம் "நீங்கள் கடவுளை நம்புகிறீர்களா? சொர்க்கம் நரகம் இவற்றை நம்புகிறீர்களா? மனிதனுக்குள் ஓர் ஆன்மா இருப்பதை நம்புகிறீர்களா?" என்று கேட்பார்.

வந்தவர் "எனக்குத் தெரியாது ஐயா." என்று சொன்னால் புத்தர் உடனே, "சாது, சாது, நீங்கள் ஒரு சாது. ஒரு வெகுளி. ஓர் அப்பாவி" என்று பூரித்துப் போவாராம்.

இதுதான் முதல்படி.

அறிவு குழப்பத்தை உண்டாக்குகிறது. உங்களுக்கு அதிகம் தெரியத் தெரிய உங்கள் குழப்பம்தான் அதிகமாகிறது. அதன்பின் நீங்கள் சாமர்த்தியசாலி ஆகிறீர்கள். உங்களுக்குச் சூழ்ச்சித்திறன் வந்துவிடுகிறது. இயற்கையை ஏமாற்ற நினைக்கிறீர்கள்.

ஓர் அப்பாவி எந்த நேரத்திலும் இயற்கையோடு ஒத்துழைக்கிறான். அறிவாளி இயற்கையை ஏமாற்றத் திட்டம் போடுகிறான். இயற்கையைச் சுரண்டத் திட்டமிடுகிறான். இயற்கையை அடக்கியாளத் தன் அறிவைப் பயன்படுத்துகிறான்.

விஞ்ஞானம் இப்படித்தான் இயற்கையை ஏமாற்ற முயல்கிறது. ஒரு காலத்தில் நிச்சயம் இயற்கை பழிவாங்கும் நடவடிக்கைகளில் இறங்கும். இயற்கையை அதிக நாள் ஏமாற்ற முடியாது. இறுதியாக உங்கள் ஏமாற்று வேலை உங்களுக்கு எதிரான

அழிவு வேலையாக மாறத்தான் போகிறது.

அதுதான் நடந்திருக்கிறது. முந்நூறு வருடங்களாகத் தொடர்ந்து இயற்கையை விஞ்ஞானம் என்ற பெயரால் ஏமாற்றி வந்ததன் விளைவு இன்று மொத்த மனித இனமும் அழிவிற்கு மிக அருகில் வந்துவிட்டது. மனித இனமே இன்று ஒட்டு மொத்தமான தற்கொலை முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது.

நீங்கள் சாதுவாக வேண்டுமானால் அறிவைத் தேடாதீர்கள். அறிவு ஒரு மாயை. எது உண்மை என்று உங்களுக்குத் தெரியாது. யாருக்குமே தெரியாது. அறிவிலிகள்தான் எல்லாம் தங்களுக்குத் தெரியும் என்ற இறுமாப்போடு இருப்பார்கள். தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று ஞானிகளுக்கு நன்றாகத் தெரியும்.

இரண்டாவது சாது என்பவன் ஒரு குழந்தையைப் போல் தன்னிச்சையாகச் செயல்படுவான். பசிக்கும்போது உண்பான். தூக்கம் வரும் போது தூங்குவான். சிறு குழந்தைகளைப் பார்த்திருக்கிறீர்களா? சில குழந்தைகள் சாப்பிடும் போதே தூங்கிவிடும். சாப்பிட்டுக் கொண்டேயிருக்கும். வாய் நிறைய உணவு இருக்கும் என்றாலும் தூக்கத்தில் ஆழ்ந்துவிடும்.

சாதுவின் முக்கியமான தன்மை தன்னிச்சையாக இயல்பாக இயங்குதல். இன்று சாதுக்கள் என்று தங்களைச் சொல்லிக்கொண்டு திரிபவர்களிடம் இந்தத் தன்னிச்சையான இயல்பு இருக்காது. அவர்களுக்குப் பசி இருக்கும்போது உண்ணாவிரதம் இருக் கிறார்கள். அவர்கள் எப்படித் தன்னிச்சையாக இயங்க முடியும்?

தூக்கம் வரும்போது தங்களை வருத்திக் கொண்டு கண் விழிக்கிறார்கள். மனதில் கோபம் பொங்கும்போது புன்முறுவல் பூக்கிறார்கள். மனதில் செக்ஸ் ஆசைகள் கொழுந்துவிட்டு எரியும்போது பிரம்மச்சரியத்தைப் பற்றிப் பிரச்சாரம் செய்கிறார்கள்.

இவர்கள் சத்தியமாக சாதுக்கள் அல்லர். கபீர் இவர்களைச் சாதுக்கள் என்று ஒரு நாளும் ஏற்றுக் கொள்ள மாட்டார். நானும்தான்.

சாது என்பவன் ஒரு சிறுகுழந்தையைப் போல் இருக்க வேண்டும். ஏசுநாதர் இதை அழகாகச் சொல்கிறார்.

"சிறு குழந்தையைப் போன்று இருப்பவர்களே இறை வனுடைய ராஜ்ஜியத்தில் நுழைய முடியும்."

ஏசுநாதர் சாதுக்களைப் பற்றித்தான் பேசுகிறார். ஒரே ஒரு வேறுபாட்டை மனதில் கொள்ள வேண்டும். ஏசுநாதர் 'சிறுபிள்ளைகளைப் போல்' என்று சொல்லும்போது சிறுபிள்ளைத்

தனமான பொறுப்பில்லாத பக்குவமில்லாதவர்களைப் பற்றிச் சொல்லவில்லை. வெகுளியாக, அப்பாவியாக ஆனால் பக்குவப் பட்டவர்களைப் பற்றி மட்டுமே சொல்கிறார்.

வெகுளித்தனத்திற்கென்று ஒரு பக்குவம் இருக்கத்தான் செய்கிறது. வெகுளித்தனம் உங்களுக்குள் மலர்ந்து பிஞ்சாகிக் காய்த்துப் பழுக்க வேண்டும்.

சிறு குழந்தையைப் போல் வெகுளியாக இருப்பவனுக்கும் சிறுபிள்ளைத்தனமாகப் பக்குவம் இல்லாமல் இருப்பவனுக்கும் என்ன வித்தியாசம்? இரண்டாம் வகையினருக்கு விழிப்புணர்வு கொஞ்சம்கூடக் கிடையாது. ஒருவகையில் பார்த்தால் அவன் வெகுளிதான். பசித்தால் உண்பான். அசதியாக இருந்தால் படுத்துக் கொள்வான். அவனுடைய தன்னிச்சையான செயல் பாடுகள் உணர்வின்மையில் வேரூன்றியவை.

தன்னிச்சையாகச் செயல்படும்போது.. .. ..

பின்னணியில் விழிப்புணர்வு இருக்கும்போது.. .. ..

அந்த விழிப்புணர்வு இருந்த போதிலும் நீங்கள் உங்களுடைய தன்னியலார்ந்த செயல்களில் குறுக்கிடாமல் இருக்கும்போது.. .. ..

நீங்கள் பக்குவமான அப்பாவியாக இருக்கிறீர்கள்.

நீங்கள் இயற்கையாகவே ஒழுக்கமானவராக இருந்தால்,..

செயற்கையாக ஒழுக்க விதிகளை வற்புறுத்தித் திணிக்கும் அவசியம் இல்லாமல் இருந்தால்.. .. ..

உங்கள் விழிப்புணர்வு உங்களை இயல்பாகச் செயலாற்றத் தூண்டினால்.. .. ..

நீங்கள் ஞானியாகிறீர்கள்.

இயல்பாக இயற்கையில் போக்கில் குறுக்கிடாமல் செயற்கையாக எதையும் உங்களுக்குள் அமுக்கிவைக்காமல் செயல்படும் போது தான் நீங்கள் சாதுவாக மாறுகிறீர்கள்.

இந்த இரண்டு விஷயங்களை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். சிலர் உணர்வின்மை நிலையில் அப்பாவியாக இருக்கிறார்கள். அவர்கள் பக்குவமில்லாதவர்கள். சிறுபிள்ளைத்தன மானவர்கள். அவர்கள் இறைவனின் ராஜ்ஜியத்திற்குள் நுழைய மாட்டார்கள். அவர்கள் சாதுக்கள் அல்லர்.

நல்ல உணர்வுநிலையில் செயல்படுபவர்கள் இரண்டாவது வகை. ஆனால் அவர்கள் தன்னிச்சையாகச் செயல்படமாட்டார்கள். இயற்கைக்குப் புறம்பாகச் செயல்படுவார்கள். வாழ்க்கையின் இயற்கையான போக்கில் குறுக்கிடுவார்கள். இவர்கள் இறைவனின் ராஜ்ஜியத்திற்கு இன்னும் தயாராகவில்லை.

ஒரு புதுவிதமான கலவை தேவைப்படுகிறது. அதைத்தான் கபீர் 'ஸஹஜ ஸமாதி என்கிறார். ஸஹஜ என்றால் தன்னியலார்ந்த, இயற்கையான, தன்னிச்சையான என்று பொருள். ஸமாதி என்றால் விழிப்புணர்வு என்று பொருள். உங்கள் விழிப்புணர்வு உங்கள் தன்னிச்சையான செயல்பாடுகளுடன் குறுக்கிட்டால் நீங்கள் ஞானத்தைத் தவறவிட்டு விட்டீர்கள் என்று கொள்ள வேண்டும். உங்கள் தன்னியலார்ந்த தன்மை உங்கள் விழிப்புணர் வுக்கு எதிராக இருந்தால் அப்போதும் நீங்கள் ஞானத்தைத் தவறவிட்டுவிட்டீர்கள் என்று கொள்ள வேண்டும். ஒரு சாதுவிடம் இரண்டுமே சரியான விகிதாச்சாரத்தில் இருக்கிறது.

கபீர் சொல்கிறார் "ஏ சாது! உன் தேகத்தை எளிமையான வழிகளில் தூய்மைப்படுத்து!"

உடலுடன் சண்டை போடாதீர்கள் என்பதுதான் அவர் நமக்குத் தரும் செய்தி. உங்கள் உடல் உங்கள் உடமை. உங்கள் உடல் என்பது நீங்கள்தான். அதனால் உடலுடன் பகைமை வளர்த்துக் கொள்ளாதீர்கள் என்கிறார்.

கிறிஸ்துவர்கள், இந்துக்கள், முகமதியர்கள், சமணர்கள் அனைவருமே தங்கள் உடலுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இறைவனை அடைய உடல்தான் முட்டுக் கட்டை என்ற தவறான கோட்பாடு எப்படியோ உள்ளே வந்துவிட்டது உண்மை அதுவல்ல.

உடல் என்பது ஒரு வாகனம். அந்த வாகனத்தில் நீங்கள் நரகத்திற்குப் போக விரும்பினால் அது உங்களை அங்கே கொண்டு செல்லும். சொர்க்கத்திற்குப் போகவும் அதே வாகனத்தைப் பயன்படுத்தலாம்.

நீங்கள் எங்கே வேண்டுமானாலும் போகலாம். இந்த உடல் என்னும் வாகனம் உங்கள் கட்டளைக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. வெளியே போக வேண்டும் என்று விரும்பினால் அது வெளியே அழைத்துச் செல்லும். உள்ளே போக வேண்டும் என்று விரும்பினால் அது உள்ளே அழைத்துச் செல்லும். உடல் ஒரு வாகனம் மட்டுமே. ஆனால் மிகவும் அழகான வாகனம். உங்களோடு ஒத்துழைக்கத் தயாராக இருக்கும் ஓர் உன்னத வாகனம்.

உங்கள் உடலை நீங்கள் அழிக்க முற்பட்டால் அதற்கும் உங்கள் உடல் உங்களுக்கு ஒத்துழைக்கும். ஒரு சாட்டையை எடுத்து உங்களை நீங்களே அடித்துக் கொள்ளலாம். அதற்கும் உங்கள் கைகள் உங்களுக்கு ஒத்துழைக்கும்.

உங்கள் உடல் உங்களுக்குத் தரும் உன்னதமான ஒத்துழைப்பைச் சிந்தித்துப் பாருங்கள். உங்கள் கையாலேயே உங்கள் உடலுக்குச் சாட்டையடி தரலாம். உங்கள் கையாலேயே நீங்கள் விஷம் அருந்தலாம். அதற்கு உங்கள் கையும் வாயும் ஒத்துழைக்கும். அதன் ஒத்துழைப்பு நிபந்தனையற்றது. உன்னதமானது.

அப்படிப்பட்ட ஓர் உடலை உங்களுக்கு அத்தியந்த நண்பனாக இருக்கும் உடலை உங்களுக்கு எதிரி என்று கதைகட்டிவிட்டார்கள். உடலே தீமை என்று உங்களுக்குப் போதித்திருக்கிறார்கள். உடல் சாத்தானின் கருவி. உடல் சொல்வதைக் கேட்காதீர்கள் என்று உங்களுக்கு உருவேற்றி யிருக்கிறார்கள்.

நீங்கள் உங்கள் உடலில்தான் குடியிருக்கிறீர்கள். உங்கள் வேர்கள் உங்கள் உடலில்தான் இருக்கின்றன. அதுதான் நீங்கள் வளரும் மண். அதிலிருந்துகொண்டுதான் நீங்கள்

வளர வேண்டும். அதுதான் உங்களுக்குப் போஷாக்கு அளிக்க வேண்டும்.

கபீர் சொல்லும் முதல் விஷயம் என்னவென்றால் "ஏ சாது! உன் தேகத்தை எளிமையான வழிகளில் தூய்மைப்படுத்து!"

உடலுடன் சண்டை போடாதே. அதற்கு ஒத்துழைப்புக் கொடு. அதனிடம் நட்புப் பாராட்டு. அதனுடன் இயல்பாக இரு. அதன் தேவைகளைப் பூர்த்தி செய். ஏனெனில் அது உன் ரதம். அதை வைத்துக் கொண்டே நீ அத்தியந்த உணர்வு நிலைக்குப் பயணிக்கலாம். அதுதான் உன் பயணம். அது உன்னை உன் இலக்கிற்கு அழைத்துக் கொண்டு போகும். அதன்மேல் நீ சவாரி செய்யலாம். அது ஒரு காரணத்திற்காக உனக்குத் தரப்பட்டிருக்கும் ஓர் உன்னதமான சாதனம்.

விஞ்ஞானம் இவ்வளவு வளர்ந்திருந்தும் அதனால் உடலுக்கு ஒப்பான ஒரு சாதனத்தைப் படைக்க முடியவில்லை. அப்படிப் படைக்கவும் முடியாது. உடல் இறைவனின் மிக உன்னதமான படைப்பு.

*ஆலமரத்திற்குள் விதை இருக்கிறது*

*அந்த விதையில் மலர்கள், பழங்கள், நிழல் எல்லாமே இருக்கின்றன*

*அது போல் உடலிற்குள் உயிர் இருக்கிறது*

*அந்த உயிருக்குள் உடல் இருக்கிறது*

அந்த உயிர்ச் சத்து உங்கள் உடலில் மறைந்து இருக்கிறது. என்று கபீர் சொல்கிறார்: அந்த உயிர்ச்சத்து மலரலாம். அதன் வித்து இறைவனாகலாம். அதற்கான சாத்தியக்கூறு உங்கள் உடலில் மறைந்து இருக்கிறது.

உங்கள் உடலுடன் சண்டை போடாதீர்கள். அப்படிச் செய்தால் உடலினுள் ஒளிந்து கொண்டிருக்கும் இறைமையின் வித்தை நீங்கள் அழித்துவிடும் அபாயம் இருக்கிறது. தொட்டால் உடைந்து சுக்குநூறாகப் போகும் அளவிற்கு மென்மையானது

அந்த வித்து. விரதம் நோன்பு என்ற பெயரில் உங்களை நீங்களே வருத்திக் கொள்ளத் தொடங்கினால் அந்த மென்மையான வித்து மொத்தமாக அழிந்துவிடும்.

உடலைப் பேணிப் பாதுகாக்க வேண்டும். நம் உடலை நேசிக்க வேண்டும். அப்படிச் செய்தால் நம் உடலின் இயல்பே நம்மைப் புனிதமாக்கிவிடும்.

*காற்று, நீர், பூமி வெளி எதுவும்*

*அவனுக்கு வெளியே இல்லை*

உடல் கடவுளுக்கு வெளியே இல்லை. உள்ளேதான் இருக்கிறது என்று கபீர் ஆணித்தரமாகச் சொல்கிறார். காற்று, பூமி, ஆகாசம், தீ, நீர் - எதுவுமே அவனுக்கு வெளியில் இல்லை. ஏனென்றால் அவனுக்கு வெளியில் எதுவுமே இருக்க முடியாது. கடவுளுக்கு வெளியே என்று ஒன்றும் கிடையாது.

ஒரு பாறைக்கு உட்பக்கம் கிடையாது. மனிதனுக்கு உட்பக்கம் வெளிப்பக்கம் இரண்டுமே உண்டு. கடவுளுக்கு உட்பக்கம் மட்டுமே உண்டு. வெளிப்பக்கம் எதுவும் கிடையாது. இதுதான் வளர்ச்சியின் மூன்று கட்டங்கள். முதற்கட்டம் - அசேதனமான பொருள். வெளிப்பக்கம் மட்டுமே இருக்கும். உட்பக்கம் இருக்காது. அதற்கு ஆன்மாவோ தன்னுணர்வோ இல்லை. மனிதனுக்கு உள்ளே வெளியே என்று இரண்டு பக்கமும் இருக்கிறது. ஏனென்றால் அவனுக்கு உடலும் இருக்கிறது ஆன்மாவும் இருக்கிறது. அவன் மனம்-அசேதனம் இரண்டும் சேர்ந்த கலவை.

கடவுளுக்கு வெளிப்பக்கம் கிடையாது. அவரிடம் தன்னுணர்வு மட்டுமே இருக்கிறது. ஆன்மா மட்டுமே இருக்கிறது.

கடவுளுக்கு வெளியே ஒன்றும் இல்லை. அதனால் அவருக்கு வெளிச்சுற்றே கிடையாது. அசேதனப் பொருள்களுக்கு மையம் இல்லை. வெளிச் சுற்று மட்டுமே இருக்கிறது. கடவுளுக்கு வெளிச்சுற்று கிடையாது. மனிதனுக்கு இரண்டுமே

இருக்கிறது. அதுதான் மனிதனின் வேதனைக்குக் காரணம். அதுதான் அவனுடைய பரவச நிலைக்குத் திறவுகோல்.

மனிதன் மகத்தானவன். ஏனென்றால் அவன் மனதிற்கும் ஜடப் பொருள்களுக்கும் இடையில் ஒரு பாலமாக இருக்கிறான். ஒரு கையால் ஜடப் பொருளைத் தொட்டுக் கொண்டே மற்றொரு கையால் இறைவனைத் தொட்டுக்கொண்டிருக்கிறான். அதுதான் அவன் வேதனை.

.ஏனென்றால் அவன் இந்த இரண்டுக்கும் நடுவே கிடந்து அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறான். ஒரு பக்கம் பொருள்கள் - ஜடப் பொருள்கள் - அசேதனங்கள் - அவனை இழுக் கின்றன. மறுபக்கம் கடவுள் அவனை அழைத்துக் கொண் டிருக்கிறார்.

ஒரு பக்கம் உடைமைகள். மறுபக்கம் அன்பு, காதல் வழிபாட்டுணர்வு, தியானம். ஒருபுறம் பேராசை, பணம், புகழ், மரியாதை - மறுபுறம் மௌனம், அழகு, நன்மை. மனிதன் இரண்டுக்கும் நடுவே வதைபட்டுக் கொண்டிருக்கிறான். இது ஒரு நிலை.

இன்னொரு நிலை என்ன தெரியுமா? மன நிறைவு.

உங்களால் அதுவும் முடியும் இதுவும் முடியும் என்ற உணர்வால் உண்டாகும் மனநிறைவு.

மனிதனிடம் உலகமும் கடவுளும் சங்கமமாகிறார்கள். இறைவனும் உலகமும் சந்திக்கும் அந்தச் சாலைகளின் சந்திப்பில் மனிதன் இருக்கிறான்.

நீங்கள் இல்லாமல் இந்த உலகம் வெறுமையாக இருக்கும். கடவுள் இல்லாமல் இந்த உலகமே இருக்காது. பொருள்கள் (அசேதனங்கள் - ஜடப்பொருள்கள்) இல்லாமலும் இந்த உலகம் இருக்காது. மனிதனற்ற உலகம் இருக்கலாம். ஆனால் அது ஒரு வெறுமையான உலகமாக வறுமை சூழ்ந்த உலகமாக மட்டுமே இருக்கும்.

நான் மீண்டும் சொல்கிறேன். கடவுள் இல்லாமல் இந்த உலகம் கிடையாது. அசேதனங்கள் இல்லாமல் இந்த உலகம்

கிடையாது. மனிதன் இல்லாமல் இந்த உலகம் இருக்கலாம். கடவுளும் இருக்கக் கூடும். ஆனால் அதில் வெறுமையும் வறுமையும்தான் மிஞ்சும்.

மனிதன் இல்லாவிட்டால் வேதனை இருக்காது என்பது உண்மைதான். ஆனால் கூடவே பரவசநிலையும் மறைந்துவிடும். கடவுளால் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்க முடியாது. எந்தக் காலத்திலும் அசேதனப் பொருள்கள் இறைவன் காலடியைத் தொடும் அளவிற்கு உயராது. மனிதன் இல்லையென்றால் நடுவே இருக்கும் பாலம் உடைந்து விழுந்துவிடும்.

இருப்பதிலேயே உன்னதமானவன் மனிதன். இறைவனுக்கும் உலகத்திற்கும் இடையே உள்ள நுண்ணிய பாலம் மனிதன். அசாத்யமான வல்லமை படைத்தவன். மனிதன் தோன்றுவதற்கான காரணமே கிடையாது. மனிதன் தோன்றியது எல்லா விதிகளுக்கும் எதிரானது.

இறைவன் எளிமையானவன். அசேதனமான பொருள்களும் எளிமையானவை. இறைவன் தூய்மையான உணர்வு நிலை. அசேதனமோ தூய்மையான உணர்வின்மை நிலை. நடுவில் இருக்கும் மனிதன் மிகவும் சிக்கலானவன். நுட்பமானவன். உணர்வும் உணர்வின்மையும் சேர்ந்து ஆக்கிய சிக்கலான கலவை மனிதன். முரண்பாடுகளும் எதிர்மறைகளும் அவனிடம் சந்திக்கின்றன.

இதை மட்டும் நன்றாக நினைவில் கொள்ளுங்கள். இந்த விநோதமான முரண்பாடுகளின் சந்திப்பை வேதனையாகக் கொள்வதும் பரவசமாகக் கொள்வதும் உங்கள் கையில்தான் இருக்கிறது. தவறான அணுகுமுறையில் பார்க்கப்படும் பேரு வகையே வேதனை. சரியான அணுகுமுறையில் பார்க்கப்படும் வேதனையே பேருவகை.

உங்கள் பார்வை சரியாக இருந்ததென்றால் நஞ்சும் தேனாகும்.

*பண்டிதனே இதை நன்றாக நினைத்துப்பார்*

*ஆன்மாவில் இல்லாதது என்ன இருக்கிறது?*

கபீர் சொல்கிறார்: ஆன்மாவில் இல்லாதது என்ன இருக்கிறது?

பண்டிதனே வேதத்தைப் பற்றிப் பேசாதே! குரானைப் பற்றிப் பேசாதே! பைபிளைப் பற்றி தம்மபாதாவைப் (பௌத்தர்களின் புனித நூல்) பற்றிப் பேசாதே!

ஆத்மாவில் இல்லாதது என்ன இருக்கிறது? வேதங்கள் அனைத்தும் இதில்தான் இருக்கின்றன. வேதங்கள் ஆன்மாவிலிருந்துதான் தோன்றின. அந்த ஆதிமூலமே உங்களுக்குள் இருக்கிறது. பகவத் கீதைகளும் பைபிள்களும் உங்களிடம்தான் ஜனித்தன. ஏசுநாதர் தன் ஆன்மாவிற்குள் புகுந்ததால் பைபிள் மலர்ந்தது. மோசஸ் தன் ஆன்மாவிற்குள் நுழைந்ததால் பைபிள் மலர்ந்தது. கிருஷ்ண பரமாத்மா தனக்குள்ளே அடியாழத்தில் இருக்கும் தன் மையக்கருவிற்குள் நுழைந்ததால் மிக அழகான பகவத்கீதை நமக்குக் கிடைத்தது. புத்தர் தன் ஆன்மாவை ஊடுருவிச் சென்றதால்தான் தம்மபாதா பிறந்தது. எல்லாமே உங்கள் ஆன்மாவில் இருக்கிறது.

வேதங்களையும் குரானையும் தேடி ஓடும்போது நீங்கள் தவறான திசையை நோக்கி ஓடுகிறீர்கள். அடுத்தவர் கைபட்டுப் பழையதாகிவிட்ட கடவுளைத் தேடுகிறீர்கள். கடவுள் கைபடாதவராக புதியவராக இருக்க வேண்டும்.

புனித நூல்களில் உங்கள் தேடல் இருந்தால் அது கோட்பாடுகளைக் குறித்துத்தான் இருக்க முடியும். அவற்றில் உண்மையைத் தேட முடியாது. உண்மை எப்போதும் அசலாக ஆதிமூலமாக மட்டுமே இருக்க முடியும். உண்மை உங்களுக்குள் பிறக்க வேண்டும். அதை அடுத்தவரிடம் இரவல் வாங்க முடியாது.

*பண்டிதனே இதை நன்றாக நினைத்துப்பார்*

*ஆன்மாவில் இல்லாதது என்ன இருக்கிறது?*

எல்லாமே அவனுள் அடக்கம். ஆன்மாவிற்குள் அடக்கம். அவன் அனைத்திலும் இருக்கிறான்.

*நீர் நிறைந்த வாளியை நீரின்மேல் வைத்தால்*
*அதன் உள்ளும் நீரிருக்கும். வெளியிலும் நீரிருக்கும்.*
*அதனைப் பெயரிட்டு அழைக்க முடியாது*
*அழைத்தால் ஒரே உண்மையை இரண்டு என்றறியும்*
*இருபொருள் வாதத் தவறு ஏற்படும்*

மொத்தப் பிரச்சினையும் மொழிப் பிரச்சினையே. மொழியின் பலவீனத்தாலேயே இருபொருள் வாதம் என்னும் தவறு ஏற்படுகிறது. - உள்ளே-வெளியே, கடவுள்-உலகம், சடப்பொருள்-மனம். பெயரிட்டு அழைப்பதாலேயே பிரச்சினை ஏற்படுகிறது. பெயரிடுவதை நிறுத்துங்கள். மொழியை விடுங்கள். மொழியற்ற இடைவெளியில் சஞ்சரியுங்கள். இருப்பது ஒன்றுதான் என்பதை அப்போதுதான் ஆத்மார்த்தமாக உணருவீர்கள். சில சமயம் மொழியற்ற ஓர் அணுகுமுறையைக் கையாளுங்கள்.

தியானத்தின் உட்கருத்து அதுதான். வாழ்க்கையை, உலகை மொழியின் துணையில்லாமல் பார்க்க முற்படுவதே தியானம். ஒரு மரத்தின் அருகில் அமருங்கள். அதனைக் கூர்ந்து நோக்குங்கள். மரம் என்று அதற்குப் பெயரிடுவதைத் தவிருங்கள். அது எந்த வகையைச் சேர்ந்த மரம் என்பதையும் எண்ணாதீர்கள். அது ஆலமரமாக இருக்கட்டும் அரச மரமாக இருக்கட்டும். அதற்குப் பெயரிடாதீர்கள்.

அதுபோல் சிலசமயம் இன்னொரு மனிதரின் கண்களைப் பாருங்கள். அந்த மனிதருக்குப் பெயரிடாதீர்கள் - ஆண், பெண், என்னவள், தோழி, தோழர், பகைவன், இளைஞன், வயதானவன், அழகானவள், அசிங்கமானவள் - பெயர்களை உள்ளே கொண்டு வராதீர்கள்.

அந்த மனிதரின் கண்களை மட்டும் பாருங்கள். மொழியை உள்ளே நுழைய விடாதீர்கள். திடீரென்று அங்கே ஒரு பெரிய தாவல் நிகழும்.. பார்ப்பவரும் பார்க்கப்படுபவரும் ஒன்றாகும் ஆச்சரியத்தைக் காண்பீர்கள். அதன்பின் எது "நான்" எது "நீ" என்ற வரைமுறையே தெரியாது. இது

போன்ற கணங்களில்தான் கடவுள் உங்களுக்குள் நுழைகிறார். அவர் காலடி ஓசையைக் கூட உங்களால் தெளிவாகக் கேட்க முடியும்.

ஒரே ஒரு மணிநேரமாவது மொழியில்லாமல் இருந்து பாருங்கள். மொழியைத் தவிர்ப்பது என்றால் சமுதாயத்தையே தவிர்ப்பது போலாகும். மொழியைத் தவிர்ப்பது என்பது மனிதனால் உருவாக்கப்பட்ட அனைத்தையும் தவிர்ப்பதற்குச் சமம்.

உங்களுக்குத் தெரியுமா? மொழி மிக மிக முக்கியமானது. விலங்குகள், மரங்கள் அனைத்தும் மௌனமாகவே இருக்கின்றன. அவை வாதங்கள் செய்வதில்லை. அவற்றுக்கென்று புனித நூல்கள் இல்லை. ஒரு மரம் கிறிஸ்துவனா,. முகமதியனா இல்லை இந்துப் பெண்ணா என்று உங்களால் சொல்ல முடியுமா?

அது அப்படியே தன் அழகில் லயித்து ஒரு பெயர்கூட இல்லாமல் இருக்கிறது. ஆமாம், அதற்குத் தன் பெயர் என்னவென்று கூடத் தெரியாது. மனித இனம்தான் பெயர்களை உருவாக்குகிறது. உங்கள் சமுதாயம் மொழியால் உருவானதுதான். உங்கள் அறிவும் மொழி சார்ந்ததுதான்.

இப்படி யோசித்துப் பாருங்களேன்: திடீரென்று ஓர் அதிசயம் நடந்து உலகில் உள்ள மொழிகள் எல்லாம் மறைந்துவிட்டால் அதன்பின் மனிதனுக்கும் விலங்கிற்கும் என்ன வித்தியாசம் இருக்க முடியும்? ஓர் இந்துவிற்கும் ஒரு முகமதியனுக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்? ஒன்றும் இருக்காது. வேறுபாடுகள் அனைத்தும் மொழியிலிருந்துதான் வந்தன.

ஒரு சின்ன ஒழுங்கை உங்கள் வாழ்க்கையில் கொண்டு வாருங்கள். "ஒழுங்கு" என்ற அந்த வார்த்தையைச் சொல்லும் போது அதீதப் பயத்துடன்தான் சொல்கிறேன். உங்கள் மேல் நீங்கள் வற்புறுத்தித் திணிக்கும் ஒழுங்கைப் பற்றி நான் பேசவில்லை. ஒழுங்கு என்ற சொல்லிற்கான ஆங்கிலச்

சொல்லின் (discipline) மூலத்தை ஆராய்ந்து பார்த்தால் கற்றல் என்ற பொருள்தான் வரும். உங்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளுங்கள் என்று சொல்லும்போது கற்றுக்கொள்ளுங்கள் என்ற பொருளில்தான் சொல்கிறேன்.

மரத்தின் அருகே அமருங்கள். ரோஜா மலரைப் பாருங்கள். வாயாலோ மனதாலோ எந்த வார்த்தையையும் சொல்லாதீர்கள். அங்கே இருங்கள். அந்த ரோஜா உங்கள் முன்னிலையில் மலரட்டும். உங்கள் முன்னிலை அந்த மலரின்மேல் பொழியட்டும். மொழியில்லாத ஒரு சந்திப்பு அங்கே நிகழட்டும்.

அந்த ரோஜாவைப் போலவே மௌனமாக இருங்கள். எப்படி ரோஜா உங்களைப் பற்றி எதுவும் பேசவில்லையோ நீங்களும் அதனைப் பற்றி எதுவும் பேசாதீர்கள்.

ஒரு நாளும் ரோஜா "ஆகா! இந்த மனிதனைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கிறான்!" என்று சொல்லாது. ரோஜா மலர் நீங்கள் ஆணா பெண்ணா, கருப்பா சிகப்பா என்று சொல்லாது. ரோஜா எதுவுமே சொல்லாது. அது உன்னதமான மௌனத்தில் துடிப்புடன் இருக்கிறது. அதே துடிப்புடன் நீங்களும் இருக்க வேண்டும்.

அந்த மலரின் அருகில் அமருங்கள். ரோஜாவை உற்றுப் பாருங்கள். கவனியுங்கள். மொழியை மேலெழும்ப விடாதீர்கள். வார்த்தைகள் தோன்றினால் அவற்றை ஒதுக்கிவையுங்கள். வார்த்தைகளை உதாசீனம் செய்யுங்கள்.

வார்த்தைகள் வரத்தான் வரும். அது பழைய பழக்கம். அவ்வளவு சீக்கிரத்தில் உங்களை விட்டுப் போகாது. நீங்கள் வார்த்தைகளைப் பலகாலம் பயன்படுத்தியிருக்கிறீர்கள். வார்த்தைகளைச் சுரண்டி லாபம் அடைந்திருக்கிறீர்கள். வார்த்தைகளைச் சார்ந்தே வாழப் பழகிக் கொண்டிருக்கிறீர்கள். அதனால் அவை எளிதாக உங்களைவிட்டுப் போகாது. அவை உங்களைச் சுற்றிக் கொண்டேயிருக்கும். காதில் ரீங்காரமிட்டுக்கொண்டேயிருக்கும். உங்களுக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டேயிருக்கும்.

வார்த்தைகள் உங்களிடம் வந்து "அழகான ரோஜா" என்று சொல்லும். அதைக் காதில் போட்டுக் கொள்ளாதீர்கள்.

வார்த்தைகளுடன் சண்டை போடுங்கள் என்று சொல்ல வில்லை. அவற்றுடன் ஒத்துழைக்காதீர்கள் என்றுதான் சொன்னேன். அது போதும். சண்டை போடுவதால் எந்தப் பயனும் இல்லை. குழப்பம்தான் மிஞ்சும்.

ஒரு வார்த்தையுடன் சண்டை போட உங்களுக்கு வேறு ஒரு வார்த்தை வேண்டும். வார்த்தைகள் இல்லாமல் வார்த்தையுடன் உங்களால் சண்டை போட முடியாது. உங்கள் மனதில் ஒரு வார்த்தை எழுகிறது. அதனுடன் நீங்கள் எப்படிச் சண்டை போடுவீர்கள்?

"நான் வார்த்தைகள் இல்லாமல் இருக்கத் தீர்மானித்து விட்டேன். 'மௌனமாக இரு' என்று ஓஷோ சொல்லி யிருக்கிறார்." என்று சொல்வீர்கள். இவையனைத்தும் வார்த்தைகள் தானே?

இல்லை, "ஏ வார்த்தையே, நான் தியானம் செய்கிறேன் என்று தெரியவில்லை? என்னிடம் வராதே" என்று சொல்வீர்களா? தியானம் என்பதும் ஒரு வார்த்தைதானே?

வார்த்தையுடன் நீங்கள் சண்டை போடலாம். ஆனால் அதற்கு இன்னும் அதிகமான வார்த்தைகள் வேண்டும். இப்படியே போனால் நீங்கள் மீண்டும் பழைய குழியிலேயே விழுந்துவிடுவீர்கள்.

அதற்கு அவசியம் இல்லை. வார்த்தைகள் உங்களைக் கடந்து போகட்டும். தப்பில்லை. வார்த்தைகளை உதாசீனப் படுத்துங்கள். அவற்றுக்குச் செவிசாய்க்காதீர்கள்.

சிலநாட்கள் அவை உங்களைச் சுற்றிக் கொண்டிருக்கும். அதன்பின் தாங்கள் உதாசீனப்படுத்தப்படுகிறோம் என்பதை உணர்ந்து கொள்ளும். படிப்படியாக அவற்றின் மேல் உங்களுக்கு இருந்த ஈர்ப்பு குறைந்து கொண்டு வருகிறது என்பதை உணர்ந்து கொள்ளும். தங்களுக்கு மதிப்பில்லை என்பதை அறிந்து கொள்ளும். அதன்பின் அவை படிப்படியாக மறைய

ஆரம்பிக்கும். எண்ணங்களும் மறைய ஆரம்பிக்கும். எண்ணங்களும் வார்த்தைகளும் வேண்டாத விருந்தாளிகளாகிவிடும்.

ஒரு நாள் உங்களுக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்துக் கொண்டிருக்கும். சில நொடிகள் கழிகின்றன. அங்கே ரோஜா இருக்கிறது, சூரியன் இருக்கிறது, பச்சை மரங்கள் இருக்கின்றன, நீங்கள் இருக்கிறீர்கள் – ஆனால் ஒரு வார்த்தை கூட உங்கள் மனதைக் கடந்து செல்லவில்லை.

உண்மையான தியானம் என்றால் என்ன என்று நீங்கள் சுவைக்கத் தொடங்குகிறீர்கள். தாவோவை நீங்கள் ருசி பார்க்கிறீர்கள். கபீர் தாஸ், கிருஷ்ண பரமாத்மா ஏசுநாதர் இவர்களின் ஆன்மாவைத் தரிசிக்கிறீர்கள். ஓஷோவைச் சுவைக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கையில் முதல் முறையாக உன்னதமான ஒன்றைத் தரிசிக்கிறீர்கள். இதன் சுவை அறிந்தபின் இதனை விட மாட்டீர்கள். இதை மீண்டும் மீண்டும் வரவேற்பீர்கள். நேரம் கிடைக்கும் போதெல்லாம் மௌனமாக அமர்ந்து இந்தத் தியானத்தில் ஈடுபடுவீர்கள்.

இதற்காக நீங்கள் ரோஜாச் செடியைத் தேடிக்கொண்டு போக வேண்டாம். உங்கள் அறையிலேயே அமர்ந்து இந்தத் தியானத்தைச் செய்யலாம். அறையின் சுவர்கள் கூட அழகாகத் தெரியும்.

போதிதர்மர் ஒன்பது வருடங்கள் சுவரைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாராம். வேறு எதுவும் செய்யவில்லையாம்.

சில நேரங்களில் சுவரைப் பார்த்துக் கொண்டு அமர்வதும் தியானநிலையாகவே இருக்கும். சுவரைப் பாருங்கள். சாதாரண வெள்ளைச் சுவர். உங்கள் கவனத்தைத் திசைதிருப்ப எதுவும் இல்லை. பேச ஒன்றும் இல்லை. இந்த இடைவெளியை நீங்கள் எங்கு வேண்டுமானாலும் உருவாக்கிக் கொள்ளலாம். இரண்டு எண்ணங்களுக்கு இடையில் இடைவெளி இருந்தால் அதனுள் குதியுங்கள்.

மொழிதான் சமூகம். மொழிதான் நாகரிகம். மொழிதான் கம்யூனிசம், இஸ்லாமிய மதம், இந்து மதம், கிறிஸ்துவ மதம்

எல்லாம். அதனுள் இருக்கும் சிறு சிறு இடைவெளிகளில்தான் ஏகநாதர் இருக்கிறார். நபிகள் நாயகம் இருக்கிறார். அந்த இடைவெளியிலிருந்துதான் குரான் வெளிவந்தது.

குரான் என்ற சொல்லிற்கு ஓதுதல் என்பதுதான் பொருள். நபிகள் நாயகத்தைப் பற்றி இந்த அழகான கதையைச் சொல்கிறார்கள்.

நபிகள் முன் முதன்முதலாக இறைவனின் தூதுவன் தோன்றி அவரை ஓதச் சொன்னான். இறைவனின் பெயரை, இறைவனின் பெருமைகளை ஓதுமாறு பணித்தான். நபிகள் கேட்ட வார்த்தை "ஓது" என்பதுதான். அதனால் அதே பொருள் விளங்கும் குரான் என்ற பெயர் அந்தப் புனித நூலுக்கு உண்டானது.

தூதுவன் ஓது என்று சொன்னது நபிகளுக்கு ஆச்சரியமாக இருந்தது. "ஓதுவதா? எனக்கு ஒன்றும் தெரியாதே?"

"அதனால்தான் ஓதச் சொல்கிறேன். தெரிந்தவர்களால் ஓத முடியாது.."

"நான் கல்வியறிவு இல்லாதவன். எனக்கு எந்த மொழியும் முழுமையாகத் தெரியாது. எனக்கு எழுதப்படிக்கத் தெரியாது."

"அதனால்தான் ஓதச் சொல்கிறேன். விஷயம் தெரிந்தவர்கள், கற்றறிந்தவர்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் தங்கள் அறிவில் தொலைந்து போய்விட்டார்கள். நீங்கள்தான் இந்த நிகழ்காலத்தில் தூய்மையாக இருக்கிறீர்கள். ஓதுங்கள்."

தூய்மை நிலையில் இருந்து கொண்டுதான் கடவுள் பேசினார். தூய்மை நிலையில் இருந்தபடி அவருடைய ஆன்மா பேசியது. நீங்களும் பேசுங்கள்."

அந்தத் தூய்மை 'நிலையில்தான் திருக்குரான் பிறந்தது.

நீங்கள் மீண்டும் குரானைத் தேடி ஓட வேண்டாம். உங்கள் உள்ளே இருக்கும் அந்த இடைவெளிக்குச் செல்லுங்கள். அங்கே இறைத்தூதுவன் உங்கள் முன் தோன்றி "ஓது"

என்பான். இது எனக்கு நடந்தது என்பதால்தான் இதனைச் சொல்கிறேன். இது உங்களுக்கும் நடக்கும்.

அந்த இடைவெளிக்கு நீங்கள் சென்றுவிட்டால் இறைத்தூதுவர்கள் உங்களைச் சூழ்ந்து கொள்வார்கள். அந்த உன்னதமான மௌனத்தில் இறைவன் உங்களுக்குள் தோன்றுவான். நீங்கள் நிறைவே காண்பீர்கள்.

*அதனைப் பெயரிட்டு அழைக்க முடியாது*

*அழைத்தால் உண்மையை இரண்டு என்றறியும்*

*இருபொருள் வாதத் தவறு ஏற்படும்*

ஒன்றைப் பெயரிட்டு அழைக்கும்போது இருபொருள்வாதத்தை உள்ளே கொண்டு வருகிறீர்கள். நுட்பமான ஒரு மனச்சிதைவை உள்ளே கொண்டுவருகிறீர்கள்.

எப்போது நீங்கள் "இது அழகாக இருக்கிறது" என்று சொல்கிறீர்களோ அப்போதே நீங்கள் உலகத்திற்குள் அசிங்கத்தைக் கொண்டுவருகிறீர்கள்.

"நான் நேசிக்கிறேன்" என்று சொல்லும் அந்தக் கணத்தில் உலகில் நீங்கள் வெறுப்பைக் கொண்டு வருகிறீர்கள்.

"நீ என் நண்பன்" என்று சொல்லும் அந்தத் தருணத்தில் நீங்கள் உலகில் பகைமையைக் கொண்டுவருகிறீர்கள்.

எப்போதெல்லாம் நீங்கள் "இது நல்லது, இது சரி, இது ஒழுக்கமானது" என்று சொல்கிறீர்களோ அப்போதெல்லாம் நீங்கள் உலகில் தீமையை, ஒழுங்கீனத்தை, சாத்தானை உள்ளே கொண்டுவருகிறீர்கள்.

ஆழ்ந்த மௌனத்தில் இது நன்மை இது தீமை நீங்கள் பெயர்களையும் குறியீடுகளையும் சொல்லாத நேரத்தில் அந்த மௌனத்தில் இருபொருள் வாதம் மறைகிறது. பிளவு நீங்குகிறது. மனச்சிதைவு குணமாகிறது. உலகம் ஒன்றாகிறது.

அந்த ஒன்றான உலகம்தான் இறைவன். ஒன்றான அந்த நிலையில் எந்த நேரமும் வசிப்பவன்தான் சாது, சந்நியாசி.

*கபீர் சொல்கிறான்:*

*வார்த்தையைக் கவனி உண்மையை உணர்*

*அதுதான் உன் சாரம்*

கோட்பாடுகள், குறியீடுகள் பெயர்கள் மொழிகள் - இவற்றைக் கவனிக்கும் போது எல்லாவற்றிற்கும் மூலமான அந்த வார்த்தையை நீங்கள் கவனிக்க முடியாது. இந்த வார்த்தை ஒரு மொழியின் பகுதியன்று. உலகத்தின் படைப்பிற்கே மூலாதாரமான வார்த்தை. கபீர் இதனை "ஸப்த்" என்கிறார். இதையேதான் பைபிளும் சொல்கிறது. "ஆதி முதலில் வார்த்தை மட்டுமே இருந்தது."

அந்த வார்த்தை மனிதன் சம்பந்தப்பட்டது இல்லை. ஏனென்றால் அது முதலில் இருந்த மூலாதாரமான வார்த்தை. பிரணவம். மனிதன் தோன்றியது அதற்குப் பிறகுதன்.

"அந்த வார்த்தைதான் கடவுள். அந்த வார்த்தைதான் கடவுள்." என்று பைபிள் முழங்கிக் கொண்டே போகிறது. (அந்த வார்த்தையை logos என்று அழைக்கிறது பைபிள்)

கபீர் ஸப்த என்ற சொல்லால் இந்த மூலாதார வார்த்தையைக் குறிப்பிடுகிறார். இது மனிதன் தோன்றுவதற்கு முன்பே தோன்றிய வார்த்தை. மனிதன் மறைந்த பின்னும் இந்த வார்த்தை இருக்கும். இதற்கும் நம் மொழிகளில் உள்ள வார்த்தைகளுக்கும் சம்பந்தம் இல்லை. இது ஓங்காரம். இது ப்ரணவம். இருப்பு நிலையின் சப்தமில்லாத சப்தம்.

இதைத்தான் ஜென் துறவிகள் "ஒரு கையால் தட்டினால் ஏற்படும் சப்தம்" என்று வர்ணிக்கிறார்கள். அது அடிப்பதால் ஏற்படும் சப்தம் இல்லை. நீங்கள் சாதாரணமாகக் கை தட்டினால் சத்தம் உண்டாகிறது. அது அடிச் சத்தம். கையைக் கை அடிப்பதால் ஏற்படும் சாதாரண சப்தம். அது இரட்டைகளால்- முரண்பாடுகளால்- தோன்றும் சப்தம்.

ஒரு கை தட்டுவதால் உண்டாகும் சப்தத்தை நினைத்துப் பாருங்கள். அது முரண்பாடுகளில் ஜனிப்பதில்லை. பரிபூரணமான

இசைவிலிருந்து ஏற்படுகிறது. தூய்மையான ஒருமையில் அது ஜனிக்கிறது... மூலாதாரமான அந்த வார்த்தையின் ஒலிதான் ப்ரணவம். அதுதான் மெய்ப்பொருள். அதுதான் கடவுளின் மொழி.

கடவுளின் மொழியைக் கேட்க வேண்டுமென்றால் நீங்கள் உங்கள் மொழியை விடவேண்டும். அவரது செய்தியைக் கேட்க வேண்டுமென்றால் நீங்கள் ஆழ்ந்த மௌனத்தில் இருக்க வேண்டும்.

நம்மிடம் ஒரு தவறான கருத்து நிலவுகிறது. வழிபாடு செய்ய வேண்டுமென்றால் கடவுளிடம் பேசுவது என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். வழிபாடு என்பது பேசுவது அல்ல. கடவுள் பேசுவதைக் கவனமாகக் கேட்பது. பேசுவதை விட அவர் பேசுவதைக் கவனமாகக் கேட்பதே சாலச் சிறந்தது. கடவுளை உங்களால் இன்னும் மேம்படுத்த முடியாது. அவர் முன்னால் நீங்கள் சொல்வது எல்லாம் அர்த்தமற்றவை. கேலிக்குரியவை. இறைவன் அனைத்தும் அறிவான். நமக்குப் பேச என்ன இருக்கிறது? மௌனமாக இருங்கள்.

அவன் பேசுவதைக் கேளுங்கள். உணர்வுபூர்வமான கவனத்துடன் அவன் பேச்சுக்காகக் காத்திருங்கள். நாக்கைப் பயன்படுத்தாதீர்கள். செவிகளைப் பயன்படுத்துங்கள். வழிபாட்டுணர்வு காது சம்பந்தப்பட்டது. அதற்கும் நாக்கிற்கும் சம்பந்தமில்லை.

உங்கள் நாவிலிருந்து புறப்படும் பிரார்த்தனை முட்டாள்தனமாக. அர்த்தமில்லாத பேத்தலாகத்தான் இருக்கும். நீங்கள் கடவுளுக்கு அறிவுரை கூற முற்படுகிறீர்கள்.. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? “கடவுளே, இந்தக் காரியத்தை இதுபோல் செய்யுங்கள். நீங்கள் செய்வது தவறு”

நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? “என் மனைவிக்கு உடல் நலம் சரியில்லை. அவளைச் சீக்கிரம் குணப்படுத்து. எனக்கு வயதாகிக்கொண்டே போகிறது. எனக்கு வலுவைக் கொடுத்து என் ஆயுளை அதிகமாக்கு” - இதே ரீதியில்தான் நமது பிரார்த்தனைகள் எல்லாமே இருக்கின்றன.

நீங்கள் செய்யும் பிரார்த்தனை எல்லாமே நீங்கள் கடவுளுக்குச் சொல்லும் அறிவுரை. இந்த உலகை எப்படி நடத்திச் செல்ல வேண்டும் என்று நீங்கள் சொல்லும் அறிவுரை.

உண்மையான வழிபாட்டுணர்வு உடையவன் கடவுளுக்கு அறிவுரை சொல்ல மாட்டான். அவன் சொல்வான்:

“இறைவா எல்லாம் உன் விருப்பம் போல் நடக்கட்டும். உன் ஆட்சி என்றும் நிலவட்டும். நீ செய்வதெல்லாம் சரிதான். அதைச் சரி என்று புரிந்து கொள்ளும் அறிவு எனக்கு இல்லாமல் இருக்கலாம். அது என் தவறு. என் பலவீனம். நான் சொல்வதைக் கேட்காதே. என் அறியாமையால் தூண்டப்பட்டு நான் உன்னிடம் ஏதாவது சொன்னாலும் அதை மனதில் போட்டுக் கொள்ளாதே. நீ என்ன செய்கிறாயோ அதையே தொடர்ந்து செய்து கொண்டிரு.”

உண்மையான வழிபாட்டுணர்வு என்பது பேசுவது அல்ல. கவனமாகக் கேட்பது. ஆழ்ந்த கவனம். மௌனமாக, திறந்த மனதுடன் விழிப்புணர்வுடன் ஓர் இடத்தில் அமர்ந்திருத்தலே உன்னதமான வழிபாட்டுணர்வு.

சிலசமயம் உங்கள் காதலிக்காக உங்கள் நண்பனுக்காகக் காத்திருக்கும்போது மரங்களின் அசைவைக் கேட்பீர்கள், காற்றின் ஒலியைக் கேட்பீர்கள். பாதாம் மரத்தின் இலைகள் கீழே விழும் சத்தத்தைச் செவிமடுப்பீர்கள். உடனே ஓடிப் போய் “அவள் வந்துவிட்டாளோ! அவன் வந்துவிட்டானோ!” என்று ஆவலுடன் பார்ப்பீர்கள்.

அது பழைய இலைகளுடன் காற்று விளையாடும் சத்தம் என்று உணர்ந்தவுடன் உங்கள் காத்திருத்தல் தொடரும். மீண்டும் ஒரு சத்தம். தபால்காரர் ஒரு வீடு விட்டு இன்னொரு வீடு போகும் சத்தம். காலடி ஓசை - மீண்டும் வாசலுக்கு ஓடுவீர்கள்.

உங்கள் காதலிக்குக் காத்திருக்கும்போது சிறு சிறு சப்தங்களை எல்லாம் கவனமாகக் கேட்டுச் செயல்படுகிறீர்கள்.

அதேபோல் வழிபாடு செய்யும்போது கடவுளின் வார்த்தைகளுக்காக விழிப்புணர்வுடன் காத்திருக்க வேண்டும். கடவுள் உங்களிடம் நேரடியாகப் பேசும் அந்த உன்னதமான தருணத்திற்காகக் கவனத்துடன் காத்திருக்க வேண்டும். அந்தத் தருணமும் ஒரு நாள் வரும்.

உங்களுக்குள் குரான் தோன்றும் போது அந்தத் தருணம் வந்துவிட்டது என்று கொள்ளலாம். வேதங்களின் உட்பொருளை பகவத்கீதையின் நுட்பத்தை நீங்கள் உணரும் போது அந்தத் தருணம் வந்துவிட்டது என்று கொள்ளலாம்.

உங்கள் ஆழ்மனதில் புனித நூல்கள் அனைத்தும் அழகானவை என்று உணரும்போது நீங்கள் அவற்றைப் படிக்கத் தொடங்கலாம். எவ்வளவு நூல்களைப் படிக்க முடியுமோ படியுங்கள். அது மகிழ்ச்சியளிக்கும் ஒரு செயலாக இருக்கும். அப்போது எல்லா மதங்களின் புனிதநூல்களும் மெய்யாகத் தோன்றும். நீங்கள் அவற்றின் சாட்சியாக இருப்பதை உணர்வீர்கள்.

இதை விட்டுவிட்டு நீங்கள் நேரடியாகப் புனித நூல்களைப் படிக்கத் தொடங்கினால் உங்களால் அவற்றில் பொதிந்திருக்கும் உண்மையை உணர முடியாது. ஆனால் உண்மையை நீங்கள் உணர்ந்து கொண்டபின் புனித நூல்களில் இருக்கும் உண்மை உங்களுக்கு விளங்கும்.

உண்மைதான் பிரதானம். புனித நூல்கள் உண்மையில் நிழலுருவங்களே. உண்மையை முதலில் பார்த்துவிட்டால் பின் அதன் நிழலைப் புரிந்து கொள்ள முடியும். நிழலைப் பார்த்து உண்மையைத் தெரிந்து கொள்ள முடியாது.

*கபீர் சொல்கிறான்:*

*வார்த்தையைக் கவனி உண்மையை உணர்*

*அதுதான் உன் சாரம்*

*அவன் தனக்குள்ளே பேசிக்கொள்கிறான்*

*அவனே ஆக்கியோன்*

இங்கே இரண்டு ஆட்கள் இல்லை. கடவுள் பேசும்போது அவர் தனக்குத்தானே பேசிக் கொள்கிறார். கடவுளைத் தவிர வேறு யாரும் இல்லையே. நீங்கள் மௌனமாக இருந்தால்தான் கடவுள் இருக்க முடியும். அவர் இருப்பதை நீங்கள் உணர முடியும். அதன்பின் கடவுள் உங்களிடம் பேசுவார். இல்லை, தன்னுடன் பேசிக் கொள்வார். தனக்குள் கிசுகிசுப்பான ரகசியக் குரலில் பேசிக் கொள்வார்.

உங்களை நீங்கள் முழுவதுமாக அழித்துக் கொண்டால்தான் அது நடக்கும். கடவுளுக்கு வேறுபட்ட ஒரு மனிதராய் நீங்கள் தள்ளி நின்று கொண்டிருந்தால் அவரால் பேச முடியாது. அவர் பேசுவார். உங்களால் கேட்க முடியாது. வேற்று ஆள் என்ற ஹோதாவில் நீங்கள் உங்களையே தடுத்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களை நீங்களே செவிடாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். வேற்று ஆள் என்ற நிலையை உதறித் தள்ளுங்கள். அது சரணாகதியின் உட்பொருள்.

ஒருவர் என்னிடம் "சரணாகதி என்ற சொல்லின் பொருள் என்ன?" என்று கேட்டார். கடவுளுக்கு நீங்கள் வேற்று ஆள் என்ற நிலையை விடுவதே சரணாகதி. உங்களைக் கடவுளுக்கு அன்னியமாக நினைக்காதீர்கள். உங்கள் தனித்தன்மையைத் தூரக் கடாசுங்கள்.

"நான் இருக்கிறேன்" என்று சொல்லாதீர்கள். ஆண்டவன் இருக்கட்டும். அவன் மொத்தமாக முழுமையாக இருக்கட்டும். அந்த முழுமையில் உங்களைக் கரைத்துக் கொள்ளுங்கள். அந்த முழுமையில் மூழ்கிப் போய்விடுங்கள். கடலிலிருந்து வரும் அலையாக இருங்கள். கடலிலிருந்து அலை வேறுபட்டது என்று நினைக்காதீர்கள். அதுதான் சரணாகதியின் அர்த்தம்.

*வேர்களற்ற ஒரு விநோதமான மரம் இருக்கிறது*

*அது மலராமல் பழுக்கும்*

*அதற்குக் கிளைகள் இல்லை இலைகள் இல்லை*

*அது முழுவதும் ஒரு தாமரையே*

இப்போது கடவுள்தான் ஆதி மூலம் என்று கபீர் சொல்கிறார். கடவுளுக்கு வேறு காரணம் இருக்க முடியாது. இறைவன்தான் படைத்தவன். அவனைப் படைத்தது யார் என்று அவனிடம் கேட்க முடியாது. அவன்தான் முழுமுதற் காரணம். காரணமற்ற காரணம்.

அது ஒரு விநோதமான மரம். இந்தக் கடவுள் இருப்பு நிலை எல்லாமே ஒரு விநோதமான மரம். வேர்களற்ற மரம் அது. இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். இது மிகவும் எளிமையானது.

முழுமையின் வேர்கள் வெளியே இருக்க முடியாது. முழுமைக்கு வெளியே ஒன்றும் கிடையாது. அந்த முழுமை தனக்குள்ளேயே வேரூன்றியிருக்கிறது. அது உண்மையிலேயே விநோதமான மரம்தான். வேர்களை முழுவதுமாக உள்ளடக்கிய மரம்.

பொதுவாக மரம் மண்ணில் வேர்விட வேண்டும். அது எப்படி தனக்குள்ளேயே அந்த மரத்தால் வேர் விட முடியும்.? ஆனால் முழுமை தனக்குள்ளேயேதான் வேர்விட்டுக் கொள்ள முடியும். அதற்கு வெளியேதான் ஒன்றும் இல்லையே.

கடவுளுக்குக் காரணம் கிடையாது. இருக்க முடியாது. கடவுள்தான் அனைத்திற்கும் மூல காரணம். முழுமுதற் காரணம். கடவுள் என்ற சொல்லிற்கு அதுதான் பொருள். ஆதி மூலம். தனக்கொரு காரணம் இல்லாத சர்வ காரணன், எல்லாக்காலத்திலும் இருப்பவன் இறைவன்.

கடவுளுக்கு முன்னால் எதுவும் இல்லை. கடவுளுக்கு "முன்" என்ற பேச்சுக்கே இடமில்லை. அவருக்குப் பின்னாலும் எதுவும் இல்லை. கடவுளுக்குக் கடந்த காலமும் இல்லை. வருங்காலமும் இல்லை. கடவுளுக்கு நிகழ்காலம் மட்டும்தான் இருக்கிறது. கடவுள் நிரந்தரமானவர். அவருக்கு அழிவோ மாற்றமோ இல்லை.

*வேர்களற்ற ஒரு விநோதமான் மரம் இருக்கிறது*

*அது மலராமல் பழுக்கும்*

மேலோட்டமாகப் பார்க்கும் போது அது சாதாரண அறிவுக்குப் புறம்பாக இருக்கிறது என்கிறார் கபீர். ஆனால் அந்த நிலையில் ஒரு நுட்பமான அறிவு இருக்கத்தான் செய்கிறது. அது விநோதமானது. புதிரானது. மனித மனம் படைத்த தர்க்க சாஸ்திர நூல்களுக்குள் அந்த மரத்தை அடக்க முடியாது. அது மலர்வதில்லை. ஆனால் பழுக்கிறது.

*அதற்குக் கிளைகள் இல்லை இலைகள் இல்லை*

*அது முழுவதும் ஒரு தாமரையே*

அது எப்படி சாத்தியம்? ஒரே தாமரையாக எப்படி இருக்க முடியும்? அதில் இருப்பதெல்லாம் தாமரை தாமரை தாமரைதான். வேர்கள் இல்லை கிளைகள் இல்லை இலைகள் இல்லை. இருப்பதெல்லாம் தாமரையே. அதுதான் உச்சகட்ட மலர்ச்சி. கடவுள் தான் உச்சகட்டம். அது ஏற்கனவே நிகழ்ந்துவிட்ட ஒரு மலர்ச்சி.

இனிமேல் நிகழ்வதற்கு ஒன்றும் இல்லை. கடவுள் ஒரு விதையில்லை. விதை என்றால் என்ன? அது இன்னும் மலர் என்ற நிலையை அடையாத ஒன்று என்றுதானே அர்த்தம்? ஆனால் என்னவெல்லாம் நிகழ வேண்டுமோ அது எல்லாமே கடவுளுக்குள் நிகழ்ந்துவிட்டது. இனிமேல் நிகழ்வதற்கு ஒன்றும் இல்லை.

அதனால்தான் நாம் கடவுளைப் பரிபூரணன் என்று சொல்கிறோம். அந்த முழுமை இனிமேல் வளர வேண்டிய தில்லை. அது ஏற்கனவே அதிகபட்சம் வளர்ந்துவிட்டது.

*அது சதா அதே பரிபூரண நிலையில்தான் இருக்கிறது.*

*அது முழுவதும் ஒரு தாமரையே*

*இரண்டு பறவைகள் அங்கே பாடுகின்றன*

*ஒன்று குரு. அடுத்தது சீடன்*

கடவுள் தன்னைப் பல உருவங்களாகப் பிரித்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கிறார். அந்த விளையாட்டைத்தான்

நாம் லீலை என்கிறோம். சில சமயம் அவர் ஆணாக இருக்கிறார். சில சமயம் பெண்ணாக. ஆணும் பெண்ணும் காதல் பாட்டுப் பாடுகிறார்கள். காதலில் மெய்மறந்து நாட்டியம் ஆடுகிறார்கள்.

சில இடங்களில் அவர் குருவாக இருக்கிறார். சில இடங்களில் சீடனாக. இரு நேரெதிர் துருவங்களாக இருப்பவரும் அவரே. சில இடங்களில் சடப் பொருளாக இருக்கிறார்; சில இடங்களில் மனமாக. சில இடங்களில் ஒலியாக சில இடங்களில் மௌனமாக. சில இடங்களில் வாழ்க்கையாக சில இடங்களில் மரணமாக. ஆனால் அதே இரு துருவங்கள்.

சீடன் - குரு

யின் - யாங் (yin - yang)

(என்று சீன தத்துவத்தில் வருவம் துருவங்கள்)

ஆண் - பெண் -

இவை அனைத்தும் துருவங்களே.

சீடன் வாழ்க்கையின் பல்வேறு பழங்களை ருசிக்கிறான். இருவரும் உங்களுக்குள் இருக்கிறார்கள். உங்கள் குருதேவர் உங்களுக்குள் இருக்கும் மையக்கரு. சீடன்தான் உங்கள் வெளிச்சுற்று உங்கள் உலகம். உங்கள் சம்சாரம்.

*சீடன் வாழ்க்கையின் பல்வேறு பழங்களை ருசிக்கிறான்*

*அதைப் பரவசத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார் குரு*

உங்களுக்குள் இருக்கும் உங்களுடைய மையக்கரு மகிழ்ச்சியுடன் உங்கள் விளையாட்டுகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் உங்கள் குருதேவரின் இடத்தில் உங்களை வைத்துக் கொண்டு நீங்கள் ஆடும் விளையாட்டுகளைக் கவனித்துப் பாருங்களேன்! அப்பப்பா! எத்தனை விளையாட்டுக்கள் விளையாடுகிறீர்கள்!

காதல் என்னும் விளையாட்டு! பேராசை என்னும் விளையாட்டு! கோபம் என்றும் வெறுப்பு என்றும் ஆடும் ஆட்டங்கள். - எல்லாமே விளையாட்டுக்கள்தான்.

ஆட்டத்தில் அதீதமாக ஈடுபட்டுவிட்டால் நீங்கள் சீடனாகி விடுவீர்கள். விழிப்புணர்வுடன் செயல்படும்போது குருதேவராகி றீர்கள்.

இந்த ஒரு மாற்றம்தான் இப்போதையத் தேவை. இந்தப் பரிணாம வளர்ச்சி மட்டுமே போதுமானது. இந்த ரசவாதம் அத்தியாவசியமானது.

கபீர் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். "விளையாட்டை நிறுத்து" என்று அவர் சொல்லவில்லை.

"குருதேவரின் கண்களால் ஆட்டத்தைப் பார்" என்றுதான் சொல்கிறார்.

கொஞ்ச நேரத்திற்காவது நீங்கள் ஒரு சாட்சியாக மாற வேண்டும். கவனிப்பவராக மாற வேண்டும். சீடன் போடும் ஆட்டங்களை ரசித்துப் பார்க்க வேண்டும்.

உங்கள் காதலியிடம் காதல் மொழி பேசிக் கொண்டிருக் கிறீர்கள். கவனமாகப் பாருங்கள். குருவின் பக்கத்திலிருந்துகொண்டு பாருங்கள். ஒரு சில நொடிகளுக்கு உங்கள் உள்ளுணர்வை ஒட்டு மொத்தமாக சாட்சி பாவத்திற்குத் திருப்பி எவ்வளவு அழகான விளையாட்டு விளையாடுகிறீர்கள் என்று பாருங்கள்.

உங்களால் குருவிடமிருந்து சீடனுக்கும் சீடனிலிருந்து குருவிற்கும் நினைத்த மாத்திரத்தில் பார்வையை மாற்றிக் கொள்ள முடியுமேயானால் நீங்கள் எந்த விளையாட்டிலும் சிக்கிக் கொள்ள மாட்டீர்கள். விளையாட்டு விளையாட்டாகவே இருக்கும். நீங்கள் மனம் விரும்பும் அளவு விளையாடலாம்.

எப்போதும் விளையாட்டில் மாட்டிக் கொள்ள மாட்டீர்கள். எப்போதும் விளையாட்டோடு உங்களை அடையாளப்படுத்திக் கொள்ள மாட்டீர்கள். நீங்கள் எப்போதும் இந்த உலகத்தில் சுதந்திரமாக எந்தப் பந்தமும் இல்லாமல் இருக்கலாம். நீங்கள் ஜீவன் முக்தனாகிவிடுவீர்கள். வாழ்வில் சுதந்திரமாக இருப்பவன் ஜீவன் முக்தன். அவன் கனவு காண்பான் என்றாலும் நனவுலகத்தில் வாழ்வான்.

எனக்கு நீங்கள் சீடனாக இருந்து ஆடும் விளையாட்டையும் கவனியுங்கள். சில நேரங்களில் உங்கள் மையம் குருவாகட்டும். விளையாட்டை உள்நோக்கி மாற்றிப் போடுங்கள். நான் குரு. நீங்கள் சீடர்கள். நாம் இப்போது விளையாடிக்கொண்டிருக்கிறோம். அது வெளிமுகமாக இருக்கும் ஒரு விளையாட்டு. அந்த விளையாட்டை நீங்கள் எல்லாச் சமயத்திலும் உள்முகமாக ஆடப் பயிற்சி கொடுத்துக் கொண்டிருக்கிறேன்.

இந்த விளையாட்டை வெளிமுக மேடையில், மனதால் அமைக்கப்பட்ட மேடையில் விளையாடுவது சுலபம். நான் குரு. நீங்கள் சீடர். இதில் குழப்பம் இல்லை. எனக்கு ஒரு வேடம். உங்களுக்கு ஒரு வேடம். எளிதான காட்சியமைப்பு.

ஒரு நாள் இந்த நாடகத்தை நீங்கள் உங்களுக்குள்ளே இருக்கும் மேடைக்குக் கொண்டு செல்ல வேண்டும். உங்கள் கண்களை மூடிக்கொண்டு உங்கள் மையத்தை ஓஷோவாக்கிக் கொள்ள வேண்டும். உங்கள் வெளிச்சுற்றைச் சீடனாக்கிக் கொள்ள வேண்டும். அதன் பின் விளையாட்டைத் தொடக்க வேண்டும். அதே விளையாட்டுத்தான். என்றாலும் இப்போது அதில் மகத்தான சக்தி வெளிப்படும். ஒரு பிரம்மாண்டமான புரிந்துணர்வு உங்களுக்குள் தோன்றும்.

காலை நேரம் தொடங்கும். சூரிய உதயம் நிகழும். நீங்கள் உங்கள் விளையாட்டைப் பார்ப்பீர்கள். அதை உடனே நிறுத்த வேண்டும் என்று அவசரப்படாதீர்கள். விளையாட்டை நிறுத்த வேண்டும் என்ற எண்ணம் தோன்றினால் நீங்கள் குருதேவர் பக்கம் அதிகமாகச் சாய்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள்.

குரு-சீடன் இவர்களில் ஒருவரோடு நிரந்தரமாக இனம் சேருதலைத் தவிர்க்க வேண்டும். குருவிலிருந்து சீடனுக்கும் சீடனிலிருந்து குருவிற்கும் நகரும் வல்லமை வேண்டும். இதுதான் சுதந்திரம். இதுதான் விடுதலை. இரு துருவங்களுக்கு இடையே தடையில்லாமல் பயணித்தல்தான் உண்மையான விடுதலை.

சீடனோடு இனம் சேர்ந்து கொள்வது மிகவும் எளிது. நீங்கள்தானே சீடர்!

எப்போதும் குருவோடு இனம் சேரும் குருதேவர்களும் இருக்கிறார்கள். இப்படி அதிகமாக ஓரிடத்தில் இனம் சேரும் குருவும் சீடனும் ஒரே நிலையில்தான் இருக்கிறார்கள். செக்கு மாடுகள் போல் அதே பாதையில் வட்டமடித்துக் கொண்டிருக் கிறார்கள். இருவரும் மாயையில் ஆழ்ந்து இருக்கிறார்கள்.

உண்மையான குரு எந்தப் பக்கமும் விழ மாட்டார். "இரண்டுமே என் இருப்புநிலைதான். இரண்டு நிலையும் என் இரண்டு துருவங்கள்" என்று அவருக்குத் தெரியும்.

குருதேவர் மையத்தில் அமர்ந்திருக்க சீடனோ வெளிச்சுற்றில் மனம் போன போக்கில் விளையாடிக் கொண்டிருக்கிறான். சீடனுடைய விளையாட்டில் குருதேவர் குறுக்கிடுவதில்லை. "இப்படிச் செய்யாதே" என்று குரு ஆணையிடுவதில்லை.

இது விளையாட்டு. இதில் எது வேண்டுமானாலும் செய்யலாம். ஏன் கொஞ்சம் ஏமாற்று வேலை கூடச் செய்யலாம். இது விளையாட்டுத்தானே! மனமார விளையாட வேண்டும். கவனமாக விளையாட வேண்டும். கறாராக இருக்க வேண்டியதில்லை.

காட்சி இருக்கிறது. விளையாட்டு ஓர் அளவில் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் ஓர் ஆழ்ந்த நிலையில் விளையாட்டு நின்றுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். மேல் மட்டத்தில் விளையாட்டு தொடர்கிறது. கடலின் மேல் மட்டத்தில் அலைகள் தொடர்ந்து விளையாடிக்கொண்டுதானே இருக்கின்றன ஆனால் கடல் தன் மையத்தில் ஆழ்ந்த நிலையில் மௌனமாகத்தான் இருக்கிறது.

இதுதான் கிருஷ்ண பரமாத்மாவின் நிலை. புத்தரின் நிலை. ஏசுநாதரின் நிலை. இதைத்தான் கண்ணன் தன் சீடனான அர்ஜுனனிடம் சொல்ல முயற்சிக்கிறான்:

"விளையாட்டைப் பற்றிக் கவலைப்படாதே. விளையாடிக் கொண்டே இரு. அந்த விளையாட்டில் ஒரு வீரனுடைய

வேலையைச் செய்ய வேண்டி வந்தால் தயங்காமல் செய். போரிடும்படி நேர்ந்தால் அதையும் மனமார செய். உன் மையத்தில் இருந்தபடியே வெளிச்சுற்றில் நடக்கும் விளையாட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டிரு. இதில் சோகத்திற்கும் கண்டிப்பிற்கும் கவலைக்கும் இடமே இல்லை."

உலகில் உள்ள குருதேவர்களில் கண்ணன் ஒருவன்தான் ஏமாற்று வேலைகள் செய்தவன். என்றாலும் இந்துக்கள் அவனை அப்பழுக்கற்ற பரிபூரண குருதேவர் என்று கொண்டாடு கிறார்கள்.

ராமனைக்கூடப் பரிபூரணனன் என்று சொல்ல முடியாது. அவன் ஏமாற்று வேலை செய்ய அஞ்சுவான். மிகவும் நேர்மையானவன் ராமன். நேர்மைதான் அவனுடைய பந்தம். அவன் நெகிழ்வாக இருந்ததேயில்லை.

அவன் ஒரு முழுத்துறவி. தவறானவற்றை எல்லாம் தவிர்த்துவிட்டான். விளையாட்டை மிகவும் சீரியசாக எடுத்துக் கொண்டுவிட்டான். அப்படிச் செய்யாதீர்கள். அப்பறம் அது விளையாட்டாக இருக்காது. வினையாகிவிடும். விளையாட்டை விளையாட்டாக நினைக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

கண்ணன் ராமனிலிருந்து முற்றும் வேறுபட்டவன். அவனைப் பொறுத்தமட்டில் அனைத்துமே விளையாட்டுத்தான். ஒரு நாள் வாக்குறுதி கொடுப்பான். அடுத்த நாள் அதனை மறந்துவிடுவான். அவன் ஒரு ஞானி. அவன் பெற்ற விடுதலை பரிசுத்தமானது. பரிபூரணமானது. அது அப்பழுக்கற்றது. ஏனென்றால் எல்லாமே விளையாட்டு என்று அவனுக்குத் தெரியும். பிறகு ஏன் கவலைப்பட வேண்டும்?

அவன் கவலைப்படவில்லை. அவ்வளவு ஏன், அதைக் கண்டுகொள்ளவேயில்லை. அவன் விளையாடுகிறான். ஆனால் விளையாட்டில் மாட்டிக் கொள்வதில்லை.

கண்ணனைப் போலவே கபீரும் ஒரு முழுமையான குருதேவர். அவர் இந்த உலக வாழ்க்கையை விடவேயில்லை. இறுதிவரை சம்சாரியாகவே இருந்தார். அவருக்கு மனைவி

குழந்தைகள் இருந்தார்கள். தான் செய்து வந்த நெசவுத் தொழிலைக் கடைசிவரை அவர் விடவில்லை.

அவர் தொடர்ந்து நெய்து கொண்டேயிருப்பார். சந்தையில் தான் நெய்தவற்றை விற்பார். அவர் வாழ்ந்தது ஒரு சாதாரண வாழ்க்கை. அவருக்கு ஆயிரக்கணக்கில் சீடர்கள் இருந்தார்கள்.

அவர்கள் எல்லோரும் கபீரைக் கடிந்து கொள்வார்கள்:

"குருதேவா இன்னும் நீங்கள் ஏன் இதையெல்லாம் செய்து கொண்டிருக்கிறீர்கள்? பேசாமல் ஓர் இடத்தில் அமருங்கள். ஓய்வெடுங்கள். தியானம் செய்யுங்கள். நாங்கள் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்கிறோம். நீங்கள் ஏன் அல்லாட வேண்டும்?"

கபீர் சொல்வார்:

"அது என்னால் முடியாது. கடவுள் எனக்காக என்ன விளையாட்டை ஏற்படுத்தித் தந்தாரோ அதை நான் ஆடியே தீர வேண்டும். அப்படிச் செய்வதுதான் எனக்கு நல்லது. அதை நான் அனுபவித்துச் செய்து கொண்டிருக்கிறேன்.

அதை நிறுத்திவிட்டால் பின் எனக்கு வெறிச்சென்று இருக்கும். என் வாடிக்கையாளர்களைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியாது. அவர்கள் எனக்காகக் காத்திருப்பார்கள். நான் அவர்களுக்காகத்தான் இந்தத் தொழிலைச் செய்கிறேன். இறைவன் வாடிக்கையாளர் வடிவில் வந்து நான் நெய்த ஆடைகளை விலை கொடுத்து வாங்கிக் கொள்கிறான். நான் தொழிலை விட்டுவிட்டால் அவர்கள் சிரமப்படுவார்களே! என்னைக் காணாமல் தவிப்பார்களே!

நான் இல்லையென்றால் வேறு யார் அவர்களுக்கு அழகான துணிகளை நெய்து தருவார்கள்? என்னைப் போல் யாராலும் அழகாக நெய்து தர முடியாது"

பகல் பொழுது முழுவதும் நெய்து கொண்டிருப்பார். மாலையாகிவிட்டால் துணிகளை விற்க சந்தைக்குப் போவார். அந்தக் கால இந்தியாவில் நெசவாளிகள் தாங்கள் நெய்த துணிகளைத் தாங்களே சந்தைக்குக் கொண்டு போய் விற்பார்கள்.

தான் சந்திக்கும் ஒவ்வொரு வாடிக்கையாளரிடமும் கபீர் என்ன சொல்வார் தெரியுமா?

“கடவுளே, ராமா, வந்துவிட்டாயா? எனக்காகக் காத்துக் கொண்டிருந்தாயோ? உனக்காகவே இந்த அழகான துணியை நெய்து கொண்டு வந்திருக்கிறேன். இது நாள்பட இருக்கும். நன்றாக உழைக்கும். நூலோடு என் அன்பையும் சேர்த்தே இந்தத் துணியை நெய்திருக்கிறேன். இதைக் கவனமாக வைத்துக் கொள்ளுங்கள். இது அன்பால் நெய்த ஆடை.”

உங்களுக்குள்ளேயே உங்கள் குரு இருக்கிறார். உங்கள் மையம்தான் உங்கள் குரு. உங்களுக்குள்ளேயே உங்கள் சீடர் இருக்கிறார். உங்கள் வெளிச்சுற்றுதான் உங்கள் சீடர்.

உங்கள் மையம் வலுப்பெற்று எழும் போது அதன் பிரதிபிம்பமாக உங்கள் வெளியுலக குருவைக் காண்பீர்கள். அந்த வெளியுலகக் குருவிற்கு நன்றியுடன் இருப்பீர்கள். அவர்தானே உள்ளே இருக்கும் குருவைக் காட்டிக் கொடுத்தது?

*சீடன் வாழ்க்கையின் பல்வேறு பழங்களை ருசிக்கிறான்*

*அதைப் பரவசத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார் குரு*

*கபீர் சொல்வதைப் புரிந்து கொள்வது கடினம்*

*அந்தப் பறவை தேடலுக்கு அப்பாற்பட்டது*

*என்றாலும் அது தெளிவாகத் தெரிகிறது*

மையம் தேடலுக்கு அப்பாற்பட்டது. அதை உங்களால் தேட முடியாததற்குக் காரணம் அது ஏற்கனவே உங்களிடம் இருப்பதுதான். இருப்பதை எப்படித் தேடுவீர்களாம்? அதைக் கண்டு கொண்டால் போதும். அது ஏற்கனவே உங்களிடம் இருக்கிறது.

ப்ரேம் போதி என்ற என் சீடன் எனக்கு ஓர் அழகான நகைச்சுவைத் துணுக்கை அனுப்பியுள்ளான். டிக் கிரெகரி என்ற கருப்பின அமெரிக்க நகைச்சுவையாளரின் படைப்பு இது.

வெள்ளைக்காரர்களே நீங்கள் பித்துப் பிடித்தவர்கள். நீங்கள் முதன் முதலாக அமெரிக்க நாட்டிற்கு வந்தீர்கள். அப்போது அந்த நாட்டில் சிவப்பிந்தியர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அந்த நாட்டைப் பயன்படுத்திக் கொண்டும் இருந்தார்கள்.

நீங்கள் என்ன சொன்னீர்கள்? "நாங்கள்தான் அமெரிக் காவைக் கண்டுபிடித்தோம்." இது சுத்தப் பேத்தல் உங்களுக்குப் பித்து தலைக்கேறிவிட்டது.

நானும் என் மனைவியும் தெருவில் நடந்து வந்து கொண்டிருக்கிறோம். நீங்களும் உங்கள் மனைவியும் ஓர் அழகான புதிய கெடிலாக் காரில் பவனி வந்து கொண்டிருக் கிறீர்கள். காரின் அழகில் மயங்கிய என் மனைவி மார்த்தா சொல்கிறாள்

"ஆஹா! என்ன அழகான கார்! நம்மிடம் இப்படி ஒரு கார் இருக்கக் கூடாதா?"

உடனே நான் அவளிடம்,

"வா மார்த்தா நாம் இருவரும் சேர்ந்து அந்த கெடிலாக் காரைக் "கண்டுபிடி"ப்போம். அதன் பின் அது நமக்குத்தான் சொந்தம்."

என்று சொன்னால் எப்படி இருக்கும்?

இதுதான் அமெரிக்க வழி. "வாருங்கள் கண்டுபிடிப்போம்"

பறவை உங்களுக்குள்ளேயேதான் இருக்கிறது. அங்கேயே தான் என்றும் இருக்கும் அதை அமெரிக்க பாணியில் "கண்டுபிடி"க்க வேண்டும். அது தொலைந்து போகவில்லை.

அது உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். நீங்கள் அதில்தான் மையம் கொண்டிருக்கிறீர்கள். அதைப் பயன்படுத்து கிறீர்கள். அது மட்டும் இல்லாவிட்டால் நீங்கள் சுக்கு நூறாக உடைந்து போயிருப்பீர்கள். அதனால் அதை நீங்கள் அமெரிக்க வழியில் கண்டுபிடிக்க வேண்டும். "வா மார்த்தா நாம் அதைக் கண்டுபிடிக்கலாம்."

அது தேடலுக்கு அப்பாற்பட்டது. சொல்லப்போனால் தேடுவதே அதுதான். தேடுபவனையே எப்படித் தேடுவீர்கள்? தேடுபவனும் அதுதான். தேடப்படுவதும் அதுதான். அதுதான் பயணம். அதுதான் பயணத்தின் இலக்கு. அதுதான் தொடக்கம். அதுதான் முடிவு. அதுதான் சீடன். அதுதான் குருதேவர்.

*அந்தப் பறவை தேடலுக்கு அப்பாற்பட்டது*

*என்றாலும் அது தெளிவாகத் தெரிகிறது*

*உருவங்களுக்கு மத்தியில் அருவம் ஒளிந்து கொண்டிருக் கிறது*

*நான் உருவங்களின் உன்னதத்தைப் பாடுகிறேன்.*

கபீர் சொல்கிறார் : நான் உருவங்களின் உன்னதத்தைப் பாடுகிறேன். உருவமற்ற அருவத்தின் உன்னதத்தை என்னால் பாடமுடியாது.

உங்களால் கடவுளின் புகழைப் பாட முடியாது. அது இயலாத செயல். கடவுளை ஒரு பாட்டிற்குள் கட்டுப்படுத்த முடியாது. வார்த்தைகளில் ஆண்டவனைக் கட்டிப் போட முடியாது.

அதனால்தான் கபீர் சொல்கிறார்: “சரி, என்னால் கடவுளின் புகழைத்தானே பாட முடியாது? நாம் பல்லாயிரம் உருவங்களாகப் பரந்து நிற்கும் அவனுடைய மகோன்னதத்தைப் பாடுகிறேன். ரோஜா மலரின் மகிமையைப் பாடுகிறேன் · மனிதனுடைய கண்ணின் மகத்துவத்தைப் பாடுகிறேன். இரவில் ஓடும் ஆற்றைப் பாடுகிறேன். வெண்மேகங்களின் உன்னதத்தைப் பாட்டில் வைக்கிறேன். சூரியனையும் விண்மீன்களையும் பாட்டில் வைத்துப் புகழ்கிறேன்.

உருவங்களின் உன்னதத்தைப் பாடுவோம். அது மறைமுக மாகக் கடவுளைப் புகழ்வதேயாகும். கடவுளை நேரடியாகப் புகழ முடியாது. மறைமுகமாகத்தான் நம் புகழ்ச்சி இருக்க வேண்டும்.

கடவுளைப் புகழ வேண்டுமானால் ரோஜாவைப் புகழ வேண்டும். அழகான பாறாங்கல்லைப் புகழ வேண்டும். அழகான ஆணை அல்லது பெண்ணைப் புகழ வேண்டும். இருப்புநிலையின் இணையற்ற உன்னதத்தைப் பாட வேண்டும்.

இதுதான் கடவுளை வழிபட ஒரே வழி. மசூதிக்குப் போகாதீர்கள். கோயிலுக்குப் போகாதீர்கள். குருத்வாராவிற்குப் போகாதீர்கள். உங்களைச் சுற்றி இருக்கும் அழகான பிரபஞ்சத்தைப் பாடுங்கள். மரத்தில் புதிதாகத் தளிர்விட்டிருக்கும் பச்சை இலையின் நேர்த்தியைப் பாடுங்கள். புல்லின்மேல் உறங்கிக்கொண்டிருக்கும் பனித்துளியைப் பாடுங்கள்.

வானத்தைப் பாடுங்கள். விண்மீனைப் பாடுங்கள். மனிதனின் காதலைப் பாடுங்கள். கவிதைகளை உருவாக்குங்கள். சிற்பங்களை உருவாக்குங்கள். பாடல்களை உருவாக்குங்கள். ஆக்கச் சக்தியுடன் செயல்படுங்கள். உருவாக்குபவராக மாறுங்கள். அது ஒன்றுதான் உங்களை அவன் காலடியில் காணிக்கையாகச் சமர்ப்பிக்க ஒரே வழி.

நீங்கள் ஆக்க சக்தியோடு இருக்கும்போதுதான் ஆக்கியோனுக்கு நெருக்கமாக இருப்பீர்கள்.

இன்று இது போதும்.

முதல் கேள்வி:

ஓஷோ,

மனிதனின் தன்மையை அறியும் துறையைத் (Anthroposophy) தோற்றுவித்த ருடால்ஃப் ஸ்டெயினர் (Rudolph Steiner) நமக்கு உறுதியான மனத் திட்பம் வேண்டும் என்று சொல்கிறார். இது கீழை நாடுகளின் தத்துவத்திற்கு முற்றிலும் எதிராக இருக்கிறது. மனத்திட்பம் என்றால் என்ன? அதற்கும் நான் என்ற முனைப்பிற்கும்- அதாவது அகங்காரத்திற்கும் - என்ன தொடர்பு?

இதுவரை கிழக்கும் மேற்கும் நேரெதிர் துருவங்களாகவே இருந்து வந்திருக்கின்றன. மேலை நாட்டுத் தத்துவம் மனத்திட்பம் மூலமாகவும் கீழை நாட்டுத் தத்துவம் சரணாகதி மூலமாகவும் விடுதலையாகும் வழிகளை உபதேசிக்கின்றன.

தான் என்ற முனைப்பு மேலை நாட்டுத் தத்துவத்துக்கு ஆதாரம் என்றால், முனைப்பற்ற தன்மையே கீழை நாட்டுத்தத்துவத்தின் .சாரம்.

மேலை நாடுகளின் வழி ஆணின் வழி. கீழைநாடுகளின் வழி பெண்ணின் வழி. கீழை நாடுகளில் சாத்வீகத்தை நம்புகிறார்கள். தன்செயலின்மையை நம்புகிறார்கள்.

நீங்கள் எதுவுமே செய்யாமல் சாத்வீகமாகக் காத்திருக்கும் போது,

அந்தக் காத்திருத்தலே ஒரு மௌன வழிபாடாக மாறும்போது

எதையும் ஏற்றுக் கொள்ளும் தன்செயலின்மை நிலையில் இருக்கும்போது

கடவுள் உங்களிடம் வருகிறார் என்பது கீழை நாட்டுத் தத்துவம்.

மேலைநாடுகளின் வழி ஆளுமையை அடிப்படையாகக் கொண்டது. ஆளுவது ஆணின் வழி. மனிதன் செயல்பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். அங்கும் இங்கும் ஓட வேண்டும். தேட வேண்டும். வெல்ல வேண்டும். தோற்கடிக்க வேண்டும். இறைவனைக் கூடத் தோற்கடிக்க வேண்டும். இயற்கை மேல் வெற்றி கொள்ள வேண்டும். அவ்வளவு ஏன், மெய்ப்பொருளையே வென்று கீழ்ப்படுத்த வேண்டும் என்று நினைப்பவர்கள் மேலைநாட்டவர்கள்.

இரண்டு அணுகுமுறைகளுமே தோல்வியடைந்துவிட்டன. இரண்டிலுமே முழுமையில்லை. அவை தோற்கத்தான் வேண்டும். எந்த அளவிற்கு மேலை நாடுகள் தங்கள் அணுகுமுறையில் தோல்வியடைந்ததோ அதே அளவிற்குக் கீழைநாடுகளும் தோற்றுவிட்டன. ஏனென்றால் மனிதன் ஆணாக மட்டும் இல்லை. பெண்ணாகவும் இருக்கிறான். ஆண்-பெண் சேர்ந்த கலவைதான் மனிதன். ஒரு பெண்ணிடம் சில ஆண் தன்மைகளும் ஓர் ஆணிடம் சில பெண் தன்மைகளும் இருக்கத்தான் செய்கின்றன. மனிதன் என்பவன் ஆண்-பெண் கலவைக்கும் மேலே இருக்கிறான். சீனத் தத்துவத்தில் சொல்லப்படும் யின் யாங் என்ற இரண்டு தத்துவமாகவும் மனிதன் இருக்கிறான்.

இப்போது இந்த இரண்டையும் சேர்த்து இணைக்கும் ஒரு மகத்தான மதம் தேவைப்படுகிறது. அந்தப் புதிய மதத்தில் கிழக்கு-மேற்கு முரண்பாடுகள் மறையும்.

ஸ்டெயினர் மேலைநாட்டுத் தத்துவத்தின் ஒரு முக்கிய பிரதிநிதி.

ப்ளாவாட்ஸ்கி (Blavatsky), ஆனி பெசண்ட் அம்மையார் (Annie Bessant) ஆல்காட்(Olcott), லெட் பீட்டர் (Leadbeater)

ஆகியோர் நிறுவிய பிரம்ம ஞான அமைப்பைக் கடுமையாக எதிர்த்தார் ஸ்டெயினர். அதற்கு எதிரான தன் வாதங்களைக் கொண்டு மனிதனின் சுபாவத்தை அறியும் ஒரு துறையை உருவாக்கினார். (Anthroposophy)

ஆனி பெசண்ட் போன்ற பிரம்ம ஞான சபையின் நிறுவனர்கள் மெய்ப்பொருளைக் கீழைநாட்டுப் புனித நூல்களில் தேடினார்கள். அந்த நாட்டு மரபுகளில் தேடினார்கள். அந்த நாட்டு ஆச்சார்யர்களில் தேடி ஒரு முடிவுக்கு வந்தார்கள். "நீங்கள் சரணடைந்தால் போதும். கடவுள்: உங்களுக்குள் வருவார்."

அவர்கள் நிறுவிய பிரம்ம ஞான சபையின் பெயரில் உள்ள ஆங்கில வார்த்தையின் மூலத்தை ஆராய்வது அவசியம். பிரம்ம ஞானம் என்று அவர்கள் சொன்னது Theosophy. Theo என்றால் கடவுள். Sophy என்றால் அன்பு.

ஒரு பெண்ணைப் போல் வாழ வேண்டும் என்று சொன்னார்கள். நீங்கள் இறைவனுக்காகக் காத்திருக்கிறீர்கள். இறைவனை வரவேற்கும் மனநிலையில் காத்திருக்கிறீர்கள். அந்த மனநிலை போதும் - இறைவன் உங்களை ஊடுருவிச் செல்வதற்கு. நீங்கள் பெண்ணாக மாறுகிறீர்கள். அவன் ஆணாகிறான். கண்ணனும் கோபிகைகளும் உணர்த்துவது இந்தத் தத்துவத்தைத்தான். கண்ணன் கடவுள். ஆண். இறைவனைத் தேடுபவன் - பக்தன் - ஒரு பெண், ஒரு தோழி, கோபிகை. பெண்மை இருந்தால்தான் கடவுளை நெருங்க முடியும். அதுதான் கீழைநாட்டுத் தத்துவத்தின் சாரம்.

ஸ்டெயினர் இதைக் கடுமையாக எதிர்த்தார். முதலில் அவர் ஆனி பெசண்ட் அம்மையார் தொடங்கிய பிரம்ம ஞானசபையில் இருந்தார். போகப் போக அவரால் அந்தத் தத்துவத்தை ஏற்க முடியவில்லை. அதனால் பிரம்ம ஞான சபைக்கு எதிராக ஓர் இயக்கத்தைத் தொடங்கினார். மனிதனின் தன்மையை அறியும் கலை என்று பொருள்பட தன் இயக்கத்திற்கு Anthroposophy (ஆன்த்ரோபோஸோஃபி) என்று பெயரிட்டார்.

"anthrop" என்றால் மனிதன் என்று பொருள். "theo" என்றால் கடவுள். தியோசோஃபி (Theosophy) என்று அழைக்கப்படும் பிரம்ம ஞானம் கடவுளை நேசிக்கும் தத்துவம். ஆன்த்ரோபோஸோஃபி Anthroposophy என்று அழைக்கப்படும் ஸ்டெயினரின் தத்துவம் மனிதனை நேசிக்கும்படி சொல்கிறது.

அவர் கடவுளை ஓரங்கட்டிவிட்டு மனிதனை மையத்தில் வைத்தார்.

பிரம்ம ஞானத்திற்குக் கடவுள்தான் மையம். கண்ணன் நடுநாயகமாக நின்றபடி குழலூதிக் கொண்டிருக்கிறான். மனிதன் அவனைச் சுற்றி நின்றுகொண்டு நடனம் ஆடிக் கொண்டிருக்கிறான். -கண்ணனின் கோபிகைகளாக, கண்ணனின் தோழிகளாக. மனிதன் வெளிச்சுற்றில் இருக்கிறான். இறைவன் மையத்தில் இருக்கிறான்.

ஸ்டெயினர் இதைத் தலைகீழாக மாற்றினார். மனிதனை மையத்தில் வைத்தார். மேற்கில் மனிதன்தான் மையத்தில் இருக்கிறான். கிழக்கில் அவன் வெளிச்சுற்றில் இருக்கிறான்.

இந்த இரண்டு முயற்சிகளுமே தோல்வியடைந்துவிட்டன. ஏனெனில் இரண்டிலுமே முழுமையில்லை. மனிதன் ஆணும் பெண்ணும் சேர்ந்த ஒரு கலவை. மனிதன் அப்படித்தான் இருக்க முடியும். நீங்கள் ஓர் ஆணிலிருந்தும் பெண்ணிலிருந்தும் ஜனித்தீர்கள் அல்லவா? உங்களுக்குத் தாய் தந்தை இருவருமே இருக்கிறார்கள் அல்லவா? நீங்கள் எப்படி ஆணாக மட்டுமே இருக்க முடியும்? இல்லை பெண்ணாக மட்டுமே இருக்க முடியும்? உங்கள் ஆன்மாவில் உங்கள் தந்தையும் இருக்கிறார். தாயும் இருக்கிறாள். அவர்களின் ஆழமான இசைவு உங்களுக்குள் இருக்கிறது.

எவனுக்குள்ளே இந்த இசைவு இருக்கிறதோ, எவனுக்குள்ளே தாயும் தந்தையும் இசைவாக வாழ்கிறார்களோ அவனிடம் மட்டுமே சமய உணர்வு தழைத்தோங்கும்.

உங்கள் தாயும் தந்தையும் உங்களுக்குள் இன்னும் சண்டை போட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள். நீங்கள்

குழந்தையாக இருக்கும் போது உங்கள் அம்மா-அப்பா நடுவே நடக்கும் சண்டையைப் பார்த்திருப்பீர்கள். அது முடிந்துவிட்டதாக நினைக்காதீர்கள். அவர்கள் இருவரும் இன்னமும் உங்களுடைய ஒவ்வொரு அணுவில் இருந்து கொண்டு சண்டை போட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

இப்போது நம் முன்னால் இரண்டு சாத்தியக் கூறுகள் தெரிகின்றன. முரண்பாடுகளில் சிக்கிக் கொண்டிருக்கும் ஒரு மனிதன் தன் நேரெதிர் துருவங்களைப் புரிந்து கொண்டு அவற்றில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

யின் யாங் என்ற சீனத் தத்துவங்களில் அவன் யாங் என்பதைத் தேர்ந்தெடுத்தால் - ஆணின் வழியைத் தேர்ந்தெடுத்தால் - அகம் பிடித்தவனாக இருப்பான். இல்லை யின்னைத் தேர்ந்தெடுப்பவனுக்குச் சரணாகதியில் நாட்டம் இருக்கும். அது பெண்மையின் வழி.

இந்த இரண்டு தெரிவுகளிலும் அவனுடைய ஒரு பகுதி வாடிவிடும். அவன் தெரிவு செய்யாத பகுதி வாடி வதங்கிவிடும். தெரிவு செய்தபின் அவனால் முழுமையாக இருக்கவே முடியாது. முழுமையில்லாத இடத்தில் புனிதமும் இருக்காது. உதாசீனப்படுத்தப்பட்ட பகுதி அவனைப் பழிவாங்கும். நீங்கள் உதறித் தள்ளிய பகுதி உங்கள் உணர்வின்மை நிலையாகிவிடும்.

மனிதனின் வருங்காலப் பரிணாம வளர்ச்சியில் ஒரு முக்கியமான சாத்தியக்கூறு இருக்கிறது. மனிதனுக்கு உணர்வின்மை நிலை இல்லாமலேயே போகலாம். நாம் ஒரு பகுதியை நிராகரிக்காமல் இருந்தால் நமக்கு உணர்வின்மையே இருக்காது. அதன் பின் நம் விழிப்புணர்வு அப்பழுக்கற்றதாக இருக்கும்.

புத்தர் என்ற சொல்லிற்கு அதுதான் பொருள். விழிப்புணர்வு பெற்றவர். அவர் தன்னில் எந்தப் பகுதியையும் நிராகரிக்கவில்லை. அவர் தன்னை முழுமையாக அங்கீகரித்துவிட்டார் அவருடைய எல்லாத் தன்மைகளையும் ஏற்றுக் கொண்டு பல பரிமாணங்கள் கொண்ட மனிதராக மாறிவிட்டார்.

இப்போது நேரெதிர் துருவங்களிடையே முரண்பாடுகள் இல்லை. இசைவு மட்டுமே இருக்கிறது. உங்களுக்குள் இருக்கும் பெண் உங்களுக்குள் இருக்கும் ஆணுக்கு உதவி செய்கிறாள். அதேபோல் உள்ளிருக்கும் ஆண் பெண்ணிருக்கு உதவி செய்கிறான். அவர்களிடையே இப்போது காதல் மலர்ந்திருக்கிறது. முரண்பாடுகள் மறைந்துவிட்டன. அவர்கள் ஒன்றாகிவிட்டார்கள். அவர்களுக்குத் திருமணமாகிவிட்டது. உங்களுக்குள் இருக்கும் ஆணிற்கும் பெண்ணிற்கும் இடையே நடக்கும் ஆன்மிகத் திருமணத்தில் நீங்கள் ஜனிப்பீர்கள். உங்களுக்குள் இருக்கும் இந்த முரண்பாடுகளின் சந்திப்பில்தான் உங்கள் ஜனனம் ஏற்படும்.

இதுதான் மும்மூர்த்திகள் தத்துவத்தின் சாரம். மும்மூர்த்திகள் தத்துவத்திற்குப் பல அழகான அர்த்தங்கள் இருக்கின்றன. கிறிஸ்துவ மதத்தில் இதை தந்தையாகிய கடவுள், மகன், பரிசுத்த ஆவி என்று சொல்கிறார்கள்.

பரிசுத்த ஆவி என்பது அவ்வளவு சரியான வார்த்தையல்ல. அந்த வார்த்தையைக் கண்டுபிடித்தவர்கள் ஆணாதிக்கக்காரர்களாக இருக்க வேண்டும். அது சரியான சொல் அல்ல. தாய் என்பதே சரியான சொல்லாகும். இப்போது மும்மூர்த்திகளைப் பாருங்கள். தந்தை, தாய், மகன். இது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!

இறைவனாகிய தந்தையும் இறைவனாகிய தாயும் உங்களுக்குள்ளேயே இருக்கிறார்கள். மகனைத்தான் காணவில்லை. உங்கள் தாயும் தந்தையும் வெளியே சந்தித்தார்கள். அதனால்தான் உங்கள் உடல் உருவானது. அவர்கள் உள்ளே சந்திக்கும்போது உங்கள் ஆன்மா உருவாகும். அப்போதுதான் அந்த மகன் பிறப்பான். அதுதான் ஏசுபிரானின் ஜனனம்.

பெண்மையின் தத்துவத்தைக் கடைப்பிடித்ததால் கிழக்கு அதிலும் குறிப்பாக இந்தியா அல்லல்பட்டது யார் வேண்டு மானாலும் கீழை நாடுகளை வெல்லலாம் என்ற நிலை ஏற்பட்டது. அந்த நாடுகள் தம் மனத்திட்பத்தை இழந்தன. தங்கள் சக்தியை இழந்தன. உவகையை இழந்தன. வாழ

வேண்டும் என்ற உற்சாகம் தொலைந்தது. விதியை நம்பி சோம்பேறியாகிப் போயின. கீழை நாடுகளின் (குறிப்பாக இந்தியாவின்) வரலாறு தோல்வியின் வரலாறாகவே இருந்தது. அடுத்த நாடுகள் அவற்றின் மேல் படையெடுத்த வண்ணம் இருந்தன. அந்த வரலாற்றில் வறுமை இருந்தது விஞ்ஞானம் இல்லை. பெண்மை இருந்தது தொழில் நுட்பம் இல்லை. அது ஓர் அழகான வரலாறு இல்லை.

ஆமாம் சில அற்புத மனிதர்கள் தோன்றினார்கள். புத்தர், மகாவீரர், கிருஷ்ண பரமாத்மா, கபீர், குரு நானக், போன்றவர்கள். ஆனால் அவர்கள் விதிவிலக்கானவர்கள். அவர்களை வைத்து இந்தியாவை எடைபோட முடியாது. இந்தியாவின் பெரும்பான்மை மக்கள் வேதனையில் வறுமையில் அசிங்கமாக வாழ்ந்தார்கள். ஒரு புத்தனையும் ஓர் கபீரையும் உருவாக்க இத்தனை பேர் அவதிப்பட வேண்டுமென்றால் அதனால் பயனில்லை. புத்தனை உருவாக்கும் செலவு மிகவும் அதிகம்.

இது இப்படியிருக்க மேலை நாடுகள் ஆண்மைச் சிந்தனையில் அவதிப்பட்டன. போர், வன்முறை, போராட்டம், முரண்பாடு, எதிர்ப்பு, ஓய்வின்மை, மன அழுத்தம், எப்போதும் எதிலும் கண்மூடித்தனமான வேகம், பேராசை, ஒருவரை ஒருவர் கழுத்தறுக்கும் அளவிற்குக் கடுமையான போட்டி பொறாமை, அனைவருடனும் சண்டை, அமைதியின்மை - எதிர்ப்புணர்ச்சி நிறைந்த சூழல்.

வெறியர்களை, வன்முறையில் தோய்ந்த பைத்தியங்களை மேலைச் சமுதாயம் உருவாக்கியது. என்றாலும் சில அற்புத மனிதர்களும் ஆங்காங்கே தோன்றினார்கள். - ஏசு பிரான், புனிதர் தெரசா, புனிதர் ஃப்ரான்சிஸ் மற்றும் எக்ஹார்ட்.

ஆனால் இந்தச் சில மனிதர்களை வைத்து அந்தத் தத்துவம் வெற்றியடைந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. மேற்கின் தத்துவமும் தோல்வியையே சந்தித்தது. கிழக்கும் தோற்றது. மேற்கும் தோற்றது.

கிழக்கையும் மேற்கையும் ஒன்று சேர்க்க வேண்டும் என்பதுதான் என் குறிக்கோள். இந்த இரண்டும் சந்திக்க முடியும். இணைய முடியும்.

கிப்ளிங் என்ற கவிஞர் சொன்னார்: "கிழக்கு கிழக்குதான். மேற்கு மேற்குதான். இரண்டும் என்றும் சந்திக்காது." அது தவறு. நான் சொல்கிறேன் அவை சந்திக்கும். சந்திக்க வேண்டும். மனித இனத்தின் வருங்காலமே அந்தச் சந்திப்பில்தான் இருக்கிறது. கிப்ளிங் சொன்னது தவறு என்று நிரூபிக்க வேண்டும்.

இதுவரை அவை இரண்டும் சந்திக்கவில்லை என்பது உண்மைதான். இறந்தகாலத்தை வைத்துப் பார்த்தால் கிப்ளிங் சொன்னது சரிதான். ஆனால் வருங்காலத்தை வைத்துப் பார்த்தால் அவர் கூற்று தவறு. தவறாகத்தான் இருக்க வேண்டும். இல்லையென்றால் மனித இனம் இந்த பூமியில் இருக்காது. கிழக்கு, மேற்கு இரண்டுமே வேதனையில் இருக்கின்றன. கிழக்கின் வறுமை வெளியே இருக்கிறது. மேற்கின் வறுமை உள்ளே இருக்கிறது. இரண்டுமே பெரிய அளவில் தோல்வியடைந்துவிட்டன..

மனத்திட்பம்-சரணாகதி ஆகிய இரண்டின் கலவையாக ஒரு மனிதன் இருக்க வேண்டும். ஒரு மனிதன் முதலில் தன் மனத்திட்பத்தை தன் அகங்காரத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

என்னுடைய அணுகுமுறை இதுதான். ஒரு மனிதன் சராசரியாக எழுபது வருடங்கள் வாழ்கிறான் என்று வைத்துக் கொண்டால் அதில் முதல் பாதியை அதாவது 35 வருடங்களை மனத்திட்பத்தை வளர்த்துக் கொள்வதில் செலவழிக்க வேண்டும். இந்தக் காலத்தில் அவன் நீட்ஷே, ஸ்டெயினர், ஃப்ராய்டு போன்றவர்களின் கருத்துக்களை ஊன்றிக் கவனிக்க வேண்டும். அப்போதுதான் அவனுடைய அகங்காரம் அழுத்தமாக வளரும்.

முப்பத்தியைந்து வருடங்களுக்குப் பின் தளர்வாக இருக்கக் கற்க வேண்டும். அகங்காரத்தை நழுவவிடும் ஆற்றலைப்

பெற வேண்டும். இறைவனிடம் சரண்புகத் தொடங்க வேண்டும். ஆக வாழ்க்கையின் முதல் பகுதி மேற்கிலும் இரண்டாம் பகுதி கிழக்கிலும் இருக்க வேண்டும். வாழ்க்கை என்பது மேற்கில் தொடங்கிக் கிழக்கில் முடிய வேண்டும். முதலில் ஒருவன் வெளி உலகில் செயல்பட வேண்டும். அதற்கு மனத்திட்பம் தேவைப்படும்.

முதலில் போரிட வேண்டும். போராட்டமே வாழ்க்கை என்ற நிலை இருந்தாலும் நல்லதுதான். ஏனென்றால் போராட்டம்தான் உங்களுக்குக் கூர்மையான அறிவைக் கொடுக்கும். ஆனால் இறுதிவரை போராடிக்கொண்டேயிருக்கக் கூடாது. அப்படியிருந்தால் வாழ்க்கை அர்த்தமற்றதாகிவிடும்.

போராடுங்கள். அறிவை வளர்த்துக் கொள்ளுங்கள். உலகின் வழிகளைத் தெரிந்து கொள்ளுங்கள். உலகெங்கிலும் சுற்றுங்கள். தோற்கடியுங்கள். வெல்லுங்கள். அதன்பின் உங்கள் பார்வையை உட்பக்கம் செலுத்துங்கள். இப்போது உங்களுக்கு வெளியுலகம் நன்றாகத் தெரிந்துவிட்டது. இனிமேல் உள்ளுலகத்தை அறிந்து கொள்ள முயலுங்கள்.

உள்ளுலகத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் தளர்வாக இருக்க வேண்டும். உங்கள் மனதில் கவலை, வேதனை, அழுத்தம் எதுவும் இருக்கக் கூடாது. உலகை வெல்ல மனத்திட்பம் வேண்டும். இறைவனை வெல்ல அது தேவையில்லை.

இறைவனை வெல்வது என்பது இறைவனால் வெல்லப் படுவதேயாகும். இறைவனை வெல்வது என்பது அவன் திருவடிகளில் வீழ்வதேயாகும். இது கடினமான செயலாகத் தோன்றலாம். பகுத்தறிவுக்குப் புறம்பான செய்கையாகக்கூடத் தோன்றலாம். நான் பகுத்தறிவுக்குப் புறம்பானவன். நான் புரிந்து கொண்டது இதுதான்: வலுவான மனத்திட்பம் உடையவர்கள்தான் சரணடையலாம். பலவீனமான அகங்காரம் கொண்டவர்கள் சரணடைய முடியாது.

பலவீனமான அகங்காரம் கொண்டவர்களை நான் அனுதினமும் சந்தித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களிடம்

ஒரு தயக்கம் காணப்படுகிறது. சரணடைவதா வேண்டாமா? சந்நியாசம் வாங்கிக் கொள்ளலாமா வேண்டாமா? அவர் ஏன் பயப்படுகிறார்?

அவருடைய அகங்காரம் முழு வளர்ச்சி பெறவில்லை. அது பலவீனமாகவே இருக்கிறது. அதனால்தான் அவர் அஞ்சுகிறார். சரணடைந்தால் அவர் தொலைந்துவிடுவார். அதன்பின் அவர் தனித்து நிற்க முடியாது. அவர் தன் உள்ளே இருக்கும் பலவீனத்தைக் கண்டு அஞ்சுகிறார். வெளியே பாசாங்கு செய்தாலும் உள்ளிருக்கும் உண்மை அவருக்குத் தெரியும். அதனை வெளிக்காட்டிக்கொள்ளாமல் இருக்க ஏதாவது சப்பைக்கட்டு கட்டுகிறார்.

வலுவான அகம் படைத்தவர்கள் என்னிடம் வரும்போது "சரி, இதில் அப்படி என்னதான் இருக்கிறது என்று பார்த்து விடலாமே!" என்ற மனப்பாங்குடன் வருவார்கள்.

அவருக்குத் தெரியும். தெரியாத பாதையில் பயணம் செய்தாலும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அவருக்குத் தெரியும். அவர் திரும்பி வரவேண்டும் என்று நினைத்தாலும் அவரால் வரமுடியும். அவரிடம் தன்னம்பிக்கை இருக்கிறது வலிமை இருக்கிறது மனத்திட்பம் இருக்கிறது.

இதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள். சரணாகதி மனத்திட்பத்தின் உச்சகட்டம்.. சரணாகதி மலிவாகக் கிடைக்கும் பொருள் அல்ல. எளிதாகச் செய்யும் செயல் அல்ல.

உங்களால் தனித்து நிற்கமுடியாமல் போனதால் நீங்கள் சரண்புகவில்லை. ஏற்கனவே கீழே விழுந்து கொண்டிருக்கும் ஒருவர் அப்படியே சரணாகதியடைய முடியாது.

சரணாகதி மலட்டுத்தன்மையின் வெளிப்பாடு அல்ல. அது மகத்தான ஒரு சக்தியின் வெளிப்பாடு. மனத்திட்பத்தின் வழியில் வாழ்ந்துவிட்டீர்கள். அதில் உங்களுக்கு நிறைவு கிடைக்கவில்லை. உங்கள் அகங்காரத்தின் அனைத்துச் சாத்தியக் கூறுகளையும் ஆராய்ந்துவிட்டீர்கள். போதுமான அளவு ரணப் பட்டுவிட்டீர்கள். காயங்களின் வலியை உணர்கிறீர்கள். அதன்பின்

நீங்கள் தீர்மானம் செய்கிறீர்கள். “இப்போது உச்சகட்ட முயற்சியைத் தொடங்குவோம். அகந்தையை நழுவ விடுவோம்.”

அகந்தையை நழுவ விடுவதற்குத்தான் அதிகபட்ச மனத்திட்பம் வேண்டும். அது இல்லாமல் உங்களால் அகந்தையை விட முடியாது. இருப்பதிலேயே மகத்தான செயல் அதுதான். கடைசிச் செயலும் அதுதான். பெரிய துணிச்சல்காரர்கள்தான் அதைச் செய்ய முடியும்.

உங்களுக்கு ஓர் ஆச்சரியமான விஷயத்தைச் சொல்கிறேன் இந்தியாவின் பெரிய மகான்கள் அனைவரும் வீரர் குலத்தைச் சேர்ந்தவர்கள்தான். இது ஒரு தற்செயலான நிகழ்வு இல்லை. கண்ணனும் ராமனும் க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்தவர்கள். புத்தர் மகாவீரர் சமண மதத்தின் 24 தீர்த்தங்கரர்கள் மறவர் குலத்தைச் சேர்ந்தவர்கள்தான். இது ஒரு தற்செயலான நிகழ்வாக இருக்க முடியாது.

ஏன் இந்த மகான்கள் எல்லாருமே வீரர் குலத்திலிருந்து தோன்றினார்கள்? அப்படி இருந்தும் அவர்கள் ஏன் சரணாகதி பற்றிப் பேசினார்கள்? “சரணாகதி ஒன்றே வழி” என்று ஏன் சொன்னார்கள்?

அவர்களிடம் சரணாகதிக்குத் தேவையான மனத்திட்பம் இருந்தது. ஓர் அந்தணனால் புத்தரின் நிலையையோ மகாவீரரின் நிலையையோ எட்ட முடியவில்லையே. ஏன்? அந்தணனிடம் மனத்திட்பம் இல்லை. ஆரம்பத்தில் இருந்தே அவன் சரணாகதியைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறான். என்றாலும் அதற்கான மனத்திட்பம் அவனிடம் இன்னும் மலரவில்லை.

சரி இதையே வேறொரு கோணத்திலிருந்து பாருங்கள். ஓர் ஏழை அனைத்தையும் துறக்க வேண்டும் என்று நினைக்கிறான். அவன் எதைத் துறப்பான்? அவனிடம் துறக்க என்ன இருக்கிறது? துறவு என்றால் என்ன?

ராக்ஃபெல்லர் போன்ற ஒரு கோடீஸ்வரர் துறக்க நினைத்தால் அதற்கு ஓர் அர்த்தம் இருக்கிறது. ஒரு கனம் இருக்கிறது.

அவரிடம் துறப்பதற்கு ஏராளமான செல்வமும் வசதியான வாழ்க்கையும் இருக்கிறது.

அடுத்த வேளைக் கஞ்சிக்கு இல்லாத பிச்சைக்காரன் "நான் இந்த உலகத்தையே துறந்துவிட்டேன்" என்று சொன்னால் ஊரார் சிரிப்பார்கள். ஓர் அரசன் துறந்தால் அதற்கு அர்த்தம் இருக்கிறது. அவனுக்குச் செல்வம் என்றால் என்னவென்று தெரியும். சக்தி என்றால் என்னவென்று தெரியும். மனத்திட்பத்தைப் பற்றியும் அவன் நன்கறிவான். எல்லாவற்றையும் அனுபவித்துத் தெரிந்து கொண்டபின் அவை வாழ்க்கையின் லட்சியங்கள் அல்ல என்பதை அவன் கண்டு கொண்டான்.

அவை எல்லாம் தொடக்கத்தில் வேண்டும். இளைஞனாக இருக்கும்போது வாழ்க்கையில் விளையாட செல்வம் அதிகாரம் வசதி மனத்திட்பம் எல்லாமே வேண்டும். என்றாலும் அவை எல்லாம் வெறும் விளையாட்டுப் பொம்மைகள்தான். வாழ்க்கையில் பக்குவம் அடைந்தபின் மனமுதிர்ச்சி பெற்றபின் அவை பயன்படாது.

நாம் நம் குழந்தைகளுக்கு விளையாட பொம்மைகள் வாங்கிக் கொடுக்கிறோம். அவர்களுக்குக் கொஞ்சம் பக்குவம் வந்தபின் அவற்றைக் கடாசிவிடுகிறார்கள். நிஜப் பொருள்களைக் கேட்கிறார்கள். அப்போது பொம்மை ரயிலை அவர்கள்முன் நீட்டினால் "வேண்டாம் போ" என்று சொல்கிறார்கள். பொம்மை விமானத்தை அவர்கள்முன் நீட்டுகிறோம். "அதைத் தூர எறியுங்கள். எனக்கு நிஜ கார் வேண்டும். நிஜ விமானம் வேண்டும்" என்று ஒற்றைக்காலில் நிற்கிறார்கள்.

அகங்காரமும் மனத்திட்பமும் உங்களுக்கு விளையாடத் தேவையான பொம்மைகளை மட்டுமே தரும். அதுவும் தேவைதான். இல்லாவிட்டால் நீங்கள் வளரவே மாட்டீர்கள். உங்களுக்குப் பக்குவமே வராது. "எனக்குப் பொம்மைகள் தேவையில்லை. நிஜமான பொருள்தான் வேண்டும்." என்று ஒரு நாள் உணர்வீர்கள். அந்த நிஜமான பொருள் இறைவன் மட்டும்தான். மற்றவை அனைத்துமே வெறும் விளையாட்டுப்

பொம்மைகள்தான். கடவுள் வேண்டுமானால் சரணாகதி செய்வது ஒன்றே வழி.

ஸ்டெயினர் சொன்னது தவறு. அவருடைய தத்துவத்தில் முழுமையில்லை. உண்மையில் பாதிதான் அங்கே இருக்கிறது. அதே போல் அன்னி பெசண்ட் அம்மையார் சொன்னதும் தவறுதான். அவருடைய தத்துவமும் முழுமையில்லாமல் பாதியிலேயே நின்று போய்விடுகிறது.

முப்பத்தியைந்து வயதுவரை உலக வாழ்க்கையில் ஈடுபடுங்கள். மனத்திட்பத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். பணத்தாலும் அறிவாலும் சக்தியாலும் பேராசையாலும் எந்த அளவு முடியுமோ அந்த அளவிற்கு உங்கள் அகங்காரத்தை வலுப்படுத்திக் கொள்ளுங்கள்.

அந்த வாழ்க்கையை முழுமையாக வாழுங்கள். அப்போதுதான் உங்களுக்கு அதைத் தெரிந்து கொள்ள முடியும். உலகத்தில் இருக்கும் நரகத்தின் அடிமட்டத்திற்குச் செல்லுங்கள். அதைப்பற்றித் தெரிந்து கொள்ளுங்கள். ஏனென்றால் அந்த அறிவுதான் உங்கள் விடுதலைக்கு வித்து.

திடீரென்று உங்களுக்குள் ஓர் ஒளி தோன்றும். இதுவரை வாழ்ந்த வாழ்க்கையின் அபத்தத்தை உணர்வீர்கள். அதன்பின் நீங்கள் வாழ்ந்தது போதும் என்று வீடு திரும்பத் தலைப்படுவீர்கள். உங்கள் மூலத்தை நோக்கி உங்கள் பயணம் இருக்கும். முதல் 35 வருடங்கள் உங்கள் பயணம் இந்த உலகில் இருக்கட்டும். அடுத்த 35 வருடங்கள் அந்தப் பயணம் உங்களுக்குள் இருக்கட்டும். முதலில் உலக வாழ்க்கையில் உங்களைத் தொலைத்துவிடுங்கள். அதன்பின் உங்களையே நீங்கள் சம்பாதிக்கலாம். முதலில் பாவம் செய்யுங்கள். அப்பறம்தான் புனிதராக முடியும். நீங்கள் முதலில் இருந்தே புனிதராக இருந்தால் உங்கள் புனிதத்தன்மைக்கு மதிப்பு இருக்காது.

நான் பாவங்களை எதிர்ப்பவன் அல்லன். நான் எதையுமே எதிர்ப்பவன் அல்ல. எல்லாவற்றையும் பயன்படுத்துங்கள்.

அனைத்திற்குள்ளும் செல்லுங்கள். கடவுள் உங்களுக்காகப் படைத்த இந்த உலகத்தில் ஓர் உள்நோக்கம் இருக்கத்தான் செய்கிறது. பாவம் ஒரு பாடம். அதுவும் நமக்கு வேண்டும். ஒரு குழந்தை முதலில் இருந்தே புனிதராக இருந்துவிட்டால், புனிதராக இருக்கும்படி வற்புறுத்தப்பட்டால் அதற்கு முதுகெலும்பு இல்லாமல் போய்விடும்.

அந்தக் குழந்தை முதலில் பாவம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ளட்டும். முதலில் அது விழிப்புணர்வு பெறட்டும். அதன்பின் தன் போக்கிலேயே அது பாவங்களை விட்டுவிடும். அதை வற்புறுத்தாதீர்கள். அதன்மேல் ஒழுக்கத்தைத் திணிக்காதீர்கள். அதற்கு சுதந்திரம் கொடுங்கள் அது தன் கண்களால் உலகைப் பார்க்கட்டும். தன் இதயத்தால் உலகை உணரட்டும். அந்த சுதந்திரத்தை குழந்தைக்கு மறுக்காதீர்கள். புத்தர் சொன்னது சரிதான், கபீரின் கூற்றில் உண்மை இருக்கிறது என்று அது தானாகவே தெரிந்து கொள்ளும்.

ஆனால் இந்தப் புரிதல் உங்களிடம் இயல்பாகத் தோன்ற வேண்டும். இரவல் வாங்கிய புரிந்துணர்வு கடவுளின் ராஜ்ஜியத்தில் செல்லுபடியாகாது. கடவுள் அடுத்தவர் பயன்படுத்திய பொருளை விரும்பமாட்டார். நீங்கள் கைபடாதவராக - இரவல் வாங்கிய கருத்துகள் இல்லாதவராக - இருப்பதையே அவர் விரும்புவார்.

உங்களிடம் இதைத்தான் நான் சொல்ல விரும்புகிறேன். மனத்திட்பமும் சரணாகதியும் உங்கள் வாழ்க்கையின் பகுதிகளாக இருக்கட்டும். ஏனென்றால் நீங்கள் ஆணும் பெண்ணும் சேர்ந்து செய்த கலவை. கிழக்கும் மேற்கும் உங்களுக்குள் சங்கமிக்கின்றன. இந்த உலகமே ஒரு கிராமம். வேறுபாடுகள் எல்லாம் பயன் கருதி வந்தவையே. உண்மையில் உலக மக்களுக்குள் எந்த வித்தியாசமும் கிடையாது.

இதில் கிழக்கென்ன மேற்கென்ன? சரணாகதி என்ன, மனத்திட்பம் என்ன? அவை எல்லாம் அலையின் ஒரு பகுதியே. அவை இரண்டல்ல. ஒன்றின் இரு வேறு பகுதிகள். ஒரு நிகழ்வு. இரு தன்மைகள்.

மனத்திட்பத்துடன் வளருங்கள். யாருக்கும் அஞ்சாதீர்கள். வலுவான அகம் உடையவர்களாக வளருங்கள். கொஞ்சம் வேதனையாகத்தான் இருக்கும். உங்களை நீங்களே சித்திரவதை செய்து கொள்வது போல்தான் இருக்கும். உங்கள் ஆன்மாவின் புற்று நோயாகக் கூட இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் ஒரு நாள் எல்லாவற்றையும் விட்டுவிடுங்கள். அந்த விடுதல் உங்கள் சொந்த அனுபவமாக யாராலும் தூண்டப்படாத ஓர் அனுபவமாக இருக்கட்டும். அது அழகானது.

இதில் ஓர் ஆபத்து இருக்கிறது. அதைச் சந்திக்க உங்களை நான் தயார் செய்ய வேண்டும். மேற்கின் தத்துவத்தை முதல் பாதியில் கடைப்பிடித்து கிழக்கின் தத்துவத்தை இரண்டாவது பாதியில் உணர்ந்து இரண்டையும் இணைத்துக் கொள்வதற்குப் பதிலாக நீங்கள் ஒன்றிலிருந்து இன்னொன்றுக்குத் தாவும் அபாயம் இருக்கிறது. கிழக்கு மேற்கு ஆகலாம். மேற்கு கிழக்கு ஆகலாம். அது நடப்பதற்கான வாய்ப்பு அதிகம்.

இப்போது பாருங்களேன்! கிழக்கு மேற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறது. விஞ்ஞானம் தொழில்நுட்பம் பொருளாதாரம் எல்லாமே மேற்கில் இருப்பதைப் போல் கிழக்கிலும் வந்துவிட்டது. புனே நகர மக்கள் நம்மைப் பார்த்து கேலியாகச் சிரிக்கிறார்கள்:

"இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? இங்கே ஏன் வந்தீர்கள்? தியானம் செய்யவா? மடத்தனம்."

அவர்கள் மேலை நாடுகளுக்குச் சென்று பொறியியல் படிக்கிறார்கள். மின்னணுவியலில் தேர்ச்சி பெறுகிறார்கள். கணினித்துறையில் வல்லமை பெறுகிறார்கள். அணுகுண்டு செய்யும் முறையைத் தெரிந்து கொள்ள ஆவலாக இருக்கிறார்கள். விண்வெளிக்கப்பல்கள் செய்ய ஆர்வமாக இருக்கிறார்கள். பொருளீட்ட வேண்டும் என்ற ஆர்வம் வந்துவிட்டது.

எந்த நேரமும் பொருளீட்டுவதைப் பற்றியும் செல்வத்தைப் பெருக்குவதைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள்.

"நாங்கள் அங்கே போய்க் கொண்டிருக்கிறோம். நீங்கள் என்னடாவென்றால் இவ்வளவு நாள் அங்கே இருந்துவிட்டு இப்போது இங்கு வருகிறீர்களே! உங்களுக்கு என்ன கிறுக்கா பிடித்திருக்கிறது.?"

சரி மேலைநாடுகளுக்குச் சென்றால் அங்கே என்ன நடக்கிறது என்பதை நம்பக் கஷ்டமாக இருக்கிறது. அவர்களுக்குப் பொருளீட்டுவதில் நாட்டம் குறைந்துவிட்டது.

அங்கே ஏன் செல்கிறீர்கள்? இன்னும் சிறந்த தொழில் நுட்பம் வேண்டுமென்றா? இயற்கைச் சூழலை அழிப்பதைக் கற்றுக் கொள்ளவா? சுற்றுச் சூழலை மாசுபடுத்தவா? உயிர் ஆதாரங்களைப் பாழ்படுத்தவா? ஏன் இந்தக் கிறுக்கர்கள் வெளிநாடுகளுக்குச் செல்கிறார்கள்?

மேலை நாடுகளில் மக்களுக்குத் தொழில் நுட்பம் சலித்துவிட்டது. அவர்கள் அதிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக விலகிப் போய்க்கொண்டேயிருக்கிறார்கள். இளைய தலைமுறை தொழில் நுட்பத்தைக் கடுமையாக எதிர்க்கிறது.

மேலைநாடுகளின் இன்றைய இளைய தலைமுறையால் புத்தரை நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். விஞ்ஞான மேதை ஐன்ஸ்டீன் புத்தரைப் புரிந்து கொண்டதைவிட இன்றைய மேலை நாட்டு இளைஞர்கள் இன்னும் நன்றாகப் புரிந்து கொள்கிறார்கள். இன்றைய புதிய தலைமுறையினரால் நிர்வாணமாக நிற்கும் மகாவீரரைப் புரிந்து கொள்ள முடிகிறது. டார்வின், எட்டிங்டன் ரூதர்ஃபோர்ட் போன்ற விஞ்ஞானிகள் மகாவீரரை புரிந்து கொண்டதைவிட இன்னும் நன்றாக இன்றைய இளைஞர்கள் புரிந்துகொள்கிறார்கள்.

ஆனால் கொடுமையைப் பாருங்கள். கீழை நாடுகளில் பல்கலைக்கழகங்களில் இன்னும் ஐன்ஸ்டீன், ரூதர்ஃபோர்ட், மேக்ஸ் ப்ளாங்க் போன்றவர்களை இன்னமும் பிடித்துத் தொங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

இப்போது உள்ள சூழ்நிலையில் கிழக்கு மேற்காகி மேற்கு கிழக்காகும் அபாயம் இருக்கிறது. பழைய அபத்தங்கள்

இடமாற்றத்துடன் தொடரப்போகின்றன. கிழக்கும் மேற்கும் ஒன்றை ஒன்று சந்திக்க வேண்டும். அது ஒன்றுதான் மனித இனத்திற்கு மிச்சம் இருக்கும் ஒரே நம்பிக்கை. அந்தச் சந்திப்பு ஒவ்வொரு மனிதனின் உள்ளேயும் நடக்க வேண்டும். அது நூல்களிலும் தத்துவங்களிலும் நடந்தால் போதாது. அது ஒவ்வொரு தனிமனிதனுக்குள்ளும் நடக்க வேண்டும்.

அதுதான் தந்த்ரா என்ற துறையின் நோக்கம். தந்த்ரா இருப்பதிலேயே பழைய விஞ்ஞானம். உங்களுக்குள் ஓர் இசையை ஏற்படுத்த, உங்களுக்குள் இருக்கும் நேரெதிர் துருவங்கள் ஒரு திருமணத்தில் ஒன்றாக நீங்கள் உச்சத்தை அடைய உதவி செய்யும் சாஸ்திரம் தந்த்ரா.

உங்களுக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் கலவி செய்ய வேண்டும். அதில் பிறக்கும் குழந்தை ஏசுநாதராக இருக்கும். அதன்பின் நீங்களே மும்மூர்த்திகளின் வடிவமாகத் திகழ்வீர்கள். தந்தை, தாய் மகன் என்ற மும்மூர்த்திகளைச் சொன்னேன். நீங்கள் மும்மூர்த்தியாகிவிட்டால் பெரும் பேறு பெற்றவராகிவிடுவீர்கள். உங்களுக்கு வீடு பேறு எளிதாகக் கிட்டும். நீங்கள் உங்கள் இல்லத்தைச் சென்றடைவீர்கள். உங்களுக்கு வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியும். நீங்கள் உங்கள் இலக்கை அடைவீர்கள்.

இரண்டாவது கேள்வி:

*ஓஷோ,*

*ஒரு சூதாடியாகவே இதுவரை வாழ்ந்திருக்கிறேன்.. எனக்கு நெருக்கமானவர்களுக்கு எல்லாம் துன்பத்தையே கொடுத்திருக் கிறேன். என் கண்கள் இதுவரை பார்த்த அனைவரையும் ஏமாற்றியிருக்கின்றன. என்னால் பாதிக்கப்பட்டவர்கள் சிலசமயம் என்னைப் பார்த்து "நீ நல்லவன்" என்று சொல்லும்போது அது உண்மைதான் என்று என்னை நானே ஏமாற்றிக் கொள்கிறேன். அந்த ஏமாற்று வேலையையும் ஒரு விளையாட்டு என்றே நினைத்துக் கொள்கிறேன்.*

*ஆனால் ஓஷோ இன்று உங்களை நான் முதன்முதலில் பார்த்தபோது என் முதல் தரிசனத்திலேயே என் கண்களுக்குள் உற்றுப் பார்த்து "நீ நல்லவன்" என்று சொன்னீர்கள். உங்களைப் போல் ஒரு ஞானியே அப்படிச் செய்யும்போது இனிமேலும் என்னை நானே ஏமாற்றிக்கொள்ள முடியாது. அதே சமயம் உங்கள் வார்த்தைகளையும் என்னால் ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. நீங்கள் என்ன செய்கிறீர்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே, ஏன்? ஒரே புதிராக இருக்கிறதே? நீங்களும் ஏமாந்துவிட்டீர்களா என்ன? இல்லை நீங்களும் என்னை வைத்து சூதாடுகிறீர்களா? தயவுசெய்து உங்கள் சூதாட்டத்தை நிறுத்துங்கள். நான் இந்த விளையாட்டுகளை யெல்லாம் உதறித்தள்ள உதவி செய்யுங்கள். என் உடல் பொருள் ஆவி எல்லாமே வலிக்கிறது. ஓஷோ உங்களை எப்படி ஏமாற்ற முடியும்?*

நான் ஏமாறவில்லை. அதனால்தான் அழுத்தமாகச் சொன்னேன் நீ நல்லவன் என்று. அதை முதலிலேயே முடிவு செய்துவிட வேண்டும் என்றுதான் அப்படிச் சொன்னேன். அதை மேல் மட்டத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்றுதான் அப்படி சொன்னேன்.

அதுதான் உன் பிரச்சினை. அதை உன் உணர்வின்மையின் ஆழத்திலிருந்து உணர்வு நிலைக்குக் கொண்டு வருவதற்காகத்தான் அப்படிச் சொன்னேன். நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. நான் ஏமாறவில்லை. நீ பிடிபட்டாய்.

சாதாரணமாக நான் அப்படிச் சொல்வதில்லை. மிக மிக அபூர்வமாகவே நான் யாரையாவது பார்த்து "நீ நல்லவன்" என்று சொல்வேன். ஏனென்றால் பொதுவாக மக்கள் நல்லவர்கள் அல்லர். எனவே நான் ஒருவனைப் பார்த்து நல்லவன் என்று சொல்வது அபூர்வம்.

அதை நான் உன்னிடம் சொல்ல வேண்டி வந்துவிட்டது. ஏனென்றால் இது உன் பழைய விளையாட்டு. ஆகையால் நீ முதலிலேயே இதைத் தெளிவாகப் புரிந்து கொள்வது

எல்லோருக்கும் நல்லது - உன் பழைய விளையாட்டை நீ இங்கே விளையாடக்கூடாது.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு பலவீனம் இருக்கிறது. அந்த பலவீனம் தொடர்ந்து இருக்கக் காரணம் அவன் அதைப்பற்றிய விழிப்புணர்வு இல்லாமல் இருப்பதுதான். அது உனக்குப் புரியவேண்டும் என்பதற்காகத்தான் அப்படிச் சொன்னேன். என் உத்தி பலித்துவிட்டது.

இது உன்னுடைய முதல் தரிசனம். என்பதால் முதலில் இருந்தே தொடங்கலாம் என்று தீர்மானித்தேன். உன் நல்லதனத்தைப் பற்றிச் சொன்னேன். காரணம் அப்போதுதான் பிரச்சினை வரும். அதனை நீ நேருக்கு நேர் சந்திக்கலாம்: அது உன்னுள் ஒரு சலனத்தை, ஒரு கவலையை ஏற்படுத்தியது நல்லதுதான். அது உன்னுள் ஒரு கேள்வியை ஏற்படுத்தியதும் நன்மைக்குத்தான். அது உனக்கு ஒரு புதிராகத் தோன்றுவதும் அதனால் நீ குழப்பமடைவதும் நன்மைக்கே. உன்னைக் குழம்ப வைத்துத் தெளியவைப்பது என் வழிகளில் ஒன்று.

நீ தெளிவாக இருக்கும்போது உன் அகந்தை உன்னைத் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறது. உன் அகந்தையின் ஆதிக்கம்தான் உன் தெளிவு. நீ குழப்பத்தில் இருக்கும் போது உன் அகந்தை மையத்திலிருந்து தூக்கி எறியப்படுகிறது. அதன்பின் எது யார் என்ன என்பது உனக்குத் தெரியாது.

எனவேதான் நீ முதன்முதலில் என்னைப் பார்க்கும்போது உன்னைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறேன். உன்னுடைய சமன்நிலையிலிருந்து உன்னைத் தள்ளிவிட வேண்டும். அப்போதுதான் நீ அகந்தையின் கட்டுப்பாட்டிலிருந்து மீள்வாய். உனக்கு என்ன செய்ய வேண்டும் என்று தெரியாதபோது நீ என்னைக் கேட்பாய். இன்று நீ என்னைக் கேட்டதும் நல்லதாகப் போயிற்று.

“என்னை வைத்துச் சூதாடாதீர்கள்” என்று நீ சொல்கிறாய். நான் சூதாடவில்லை. “நான் இந்த விளையாட்டுக்களையெல்லாம் உதறித்தள்ள உதவி செய்யுங்கள்.” என்று சொன்னாய். அதனால்

உன்னை நல்லவன் மகாத்மா என்று சொல்லும் விளையாட்டைத் தொடங்கியிருக்கிறேன். அகந்தையில் எழும் உளப்பாங்கை நீ விட்டொழிப்பதற்காகவும் நான் அப்படிச் செய்தேன்.

நீ நல்லவனாகப் போகிறாய். அது நடக்கத்தான் போகிறது. இப்போது நீ நல்லவன் இல்லை. அது உண்மை. 'நான் நல்லவன் இல்லை' என்று மனப்பூர்வமாக உணர்வதுதான் நல்லவனாக மாறுவதற்கு முதற்படி.

எனக்குத் தெரியாது என்று உணர்வதுதான் தெரிந்து கொள்வதற்கான முதற்படி. நான் வெகு தூரத்தில் இருக்கிறேன். இன்னும் நிறைய வளர வேண்டும். என்று உணர்வதுதான் முதல் படி.

நீ உண்மையிலேயே நல்லவனாக இல்லாதபோது நான் நல்லவன் என்று தொடர்ந்து நினைத்துக்கொண்டிருந்தாயானால் உனக்கு விமோசனமேயில்லை. நோயாளி ஒருவன் தனக்கு நோயில்லை என்று நினைத்துக் கொண்டிருந்தால் அவன் நோய் குணமாக வாய்ப்பேயில்லை. அவன் மருத்துவனை நாடிச் செல்ல மாட்டான். மருந்து உட்கொள்ள மாட்டான். பின் நோய் எப்படிக் குணமாகும்? இன்னும் மோசமாகும்.

நீ என்னிடம் வந்துவிட்டாய். நான் உன் நோய் என்ன என்பதைக் கண்டுபிடித்துவிட்டேன்,. நீ உன்னை நல்லவனாக நினைத்துக் கொண்டிருப்பதுதான் உன் வியாதி. உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டிருக்கிறாய். உன்னை நம்பியவர்களும் ஏமாற்றப்படுகிறார்கள். அவர்கள் ஏமாற்றத்தில் நீயும் ஏமாறுகிறாய். இப்படியே இது தீய வட்டமாக உருவெடுத்துவிட்டது.

நீ நல்லவன் இல்லை. ஆனால் உன்னால் நல்லவன் போல் பாசாங்கு செய்ய முடியும். அந்தப் பாசாங்கின் மூலம் மற்றவர்களை ஏமாற்ற முடியும். அவர்கள் ஏமாற்றப்படும் போது அவர்கள் கண்களில் தெரியும் உன் உருவத்தைக் கண்டு நீ மகிழ்ச்சி அடைகிறாய். இப்படித்தான் உன் நோய் வளர்கிறது. நீ மகிழ்ச்சியாக இருக்கும்போது இன்னும் நல்லவனாக வேஷம் போடத் தொடங்குகிறாய். அடுத்தவன் உன்னை

மகாத்மா என்று நினைக்கிறான். இப்போது அவன் கண்களில் உன் உருவம் இன்னும் அழகாகத் தெரிகிறது. நீ மீண்டும் ஏமாற்றப்படுகிறாய். இந்த முறை இன்னும் மோசமாக. இப்போது நீ இன்னும் அதிகமாக வேஷம் போட வேண்டியிருக்கிறது. உன்னை மகாத்மா என்று நம்பிக் கொண்டிருப்பவன் உன் கண் முன்னால் நின்று கொண்டிருக்கிறானே? இந்த விளையாட்டு தொடர்கிறது. இப்படித்தான் ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் நிகழ்கிறது.

நீ ஒரு பெண்ணைச் சந்திக்கிறாய். அவளைப் பார்க்கிறாய். அவளும் உன்னைப் பார்க்கிறாள். நீ அபரிமிதமான பாராட்டுதலுடன் அவளைப் பார்க்கிறாய். அவள் உன் கண்களில் தெரியும் தன் பாராட்டுதலுக்குரிய வடிவத்தைப் பார்க்கிறாள். அவளுக்குச் சுகமாக இருக்கிறது. தன்னை யாராவது பார்க்க வேண்டுமே என்று இதுவரை அவள் ஏங்கிக் கொண்டிருந்தாள். நீ அவளைப் பார்த்துவிட்டாய். அவளுக்கு மகிழ்ச்சியாக, சுகமாக இருக்கிறது. அதனால் அவள் உன்னைப் பாராட்டுதலுடன் பார்க்கிறாள். அப்போது நீ அவள் கண்களைப் பார்க்கிறாய். அவள் கண்களில் தெரியும் உன் உருவத்தைப் போல் நீ எப்போதும் அழகாக இருந்ததேயில்லை. உனக்குச் சுகமாக இருக்கிறது. ஆனந்தப் பரவசத்தில் நீ ஆட்டம் போட்டுக் கொண்டிருக்கிறாய். உன் அகங்காரம் வலுப்பெறுகிறது. நீ இன்னும் அதிகக் காதலுடன் அவளைப் பார்க்கிறாய். அவள் உன் கண்ணில் தெரியும் தன் உருவத்தைப் பார்க்கிறாள். இந்த விளையாட்டு இப்படியே தொடர்கிறது.

நீ காதலில் விழுகிறாய். காதலில் 99 சதவிகிதம் முட்டாள்தனமானவை. எதைக் காதல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அது முட்டாள்தனம்தான். அவளுடைய முட்டாள்தனம் வளர நீ உதவுகிறாய். உன்னுடைய முட்டாள்தனம் வளர அவள் உதவுகிறாள். ஒரு நாள் நீங்கள் இருவருமே அதிர்ச்சி அடையப் போகிறீர்கள்.

ஆனால் நீங்கள் இருவரும் எப்போதும் சேர்ந்திருக்கவே ஆசைப்படுகிறீர்கள். இருபத்திநான்கு மணி நேரமும் பிரியாமல்

இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். பின் திருமணத்திற்குத் தயாராகிறீர்கள். திருமணம் முடிந்த பின் தேனிலவிற்குச் செல்கிறீர்கள். அப்போதுதான் அடுத்தவரைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்கிறீர்கள். அந்த சமயத்தில்தான் கசப்பான யதார்த்தம் பல்லிளிக்கிறது.

யதார்த்தை அதிக நாள் மறுக்க முடியாது. அதனால் உங்கள் நாட்டின் துறவிகளும் மகாத்மாக்களும் சந்தைக்கு வருவதில்லை. இமயமலைக்கு ஓடிவிடுகிறார்கள். சந்தைக்கு அருகில் இருந்தால் யதார்த்தம் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் வெளியே வந்து விடும்.

யதார்த்தத்தை அதிக நாள் மறுக்க முடியாது. சில நிமிடங்களுக்கு, சில மணி நேரங்களுக்கு, சில நாட்களுக்கு நீங்கள் கற்பனை உலகத்தில் வாழலாம். ஆனால் அதில் நிரந்தர வாசம் செய்ய முடியாது. கற்பனை உலகம் யதார்த்த உலகோடு மோதிச் சிதைந்துவிடும்.

நீங்கள் ஒரு பெண்ணை உண்மையாகவே காதலித்தால் அவளைச் சத்தியமாக மணந்து கொள்ளாதீர்கள். நீங்கள் ஓர் ஆண்மகனை நிஜமாகவே விரும்பினால் அவனிடமிருந்து எவ்வளவு தள்ளிப் போக முடியுமோ போய்விடுங்கள். உங்கள் காதல் நிரந்தரமாக இருக்கும்.

உங்கள் மனதில் இருக்கும் காதலை நசுக்க விரும்பினால் காதலித்தவனையே கல்யாணம் செய்து கொள்ளுங்கள். அதுவும் சீக்கிரமே செய்து கொள்ளுங்கள். தேனிலவிற்குச் செல்லுங்கள். தேனிலவு முடியும்போது எல்லாமே முடிந்துவிடும். ஒரு நாள் திடீரென்று உங்கள் காதலியை - இப்போது உங்கள் மனைவியாகிவிட்டவளைப் - பார்ப்பீர்கள். அவள் மிகவும் சாதாரணமான பெண் என்பதை உணர்வீர்கள்.

இந்தப் பழைய கதையை நீங்கள் நிச்சயம் கேட்டிருப்பீர்கள். ஓர் அழகான இளவரசி ஒரு தவளையைப் பார்க்கிறாள். அந்தத் தவளை அவளிடம் பேசத் தொடங்குகிறது. "இளவரசி, எனக்கு ஏற்பட்ட ஒரு சாபத்தால் நான் கடந்த ஐயாயிரம்

வருடங்களாகத் தவளையாக இருக்கிறேன். நீ என்னை எடுத்துச் சென்று இன்று இரவு மட்டும் உன் படுக்கையில் உனக்கருகில் படுக்க வைத்தால் நாளை காலை நான் அழகான இளவரசனாக மாறிவிடுவேன். செய்வாயா?"

இளவரசியும் அப்படியே செய்ய அந்தத் தவளை மறு நாள் காலை ராஜகுமாரனாகியது. இது கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன கதை.

யதார்த்தமோ இதற்கு நேர் எதிராக இருக்கிறது. ஓர் அழகான ராஜகுமாரனை வீட்டிற்குக் கொண்டு வருகிறீர்கள். இரவு அவனருகில் படுத்துக் கொள்கிறீர்கள். மறுநாள் காலையில் பார்த்தால் அவன் தவளையாகிவிடுகிறான். எல்லா ராஜகுமாரர் களும் பொழுது விடிந்ததும் தவளைகளாகிவிடுகிறார்கள்.

"எங்கே தவறு நடந்தது? இப்படி ராஜகுமாரர்கள் எல்லாம் தவளையாகிறார்களே!" என்று நீங்கள் வருத்தப்படுகிறீர்கள்.

எதுவும் தப்பாக நடக்கவில்லை. எல்லாமே சரியாகத்தான் நடக்கிறது. தவளை எப்போதும் தவளையாகத்தான் இருக்கும். ராஜகுமாரன் என்பது உங்கள் கற்பனை. காதல்வயப்பட்ட உங்கள் கண்களுக்கு மட்டும் தெரிந்த கற்பனைத் தோற்றம். பிரமை. உங்கள் மனதில் இருந்த ஆசையின் வெளிப்பாடு. நீங்கள் ராஜகுமாரன் வேண்டும் என்று விரும்பினீர்கள். உங்கள் மயங்கிய கண்களுக்குத் தவளை ராஜகுமாரனாகத் தோன்றியது. தவளை என்பதுதான் யதார்த்தம். ராஜகுமாரன் உங்கள் கற்பனை நீங்கள் ஏக்கத்தின் பிரதிபலிப்பு. உங்கள் நிறைவேறாத ஆசைகள் உருவாக்கிய மாயத்தோற்றம்.

நீங்கள் என்னிடம் வந்தால் பல வழிகளில் அதிர்ச்சி அடைவீர்கள். பல வழிகளில் குழப்பமடைவீர்கள். உங்கள் மனதை நான் அக்கு வேறு ஆணி வேறாகக் கழற்றிப் போடுவேன். அது உங்களுக்கு வலியையும் வேதனையையும் உண்டாக்கும். அதை மென்மையாக நோகாமல் செய்ய முடியாது. இது அறுவை சிகிச்சை. அதனால்தான் நான் இந்த அறுவை சிகிச்சையைத் தொடங்குவதற்கு முன் உங்களை

சந்நியாசம் வாங்கச் சொல்லுகிறேன். நீங்கள் சந்நியாசியாக யில்லாமல் வெறும் பார்வையாளராக மட்டும் இருந்தால் அறுவை சிகிச்சை நடக்கும்போது பாதி சிகிச்சையில் வலி தாளாமல் ஓடிப் போய்விடலாம். அது இன்னும் ஆபத்தானது. ஏனென்றால் அப்போது நீங்கள் பைத்தியமாக இருப்பீர்கள். பாதி வேலைதான் முடிந்திருக்கும்.

பிரித்துப் போட்ட காரை அப்படியே ஓட்டிச் செல்லும் அளவிற்கு அது ஆபத்தானது. அதனால் நான் கண்டிப்பாகச் சொல்கிறேன். முதலில் இங்கே துறவியாகுங்கள். அதற்குப் பிறகுதான் என்னால் சிகிச்சையைத் தொடக்க முடியும். அப்படிச் செய்தால் மிகக் குறைந்த பட்சமாக சிகிச்சை முடியும் வரையிலாவது நீங்கள் ஆடாமல் அசங்காமல் படுத்திருக்க வாய்ப்பு இருக்கிறது. அதுவரை நீங்கள் நிச்சயம் அறுவை சிகிச்சை மேடையில்தான் இருப்பீர்கள். உங்களால் எளிதில் தப்ப முடியாது. என்னை நம்புங்கள்.

இல்லாவிட்டால் உங்கள் மனதின் ஒரு பகுதியை நான் கழற்றி வேலை பார்க்கும்போது நீங்கள் தப்பித்துப் போய்விடலாம். அதன்பின் சிகிச்சை தொடங்கியபோது இருந்ததைவிட இன்னும் மோசமான நிலையில் இருப்பீர்கள். என் பணி முற்றுப் பெற வேண்டும். இல்லாவிட்டால் உங்களுக்குத்தான் ஆபத்து.

நீங்கள் முழுவதுமாகப் புதுப்பிக்கப்பட்டால்தான் என்னிடம் நன்றியுணர்வுடன் இருப்பீர்கள். நீங்கள் கொல்லப்பட்டு மறு பிறவி எடுக்க வேண்டும். அதற்கு முன்னால் நீங்கள் கொடுமையான வலியைத் தாங்கிக் கொள்ள வேண்டியதிருக்கும். வலியும் வேதனையும் இல்லாமல் உண்மையான வளர்ச்சி ஏற்படாது. வளர்ச்சி சந்தையில் மலிவாகக் கிடைக்கும் பொருள் அல்ல.

சொல்லப்போனால் நான் அறுவை சிகிச்சையை ஏற்கனவே ஆரம்பித்துவிட்டேன். உன்னை நல்லவன் என்று சொல்லி நான் வலையை விரித்துவிட்டேன். நான் குறிதவறிவிட்டதாக நீ நினைக்கலாம். நான் எப்போதுமே குறி தவறினதில்லை.

இன்னொரு துணுக்கு சொல்கிறேன். மாநில அளவில் நடந்த பிரம்மாண்டமான கண்காட்சி ஒன்றில் ஒரு கூடாரத்திற்குள் குறிபார்த்துக் கத்தி எறியும் வீரனும் அவனுடைய மிக மிக அழகான பெண் உதவியாளரும் நின்று கொண்டிருந்தார்கள். வீரன் செய்யப்போகும் சாகசச் செயலை விளக்கிக் கொண்டிருந்தான் வர்ணனையாளன்.

ஸைலாஸ் ஹாக்கின்ஸ் என்ற கனவான் தன் மனைவியுடன் அந்தக் காட்சிக்கு வந்திருந்தார். திருமதி ஹாக்கின்ஸ் கத்தி எறிபவனின் கட்டு மஸ்தான உடற்கட்டால் ஈர்க்கப்பட்டார் என்றால் திரு ஹாக்கின்ஸ் அந்தப் பெண் உதவியாளரின் உடலில் இருந்த வளைவு நெளிவுகளில் தன் மனதைப் பறி கொடுத்தார். அனுமதிச் சீட்டின் விலை பத்து செண்ட்தான். நமது ஊரில் பத்துப் பைசாவிற்குச் சமம். இது அந்தக்காலத்தில் நடந்த நிகழ்ச்சி அனுமதிச் சீட்டுகள் வாங்கிக்கொண்டு கணவனும் மனைவியும் கூடாரத்தில் நுழைந்தார்கள்.

காட்சியின் இறுதிக்கட்டமாக அந்தப் பெண் உதவியாளர் மேலே போர்த்தியிருந்த துணியைத் துறந்து விட்டுக் கவர்ச்சியான உள்ளாடையுடன் மரச்சுவரை ஒட்டிக் கொண்டு நின்றாள். திரு ஹாக்கின்ஸ்ஸின் இதயம் வேகமாக அடிக்கத் தொடங்கியது. பின் கத்தி எறியும் வீரன் மேடையில் தோன்றியபோது திருமதி ஹாக்கின்சின் இதயத்துடிப்பு அதிகமானது.

வீரன் லாகவமாகக் கத்தியைச் சுழற்றி எறிந்தான். அந்தப் பெண்ணிற்குப் பின்னால் இருந்த மரச்சுவரில் அந்தப் பெண்ணின் சிவந்த காதுகளிலிருந்து ஓர் அங்குலத்தின் எட்டில் ஒரு பகுதி தள்ளிக் குத்திக் கொண்டு நின்றது கத்தி.

அரங்கமே ஆச்சரியத்தில் உறைந்திருக்க திரு ஹாக்கின்ஸ் மட்டும் எழுந்து நின்று கத்தினார். "அடச் சே! இவ்வளவு பெரிய உருவம் நின்றிருந்தும் அவனுக்குக் குறி தப்பிவிட்டதே! இவன் என்ன வீரன்!"

நான் ஏமாறவில்லை. எதையும் தவறவிடவும் இல்லை. உன்னை எந்த இடத்தில் அடிக்க வேண்டும் என்று

நினைத்தேனோ அந்த இடத்தில் அடித்துவிட்டேன். அது உனக்குள் ஒரு சூறாவளியை உண்டாக்கியிருக்கிறது. உன் உணர்வின்மை நிலையிலிருந்த குப்பை கூளங்களை எல்லாம் அது மேல்மட்டத்தில் கொண்டுவந்து சேர்த்துவிட்டது.

உனக்கான சிகிச்சை தொடங்கிவிட்டது. நீ அனுமதித்தால் இந்த அதிர்ச்சி வைத்தியம் தொடரும். போகப் போக அதிர்ச்சிகள் இன்னும் அதிகமாகும். மறுபிறவி என்பது அவ்வளவு சுலபமல்ல. பிரசவத்தில் குழந்தை பிறப்பதைவிடப் பலமடங்கு கடினமான செயல்.

ஒரு சாதாரண பிரசவத்தில் வலி இருக்கிறது வேதனை இருக்கிறது துன்பம் இருக்கிறது. இதுவோ ஆன்மிக மறுபிறப்பு. உங்களின் ஒரு பிறவி உங்கள் தாய் தந்தையரிடமிருந்து கிடைத்தது. மறுபிறவி உங்கள் குருதேவரிடமிருந்து கிடைக்கும். இந்தப் பிறவியில் நீங்கள் ஓர் ஆன்மிக உயிரினமாகப் பிறப்பீர்கள்.

இந்தப் பிரசவத்தின் போது பலவற்றை வெட்டிவிட வேண்டும். பல விஷயங்களை நழுவவிட வேண்டும். சாரமானவற்றை மட்டுமே வைத்துக் கொள்ள வேண்டும்.. சாரமில்லாதவற்றை அழித்துவிட வேண்டும். பாவம் உங்களுக்கு எது சாரம் எது சக்கையென்று தெரியாது. சக்கையைக் கட்டிக் கொண்டு மாரடித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

படிப்படியாக உன்னுடைய பழைய அடையாளங்களையும் பற்றுதல்களையும் வெட்டி எறிய வேண்டிய வேலை எனக்கு இருக்கிறது. உன்னை நல்லவன் என்று அழைப்பதன் மூலமாக உனக்கு ஓர் உண்மையை உணர்த்துகிறேன். இதுதான் நீ இதுவரை ஆடிய விளையாட்டு என்ற உண்மையை உனக்கு உணர்த்துகிறேன். அதற்கு மேல் நான் எதுவும் செய்யவில்லை. நான் உன்னை வைத்துச் சூதாடவில்லை. உன்னிடம் சூதாடவில்லை.

ஆனால் முதலில் இருந்தே இங்கே என்ன நடக்கிறது என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும். என்ன நடக்கப் போகிறது என்பதை விழிப்புணர்வுடன் கவனிக்க வேண்டும்.

உனக்கு ஆறுதல் சொல்வது என் வேலையில்லை. உன்னை அழிப்பதே என் வேலை. அப்போதுதான் நீ புதிதாக ஒரு பிறவி எடுக்க முடியும்.

முல்லா நசிருதீன் வழக்கம்போல் மதியம் மூன்றரை மணிக்கு தன் அலுவலகப் பணியை முடித்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார். அலுவலக வாசலில் ஒருவன் லாரியிலிருக்கும் ஒரு பெரிய புத்தக மூட்டையோடு போராடிக் கொண்டிருந்தான்.

"நான் உதவி செய்கிறேன்" என்று கருணையுடன் சொன்னார் முல்லா. இருவரும் மூட்டையின் இரு மூலைகளைப் பிடித்துக் கொண்டு தங்கள் பலத்தை எல்லாம் திரட்டித் தூக்கிப்பார்த்தார்கள். மூட்டை இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை.

"பயனில்லை அப்பனே! நம் இருவரால் இந்த மூட்டையை லாரியில் ஏற்றமுடியும் என்று எனக்குத் தோன்றவில்லை."

தலையில் அடித்துக் கொண்டான் அந்த மனிதன்.

"கண்றாவி! நான் இந்த மூட்டையை லாரியிலிருந்து இறக்கத்தானே பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன்."

ஒன்றை மட்டும் ஆரம்பத்திலேயே புரிந்து கொள்வது நல்லது. நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்ளப் பாடுபடுவாய். நான் உன்னை அழிக்க முயற்சி செய்வேன். நான் உன்னை நேரடியாகப் பார்க்க முடியும். நீ என்னிடம் எதையும் மறைக்க முடியாது. அதுதான் உன்னிடம் மேலோங்கி நிற்கும் குணம்.

குர்ஜிஃப்பிடம் சீடர்கள் போனால் அவர் அவர்களை உற்றுப் பார்ப்பார். அவர்களிடம் மேலோங்கி நிற்கும் குணத்தைக் கண்டுபிடிப்பதற்கான சூழ்நிலையை உருவாக்குவார். அந்த குணம் என்னவென்று தெரியாமல் வேலையைத் தொடங்க முடியாது. சிலரிடம் பேராசை மேலோங்கி இருக்கும். அதுதான் அவர்கள் பிரச்சினை. அவர்களிடம் கோபத்தைப் பற்றிப்

பேச முடியாது. கோபம் அவர்கள் பிரச்சினை இல்லை. அவர்களிடம் செக்ஸைப் பற்றிப் பேச முடியாது ஏனென்றால் செக்ஸ் அவர்கள் பிரச்சினையில்லை.

பேராசை பிடித்தவர்களுக்கு செக்ஸ் ஒரு பிரச்சினையே இல்லை. இது ஓர் ஆச்சரியமான விஷயம். அதனால்தான் பேராசை பிடித்த மார்வாரிகளுக்குக் குழந்தைகள் பிறப்பதில்லை. அவர்கள் குழந்தைகளைத் தத்து எடுக்க வேண்டியிருக்கிறது.

பேராசை பிடித்தவர்களுக்கு செக்ஸ் உணர்வு குறைவாகவே இருக்கும். அவர்களுடைய அனைத்துச் சக்தியும் பேராசையி லேயே செலவழிந்துவிடும். அவர்களுக்குப் பணத்தின் மேல்தான் காதல். அவர்கள் பெண்களைப் பற்றி யோசிப்பதில்லை. ஒரு மார்வாரியிடம் பிரம்மச்சரிய விரதம் எடுத்துக் கொள்ளச் சொன்னால் அதை உற்சாகமாகச் செய்வான்.

அது அவனுக்குக் கடினமான செயல் அல்ல. ஆனால் அவனிடம் அவன் செல்வத்தைத் துறக்குமாறு சொல்லாதீர்கள். அது அவனால் முடியாது. அதுதான் அவன் பிரச்சினை. அவனிடம் மேலோங்கி நிற்கும் குணம்.

ஓர் அரசியல்வாதிக்குப் பெண்ணாசை குறைவாகத்தான் இருக்கும். அவனுடைய செக்ஸ் உணர்வெல்லாம் அரசியலில்தான் இருக்கும். அவன் டெல்லிக்குப் போக வேண்டும். வாஷிங் டனுக்குப் போக வேண்டும் மாஸ்கோவிற்குப் போக வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பான். அவன் சக்தியெல்லாம் அதற்கே செலவாகிவிடும். தலைநகரைத் தன்னால் ஊடுருவ முடியுமா என்று பார்ப்பான். தலைநகரம்தான் அவனுடைய காமக்கிழத்தி. அவன் பெண்ணாசையை எளிதாகத் தவிர்த்து விடுவான். அவனுக்குத்தான் பெண்ணிடம் ஈடுபாடே இல்லையே! ஒருவேளை அவன் டெல்லி சென்றடைந்துவிட்டால் அரசியலில் பெரிய பதவியைப் பெற்று விட்டால் அதன்பின் பெண்களைப் பற்றி யோசிக்கத் தொடங்குவான். அதற்கு முன்னால் பெண்களிடமிருந்து விலகியே இருப்பான்.

இது இந்தியாவில் நடந்தது. இந்தியா விடுதலை பெறுவதற்கு முன்னால் அரசியல் தலைவர்கள் துறவிகளாக, சந்நியாசிகளாக

மஹாத்மாக்களாக மக்களின் சேவகர்களாக எதையும் தியாகம் செய்யத் தயாராக இருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு அதிகாரம் கிடைத்தவுடன் எல்லாமே தலைகீழாக மாறிவிட்டது. இப்போது அவர்களுடைய சக்தி வேறு வழிகளில் வெளிவரத் தொடங்கியது.

டில்லிக்குச் செல்லும்வரை அங்கு ஓர் உயர்பதவியில் அமரும்வரை அவர்கள் சக்தி அரசியலுக்காகப் பயன்பட்டது. நாடு விடுதலை பெற்றவுடன் அவர்களுடைய நோக்கம் நிறைவேறிவிட்டது. இனிமேல் என்ன செய்வது? அவர்களிடம் சக்தி இருந்தது. அதைப் பயன்படுத்த வழியில்லை. அதனால்தான் அவர்கள் பல்வேறு செயல்களில் ஈடுபட்டார்கள்.

ஆக முதலில் அறியவேண்டியது உங்களிடம் மேலோங்கி நிற்கும் குணத்தைத்தான். சிலருக்கு அது கோபமாக இருக்கலாம். சிலருக்கு ஏமாற்றுதலாக இருக்கலாம். சிலருக்கு அவர்களுடைய அகந்தையாக இருக்கலாம். சிலருக்குப் பேராசை சிலருக்குப் பொறாமை சிலருக்கு எல்லாம் தனக்கே என்னும் மனப்பாங்கு .. இதில் ஏதாவதொன்று உங்களிடம் மேலோங்கி இருக்கலாம்.

ஓர் உண்மையான குருதேவரிடம் சென்றீர்கள் என்றால் உங்களை நேரடியாகப் பார்த்து அந்தக் குணத்தைக் கண்டுபிடித்து விடுவார். மேலோங்கி நிற்கும் அந்தக் குணம் ஏறக்குறைய உங்கள் ஆன்மாவைப் போன்றது. உங்கள் ஆன்மாவில் என்ன இருக்கிறது என்று உங்களுக்குத் தெரியாது.

பிரபல துப்பறியும் மேதை ஷெர்லாக் ஹோல்ம்ஸ் தன் நண்பர் வேட்சனைப் பார்த்துச் சொன்னார்.

"நண்பா இன்று நீ ஏன் குளிர்கால உள்ளாடைகளை அணியவில்லை?"

"அடப்பாவி! அதைக் கூடவா உன் துப்பறியும் மூளையால் கண்டுபிடிக்கிறாய்?"

"நீ இன்று பேண்ட் போட மறந்துவிட்டாய் அப்பனே!"

என்னைப் பொறுத்தவரை நீங்கள் எப்போதும் கீழே ஆடையில்லாமல் - பேண்ட் அணியாமல் - இருக்கிறீர்கள். என்னை ஏமாற்ற முடியாது. சில சமயம் நான் முரட்டுத்தனமாக இருக்க மாட்டேன். மரியாதையாகக்கூட இருப்பேன். பண்பாடு கருதி உங்களிடம் பார்ப்பதைச் சொல்ல மாட்டேன். சில நேரங்களில் உண்மையைச் சொல்வதற்கான சமயம் வரவில்லை என்று விட்டுவிடுவேன். ஆனால் நீங்கள் எப்போது என்னிடம் வந்தாலும் சரி - என்னிடம் வருவதுதான் தரிசனத்தின் அர்த்தம் - என் கண் முன்னால் நீங்கள் நிர்வாணமாகத்தான் நிற்கிறீர்கள். அதைப்பற்றி நான் ஒன்றும் சொல்வதில்லை. சரியான நேரத்திற்காகக் காத்திருப்பேன். சில சமயம் சொல்லவே மாட்டேன். என்றாலும் என் சிகிச்சையைத் தொடங்கிவிடுவேன். அது ஆளைப் பொறுத்தது. சூழ்நிலையைப் பொறுத்தது. ஆனால் என்னை யாரும் ஏமாற்ற முடியாது.

நீங்கள் என்னை ஏமாற்ற முடியுமேயானால் என்னால் உங்களுக்கு எந்தப் பயனும் இல்லை. உங்களால் என்னை ஏமாற்ற முடியாது என்பதால்தான் நான் உங்களுக்கு உதவி செய்ய முடிகிறது.

மூன்றாவது கேள்வி :

*ஓஷோ,*

*எனக்குப் பெரிய நிறுவனங்கள் என்றாலே பயம். அவற்றில் உள்ளீடாக இருக்கும் தீமையைக் கண்டு அஞ்சுகிறேன். ஆனால் இந்தக் காலத்தில் நிறுவனங்கள் தேவையான தீமையாக இருக்கிறது. ஓஷோ அறக்கட்டளையும் ஒரு நிறுவனம்தானே!. அது சக்தி வாய்ந்த நிறுவனமாக வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. நிறுவனங்கள் ஏன் தேவைப்படுகின்றன என்று உங்களால் விளக்க முடியுமா?*

நிறுவனங்கள் தேவை. ஏனென்றால் தீமையும் ஓரளவு தேவைப்படத்தான் செய்கிறது.

நான்காவது கேள்வி

ஓஷோ

*ஜபமாலைகளில் ஏன் சரியாக 108 மணிகள் இருக்கின்றன? இந்த மாலை சடங்காச்சார மதத்தைச் சேர்ந்ததுதானே?*

ஆமாம். சடங்குகளில் மூழ்குவது தவறு. அதே சமயம் சடங்குகளைக் கண்மூடித்தனமாக எதிர்ப்பதும் தவறுதான். கொஞ்சம் சடங்கு இருந்தால் அழகாகத்தான் இருக்கும். சடங்காச்சாரத்தில் திளைப்பது தவறு. கொஞ்சம் கொஞ்சம் சடங்கு இருந்தால் வாழ்க்கை சுவாரசியமாக இருக்கும். உணவிற்கு சிறிதளவு உப்பு சுவையைக் கூட்டுவதைப் போல் சடங்குகள் வாழ்க்கைக்குச் சுவையூட்டும். சடங்குகளே இல்லாத வாழ்க்கை வறுமையான வாழ்க்கையாகத்தான் இருக்கும்.

நீங்கள் போகும் வழியில் நண்பரைச் சந்திக்கிறீர்கள். 'வணக்கம்' என்று சொல்கிறீர்கள். அதுவும் ஒரு சடங்குதான். . 'சௌக்கியமா?' என்று அவர் கேட்கிறார். அதுவும் ஒரு சடங்குதானே! 'நன்றாக இருக்கிறேன். நீங்கள்?' என்று நீங்கள் பதிலுக்குக் கேட்கிறீர்கள். அதுவும் சடங்குதான்.

நீங்கள் நன்றாக இல்லை என்று உங்களுக்குத் தெரியும். அவருக்கும் தெரியும். ஏன் ஊருக்கே தெரியு.ம்.

வழியில் சந்திப்பவரைப் பார்த்துப் புன்னகை சிந்துகிறீர்கள். அதுவும் ஒரு சடங்குதான். கவனித்துப் பாருங்கள். வாழ்க்கைக்குக் கொஞ்சம் சடங்குகள் வேண்டும். அது வாழ்க்கையை உராய்தலில்லாமல் சீராக ஓட்ட உதவும். அது இயந்திரத்திற்கு விடப்படும் எண்ணெயைப் போன்றது. உராய்வைக் குறைத்து ஓட்டத்தைச் சீராக்கும். ஆனால் வாழ்க்கையே ஒரு சடங்காகி விட்டால் அது பெரும் ஆபத்தில்தான் முடியும்.

அந்த நிலையில் நீங்கள் உணவில்லாமல் உப்பை மட்டுமே உண்டு கொண்டிருப்பீர்கள்.

உணவில் சிறிதளவு உப்பு சேர்த்தால் சுவையைக் கூட்டும். ஆனால் உப்பையே உணவாக உண்பது ஆபத்தானது.

அப்படிச் செய்தால் நீங்கள் செத்துவிடுவீர்கள். உப்பை முழுவதுமாக விட்டுவிடுவதும் ஆபத்தானது.

இதை நன்றாக மனதில் கொள்ளுங்கள். நான் எதையும் முழுமையாக ஆதரிப்பதும் இல்லை. முழுமையாக எதிர்ப்பதும் இல்லை.

இந்தக் காவி உடை, ஜப மாலை, அதில் இருக்கும் பதக்கம் - தீங்கற்ற சடங்குகள். வாழ்வைச் சுவாரசியமாக்கும் சின்னச் சின்னச் சடங்குகள். நாம் எல்லாரும் ஒரு கூட்டம் என்ற உணர்வைத் தரும். மனிதன் வாழ்வதற்குச் சில புனைவுகள் தேவைப்படத்தான் செய்கின்றன. உண்மை மிகவும் கடுமையாக இருக்கிறது. நிச்சயம் ஒரு நாள் உங்களால் உண்மையோடு ஒத்து வாழ முடியும். ஆனால் இப்போது அது கொஞ்சம் கடினம்.

இந்த ஆன்மிகப் பயணத்தில் நீங்கள் பல நிலைகளைக் கடக்க வேண்டும். கடைசி நிலையில் எல்லாப் புனைவுகளையும் எல்லாச் சடங்குகளையும் விட்டுவிடலாம். அப்போதுகூட அவற்றை உதறித்தள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லை. அவை மிகவும் அழகானவை. அவற்றால் எந்தத் தீங்கும் இல்லை. ஓர் ஓரமாக இருந்துவிட்டுப் போகட்டுமே. சடங்குகள் உண்மையில்லை. அவை வெறும் புனைவுகள்தான். ஆனால் அவை அழகாக இருக்கின்றனவே!

நான் சடங்குகளை எதிர்க்கவில்லை. சடங்குகளே மதம் என்னும் கூற்றைத்தான் கடுமையாக எதிர்க்கிறேன். சடங்கைச் சடங்காக ஏற்றுக் கொள்வதில் எந்தத் தவறும் இல்லை. கொஞ்சம் சடங்கு மிகவும் நல்லது. அவை உங்களை சமநிலையில் வைத்திருக்கும். உங்கள் மனம் பேதலிக்காமல் பாதுகாக்கும். இல்லாவிட்டால் மக்கள் தீவிரத்தின் எல்லைக்கே போய்விடுவார்கள்.

சிலருடைய மொத்த மதமும் சடங்குகள்தான். அதில் மெய்ப்பொருளே இல்லை. எதிர்முனையில் தத்துவ மேதை கிருஷ்ணமூர்த்தி இருக்கிறார். அவர் தத்துவம் சடங்குகளுக்கு

எதிரானது. அதில் கவிதை இல்லை; புனைவு இல்லை; புராணம் இல்லை; வழிபாட்டுணர்வு இல்லை; தியானம் இல்லை; ஒன்றுமே இல்லை. நிர்வாணமான அலங்காரமில்லாத உண்மை மட்டுமே இருக்கிறது.

நான் எதிலுமே தீவிரவாதத்தை ஆதரிப்பதில்லை. மேலே கட்டிய கயிறின் மேல் நடப்பவன் நிலையை யோசித்துப் பாருங்கள். நம் வாழ்க்கையைப் போன்றது அந்த நிலை. அவன் முதலில் லேசாக இடது பக்கம் சாய்கிறான். கொஞ்சம் அதிகம் சாய்ந்து விட்டோமோ என்று யோசிக்கிறான். இன்னும் இடதுபக்கம் சாய்ந்தால் விழுந்து விடுவோம் என்று அவனுக்குத் தெரியும்.

உடனே சமநிலைக்கு வர வலது பக்கம் சாய்கிறான். உடனே தன்னைச் சுதாரித்துக் கொண்டு லேசாக இடதுபக்கம் சாய்கிறான். இப்படியே இடது பக்கமும் வலது பக்கமும் மாறி மாறிச் சாய்கிறான். அப்படிச் செய்தால்தான் அவன் நடுநிலையில் இருக்க முடியும் இது ஒரு புதிர். நடுவில் அவன் நிற்க வேண்டுமானால் இடது பக்கம் சாய வேண்டும். வலது பக்கம் சாய வேண்டும். நடுவில் நிற்பதற்கு ஏன் அவன் இரண்டு பக்கமும் சாய வேண்டும்? அது அவ்வளவு பொருத்தமாக இல்லையே! காரண-காரியம் உதைக்கிறதே!

ஏனென்றால் நடுநிலைமை என்பது ஒரு தேக்கநிலை இல்லை. சதா நகர்ந்து கொண்டிருக்கும் இயங்கிக் கொண்டிருக்கும் எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் ஒரு நிலை. வாழ்க்கை தேங்கி நிற்கும் குட்டைநீர் இல்லை. என்றும் ஓடிக்கொண்டிருக்கும் நதி.

நீங்கள் ஆரோக்கியமாக இருக்க விரும்பினால் - எப்போதும் சம நிலையில் இருக்க விரும்பினால் - அந்தப் பக்கம் கொஞ்சம் சாய வேண்டும். இந்தப் பக்கம் கொஞ்சம் சாய வேண்டும். சில சமயம் கொஞ்சம் சடங்கு சில சமயம் சடங்கில்லாத நிலை. சில சமயம் புனித நூல்கள். சில சமயம் அவை இல்லாத நிலை. சில சமயம் கொஞ்சம் வழிபாடு. சில சமயம் அதுவும் இல்லாத அமைதி நிலை.

சில சமயம் வழிபாட்டுணர்வு. சில சமயம் அந்த உணர்வுமின்றி இருக்கும் நிலை. நீங்கள் கயிற்றில் நடப்பவனைப் போல் இயங்க வேண்டும்.

இதை நினைவில் கொள்ளுங்கள் நடுவில் நிற்றல் தேக்க நிலை அல்ல. இயக்க நிலை. நீங்கள் அங்கே சும்மா இருக்க முடியாது. இருபதடி உயரத்தில் இரண்டு கம்புகளுக் கிடையே கயிற்றைக்கட்டி நடப்பவனிடம் "நீ ஏன் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் சாய்ந்து கொண்டிருக்கிறாய்? ஏன் தேவையில்லாமல் பிரயாசைப்பட்டுக் கொண்டிருக்கிறாய்? உன்னால் ஓர் இடத்தில் ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்க முடியாதா? கப் சிப்பென்று நடுவில் நில்." என்று சொல்ல முடியாது. அப்படிச் செய்தால் அவன் விழுந்துவிடுவான். நீங்கள் தேங்கி நின்றால் செத்துவிடுவீர்கள்.

வாழ்க்கை என்பது சதா ஓடிக்கொண்டிருக்கும் ஒரு நதி. அது ஓர் இயக்கம். ஓடுகின்ற ஆற்றைப் பாருங்கள். சில சமயம் அது வடக்கு நோக்கி ஓடும். சில சமயம் கிழக்கு நோக்கிப் போகும். சில சமயம் தெற்கு நோக்கிப் போகும் இரண்டு பக்கமும் மாறி மாறிச் சாய்ந்து கொண்டிருக்கும். அதன்பின் ஒரு நாள் அது சமுத்திரத்தைச் சென்றடையும்.

எல்லாமே ஓர் அளவில் இருக்க வேண்டும்.

ஐந்தாவது கேள்வி

*ஓஷோ,*

*இந்த மடத்தில் வயதானவர்களை மயக்குவதற்கு என்று ஒரு தனியாள், ஒரு தனியறை இருக்கிறதாமே வயதானவர்கள் என்றால் எவ்வளவு வயது ஆகியிருக்க வேண்டும்?*

அது கொஞ்சம் சிக்கலான விஷயம். என்றாலும் உங்களுக்குப் புரியும் வகையில் நான் சொல்கிறேன். எங்கே கேட்டால் சரியான விளக்கமும் வல்லுனர்களின் கருத்தும் கிடைக்குமோ அந்த இடத்தின் விலாசத்தைச் சொல்கிறேன்.

SIN என்ற பெயரில் ஒரு ரகசிய அமைப்பு இருக்கிறது. SIN என்ற சொல்லிற்கு Seduction Into Neo-sanyass என்பது விரிவாக்கம். அதாவது துறவு நிலைக்கு மயக்கி அழைத்துச் செல்வது என்று பொருள். இந்த அமைப்பிற்கு மூன்று பிரிவுகள் உண்டு. - குழந்தைகள், வயதானவர்கள், இந்த இரண்டிற்கும் இடைப்பட்டவர்கள்.

குழந்தைகள் பிரிவு 14 வயது வரை உள்ளவர்களுக்காக. 14 வயதில்தான் ஒரு மனிதனுக்குப் பாலியல் பக்குவம் வருகிறது. ஒரு 14 வயதுச் சிறுவனால் குழந்தையைக் கொடுக்க முடியும் என்பதனால் அவன் குழந்தைப் பிரிவிலிருந்து மாற்றப்பட்டு இடைப்பட்ட இளைஞர் பிரிவுக்குச் செல்கிறான். எனவே பிறப்பிலிருந்து 14 வருடங்கள் என்று ஒரு கோடு போடலாம். இறப்புக்கு 14 வருடங்கள் முன்னால் இருந்து முதியவர் பிரிவு. அதாவது மனிதன் சராசரியாக 70 வருடங்கள் வாழ்கிறான் என்றால் 56 வயதை அடைந்தவன் முதியவன்.

ஆக 0-14 குழந்தைகள் 14-56 இடைப்பட்டவர்கள் 56- இறப்புவரை - முதியவர்கள்.

குழந்தைகள் பிரிவை சித்தார்த்தாவும் பூர்வாவும் பார்த்துக் கொள்கிறார்கள். இடைப்பட்ட பிரிவை தீர்த்தாவும் மனிஷாவும். முதியோர் பிரிவை பரிதோஷும் பாரிஜாதமும் பார்த்துக் கொள்கிறார்கள்.

ஆனால் இந்தப் பிரிவுகள் இங்கேதான் செல்லுபடியாகும். அமெரிக்காவில் இரண்டே இரண்டு பிரிவுகள்தான். குழந்தைகள் - முதியவர்கள் இடைப்பட்டவர்களே அங்கு கிடையாது. இந்த விநோதம் அமெரிக்காவில் மட்டுமே இருக்கிறது. எவ்வளவு நாட்கள் முடியுமோ அவ்வளவு நாட்கள் அவர்கள் குழந்தைகளாக இருக்கவே விரும்புகிறார்கள். ஐம்பது வயதானாலும் அவர்கள் குழந்தைகளாகவே இருக்கிறார்கள். 55 வயது, 56 வயது என்று வயது கூடிக்கொண்டே போகிறது அவர்கள் குழந்தைகளாகவே இருக்கிறார்கள். 56ஆவது வயது கடைசி நாளில் கூட அவர்கள் குழந்தைகளாகத்தான் இருக்கிறார்கள்.

இனிமேலும் தாமதிக்க முடியாது என்ற நிலையில் சட்டென்று முதியவர்களாகிவிடுகிறார்கள். குழந்தையிலிருந்து நேரடியாக முதியவர்களாகிவிடுகிறார்கள்.

இப்படித்தான் ஒரு விற்பனைப் பிரதிநிதி இருந்தான் மற்றவர்களைவிடச் சாதாரணமாகப் பத்து மடங்கு சம்பாதித்துக் கொண்டிருந்தான். அவனுடன் வேலை பார்த்தவர்களுக்கு ஒரே ஆச்சரியம். 'எல்லோரும் ஒரே பொருளைத்தானே விற்கிறோம். இவனால் எப்படி இவ்வளவு அதிகம் விற்க முடிகிறது? நம்மைப் பெரும்பாலான வீடுகளில் உள்ளேயே விடமாட்டேன். என்கிறார்களே!'

அதனால் எல்லாரும் சேர்ந்து அவனுக்கு ஒரு பெரிய ஹோட்டலில் விருந்து வைத்து அவன் வெற்றியின் ரகசியத்தைக் கேட்டார்கள்.

"சாதாரண விஷயம்தான். அழைப்பு மணியை அழுத்துவேன். கதவைத் திறப்பது அறுபது வயதுக் கிழவியாக இருந்தாலும் "கண்ணு, உங்கம்மா வீட்ல இருக்காங்களா?" என்று அப்பாவியாக முகத்தை வைத்துக் கொண்டு கேட்பேன். உடனே என்னை உள்ளே அழைத்துச் சென்று நான் எதை விற்றாலும் வாங்கிக்கொள்வார்கள்."

அமெரிக்காவிற்குப் பித்துப் பிடித்துவிட்டது. அங்கே இயற்கையின் வரையறைகள் எல்லாம் மறைந்துவிட்டன. குழந்தைப்பருவத்திலிருந்து நேரடியாக முதுமைப் பருவத்திற்குப் போய்விடுகிறார்கள். அதனால்தான் அங்கு ஒரு பெரிய தலைமுறை இடைவெளி இருக்கிறது. இரண்டு தலைமுறைகளை இணைக்கும் பாலம் அங்கு இல்லை. அந்தப் பாலம் உடைந்துவிட்டது.

இந்தச் சம்பவத்தைக் கேளுங்கள்.:

வேலஸ் ரேபர்ன் (Wallace Reyburn) என்பவர் (பிற்காலத்தில் ஒரு நூல் எழுதிப் பிரபலமானவர்) இத்தாலி நாட்டின் நேபிள்ஸ் நகரில் தன் படைகளுடன் நுழைந்தார். அது இரண்டாம் உலகப்போர் முடிவடையும் நெரம். ரேபர்ன்

தலைமையிலான படைகள் நாஜிப் படைகளை முறியடித்துவிட்டு வெற்றிகரமாக அந்த நகருக்குள் நுழைந்தன.

நன்றி உணர்வால் தூண்டப்பட்ட ஒரு நகரவாசி அவரைத் தன் சகோதரிக்கு அறிமுகப்படுத்தி வைப்பதாகச் சொன்னான். சொல்லிவிட்டு அவன் கண் சிமிட்டியதில் அதன் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொண்டார் ரேபர்ன்.

"அவள் அழகாக இருப்பாளா?"

"மிக அழகாக."

"இளம் வயதா?"

"ஆமாம். ஆமாம்."

"அவள் தூய்மையானவளா? இதுவரை கறைபடாதவளா?"

வெறுப்புடன் முகத்தை வேறு பக்கம் திரும்பிக்கொண்டான் அந்த நகர வாசி.

"இந்த அமெரிக்கர்களும் கனடா நாட்டுக்காரர்களும் பித்துப்பிடித்தவர்கள்போல் இதையேதான் கேட்கிறார்கள்."

அமெரிக்காவில் இயற்கையான வரைமுறைகளை மறந்து விட்டார்கள். இயற்கையான விஷயங்களைக்கூட மறந்துவிட்டார்கள். அதனால் அமெரிக்காவில் இந்த மூன்று பிரிவுகள் இல்லை. உலகின் மற்ற இடங்களில் இருக்கிறது. முதல் பிரிவு - குழந்தைகள் - செக்ஸ் உறவில் நாட்டம் இல்லாதவர்கள். இரண்டாம் பிரிவு - முதியோர் - செக்ஸ் நாட்டத்திலிருந்து விடுபட்டு மேலே வளர்ந்தவர்கள். மூன்றாம் பிரிவு - இடைப்பட்டவர்கள் அங்கும் இங்கும் இல்லாமல் இருப்பவர்கள். உயரக் கட்டிய கயிறில் நடந்து கொண்டிருப்பவர்கள்.

குழந்தைகள்தான் குழந்தைகளை மாற்ற முடியும். அதனால் தான் சிறுவயது சித்தார்த்தனும் பூர்வாவும் அந்தப் பிரிவைப் பார்த்துக் கொள்கிறார்கள். சிறுவன் சித்தார்த்தன் இப்போது அமெரிக்காவில் பயணம் செய்து கொண்டிருக்கிறான். அங்கிருக்கும் குழந்தைகளை மாற்ற முயன்று கொண்டிருக்கிறான்.

அங்கேதானே அதிகபட்ச குழந்தைகள் இருக்கிறார்கள். இடைப் பட்டவர்களுக்கென்று தீர்த்தாவும் மனிஷாவும் இருக்கிறார்கள். முதியோருக்கு பாரிஜாதமும் பரிதோஷும்.

அதனால் உங்களுக்கு வயதைப் பற்றி ஒரு வல்லுனரின் கருத்து வேண்டுமென்றால் நீங்கள் பரிதோஷிடம் செல்லுங்கள். அந்தப் பிரிவு அவன் பொறுப்பு. இப்போது அவனுக்கு நேரம் இருக்காது. பல பெற்றோர்கள் கிறிஸ்துமஸ் பண்டிகைக்காக வந்திருக்கிறார்கள். அவர்களைத் துறவறத்துக்கு மாற்ற முயன்று கொண்டிருக்கிறான்.

அவன் இருக்கும் இடம் எது என்று தெரிய வேண்டும் என்பதற்காக அவன் அறையில் ஒரு நோட்டீஸ் ஒட்டியிருக் கிறார்கள். அதைப் பார்த்துத்தான் நீங்கள் இந்தக் கேள்வியைக் கேட்டீர்கள் என்று நினைக்கிறேன். “வயதானவர்களை மயக்குபவரின் அலுவலகம்” என்று அவன் அறைக் கதவில் எழுதி வைத்திருக்கிறார்கள். அவனைத் தேடி வருபவர்கள் எளிதாகக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதற்காக.

ஆறாவது கேள்வி:

*ஓஷோ,*

*பணத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?*

நான் பணமில்லாமல் வாழ்ந்திருக்கிறேன். அதிக பணத் தோடும் வாழ்ந்திருக்கிறேன். ஒன்றை மட்டும் என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். பணம் இல்லாமல் வறுமையில் வாழ்வதைவிடப் பணத்தோடு வாழ்வதே சிறந்தது.

பணம் பயனுள்ளது. பணத்தைப் பயன்படுத்தலாம். பணம் நம்மைப் பயன்படுத்த அனுமதிக்கக் கூடாது. நான் பணத்தை எதிர்ப்பவன் அல்ல. பணத்தைத் தாராளமாகப் பயன்படுத்தலாம். பணம் மனிதனின் பயனுள்ள கண்டுபிடிப்பு. பணம் நமக்கு மகத்தான வழிகளில் உதவி செய்கிறது.

பணம் உங்கள் எஜமானாக இருக்கக் கூடாது. நீங்கள்தான் அதன் எஜமானராக இருக்க வேண்டும். பணம் வேண்டுமா

வேண்டாமா என்று தெரிவு செய்ய வேண்டிய சூழ்நிலை வந்தால் எப்போதும் பணத்தையே தேர்ந்தெடுங்கள். பணம் இல்லாமல் இருப்பதைவிடப் பணத்தோடு இருப்பதே மேல்.

அப்படியிருந்தால் நீங்கள் சந்தோஷமாக இருப்பீர்கள் என்று நான் சொல்லவில்லை. கை நிறையப் பணம் இருந்தால் உங்களுக்குப் பிடித்த அவலங்களைத் தெரிவு செய்து அதற்காகக் கவலைப்படலாம்.

ஓர் ஏழை தேர்ந்தெடுக்க அதிக வழிகள் இல்லை. அவனுக்கு என்று உள்ள துன்பத்தை அவன் அனுபவித்தே தீர வேண்டும். ஒரு செல்வந்தன் தெரிவு செய்யப் பலவழிகள் காத்திருக்கின்றன. ஓர் ஏழையின் துன்பம் வரையறுக்கப்பட்டதாக இருக்கும். செல்வந்தனின் துன்பங்களுக்கு வரையறையே இல்லை.

ஏழை இருக்கும் இடத்திலே இருந்து கொண்டு பட்ட கஷ்டத்தையே பட வேண்டும். ஒரு பணக்காரன் நியுயார்க் நகரில் கஷ்டப்படலாம். லண்டன் நகரில் கஷ்டப்படலாம். சீனாவின் பீகிங் நகரில் கஷ்டப்படலாம். அவன் கஷ்டப்பட ஓர் உலகமே களமாக இருக்கக் காத்திருக்கிறது. இதே ரீதியில் தொழில் நுட்பம் முன்னேறினால் ஒரு பணக்காரன் நிலவிலும் செவ்வாய்க் கிரகத்திலும் கூடக் கஷ்டப்படலாம்.

பணக்காரனுக்குச் சுதந்திரம் அதிகம். சுதந்திரம் நல்லது. நீங்கள் ஏழையாக இருந்தால் ஒரு பெண் தரும் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளவேண்டும். செல்வந்தனாக இருந்தால் பல பெண்கள் தரும் துன்பங்களைத் தாங்கிக்கொள்ளலாம். பணம் உங்களுக்காகப் பல கதவுகளைத் திறக்கும்.

என்னிடம் கேட்டால் பணம் இல்லாமல் இருப்பதைவிடப் பணத்தோடு வசதியாக வாழ்வதே மேல் என்பேன். பணம் உங்களுக்குக் குறுகிய காலத்தில் அதிக அனுபவங்களைக் கொடுக்கும். சீக்கிரமே நீங்கள் சலிப்படைவீர்கள். இறைவனை அணுக வேண்டும் என்று உங்களுக்குச் சீக்கிரமாகவே தோன்றிவிடும்.

ஓர் ஏழைக்குப் பணத்தின் மேல் சலிப்பு வராது. அவனிடம்தான் பணமே இல்லையே! இல்லாத ஒன்றின்மேல்

எப்படி சலிப்பு வரும்? ஏழை எப்போதும் பணத்துக்காக ஏங்கிக் கொண்டிருப்பான். பணத்தைப் பற்றிக் கனவு கண்டு கொண்டு இருப்பான். பணத்திற்காகப் பாடுபட்டுக் கொண்டிருப்பான்.

ஓர் உண்மையான பணக்காரனுக்குத்தான் ஒரு கட்டத்தில் பணத்தின்மேல் சலிப்பு ஏற்படும். சொல்லப்போனால் அதுதான் ஒரு செல்வந்தனின் லட்சணம். எவனுக்குப் பணம் சலிப்புத்தட்டிவிட்டதோ அவனே உண்மையான பணக்காரன்.

அவனுக்குப் பணம் என்ன செய்யும் என்ன என்ன சுகங்களெல்லாம் கொடுக்கும் என்று நன்றாகத் தெரியும். இப்போது பணம் கொடுக்கக்கூடிய சுகத்திற்கு மேலான ஒரு சுகத்தை நாடுகிறான்.

பணம் ஒருநாளும் இறைவனைக் கொடுக்காது. மன அமைதியைக் கொடுக்காது. என்றாலும் இந்த முட்டாள் மக்களுக்கு இது புரிவதில்லை.

சில வருடங்களுக்கு முன்னால் ஒரு துறவி என்னைப் பார்க்க வந்தார். அவர் சொன்னார்:

“நான் செல்வத்தைத் துறந்துவிட்டேன். ஏனென்றால் செல்வம் மூலமாக உங்களால் ஒரு நாளும் பரவச நிலையை அடையமுடியாது.”

“பணம் பரவசத்தைக் கொடுக்கும் என்று உங்களுக்கு எந்த மடையன் சொன்னான்? பணம் ஓர் அழகான வீட்டைக் கொடுக்கும். பெரிய காரைக் கொடுக்கும்.”

சில முட்டாள்கள் பணத்தினால் பேருவகை நிலை அடையலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கடைசியில் ஏமாற்றமே மிஞ்சுகிறது. தவறு பணத்தின் மேல் இல்லை. பணத்திற்கு இல்லாத ஒரு குணத்தைக் கற்பனை செய்து கொண்ட அவர்களிடம்தான் தவறு இருக்கிறது.

ஆற்று மண்ணைப் பிழிந்து அதிலிருந்து எண்ணெய் எடுக்க முடியுமா? எண்ணெய் வராவிட்டால் மண் சரியில்லை

என்று சொல்வீர்களா?, மண்ணில் தப்பில்லை. நீங்கள் முட்டாள்த்தனமாக எதிர்பார்த்ததுதான் தப்பு. மண்ணிலிருந்து எண்ணெய் வரும் என்று எந்த மடையன் உங்களிடம் சொன்னான்?

பணம் உங்களுக்குப் பரவசநிலையைக் கொடுக்காது. அமைதியைக் கொடுக்காது. கடவுளைக் கொடுக்காது. சொர்க்கத்தைக் கொடுக்காது. ஆனால் இதைத் தெரிந்து கொள்ள உங்களுக்குப் பணம் வேண்டும். உங்களிடம் பணம் நிறைய இருந்தால்தான் பணம் எதைக் கொடுக்கும் எதைக் கொடுக்காது என்று தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும்.

பணத்தால் என்ன செய்யலாம் என்று ஒருவனுக்குத் தெரிந்துவிட்டால் அவனுடைய முயற்சி பணத்தைத் தாண்டிச் செல்லும். இந்த உலகத்தைத் தாண்டிச் செல்லும். பணம் ஓர் அற்புதமான கண்டுபிடிப்பு. மொழிக்கு அடுத்தபடி மிக முக்கியமான கண்டுபிடிப்பு பணம்தான். மொழியும் பணமும் நாகரிகத்தின் அஸ்திவாரங்கள்.

நான் பணத்தை வெறுப்பவன் அல்லன். பணத்தால் என்ன கொடுக்க முடியும் என்ன கொடுக்க முடியாது என்பதை மட்டுமே சொல்கிறேன். பணத்தைப் பதுக்கி வைப்பதன் மூலம் ஒரு நாள் உங்களுக்கு தியானம் கை கூடும் என்று நினைத்தால் உங்களைப் போல் ஒரு முட்டாளை உலகத்தில் பார்க்க முடியாது.

பணத்தினால் சத்தியமாக உங்கள் தியானம் கைகூடாது. அதே சமயம் பணத்தைத் துறப்பதனாலும் தியானம் கைகூடாது. பணத்தை வெறுத்து ஒதுக்குவதால் நீங்கள் ஆன்மிகத்தில் முன்னேற முடியாது. இந்த இருசாராருமே முட்டாள்கள். பணத்தால் இறைவனை அடையலாம் என்று நினைப்பவனும் முட்டாள். பணத்தைத் துறப்பதால் இறைவனை அடையலாம் என்று நினைப்பவனும் முட்டாள்.

கடவுளுக்கும் பணத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. உங்களிடம் கோடி கோடியாகப் பணம் இருந்தாலும் உங்களால் கடவுளை நெருங்க முடியும். உங்கள் கையில் ஒருரூபாய்கூட

இல்லையென்றாலும் உங்களால் கடவுளை நெருங்க முடியும். ஒரு பணக்காரன் தியானம் செய்யலாம். ஓர் ஏழையும் தியானம் செய்யலாம்.

இதில் நான் புரிந்து கொண்டது இதுதான். ஓர் ஏழை தியானம் செய்ய வேண்டுமென்றால், ஓர் ஏழை இறைவனை அணுக வேண்டுமென்றால் அவனிடம் மகத்தான ஞானம் இருக்க வேண்டும். கையில் பணம் இல்லாமலேயே பணத்தின் வியர்த்தத்தை அவன் உணர வேண்டும். அதற்கு உண்மையிலேயே தெய்விக அறிவு இருக்க வேண்டும்.

கபீர் ஒரு பெரிய ஞானியாக இருக்க வேண்டும். புத்தர் மகாவீரரைவிடச் சிறந்த ஞானியாக இருக்க வேண்டும். நான் இப்படிச் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது. புத்தரிடம் ஏராளமான பணம் இருந்தது. மகாவீரரிடம் இருந்த பணத்திற்கும் குறைவில்லை. அவர்களுக்குப் பணத்தின்மேல் சலிப்பு வந்தால் அதில் ஓர் அர்த்தம் இருக்கிறது. இரண்டும் இரண்டும் நான்கு என்பது போல் அது ஒரு சாதாரணக் கணக்கு.

புத்தர் தன் அரண்மனையைத் துறக்கவில்லையென்றால் அவருக்கு அறிவில்லை என்பது நிரூபணமாகியிருக்கும். அரண்மனையைத் துறந்ததாலேயே அவரைப் பெரிய ஞானி என்று சொல்ல முடியாது. சாதாரண அறிவுடையவர் என்று வேண்டுமானால் சொல்லலாம். பணத்தின் மேல் சலிப்பு உண்டாகி அதனால் உண்மையான ஞானத்தைத் தேடிப் போகும் அளவிற்கு அறிவு இருந்தது என்று வேண்டுமானால் சொல்லலாம்.

கபீர், ஏசுநாதர், நபிகள் நாயகம் – இவர்கள் எல்லாம் பெரிய ஞானிகள். இவர்களிடம் பணம் இல்லை. எந்த வசதியும் இல்லை. என்றாலும் பணத்தால் பயனில்லை என்று தெரிந்து கொண்டார்களே! அவர்களிடம் பெரிய சாம்ராஜ்யம் இல்லை. தங்களிடம் இல்லாத சாம்ராஜ்யத்தை அவர்கள் துறந்தார்களே! இவர்கள் எல்லாம் அதீத விழிப்புணர்வு பெற்றவர்கள். தங்களிடம் இல்லாதவற்றைக்கூட அவர்களால் ஆராய முடிந்தது. தங்களிடம் பணம் இல்லாத போதும்

பணத்தால் ஒன்றும் பயனில்லை என்பதை இவர்களால் உணர முடிந்தது. அவர்களுடைய அறிவு, ஆச்சரியமானது.

ஓர் ஏழை சமய உணர்வில் திளைக்க வேண்டுமென்றால் அவனுக்கு அதீத ஞானம் இருக்க வேண்டும். ஒரு செல்வந்தன் சமய உணர்வு பெற சராசரி அறிவே போதுமானது. ஓர் ஏழை சமய உணர்வு பெற்றால் அவன் பெரிய ஞானி. ஒரு செல்வந்தன் சமய உணர்வு பெறவில்லையென்றால் அவன் ஒரு முட்டாள்.

கடைசி கேள்வி

*ஓஷோ,*

*ஒவ்வொரு நாளும் இந்த அரங்கத்தை விட்டுச் செல்லும் போது (சுயாங் ட்சு அரங்கம்) சலவை அறையில் மூன்று வெள்ளை அங்கிகள் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறேன். நீங்கள் ஓர் அங்கிக்குமேல் அணிந்து நான் பார்த்ததேயில்லை. எனக்கு ஒரு சந்தேகம். நீங்கள் ஓர் ஈற்றில் பிறந்த மூன்று குழந்தைகளில் ஒருவரா? ஒரே சமயத்தில் நீங்கள் பல இடங்களில் காட்சி தருகிறீர்கள். ஒரு முறை சொன்னதை அடுத்த முறை மாற்றிச் சொல்கிறீர்கள். நீங்கள் மூன்று வெவ்வேறு ஆசாமிகளாக இருந்தால் மட்டுமே இது சாத்தியம்.*

ஓ நீங்கள் அதைக் கண்டுபிடித்துவிட்டீர்களா? சரி, அதை ரகசியமாக வைத்திருங்கள். யாரிடமும் சொல்லாதீர்கள். அது உண்மைதான். அதை என்னால் மறுக்க முடியாது. அதுவும் நீங்கள் கண்டுபிடித்தபின் எப்படி மறுக்க முடியும்? ஆமாம் நான் மூன்று ஆசாமிகள்தான். மும்மூர்த்திகள். தந்தை, தாய் மகன் என்ற மும்மூர்த்திகள். அதைப்பற்றித்தானே பேசிக்கொண்டிருக்கிறேன்!

அது உண்மைதான். அதனால்தான் நானே என் வார்த்தைகளுக்கு எதிராகச் சொல்ல முடிகிறது. என்ன செய்வது? சில சமயம் என்னுள் இருக்கும் தந்தை பேசுகிறார். சில சமயம் தாய். சில சமயம் மகன். என்னுள் மூன்று நதிகள்

சங்கமமாவதை நீங்கள் பார்ப்பீர்கள். ஆமாம் நான் ஒரு த்ரிவேணி சங்கமம். எனக்கு மூன்று முகங்கள் இருக்கின்றன.

அதனால்தான் என்னால் உலகின் எல்லா மதங்களிலும் எல்லா மரபுகளிலும் ஊடுருவிச் செல்ல முடிகிறது. உண்மையாகப் பார்த்தால் உலகில் மொத்தம் மூன்று மரபுகளே இருக்கின்றன. மூன்று என்பது அடிப்படை அளவை. - தந்தை தாய் மகன்.

அதனால்தான் என் வார்த்தைகளிலிருந்து உங்களால் கோர்வையான ஒரு தத்துவத்தை உருவாக்க முடியவில்லை. என் வார்த்தைகளில் இருக்கும் இசைவை அறிய மகத்தான ஞானம் வேண்டும். அது இல்லாவிட்டால் முரண்பாடுகள் வெளிப்படையாகத் தெரியும்.

நான் தந்தையாக இருக்கும்போது ஒரு தந்தையைப் போல் அதிகார த்வனியில் பேசுகிறேன். ஒரு தாயாக இருக்கும்போது ஒரு தாயைப் போல் அன்பாக ஆதூரத்துடன் பேசுகிறேன். தந்தையாக இருக்கும்போது நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று ஆணையிடுகிறேன். அந்த சமயத்தில் இறைவனின் பத்து கட்டளைகளைச் சுமந்து வந்த மோசஸாக மாறிவிடுகிறேன். நான் தாயாக இருக்கும்போது உங்களுக்கு மென்மையாக அறிவுறுத்துகிறேன். ஆணையிடுவதில்லை. அப்போது நான் மோசஸாக இல்லை. கிருஷ்ணனாக இருக்கிறேன். அவன் அர்ஜுனனுக்கு அறிவுறுத்துகிறான். ஆயிரத்தியோரு வழிகளில் மென்மையாக அன்பாக அறிவுறுத்துகிறான். கொஞ்சம் கொஞ்சமாக அர்ஜுனனைத் தன் வழிக்குக் கொண்டுவருகிறான்.

நான் மகனாக இருக்கும் போது போராளியாக இருக்கிறேன். புரட்சி செய்கிறேன். ஏசுநாதராக, புத்தராகப் பேசுகிறேன்.

இந்த மூவரும் நான்தான். நீங்களும் என்னைப்போல் இந்த மூவராகவும் விளங்க வேண்டும் என்று விரும்புகிறேன். ஒருவராக இருந்தால் ஏழையாகத்தான் இருக்க முடியும். மூவராக இருந்தால்தான் செல்வந்தனாக இருக்க முடியும்.

கடைசி கடைசியாக ஒரு கேள்வி:

*ஓஷோ,*

*வசீகரம் இல்லாமல் இருப்பது ஆச்சரியமான முட்டாள்தனம். அது உங்களிடம் நிறைய இருக்கிறது. அதைப் பற்றிச் சொல்லுங்களேன்!*

நான் எப்படி வசீகரம் இல்லாமல் இருக்க முடியும்? இப்போது எல்லாம் சுலபமாகிவிட்டது. நீங்கள் மும்மூர்த்திகள் தத்துவத்தை உணர்ந்துவிட்டீர்கள்.

மூன்றுவகையான குருதேவர்கள் இருக்கிறார்கள் என்று நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். வசீகரமானவர், முறை சார்ந்தவர், இயல்பான குருதேவர். தந்தை வசீகரமானவர். தாய் முறை சார்ந்தவர். மகன் இயல்பான குருதேவர். இயல் பான என்ற சொல்லிற்கான ஆங்கிலச் சொல் - natural - பிறவியிலிருந்து வருவது என்ற வேரிலிருந்து வந்தது.

அதனால் நீங்கள் சொல்வது சரிதான். நான் மூன்று பகுதிகளாக இருக்கிறேன். மூன்றில் ஒன்று வசீகரமானது. ஒன்று முறை சார்ந்தது. மற்றொன்று இயல்பானது. அப்படித்தான் இருக்க வேண்டும். ஒரு பரிபூரணமான குருநாதர் மூன்றுமாக இருக்க வேண்டும்.

நான் ஏதாவது சொன்னால் அதை வகை பிரித்துப் புரிந்து கொள்ளுங்கள். உங்கள் மனதில் மூன்று அறைகளை வைத்திருங்கள். - தந்தை, தாய், மகன் என்ற மூவருக்காக மூன்று. நான் சொல்வதையெல்லாம் அந்த அந்த அறைகளில் போட்டு வாருங்கள். இறுதியில் நீங்கள் எளிதாக உண்மையைக் கண்டுபிடித்துவிடலாம்.

"அன்று ஏன் அப்படிச் சொன்னீர்கள்?" என்று என்னிடம் கேட்காதீர்கள். ஏனென்றால் அன்று சொன்ன ஓஷோ வேறு. இன்று இருக்கும் ஓஷோ வேறு. இருவரும் ஒருவர் அல்லர். கீழே கண்ட நகைச்சுவைத் துணுக்கில் இருப்பது போல் வாழ்க்கை எளிதாக இருப்பதில்லை.

நாதன் அசுபெல் (Nathan Asubel) என்பவர் யூதர்களின் நாட்டுப்புறக்கதைகள் (Treasury of Jewish Folklore) என்ற நூலை எழுதியிருக்கிறார். அதில் இந்தக்கதை வருகிறது.

டப்னோ (Dubno) என்ற பிரபலமான யூத மதப் பிரச்சாரகர் வேறு ஊரில் நடக்கும் ஒரு கூட்டத்தில் உரையாற்றக் காரில் போய்க் கொண்டிருந்தார். அப்போது வண்டி ஓட்டுநன் அவரிடம் கெஞ்சும் குரலில் கேட்டான்.

"ஐயா ஒரு சின்ன விண்ணப்பம். ஒரே ஒரு முறை உங்களுக்குக் கிடைக்கும் பெருமையையும் மரியாதையையும் நான் அனுபவித்துப் பார்க்கிறேனே. அது எப்படி இருக்கும் என்று பார்க்க ஆசையாக இருக்கிறது ஐயா. அதனால் இந்த உரைக்கு மட்டும் உங்கள் உடைகளை நான் அணிந்து கொண்டு போகிறேன். நீங்கள் என் உடைகளை அணிந்து கொண்டு காரை ஓட்டிக்கொண்டு வாருங்கள்."

மென்மையான மனமும் அதீத நகைச்சுவை உணர்வும் கொண்ட அந்தப் பிரசாரகர் அவன் கோரிக்கையை ஏற்றுக் கொண்டார். என்றாலும் அவனை எச்சரித்தார்.

"நீ சொன்னபடி செய்யலாம். ஆனால் ஒன்றை மட்டும் நீ நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். ஆடைகளினால் மட்டும் நீ பிரசாரகனாகிவிட முடியாது. யூத மத சட்டங்களில் உள்ள சிக்கலான விஷயங்களைப் பற்றி உன்னிடம் கேட்பார்கள். அப்போது நீ முட்டாளைப் போல் பேந்தப் பேந்த முழித்துக் கொண்டிருக்கக் கூடாது. சரியா?"

அவர்கள் தங்கள் உடைகளை மாற்றிக் கொண்டனர். அந்த ஊரிலே போலிப் பிரசாரகருக்கு கோலாகலமான வரவேற்பு கொடுக்கப்பட்டது. தன் அறியாமையை மறைத்துக் கொண்டு அவர்களிடம் உரையாடினான் ஓட்டுநன். கடைசியாக ஒரு பெரிய சோதனை வந்தது. அவனிடம் ஒரு மிகவும் சிக்கலான கேள்வி கேட்கப்பட்டது. மாட்டிக் கொண்டான் என்று நினைத்தார் ஓட்டுநர் உடையில் இருந்த பிரசாரகர்.

அவன் கம்பீரமாக முழங்கினான்.

“நல்ல மேதைகளய்யா நீங்கள்! ஏதோ சிக்கலான கேள்வியைக் கேட்கப் போகிறீர்கள் என்று நினைத்தால் இவ்வளவு சாதாரணமாகக் கேள்வி கேட்டு என்னை அவமானப்படுத்திவிட்டீர்களே இதற்கு நான் பதில் சொன்னால் அது அதைவிட அவமானமாக இருக்கும். என் கார் டிரைவரே இதற்குச் சரியான பதிலைச் சொல்வான்.

ஓட்டுநர் வடிவில் இருந்த பிரசாரகரை அழைத்தான் அவன்.

“இவர்கள் மண்டையில் நன்றாக உரைக்கும்படியாக இதனை விளக்கிச் சொல், பார்ப்போம்.”

தயவு செய்து முரண்பாடுகளைப் பற்றிய கேள்விகளை எழுப்பாதீர்கள். அன்று சொன்னது அன்றோடு முடிந்துவிட்டது. நான் பின்னால் திரும்பிப் பார்ப்பதில்லை. நான் எப்போதும் முன்னால் பார்த்து முன்னேறிக் கொண்டிருக்கிறேன்.

அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். இப்போது நான் சொல்வதெல்லாம் உண்மைதான். நிகழ்காலம் மட்டுமே உண்மை. கடந்தகாலம் செத்துவிட்டது. கடந்தகாலத்தில் சொன்னதெல்லாம் செத்துவிட்டன.

அடுத்த கணம் உண்மைக்கு வேறு ஒரு புது வடிவம் கிடைக்கலாம். இந்த விநாடியை இங்கேயே விட்டுவிடுங்கள். இதைச் சுமந்து கொண்டு செல்லாதீர்கள்.

இதுதான் நான் கற்றுக்கொடுக்கும் ஒரே பாடம். கடந்த காலத்தைச் சுமந்து கொண்டு திரியாதீர்கள். நிகழ்காலத்திற்கு உண்மையாக இருங்கள். அப்படிச் செய்தால் முரண்பாடுகள் எதுவும் இருக்காது.

நீங்கள் காரண-காரியத்தில் திளைத்திருப்பதால்தான் என்னுள் முரண்பாடுகளைப் பார்க்கிறீர்கள். நான் முன் பின் முரணானவன்.

முரண்பாடுகளே என் அளவை. பகுத்தறிவின்மையே என் அறிவு.

ஆமாம் எனக்கு மூன்று முகங்கள் இருப்பது உண்மைதான். ஆனால் இந்த ரகசியத்தை யாரிடமும் சொல்லாதீர்கள்.

இன்று இவ்வளவு போதும்.

அன்பும் துறவும் இணையும் போது.. ..

என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்திவிட்டேன்.

என் இதயம் இப்போது ஜொலிக்கிறது.

அதாக இருக்கும் தன்மையில் அதனையும் தாண்டிப் பார்த்துவிட்டேன்

சங்கத்தில் நான் என் தோழனையே பார்த்துவிட்டேன்.

அடிமைத்தளையோடு வாழும் போதே என்னை நான் விடுவித்துக் கொண்டேன்

குறுகிய மனப்பான்மையின் பிடியிலிருந்து தப்பிவிட்டேன்.

கபீர் சொல்கிறான்: அடைய முடியாததை அடைந்துவிட்டேன்

அன்பின் வண்ணம் என் இதயத்தில்!

நீ எதைப் பார்க்கிறாயோ அது இல்லை

எது இருக்கிறதோ அதை விளக்க வார்த்தைகள் இல்லை

நீ பார்த்தாலொழிய நம்பாதே

உன்னிடம் சொல்லப்பட்டதை உன்னால் ஏற்க முடியாது

ஞானி சொல்லாலேயே அதனைத் தெரிந்து கொள்கிறான்

அறிவிலி திணறிக் கொண்டிருக்கிறான்

சிலர் அருவத்தைத் தியானம் செய்கிறார்கள்

சிலர் உருவங்களை

*ஆனால் ஞானிக்குத் தெரியும்*

*பிரம்மம் இரண்டிற்கும் அப்பாற்பட்டது என்று*

*அதன் அழகு கண்ணால் பார்க்கும் அழகல்ல*

*அதன் சந்தம் காதால் கேட்கக்கூடியது அல்ல*

*கபீர் சொல்கிறான்: அன்பு, துறவு என்ற இரண்டையும் உணர்ந்தவன்*

*எந்நாளும் இறப்பதில்லை*

அது ஓர் அழகான காலைப் பொழுது. சூரியன் அப்போதுதான் உதயமாகிக் கொண்டிருந்தான். அவனுடைய இளங்கதிர்கள் பாதாம் இலைகளில் கண்ணா மூச்சி விளையாடிக் கொண்டிருந்தன. ஓர் ஆந்தை அந்த பாதாம் மரத்தில் வந்து அமர்வதைப் பார்த்தேன். ஆந்தை சொன்னது: "இருட்டாகிவிட்டது. விடியும் வரை தங்கியிருக்க இது நல்ல இடமா?"

ஆந்தை சொன்னதை ஒரு முயல் கேட்டது. அது சொன்னது. "ஐயா, இப்போதுதான் விடிந்திருக்கிறது. சூரியன் உதயமாகிக் கொண்டிருக்கிறது. நீங்கள் தலைகீழாகச் சொல்கிறீர்களே!"

ஆந்தையின் புரிந்துணர்வு வித்தியாசமானது. அதற்கு இரவு தான் பகல். பகல்தான் இரவு. நாள் விடியத் தொடங்கியதும் தன் வேலை முடிந்தது என்று தூங்கச் சென்றுவிடும். இரவில்தான் அதற்கு விடியல்.

ஆந்தைக்கும் முயலுக்கும் உள்ள இடைவெளிதான் ஞானிக்கும் சம்சாரிக்கும் இருக்கிறது. ஞானியின் விடியல் உங்கள் இரவு. உங்கள் மொத்த வாழ்க்கையும் ஞானியின் இருண்ட இரவு. அதனால்தான் இந்தக் குழப்பம் எல்லாம் வருகிறது.

நாம் ஞானிகளைச் சரியாகப் புரிந்து கொண்டதேயில்லை. அவர்கள் ஒன்று சொல்கிறார்கள். நாம் வேறொன்று புரிந்து கொள்கிறோம். ஞானியைத் தவறாகப் புரிந்து கொள்வதே

நம் வாழ்க்கையாகிவிட்டது. ஞானிகளைச் சரியாகப் புரிந்து கொண்டால் நாம் எங்கேயோ ஓர் அற்புத நிலைக்குப் போய்விடுவோம். அந்த அற்புதம் நிகழும் போது ஞானியின் ஞானம் சம்சாரிக்குப் பாய்கிறது. சம்சாரியும் ஞானியாகிறான்.

ஆற்றில் நீந்திக் கொண்டிருந்த ஒரு மீனைக் கரையில் தூக்கிப் போட்டது ஒரு குரங்கு.

"பாவம் நீ! தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்தாய். நல்ல வேளை கடைசி நேரத்தில் நான் உன்னைப் பார்த்ததால் காப்பாற்ற முடிந்தது." என்று துடிதுடித்துச் செத்துக் கொண்டிருந்த மீனிடம் வீர வசனம் பேசியது குரங்கு.

குரங்கு கருணையுடன் இருக்கப் பிரயாசைப்படுகிறது. மீனைக் காப்பாற்ற முயல்கிறது. தன் கருணையால் அது நிச்சயம் மீனைக் கொல்லத்தான் போகிறது. இதில் இருக்கும் ஆழமான கருத்தை உணர வேண்டும். அந்த உணர்வுதான் நமக்குத் திருப்புமுனை.

கபீர் ஒரு ஞானி. மகா ஞானி. முதலில் அவர் என்ன சொல்ல வருகிறார் என்பதே தெரியவில்லை. அவர் சொற்கள் புக முடியாத நிலையை அனுபவித்து உணர்ந்தவர். மௌனமே சாசுவதமாக இருக்கும் நிலையை அனுபவத்தால் உணர்ந்தவர். பிரம்மத்தை அறிந்து கொண்டு அதை நேரில் பார்த்து அனுபவித்தவர். அந்த நொடியில் அவர் மனம் காணாமல் போய்விடுகிறது.

அதன்பின் அதை நமக்குச் சொல்ல முயற்சிக்கிறார். ஆனால் அதற்கு அவர் மனம் அவரிடம் திரும்ப வர வேண்டும். அதைச் சொல்லும் வேலையில் மனதிற்கு முக்கியமான பங்கு இருக்கிறது. மனம் அந்த அனுபவத்தைச் சொல்ல முயற்சிக்கிறது. ஆனால் அந்த முயற்சியே அந்த வர்ணனையைத் திரித்து விடுகிறது.

இப்போது மௌனம் மனதினுள் நுழைய வேண்டும். மௌனம் தனக்கு நேர் எதிர் துருவமான ஒன்றிற்குள் நுழைய வேண்டும். வார்த்தைகளைத் தாண்டி நிற்கும் ஒன்று

வார்த்தைகளுக்குள் முடங்க வேண்டும். வரையறைக்கு அப்பாற் பட்ட ஒன்றை வரையறுத்துச் சொல்ல வேண்டும். புதிரான ஒன்றை விளக்கமாகச் சொல்ல வேண்டும். இந்தக் கூத்தில் ஏறக்குறைய எல்லாமே போய்விடுகிறது. உண்மையின் ஒரு சிறு துளி மட்டுமே பாக்கியிருக்கிறது. உண்மையின் ஒரு சிறிய சலனம் மட்டுமே மிஞ்சி நிற்கிறது. தன் அனுபவமாக இருந்தபோது மகா சமுத்திரத்தின் பேரலையாக இருந்த அந்த நிலை வார்த்தையில் முடங்கும் போது நீரில் ஏற்படும் சிறு சலனமாக மாறிவிட்டது.

இருந்த போதிலும் ஞானி அதைச் சொல்ல வேண்டும். தன் ஞானத்தை அடுத்தவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். இந்தப் பகிர்ந்தளித்தலும் அந்த அனுபவத்தின் ஒரு பகுதியே. ஒரு மலர் மலர்ந்தவுடன் தன் வாசத்தைப் பரப்புவதைப் போன்ற செயல் அது. மலர் தன் வாசத்தைப் பரப்பியே ஆக வேண்டும். ஞானி தன் ஞானத்தை அடுத்தவர்களுக்குக் கொடுத்தேயாக வேண்டும். அப்படிக் கொடுக்காமல் இருக்க முடியாது.

இருட்டில் தத்தளித்துக் கொண்டிருக்கும் மனித இனத்திற்கு அந்த ஞானி ஆற்ற வேண்டிய கடமை அது. ஒரு ஞானியால் தன்னிடம் இருக்கும் மொத்த ஒளியையும் மக்களுக்குத் தர முடியாது. அதன் ஒரு சிறு பிரதிபலிப்பை மட்டுமே தர முடியும். அதுவே பலருக்கு உதவியாக இருக்கக்கூடும். அதன் உருச்சிதைந்த ஒரு வடிவம் கூடப் பலருடைய தேடலில் உதவி செய்யக்கூடும்.

மெய்ப்பொருளைத் தேட வேண்டும் என்ற தாகத்தை அது பலருக்குக் கொடுக்கக் கூடும். அதனால் அந்த ஞானி அதைச் சொல்லியே ஆக வேண்டும். ஆனால் அதைச் சொல்லும்போதெல்லாம் ஞானி அழுதுவிடுவான். ஏனென்றால் அந்த அனுபவம் என்ன என்று அவன் உணர்ந்து பார்த்திருக்கிறான்.

அது தன் வார்த்தைகளில் வெளிவரும் போது எப்படி உருச்சிதைந்து போகிறது என்பதையும் அவன் அறிவான்.

அவனுடைய அனுபவத்தில் 99 சதவிகிதம் தொலைந்து போய்விட்டது. ஞானி சொன்ன வார்த்தைகளை நீங்கள் உங்கள் அனுபவங்களுக்கு ஏற்றவாறு புரிந்து கொள்கிறீர்கள்.

கவனமாகக் கேளுங்கள். முதலில் இருப்பது ஞானியின் அனுபவம். அதை ஞானி தன் மனதிற்குத் தகுந்தபடி வார்த்தைகளில் வடிப்பான். அது ஞானியின் மனம்தான். என்றாலும் அந்த மனதை இந்தச் சமுதாயம்தானே அவனுக்குக் கொடுத்தது. அந்த மனம் சமுதாயத்தால் வரையறுக்கப்பட்டது. மக்களுடன் வாழ்ந்ததால் ஏற்பட்ட அனுபவங்களின் கூட்டே அந்த மனம்.

இப்போது ஞானி அந்த பிரம்மானுபவத்தை மொழிபெயர்க்க வேண்டும். அனுபவம் என்ற மொழியிலிருந்து வார்த்தையாலான ஒரு மொழிக்கு மொழிபெயர்க்க வேண்டும்.

தனிமையின் சிகரத்தில் அனுபவத்தின் சிலிர்ப்பில் உணர்ந்த அந்தப் பேருண்மையை மக்கள் புரிந்து கொள்ளும் ஒரு மொழியில் சொல்ல வேண்டும். இந்தச் சிக்கலான வேலை.யில் அந்தப் பேருண்மையின் பெரும்பகுதி தொலைந்து போய்விடுகிறது.

அந்த சமயத்தில்தான் நீங்கள் வார்த்தைகளைக் கேட்கிறீர்கள். வார்த்தைகளற்ற ஒரு நிலையை உள்வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக சாரமற்ற வார்த்தைகளைக் கேட்கிறீர்கள். சாரம் தொலைந்துவிட்டது. நீங்கள் கேட்ட வார்த்தைகளை உங்கள் அனுபவங்களுக்குத் . தக்கவாறு புரிந்து கொள்கிறீர்கள். அசல் அனுபவத்திலிருந்து ஆயிரம் மைல்கள் தள்ளி வந்துவிட்டீர்கள்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

ஸோசான் என்ற பெரிய ஜென் துறவியிடம் புத்தரின் உச்ச கட்ட போதனை என்ன என்று கேட்டார்கள்.

"அது உங்களுக்குச் சொந்தமாகும் வரை புரியாது." என்று சொன்னார் அவர்.

சரி, அந்த "அதைப்" (ஒரு பேச்சுக்கு மெய்ப்பொருள் என்று வைத்துக் கொள்வோமே) புரிந்து கொள்வதால் என்ன

பயன்? அது உங்களுக்குச் சொந்தமாக இருந்தால் அதைப் புரிந்து கொள்ளத் தேவையில்லை.

அது உங்களிடம் இல்லையென்றால் அதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. ஆனால் புரிந்து கொள்ள வேண்டும் என்ற தாகம் மட்டும் இருக்கும். இதுதான் முக்கியமான முரண்பாடு. அது உங்களிடம் இருந்தால் மட்டுமே அதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். அதற்கு முன்னால் அதைப் புரிந்து கொள்ள முடியாது. உங்கள் சொந்த அனுபவம்தான் அதற்கு விளக்கம் கொடுக்க முடியும்.

அதற்கு மாற்றுப் பொருள் எதுவும் இல்லை. அதற்கான தேவையும் இல்லை. உங்களிடம் அது இருந்தால் போதுமானது. அப்போது அதைப் புரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையும் இல்லை. அது நிகழ்ந்துவிட்டது. அது உங்களுக்குத் தெரியும். அது நீங்களாகவே மாறிவிட்டது.

நீங்கள் ஒரு வாழைப்பழத்தை உண்கிறீர்கள். நீங்கள் வாழைப்பழமாக மாறவில்லை. வாழைப்பழம் நீங்களாக மாறிவிட்டது. கடவுளைத் தெரிந்து கொள்ளும்போதும் இதேதான் நடக்கிறது. கடவுள் நீங்களாகவே மாறிவிடுகிறார். நீங்கள் மெய்பொருளைத் தெரிந்து கொள்ளும்போது மெய்ப்பொருள் நீங்களாகவே மாறிவிடுகிறது. அதை ஜீரணிக்கும் போது அந்த உண்மைப்பொருள் உங்கள் ரத்தமாக ஓடுகிறது உங்கள் எலும்புகளாக உருக்கொள்கிறது. உங்கள் மஜ்ஜையாக மாறுகிறது. உங்கள் இருப்புநிலையாகவே மாறிவிடுகிறது.

அதைப் புரிந்து கொள்ளத் தேவையில்லை. அதைப் புரிந்து கொள்ள யார் இருக்கிறார்கள்? யாரும் மிச்சம் இல்லையே! நீங்கள்தான் அதுவாகவே மாறிவிட்டீர்களே. உங்கள் புரிந்துணர்வே அதுவாக மாறிவிட்டது. நமக்குப் புரியாததால்தான் அந்தத் தேவை இருக்கிறது. அதனால்தான் நாம் விளக்கங்களைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறோம். ஆனால் எந்த விளக்கமும் நமக்குப் புரிந்துணர்வைத் தராது.

இதுதான் சமய உணர்வின் உச்சகட்ட முரண்பாடு. மெய்ப்பொருளை உணர்ந்தவர்கள் அதைப் புரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அந்த உணர்தலே அவர்களுக்கு மகத்தான நிறைவைக் கொடுத்துவிடுகிறது. அவர்களுக்கு அது போதும். அவர்கள் ஆடலாம் பாடலாம் சிரிக்கலாம். அதை விளக்கும் முயற்சிகளில் அவர்கள் ஒருநாளும் இறங்க மாட்டார்கள். அவர்கள் அதாகவே வாழ்ந்து கொண்டிருக் கிறார்களே! அதைப் பற்றிப் பேச மாட்டார்கள். அவர்கள் மௌனமாக அமர்ந்திருப்பார்கள். இல்லை பரவசத்தில் ஆனந்தக்கூத்து ஆடிக் கொண்டிருப்பார்கள். ஆனால் விளக்கம் சொல்வதைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள்.

அதனால்தான் உலகின் மிகச் சிறந்த புனித நூல்கள் அனைத்திலும் வெறு வாக்கியங்கள் மட்டுமே இருக்கின்றன. எந்த விளக்கமும் இல்லை. உபநிஷத்துக்கள், புத்தமதத்தின் தாவோ ஏசுபிரானின் மொழிகள், புத்தரின் தம்மபாதா - இவை அனைத்திற்கும் இது பொருந்தும்.

உபநிஷத்துகள் இறைவன் இருப்பதை நிரூபிக்கவில்லை. இறைவன் இருக்கிறான் என்று இடிமுழக்கம் செய்கின்றன. இறைவன் இருக்கிறான் என்று ஓர் உறுமலுடன் சொல்கின்றன. அதை வாதமாக உங்கள் முன் வைக்கவில்லை. ஒரு தேற்றமாகவோ புனைவுகோளாகவோ அதைக் கூறவில்லை. அதை ஒரு தீர்மானமாக அறிவிக்கின்றன. அந்தத் தீர்மானத்திற்கு அவை ஏன் வந்தன என்பதற்கான சான்றுகளைக் கொடுக்க வில்லை. அவை சொல்வதெல்லாம் இதுதான். 'இறைவன் இருக்கிறான். அது அப்படித்தான். இதை ஏற்றுக் கொள்வதும் கொள்ளாததும் உன் இஷ்டம். ஆனால் அது அப்படித்தான்." அதற்கு நிரூபணம் தேவையில்லை. அதுதான் நிரூபணம்.

ஆன்மாவின் இருண்ட இரவில் தட்டித் தடுமாறி வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கு விளக்கங்கள் தேவைப்படுகின்றன. அந்த விளக்கங்கள் உண்மையிலிருந்து வெகு தூரத்தில் இருக்கின்றன. அந்தத் தூரத்தில் அந்த விளக்கங்கள் ஏறக் குறையப் பொய்களே. என்றாலும் அவை தேவைப்படுகின்றன.

சில ஞானிகள் பேசுகிறார்கள். அவர்கள் பேசியே ஆக வேண்டும். உள்ளிருக்கும் இருப்பை வெளியே கொட்ட வேண்டும். சிலராவது அதில் பயன் பெறலாம் அல்லவா?

வெகு சிலருக்கே ஞானியின் வார்த்தைகள் பயன்படும். நம்பிக்கை உள்ளவர்களுக்கு மட்டுமே அவை பயன்படும். இல்லாவிட்டால் அவற்றால் எந்தப் பயனும் இல்லை. நீங்கள் வாதம் செய்தால் அதை இழந்து விடுவீர்கள். ஏனென்றால் ஒரு ஞானியால் உங்களுக்கு எதிராக வாதம் செய்ய முடியாது. அவரால் உங்களுக்குப் புரியவைக்க முடியாது. அந்த வகையில் ஒரு ஞானி வலுவில்லாதவர். தர்க்கத்தில் வெல்லும் அளவிற்கு அவரிடம் வலிமை இருக்காது. அவரால் வாதம் செய்து தன் கருத்தை நிலைநாட்ட முடியாது.

நீங்கள் அவரை நெருங்கி வரலாம். அவரது நிலையை உணரலாம், அவர் கண்களை உற்றுப் பார்க்கலாம். அவர் கைகளைப் பற்றிக் கொள்ளலாம். அவரை நேசிக்கலாம். அந்தப் பைத்தியக்காரரை நம்பி அவருடன் பயணிக்கலாம். ஆழமான நம்பிக்கையில் விளைந்த தீரச் செயலாக அது இருக்கும்.

ஆனால் எள்ளளவு சந்தேகம் வந்துவிட்டாலும் போதும் ஞானிக்கும் உங்களுக்கும் இடையே இருக்கும் தொடர்பு அறுந்துவிடும். சந்தேகம் வந்துவிட்டால் உங்களிடையே பாலம் உருவாகும் வாய்ப்பே இல்லாமல் போய்விடும். நீங்கள் ஞானியைக் கண்மூடித்தனமாக நம்ப வேண்டும்.

நீங்கள் ஞானியின் வார்த்தைகளை நம்பினால் அவர் உங்களுக்குள் ஒரு சலனத்தை ஏற்படுத்தும் வாய்ப்பு இருக்கிறது. சந்தேகம் இருந்தால் அந்தச் சலனம் கூட உண்டாகாது. கபீர், ஏகநாதர் கிருஷ்ண பரமாத்மா - போன்ற ஞானிகளின் வார்த்தைகளை ஒரு குறிப்பிட்ட முறையில் கவனிக்க வேண்டும். அது சாதாரணக் கவனம் இல்லை. அந்த கவனம் அன்பிலும் காதலிலும் தோய்ந்து இருக்க வேண்டும்.

அந்த அன்பும் காதலும் எந்த அளவு இருக்க வேண்டும்? நீங்கள் அவர்களிலிருந்து தனித்து நிற்கவில்லை. அவர்களாகவே

இருக்கிறீர்கள் என்னும் அளவிற்கு அன்பு வேண்டும். உங்கள் உடலெல்லாம் காதாக இருக்க வேண்டும். நீங்கள் பெண்ணாக மாறி வருவதை எதிர்ப்பு இல்லாமல் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவர்கள் எல்லாம் நல்ல நீர்நிலைகள். அவர்களை நீங்கள் குடிக்க வேண்டும்.

உங்கள் மனதில் வேறு எண்ணங்கள் இருக்கக்கூடாது. அவர்கள் பேசுவதை மொழி பெயர்க்க முயற்சிக்கக் கூடாது. அதை மொழிபெயர்க்கும் அவசரத்தில் அதைப் புரிந்து கொள்ளும் பதைபதைப்பில் இருக்கக் கூடாது. அது சரியா தவறா என்று சிந்தனை செய்யாமல் இசையைக் கேட்பது போல் அந்தக் கவனத்துடன் கேட்க வேண்டும்.

சிதார் மேதை ரவிசங்கரின் இசையில் மயங்கி இருக்கும் போது அவர் வாசிப்பது சரியா தவறா என்று நீங்கள் யோசிப்பதில்லை. இங்கே சரி என்ன தவறு என்ன? இசை இசைதான். தரமான இசை தரம் குறைந்த இசை என்று இருப்பது உண்மைதான். சரியான இசை தவறான இசை என்று எதுவும் கிடையாது.

நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. நீங்கள் கவனிக்கிறீர்கள். இசைக்கு மொழியில்லை என்பதால் உங்களால் அதை மொழிபெயர்க்க முடியாது. நீங்கள் இசையின் சன்னிதியில் இருக்கிறீர்கள். உங்களை இசை நாலாபக்கமும் சூழ்ந்து கொண்டிருக்கிறது. இசை உங்களை ஆட்கொண்டுவிட்டது.

உங்களைத் தூக்கிக்கொண்டு நெடுந்தூரம் போய்விட்டது. அந்த இசை சரியா தவறா என்று நீங்கள் விவாதிப்பதில்லை. அது காரண-காரிய அறிவிற்கு உகந்ததா இல்லையா என்று நீங்கள் சிந்திப்பதில்லை. நீங்கள் இசையைக் கவனித்துக் கேட்கிறீர்கள். உங்கள் இதயத்தால் அதை உணருகிறீர்கள். அவ்வளவுதான்.

இசையைக் கவனிப்பதைப் போல் ஒரு ஞானியைக் கவனிக்க வேண்டும். ஆம் ஞானியின் வார்த்தைகளும் ஒரு வகையில் இசைதான். ஒரு தேர்ந்த இசைக்கலைஞன் உருவாக்கும்

தேர்ந்த இசையைவிட ஆழமானது ஒரு ஞானியின் வார்த்தைகள். அதை நீங்கள் மொழிபெயர்க்க முற்பட்டால் உங்களுக்கு விமோசனமே இல்லை.

கபீரின் சூத்திரங்களை தாகூர் மிக அழகாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். என்றாலும் இந்த மொழிபெயர்ப்புகூட உண்மையில்லை. கபீரின் வார்த்தைகள் ஹிந்தியில் இருக்கின்றன. அதை பெங்காலி மொழியில் மொழி பெயர்த்தார்கள். அதன் பின் தாகூர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

முதலில் உருவான ஒலியின் பலவீனமான எதிரொலிதான் இந்த மொழிபெயர்ப்பு.

உதாரணமாக

*என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்திவிட்டேன்.*

*என் இதயம் இப்போது ஜொலிக்கிறது.*

*அதாக இருக்கும் தன்மையில் அதனையும் தாண்டிப் பார்த்துவிட்டேன்*

*சங்கத்தில் நான் என் தோழனையே பார்த்துவிட்டேன்.*

என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்திவிட்டேன். என்ற வார்த்தைகளின் மூலத்திற்கு இன்னும் ஆழமான அழுத்தமான சுவை இருக்கிறது. இதை மூலத்திலிருந்து நான் மொழி பெயர்த்தால் எப்படி இருக்கும் தெரியுமா?

“என் அன்பிற்குரிய இறைவனே, நீ சாதித்துவிட்டாயே! அலைபாயும் என் மனதை நீ அமைதிப்படுத்திவிட்டாயே!”

அதுதான் அதன் பொருள்.

“என் மனம் சதா அலைபாய்ந்து கொண்டேயிருந்தது;. அதனை நகராமல் செய்துவிட்டாயே, ஆண்டவனே! என்னே உன் கருணை” இது கபீரின் மூலத்திற்கு இன்னும் அருகில் இருக்கும்.

கபீருக்குத் திகைப்பு. “ என் இனிய பிரபுவே! என்ன காரியம் செய்துவிட்டாய்! நானும் மனதை அடக்க வேண்டும்

என்று எத்தனை யுகங்கள் முயன்று கொண்டிருக்கிறேன்! என்னால் முடியவில்லையே. நீ எளிதாக அதைச் சாதித்து விட்டாயே என்னால் அதை நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை.

என்னால் மனதில் எழும் ஓர் எண்ணத்தைக் கூட உதற முடியவில்லை. ஆனால் இப்போது மொத்த எண்ணங்களும் போய்விட்டனவே. மனம் முழுவதுமாக நழுவிவிட்டதே! இப்போது என் மனதைக் காணவில்லையே. அது எங்கே போயிற்று என்பதே தெரியவில்லையே.

மனதின் அதிர்வுகள், தொடர்ச்சியாக மனதில் எழுந்த எண்ண அலைகள், எண்ணங்களில் முடிவில்லாத ஊர்வலங்கள் எல்லாமே மறைந்துவிட்டனவே! கடைசியில் நீ சாதித்துவிட்டாய் இறைவா!

தாகூர் இதனை "என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்தி விட்டேன்." என்று மொழிபெயர்த்துவிட்டார். அவர் இதன் மையக்கருத்தையே விட்டுவிட்டார். அவர் என்ன சொல்கிறார்? "என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்திவிட்டேன்."

கபீர் அதைச் சொல்லவில்லை. கபீரின் வாக்கியத்தை இப்படியும் மொழிபெயர்க்கலாம். மொழியியல் ரீதியாக தாகூர் செய்தது தவறு என்று நான் சொல்லவில்லை. ஞானரீதியாக அது தவறு.

கபீரின் மூல நூலை ஊன்றிப் படித்தால் யார் அவர் மனதை அமைதிப்படுத்தியது என்று அவர் சொல்லவேயில்லை என்பதை உணரலாம். நானா நீயா என்ற கேள்விக்கு அவர் பதில் சொல்லவேயில்லை.

நான் என் மனதை அடக்கிவிட்டேன் என்று மொழி பெயர்க்கலாம். தப்பில்லை: ஆனால் அது நடக்காத காரியம். ஏன் என்றால் அதில் வரும் "நான்"தானே மனம். நானே என்னை அடக்க முடியாது. உங்கள் காலணியில் (shoe) இருக்கும் கயிறைப் பிடித்துக் கொண்டு உங்களை நீங்களே தூக்கிக்கொள்ள முடியுமா? கற்பனையே அபத்தமாக இருக்கிறதே!

அந்த முயற்சியில் நீங்கள் நிச்சயம் தோற்பீர்கள். கடவுள்தான் உங்கள் மனதை அமைதிப்படுத்த முடியும்.

கடவுள் மட்டும்தான் உங்கள் மனதை அமைதிப்படுத்த முடியும். அது ஒரு பரிசு. இறைவனின் அருள். அது உங்கள் முயற்சியால் வருவதன்று. நீங்கள் என்ன முயற்சி செய்தாலும் என்ன பிரயாசைப்பட்டாலும் அதில் "நீங்கள்" இருப்பீர்களே. உங்கள் செயலால் உங்களைக் கரைத்துக் கொள்ள முடியாது. உங்கள் செயல் உங்களை இன்னும் வலுவாக்கும். உங்கள் முயற்சிதான் உங்கள் அகந்தையின் உணவு. உங்கள் அகந்தை நன்றாகத் தின்று தின்று கொழுத்திருக்கும்.

நீங்களே எப்படி உங்கள் மனதை அமைதிப்படுத்த முடியும்? அது சரி, மனதை அமைதிப்படுத்துபவர் யார்? அதுவும் மனம்தானே? ஒரு நாய் தன் வாலையே துரத்திப் பிடிக்க முயற்சி செய்வது போன்றது அந்தச் செய்கை.

அதனால்தான் சொல்கிறேன் தாகூர் சொல்வது மொழியியல் ரீதியாகச் சரி; ஆனால் ஞானரீதியாகத் தவறு. எனக்கு அவ்வளவாக மொழியோ மொழியியலோ தெரியாது. ஆனால் ஞானம் என்றால் என்னவென்று எனக்குத் தெரியும்.

ஞானத்தைப் பற்றியும் எனக்கு வெளியுலகச் செய்திகள் அவ்வளவாகத் தெரியாது. அது தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை. ஞானம் என் சொந்த அனுபவம்.

அடுத்தவர் சொல்லி வரும் அறிவு வெறும் தகவல் மட்டுமே. உள்ளுணர்வில் மலரும் அறிவே உண்மையான அறிதலுக்கு வழிவகுக்கும். நான் ஞானி. கவிஞன் இல்லை. ரபீந்த்ரநாத் தாகூர் மகத்தான கவிஞர். மொழிபெயர்ப்பு கவித்துவமாக இருக்க வேண்டும் என்று மிகவும் சிரமப்பட்டிருக்கிறார்.

ஆனால் மிக முக்கியமான விஷயத்தை அவர் தவற விட்டுவிட்டார்.

நான் என் மொழிபெயர்ப்பை மீண்டும் சொல்கிறேன்.

"கடவுளே! என்ன ஆச்சரியம்! என்னால்; நம்பவே முடியவில்லை! சத்தமில்லாமல் ஓர் அற்புதத்தை நிகழ்த்திவிட்டாயே! இப்படி எல்லாம் நடக்கும் என்று நான் கனவிலும் நினைத்ததில்லை. கடைசியில் நீ நிகழ்த்திக் காட்டிவிட்டாயே! நான் திகைத்துப் போயிருக்கிறேன். இன்னும் என்னால் நம்பமுடியவில்லை அப்பனே! என் மனதை அமைதிப்படுத்தி விட்டாயே! உன் அருளே அருள்! அதை விளக்க வார்த்தைகளும் உளதோ!"

கபீர் நன்றி உள்ளவர். இது அவருடைய நன்றி உணர்வைத் தெரிவிக்கும் பாடல். கபீருக்குத் தன் முயற்சியில், எப்போதும் நம்பிக்கை இருந்ததில்லை. கடவுளை அடைய வேண்டு மென்றால் மனிதன் ஏதாவது செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டில் அவருக்குக் கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லை.

மனிதனால் என்ன செய்ய முடியும்? மனிதனின் கைகள் சிறியவை. அவற்றைக் கொண்டு பெரிய விஷயங்களைப் பிடிக்க முடியாது. அந்தச் சிறிய கைகளால் நமக்கு எட்டுவதுதான் எட்டும். மனித எட்டுதலில் கடவுளை எப்படிப் பிடிக்க முடியும்?

அது நம்மால் முடியாத காரியம். கடவுள்தான் அவருடைய பெரிய கைகளால் நம்மை எட்டிப் பிடிக்க வேண்டும். அப்படிப் பிடிக்கும் போது நாம் கடவுள் கைகளில் கிடைக்குமாறு பார்த்துக் கொள்ளலாம். நாம் இறைவனின் சன்னிதியில் தலை வணங்கலாம். அவனிடம் சரண் புகலாம். அவ்வளவுதான் நம்மால் செய்ய முடியும்.

கடவுள் மனித முயற்சியை நம்பவில்லை. முயற்சி யின்மையைத்தான் நம்புகிறார். அதனால்தான் அவர் இறைநிலையை ஸஹஜ சமாதி என்று பெயரிட்டு அழைக்கிறார். இயல்பாகவே கிட்டும் சமாதி நிலை. தானாகவே உண்டாகும் பேருவகை. கபீர் காதல் வயப்பட்டவர். அவருடைய பாதை காதலின் பாதை. காதலுக்கு முயற்சி என்றால் என்ன என்றே தெரியாது.

நீங்களும் உங்கள் வாழ்க்கையில் கவனித்திருக்கலாம். அன்பு குறித்து உங்களால் ஏதாவது முயற்சிகள் எடுக்க முடியுமா?

"போய் அந்த மனிதனிடம் அன்பைக் காண்பியுங்கள்" என்று நான் சொன்னால் என்ன செய்வீர்கள்?

"என்ன அபத்தமாகப் பேசுகிறீர்கள்? திடுதிப்பென்று ஒரு மனிதனிடம் அன்பைக் காட்டு என்றால் எப்படி முடியும்?" என்று என்னைக் கேட்பீர்களா இல்லையா?

இன்னாரிடம் அன்பாக இரு என்று யாருக்கும் யாரும் கட்டளை இட முடியாது. அன்பு தானாகவே நிகழ்ந்தால்தான் உண்டு. அப்படி நிகழாவிட்டால் யாரும் எதுவும் செய்ய முடியாது. மரச்சாமான்கள் செய்வது போல் ஆர்டர் கொடுத்து அன்பு செய்ய முடியாது.

இதுதான் இன்றைய உலகத்தின் அவலங்களில் மிகவும் மோசமானது. நாம் எல்லாரும் மேலிடத்து உத்தரவின் பெயரில் அன்பு காண்பிக்கக் கற்றுக் கொண்டு விட்டோம். ஆனால் அது போலியான அன்பு.

ஒரு தாய் தன் குழந்தையிடம் சொல்கிறாள்: "என்னிடம் நீ அன்பாக இருக்க வேண்டும். ஏனென்றால் நான் உன் அம்மா."

குழந்தைக்குப் பாவம் ஒரு வழியும் தெரியவில்லை. அது தன்னுடைய தேவைகளுக்காகத் தன் தாயைச் சார்ந்திருக் கிறது. வற்புறுத்தலின் பெயரில் தன் தாயிடம் அன்பு காண்பிக்க அதனால் முடியவில்லை.

அதனால் அது ஓர் அரசியல்வாதியாக மாறுகிறது. அந்தக் குழந்தை பாசாங்கு செய்யத் தொடங்குகிறது. "ஆமாம் அம்மா உன்னை நான் நேசிக்கிறேன்" என்று வாயளவில் சொல்கிறது. அம்மாவைப் பார்த்துப் புன்னகை செய்கிறது.

குழந்தைகளின் மனதில் நாம்தான் ஊழலின் விதைகளை விதைக்கிறோம். குழந்தைகளை அரசியல்வாதிகளாக்குகிறோம்.

குழந்தை அந்த வார்த்தைகளை உணர்ந்து சொல்லவில்லை. ஆனால் பாவம் அது சொல்லவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது.

தாய் சொல்கிறாள் "நான் உன் அம்மா. நீ என்னை நேசித்தேயாக வேண்டும்."

அம்மாவாகவே இருந்தாலும் திடீரென்று ஒருவரை எப்படி நேசிக்க முடியும்? சரி அப்படியே நேசிக்க வேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும்?

நீங்கள் நடிக்கலாம், பாசாங்கு செய்யலாம், நேச விளையாட்டு விளையாடலாம். ஆனால் அவை யாவும் உண்மையான நேசமாகாது.

தாய் உள்ளே வந்ததும் குழந்தை புன்னகை சிந்துகிறது. ஆனால் அந்தப் புன்னகை உதட்டளவில் மட்டுமே. குழந்தையின் இதயம் அந்தப் புன்னகையில் பங்கேற்கவில்லை.. இதயத்தைப் புன்னகைக்கச் சொல்லி உங்களால் வற்புறுத்த முடியாது. உங்கள் அதிகாரம் எல்லாம் உதட்டளவில் மட்டுமே.

குழந்தை தன் தாயை ஒரு போலியான நேசத்துடன் பார்க்கிறது. மீண்டும் மீண்டும் அம்மாவைப் பார்த்து "நான் உன்னை நேசிக்கிறேன்." என்று போலியாகச் சொல்கிறது.

ஒரு குழந்தை தன் தாயை மட்டுமல்லாமல் தன் தந்தையை தன் சகோதர சகோதரிகளை நேசிக்க வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிறது. உள்ளபடியே ஒரு குழந்தை தன் உடன் பிறந்தவர்களை வெறுக்கிறது. அவர்களைப் பங்காளிகளாக சக போட்டியாளர்களாகத்தான் பார்க்கிறது. ஒவ்வொரு குழந்தையும் தனிக்குழந்தையாக இருப்பதையே விரும்புகிறது. தன் உடன்பிறப்புக்களை அடியோடு வெறுக்கிறது. அவர்களுடன் போட்டி போட வேண்டுமே! என்றாலும் அவர்களை நேசிக்கவும் வேண்டும். என்ன செய்வது?

"இவன் உன் தம்பி" என்று பெற்றோர்கள் சொல்கிறார்கள். 'இவனை நீ நேசித்தேயாக வேண்டும்' என்று சொல்லாமல் சொல்கிறார்கள். ஆனால் எந்தக் குழந்தையும் தன் தம்பியை

வெறுக்கிறது. தம்பியைக் கொன்று போட்டால் கூடத் தேவலை என்று எண்ணுகிறது. தம்பி பிறந்துவிட்டதால் வீட்டில் அந்தக் குழந்தையின் முக்கியத்துவம் வெகுவாகக் குறைந்துவிட்டது அதற்குத் தெரிகிறது.

தம்பி பிறக்கும்வரை அனைவரின் கவனமும் அந்தக் குழந்தையின் மேல்தான் இருந்தது. தம்பி பிறந்ததும் அந்தக் குழந்தையை வெளிச்சுற்றில் தள்ளிவிட்டார்கள். புதிதாகப் பிறந்த தம்பி, இந்தக் குழந்தையின் எதிரி, மையத்தில் உள்ள பிரதானமான இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டான். இப்போது அந்தத் தம்பிதான் சர்வாதிகாரி. அவன் சொல்வதை எல்லோரும் கேட்கிறார்கள். அவன் எல்லோருக்கும் ஆணைகள் கொடுக்கிறான்.

முதலில் பிறந்த குழந்தை குடும்ப நாடகத்தில் முக்கியமில்லாத இரண்டாம்தர பாத்திரமாகிவிட்டான்.

இந்தச் சூழ்நிலையில் அவனால் எப்படித் தன் தம்பியை நேசிக்க முடியும்? ஆனால் அவன் நேசத்தைக் காட்டியேயாக வேண்டும். இல்லாவிட்டால் அவனுக்கு மேலும் பிரச்சினை வரும். இப்படித்தான் முதலில் இருந்தே அன்பு போலியாக்கப் படுகிறது.

அதன்பின் வாழ்நாள் முழுவதும் போலியாகவே வாழத் தொடங்குகிறீர்கள். அன்பு காட்டுவது போல் பாசாங்கு செய்வதே உங்கள் தொழிலாகிவிடும். உண்மையான அன்பை உங்களிடம் வர அனுமதிக்க மாட்டீர்கள். அது மட்டுமில்லை. உண்மையான அன்பைக் கண்டு பயப்படுவீர்கள்.

ஏனென்றால் உண்மையான அன்பு என்பது பொங்கி வரும் வெள்ளத்தைப் போல் ஆபத்தானது. தெரியாத இடத்திலிருந்து வருவது. கட்டுப்படுத்த முடியாதது.

போலியான அன்பு ஒரு வித்தை. ஓர் உத்தி. ஒரு தந்திரம். ஒரு நடிப்பு. நீங்கள் இப்போது நடிக்கப் பழகிக் கொண்டுவிட்டீர்கள்.

உங்களிடம் இருக்கும் அன்பு மிகச் சிறியது என்பதால் அதை உங்களால் கட்டுப்படுத்த முடியும். அது போலி என்பதால் உங்களால் கட்டுப்படுத்த முடியும். அது வெறும் நடிப்புத்தானே! அது உங்கள் கையில் இருக்கிறது. அதை நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

உண்மையான அன்பு உங்களைவிடப் பெரியது. மிக மிகப் பெரியது பிரம்மாண்டமானது. ஆழிப் பேரலையைப் போல் அது உங்களையே அடித்துக் கொண்டு போய்விடும். அதன் முன் உங்களால் நிற்க முடியாது. உண்மையான அன்பில் உங்களை நீங்களே இழக்கிறீர்கள். உண்மையான அன்பு மகத்தானது பரமபதத்திலிருந்து நேரடியாக வருவது.

உண்மையான தியானமும் அது போன்றதுதான். அது பரமபதத்திலிருந்து வருவது.

உண்மையான தியானம் என்பது நீங்கள் செய்யும் முயற்சி இல்லை. அது ஓர் இயல்பான நிகழ்வு. உங்கள் பங்கிற்கு நீங்கள் அந்த நிகழ்விற்குத் தயாராக இருக்க வேண்டும் அவ்வளவுதான். அதைப் பெறும் நிலையில் நீங்கள் இருக்க வேண்டும். அதன் போக்கில் போகும் தன்மை வேண்டும். இறைவனோடு கை கோர்த்து நடந்து செல்லும் தன்மை வேண்டும்.

கடவுள் வடக்கே போனால் நீங்களும் வடக்கே போக வேண்டும். காற்றின் திசை காட்டும் கருவியின் முள் வடப்பக்கம் திரும்பியிருந்தால் அது வடக்குக் காற்றை - வாடைக் காற்றை - வீச வைக்காது. வாடைக்காற்று வீசுவதால் தான் அந்தக் கருவியின் முள் வடக்கே திரும்பியிருக்கிறது. அந்தக் கருவியின் முள் வடக்கே திரும்பியிருந்தால் வாடைக்காற்று அடிக்கிறது என்ற நிகழ்வை அது பதிவு செய்கிறது அவ்வளவுதான்.

தியானமும் அப்படித்தான். உண்மையான அன்பும் வழிபாட்டுணர்வும் அதே ரகத்தைச் சேர்ந்தவை. அவை கடவுளை உங்களிடம் வர வைக்காது. கடவுள் உங்களை

நோக்கி வந்து கொண்டிருக்கிறார் என்ற நிகழ்வை அவை பதிவு செய்கின்றன. தியானம் ஒரு வழியல்ல. நிச்சயமாக கபீர் அப்படி நினைக்கவில்லை.

யோகசூத்திரங்களை உருவாக்கிய பதஞ்சலிக்கும் கபீருக்கும் வேறுபாடு இருக்கிறது. பதஞ்சலி வழிமுறைகளை நம்புபவர். அவர் நமக்குப் பல முறைகளைக் கற்றுக் கொடுத்திருக்கிறார். கபீர் அன்பை நம்புபவர். எதை பதஞ்சலி சமாதி என்று அழைக்கிறாரோ அதைக் கபீர் செயற்கையான சமாதி என்று சொல்கிறார்.

கபீர் சொல்கிறார்: "ஸஹஜ்" என்ற வார்த்தையின் பொருளைத் தியானியுங்கள். இயல்பான தன் நிகழ்வான எளிமையான உங்களால் செய்யப்படாத ஒரு நிலைதான் உண்மையான சமாதி. நீங்கள் எதை உருவாக்கினாலும் அதனால் பயனில்லை.

அதற்கு எந்த மதிப்பும் இல்லை. உங்களுக்கு எந்த மதிப்பும் இல்லை. நீங்கள் உருவாக்கும் எந்தப் பொருளுக்கும் எந்த மதிப்பும் இருக்காது. நீங்கள் உருவாக்கிய அனைத்திலும் உங்கள் கையெழுத்து இருக்கும். உங்கள் தன்மைகள் இருக்கும்."

ஸஹஜ சமாதி என்றால் உங்களால் செய்யப்பட்டது அல்ல என்று பொருள். அது வீட்டில் செய்தது அல்ல. கடவுள் கொடுக்கும் வரப்பிரசாதம். அதில் உள்ள கையெழுத்து உங்களுடையது அல்ல. கடவுளுடையது. அதனால்தான் கபீரின் வழியை அன்பின் வழி என்று சொல்லுகிறேன்.

*என் அலைபாயும் மனதை அமைதிப்படுத்திவிட்டேன்.*

இல்லை. "என் மனம் அமைதியாகிவிட்டது. என் மனம் அமைதியாவதைப் பார்த்துவிட்டேன். கடவுளே, நீ செய்து முடித்துவிட்டாய். உன் அருளைக் காட்டிவிட்டாய். அதனால் என் இதயம் ஜொலிக்கிறது."

மனம் அமைதியானால் இதயம் ஜொலிக்கும். மனம் உளைச்சலில் இருக்கும்போது இதயத்திற்கு உயிரே இருக்காது.

மனதில் நீங்கள் இருக்கும் அந்த வேளையில் உங்களால் இதயத்தில் இருக்க முடியாது.

மனதில் பொறாமை இருக்கிறது. அனைத்தையும் சொந்தம் கொண்டாட வேண்டும் என்ற பேராசை இருக்கிறது. அது உங்களை உங்கள் இதயம் பக்கம் போகவிடாது.

மனம் என்பது பொறாமை பிடித்த காதலி. உங்களை மொத்தமாக உறிஞ்சிக் கொள்கிறது. நீங்கள் உங்கள் இதயத்தை நோக்கி நகர முற்படும்போது உங்கள் மனம் நடுவில் கோல் போட்டு மறித்துவிடுகிறது.

அதையும் மீறி நீங்கள் உங்கள் இதயத்தைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தால் அது தனக்குள்ளேயே ஒரு போலி இதயத்தை உருவாக்குகிறது. போலி உணர்ச்சிகளைக் கூட மனதால் உருவாக்க முடியும்.

சில சமயம் என்னிடம் வருபவர்கள் "ஓஷோ உங்களைக் காதலிக்கிறேன்." என்பார்கள். நான் "அப்படியா?" என்று கேட்பேன். "அப்படித்தான் நினைக்கிறேன்" என்று பதில் சொல்வார்கள்.

உணர்வுகள் ஒருகாலும் நினைவுகளாக இருக்க முடியாது. நீங்கள் என்னை நேசிக்கலாம். இல்லை நேசிக்காமல் இருக்கலாம். என்னை நேசிப்பதாக நினைப்பது என்றால் என்ன அர்த்தம்? சிந்தனை என்பதே போலி. மனம் பல போலி நாணயங்களைக் கொடுத்து உங்களை ஏமாற்றப் பார்க்கிறது.

"ஓ உனக்கு அன்பு வேண்டுமா? இந்தா இதை வைத்துக் கொள்." என்று உங்கள் மனம் சொல்கிறது. அன்பு குறித்த ஒரு நினைவைத் தருகிறது. உணர்வுகள் குறித்த நினைப்புகளைத் தருகிறது.

உங்கள் மனதின் புனைவுத்திறன் அபாரமானது. அது தொடர்ந்து உங்களுடன் போலி விளையாட்டுகள் விளையாடிக் கொண்டேயிருக்கும்.

இதை நீங்கள் கூர்ந்து கவனிக்க வேண்டும். இல்லாவிட்டால் உங்கள் மனம் ஏற்படுத்தும் மயக்கத்தில் உங்களையே

தொலைத்துவிடுவீர்கள். உங்கள் மனம் மிகவும் சாமர்த்தியமானது. தன் சாமர்த்தியத்தால் உங்களைத் தொடர்ந்து ஏமாற்றிக் கொண்டேயிருக்கிறது.

மனம் ஒரு பொறி. அதற்குள் உங்களைச் சிக்க வைக்க அது என்ன வேண்டுமானாலும் செய்யும். எதை வேண்டுமானாலும் உருவாக்கும். போலிகளைத் தயாரிப்பதில் உங்கள் மனதிற்கு நிகர் உங்கள் மனம்தான்.

ஒரு முறை ஓர் இளைஞன் என்னிடம் 'என்னால் அழ முடியவில்லை' என்று சொன்னான். அவனது கண்ணீர் வறண்டுவிட்டது.

அவன் சொன்னான்:

"அழ வேண்டும் என்று இப்போதெல்லாம் நான் கடுமையாக முயற்சிக்கிறேன். அழுகை அவசியம் என்று எனக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. அழுகைதான் என் அழுத்தத்தைப் போக்கி என்னைத் தளர்வாக வைத்திருக்கும் என்று நான் அறிந்து கொண்டேன். அழுகைதான் பல நுண்ணிய உணர்வுகளைக் கொடுக்கும் என்றும் எனக்குத் தெரியும். அதனால் அழ வேண்டும் என்று பாடுபடுகிறேன். இந்தப் பாழாய்ப் போன அழுகை வரமாட்டேன் என்று அடம் பிடிக்கிறதே!"

நான் சொன்னேன்:

"நீ கடுமையாக முயற்சி செய்தால் வெற்றி பெறுவாய். ஆனால் அதுதான் ஆபத்து. உன் மனதால் கண்ணீரைக் கூட உருவாக்க முடியும். உன் மனம் உன் கண்களை வற்புறுத்திக் கண்ணீர் சிந்த வைக்க முடியும். அந்தக் கண்ணீருக்கும் உன் இதயத்திற்கும் எந்தத் தொடர்பும் இருக்காது. உன் கண்ணை வற்புறுத்தி அழ வைத்துவிட்டால் நீ வெற்றி பெற்றதாக நினைப்பாய். உன் மனம் உன்னை ஏமாற்றிவிட்டது என்பதை நீ உணர வேண்டும்."

நாம் அதிக கவனத்துடன் இருக்க வேண்டும். கபீர் சொல்கிறார்: கடவுளே வந்து அமைதிப்படுத்தினால்தான் உன் மனம் அமைதியடையும். சரி நம் பங்கிற்கு என்ன செய்ய வேண்டும்?

கபீர் சொல்கிறார்: நம் பங்கிற்கு இறைவன் கொடுப்பதைப் பெறத் தயாராக இருக்க வேண்டும். இறைவன் வருவதை எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டும். வந்தால் வரவேற்க எப்போதும் விழிப்புநிலையில் இருக்க வேண்டும். நம் பங்கிற்கு நாம் எதுவும் செய்ய முடியாது. நாம் என்ன செய்தாலும் அது விபரீதத்தில் தான் முடியும்.

ஒன்றும் செய்யாமல் சும்மா இருத்தல் கொஞ்சம் கடினம்தான். சோதித்துத்தான் பாருங்களேன். ஏதாவது ஒன்றைச் செய்வது சுலபம். ஒன்றுமே செய்யாமல் இருப்பதுதான் உலகத்திலேயே மிகவும் கடினமான செயல். ஒன்றும் செய்யாமல் இருப்பதுதான் மகத்தான சாதனை. இதைத்தான் ஜென் துறவிகள் ஜாஜென் (zazen) என்று அழைக்கிறார்கள். ஒன்றும் செய்யாமல் மௌனமாக அமர்ந்திருக்கும் நிலை.

ஓர் அழகாக ஜென் கதையைக் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தக் கதையைக் கவனமாகக் கேளுங்கள்.

ஒரு கோயிலுக்குப் பின்னால் ஒரு திராட்சைத் தோட்டம் இருந்தது. திராட்சைப் பழங்கள் பழுத்துத் தொங்கிக் கொண்டிருந்தன. ஒரு நாள் அந்தத் திராட்சைகளிடையே பெரிய சண்டை எழுந்தது. திராட்சைகள் இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்து பெரிதாகச் சண்டை போட ஆரம்பித்தன. அவை கோயிலில் வளர்ந்தபடியால் ஆன்மிக விஷயத்தில் காரசாரமாக விவாதம் செய்ய ஆரம்பித்தன.

கோயிலின் தலைமைப் பூசாரி அந்தச் சண்டையைக் கவனித்தார். திராட்சைகளைப் பார்த்துக் கோபமாகக் கத்தினார்.

"ஹே முட்டாள் திராட்சைகளே! ஏன் இப்படி உங்களுக்குள் சண்டை போட்டுக் கொள்கிறீர்கள்? அதுவும் ஒரு ஜென் கோயிலுக்குள்! சரி, எல்லாரும் ஜாஜென் தியானம் செய்யுங்கள். எதுவும் செய்யாமல் மௌனமாக அமருங்கள்."

ஜாஜென் தியானம் செய்வது எப்படி என்று அவர் சொல்லிக் கொடுத்தார்.

"உங்கள் கால்களை இந்த மாதிரி மடக்கி வைத்துக்கொண்டு அமருங்கள். உங்கள் முதுகும் கழுத்தும் நேராக இருக்கட்டும். ம்.. உங்கள் தியானம் தொடங்கட்டும்"

ஜாஜென் தியானத்தில் திராட்சைகளின் மனம் அமைதி யடைந்தது. இப்போது அந்தப் பூசாரி சொன்னார்.

"உங்கள் கைகளை உங்கள் தலைக்கு மேல் வைத்துக் கொள்ளுங்கள்."

திராட்சைகள் தங்கள் தலைக்குமேல் கையை வைத்தபோது கையில் ஏதோ ஒன்று பட்டது. அது அந்தத் திராட்சைகளை எல்லாம் தாங்கி நின்ற கொடி. எல்லாத் திராட்சைகளும் பலமாகச் சிரிக்கத் தொடங்கின.

"இது அபத்தமாக இருக்கிறதே! நாம் எல்லோரும் ஒரு கொடியில் பிறந்தவர்கள். நாம் அனைவரும் ஒரு குலம். ஒரு குடும்பம். தேவையில்லாமல் சண்டை போட்டுக் கொண்டிருந் தோமே!"

ஜாஜென் தியானத்தில் இந்தப் பிரபஞ்சமே ஒன்று என்ற உணர்வு நம்முள் மேலோங்கும். மௌனமாக ஒன்றும் செய்யாமல் அமர்ந்திருக்கும்போது எங்கும் எந்த முரண்பாடும் இல்லை என்பது தெளிவாகும். பகைவன் என்று யாருமே இல்லை என்பது விளங்கும்.

பகைமை நம் மனம் கற்பித்துக் கொண்ட மாயை என்பது தெரியும். நமக்குள் இருக்கும் இறுக்கம், பேராசை, போராட்டம் எல்லாமே நம் மனதின் திருவிளையாடல்கள் என்பது தெரியும். யாரை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக் கிறோம்? நாமன்றி வேறு யார் இருக்கிறார்கள் இந்தப் பிரபஞ்சத்தில்?

எல்லாமே ஒன்றுதான் என்று நாம் அறியும்போது,

நாம் அனைவரும் ஒருவருக்கொருவர் தொடர்புடையவர்கள் என்று நாம் உணரும்போது

நான் உங்களின் ஒரு பகுதி, நீங்கள் என்னில் ஒரு பகுதி என்று இருவருமே உணரும்போது

நமக்குள் ஒரு மலர்ச்சி ஏற்படும்.

இந்த மலர்ச்சி முயற்சியினால் வருவதில்லை. மௌனமாக எதுவும் செய்யாமல் காத்திருக்கும் போதுதான் இந்த மலர்ச்சி தோன்றும். ஆனால் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். இந்த நிலையில் நீங்கள் தூங்கிப் போனால் ஒன்றும் நடக்காது.

இரண்டு விஷயங்கள் மிகவும் சுலபமானவை. ஒன்று எதையாவது செய்து கொண்டேயிருப்பது. இன்னொன்று தூங்குவது. நீங்கள் எதுவும் செய்யாமல் இருக்கும் போது உங்களுக்குத் தூக்கம் வந்துவிடுகிறது.

ஆக உங்களுக்கு இரண்டே இரண்டு வழிகள்தான் உள்ளன: எதையாவது செய்து கொண்டு விழித்துக்கொண்டு இருப்பது. அல்லது ஒன்றும் செய்யாமல் தூங்கிப் போவது. இந்த இரண்டிற்கும் இடையில்தான் அந்த உச்சநிலை இருக்கிறது. எதுவும் செய்யாதீர்கள். தூங்கும்போது இருப்பதைப் போல் அமைதியாக இருங்கள்.

வேலையில் ஈடுபட்டிருக்கும்போது இருக்கும் விழிப்புணர்வுடன் இருங்கள். பகைவனுடன் கத்திச் சண்டை போடும்போது எவ்வளவு விழிப்புணர்வுடன் இருப்பீர்களோ அப்படி இருங்கள். ஆனால் தூக்கத்தில் இருப்பது போன்ற மௌனநிலையில் இருங்கள். இப்படித் தூக்கமும் விழிப்புணர்வும் சந்திக்கும் இடத்தில்தான் ஸஹஜ சமாதி இருக்கிறது. தானாக உண்டாகும் பரவசநிலை இருக்கிறது.

அந்த நொடியில் உங்கள் சக்தி உங்கள் இதயத்தை நோக்கிப் பாய்வதை உணர்வீர்கள். உங்கள் மனம் உங்களிடம் இருக்காது. உங்கள் தலை போய்விடும். நீங்கள் தலையில்லாத வராகிவிடுவீர்கள்.

அன்று சவிதா தான் குழம்பிப் போயிருப்பதாகச் சொன்னாள். இது என்ன விளங்காத புதிர் என்று என்னிடம் கேட்டாள்.

அவளுடைய கனவில் நான் வந்தேனாம். ஆனால் என்னைத் தலையில்லாத முண்டமாகப் பார்த்தாளாம். இது எப்படி சாத்தியம் என்று கேட்டாள்.

"முற்றிலும் உண்மை சவிதா. உனக்கு ஒரு மகத்தான அனுபவம் கிடைத்திருக்கிறது. ஜென் பாஷையில் சொல்ல வேண்டுமென்றால் உனக்கு ஸடோரி (ஜென் சமாதி) கிடைத் திருக்கிறது. எனக்குத் தலையில்லை. உனக்கும் தலையில்லை. யாருக்கும் தலையில்லை."

நம் சக்தி இதயத்தை நோக்கிப் பாயும்போது இது நிகழ்கிறது. ஒரு நாள் திடீரென்று உங்களுக்குத் தலையே இல்லை என்பதை உணர்வீர்கள். நான் சொல்வது உங்கள் தேக சம்பந்தமான தலையை அல்ல. உங்கள் பௌதிகத் தலையை அல்ல. அது அப்படியே தான் இருக்கும். அது எங்கே போகும்?

ஆனால் உங்கள் மூளை உங்கள் இருப்புநிலையின் மையமாக இருக்காது. உங்கள் தலை இருக்கும் ஆனால் பழைய முக்கியத்துவம் அதற்கு இருக்காது. முன் போல் நடுநாயகமாக இருக்காது. உங்களைக் கட்டுப்படுத்தும் கருவியாக இருக்காது. உங்கள் மேலதிகாரியாக இருக்காது. உங்கள் முதலாளியாக இருக்காது.

மனம் இப்போது நிலைப்பட்டிருக்கிறது. எப்போதும் ஓடிக்கொண்டிருந்த மனம் இப்போது ஓர் இடத்தில் அமைதியாக நின்றுவிட்டது. அந்த நிலையை மனமின்மை என்று சொல்லலாம்.

நகராத மனம் எங்கிருக்கும்? எண்ணம் தோன்ற வேண்டுமென்றால் மனம் நகர வேண்டும். உங்கள் மனதின் இயக்கம் நின்றுவிட்டால் உங்கள் எண்ணங்கள் எல்லாம் ஸ்தம்பித்து நின்றுவிடும். மனம் மறைந்துவிடும். எண்ணங்களே மனம். ஆகையால் எண்ணம் இல்லையென்றால் மனமும் இல்லை. மனம் இல்லாத அந்தச் சமயத்தில் என் இதயம் ஜொலிக்கத் தொடங்குகிறது. உங்கள் இதயத்தில் திடீரென்று ஒரு சூரியன் உதயமாகிறது. நீங்கள் ஒளியால், அன்பால், இன்பத்தால் நிரம்பி வழிகிறீர்கள்.

*அதாக இருக்கும் தன்மையில் அதனையும் தாண்டிப் பார்த்துவிட்டேன்*

அந்த நிலையில் அனைத்தையும் தாண்டி உங்கள் பார்வை செல்கிறது. அங்கே அந்த நொடியில் நீங்கள் மெய்ப்பொருளை நேருக்கு நேர் பார்ப்பீர்கள்.

மனதின் மூலமாக உங்கள் கருத்துருக்களைத்தான் நீங்கள் பார்த்து வந்திருக்கிறீர்கள். மனதின் மூலமாக நீங்கள் மெய்ப் பொருளைப் பார்த்ததில்லை. பார்க்கவும் முடியாது. மெய்ப் பொருளைப் பற்றிய எண்ணங்களை மனம் சதா உருவாக்கிக் கொண்டேயிருக்கிறது. மெய்ப்பொருளை நீங்கள் நேருக்கு நேர் பார்ப்பதேயில்லை. நடுவே எண்ணங்களாலான ஒரு திரை இருக்கிறது. அந்தத் திரை உண்மையைத் திரித்துக் காட்டுகிறது.

எது இருக்கிறதோ அதை நீங்கள் பார்ப்பதில்லை. உங்கள் கற்பனை முழு வீச்சில் வேலை செய்கிறது. நீங்கள் பார்க்க நினைப்பதைத்தான் பார்க்கிறீர்கள். உங்கள் மனதில் புதைந்திருக்கும் ஆசைகள் மெய்ப்பொருளுக்குச் சாயம் பூசி அதை மறைத்துவிடுகின்றன.

மனதை ஒதுக்கி வைத்தால் ஒழிய உலகத்தை உள்ளபடி உங்களால் பார்க்க முடியாது.

இதயத்தின் மூலம் பார்க்கும்போது மட்டுமே உங்களால் மெய்ப்பொருளைப் பார்க்க முடியும்.

*அதாக இருக்கும் தன்மையில் அதனையும் தாண்டிப் பார்த்துவிட்டேன்*

அந்த மகத்தான ஒளியிலே இதயத்தில் ஜொலிப்பிலே நான் ஆழமாகப் பார்கிறேன். என் பார்வை அனைத்தையும் ஊடுருவிச் செல்கிறது.

*சங்கத்தில் நான் என் தோழனையே பார்த்துவிட்டேன்.*

இப்போது என்னைச் சுற்றி இருப்பவர் யாராக இருந்தாலும் அது நீங்கள்தான் என்று தெரிந்து கொண்டுவிட்டேன்.

*சங்கத்தில் நான் என் தோழனையே பார்த்துவிட்டேன்*

இப்போது என் மனைவி என் மனைவியில்லை. கடவுளே என் மனைவியாக வேஷம் போட்டுக்கொண்டு வந்திருக்கிறார். என் மகன் என் மகன் இல்லை. என் கணவன் என் கணவன் இல்லை. இறைவனே என் மகனாகவும் கணவனாகவும் வந்திருக்கிறார்.

என் பகைவன் கூட என் பகைவன் இல்லை. என் வாழ்க்கையை மேலும் சுவையாக்க, அதற்கு மேலும் வளம் கூட்ட இறைவனே என் பகைவனாக வந்திருக்கிறான். வாழ்க்கையை வளப்படுத்தக் கடவுள் பல உருவங்களில் என் முன் வந்திருக்கிறார். - மனைவியாக, கணவனாக, மகனாக, நண்பனாக பகைவனாக..

*சங்கத்தில் நான் என் தோழனையே பார்த்துவிட்டேன்.*

*அடிமைத்தளையோடு வாழும்போதே என்னை நான் விடுவித்துக் கொண்டேன்*

நாம் எங்கும் போகவேண்டும் என்ற அவசியம் இல்லை. கபீர் சொல்கிறார். அடிமைத்தளையோடு வாழும்போதே என்னை நான் விடுவித்துக் கொண்டேன் இது மிகவும் உன்னதமான சுதந்திரம். அடிமைத்தனத்தை எதிர்த்துப் போராடி வெற்றி கொள்வதைவிட உன்னதமான சுதந்திரம்.

இதுதான் உண்மையான விடுதலை. அடிமைத்தனத்தை எதிர்க்கும் சுதந்திரம் அல்ல இது. அடிமைத்தனத்திற்கு அப்பாற் பட்டது இது.

உங்களைச் சிறைச்சாலையில் அடைத்து வைத்தபோது நீங்கள் சுதந்திரமாக இருந்தால்தான் உங்கள் சுதந்திரம் உண்மை யென்று அர்த்தம். அப்போது உங்கள் சுதந்திரத்திற்கு ஓர் ஆன்மிகத்தன்மை வந்துவிடுகிறது.

உங்களைச் சங்கிலிகளால் பிணைத்திருக்கலாம். ஆனால் உங்களுக்கு உள்ளே அடியாழத்தில் நீங்கள் வானத்தில் பறந்து செல்லும் வானம்பாடியைப் போல் சுதந்திரமாக இருப்பதாக உணர்வீர்கள். அப்போது உங்களைப் பிணைத்திருக்கும் அந்தச் சங்கிலிகளோடுகூடச் சண்டை போட மாட்டீர்கள்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

ஒரு முறை கிரேக்க மேதை டயோஜனீஸை சில கொள்ளைக்காரர்கள் பிடித்துச் சென்றார்கள். டயோஜனீஸ் ஒரு பெரிய ஞானி. நம் மகாவீரருக்கு ஒப்பாக ஒரு மேற்கத்திய ஞானியைச் சொல்ல முடியும் என்றால் அது இந்த டயோஜனீஸ்தான். அவர் நிர்வாணமாகவே இருந்தார்.

அவர் அழகான உடலைப் பெற்றிருந்தார். அவருடைய உடல் அழகைப் பார்த்து மகா அலெக்சாண்டரே பொறாமைப்பட்டதாகச் சொல்கிறார்கள். அவர் ஒரு திகம்பரச் சாமியார். அவரிடம் எந்த உடமைகளும் இல்லை.

காட்டில் ஒரு மரத்தடியில் தியான நிலையில் அமர்ந்திருந்த போது அவரைப் பிடித்துவிட்டார்கள் திருடர்கள். 'இந்த மனிதனை அடிமைச் சந்தையில் விற்றால் நல்ல விலை கிடைக்கும்' என்று திருடர்கள் கணக்குப் போட்டார்கள்.

அவர் உடல் வலிமையைப் பார்த்துப் பயந்தார்கள். இத்தனைக்கும் திருடர்கள் ஆறு பேர் இருந்தார்கள். என்றாலும் அவர்களுக்குப் பயம். மிகுந்த எச்சரிக்கையுடன் அவரை அணுகினார்கள். அவர் ஓர் ஆளே ஆறு பேரையும் சமாளித்துவிடுவார் என்று தோன்றியது.

டயோஜனீஸ் அமைதியாகச் சொன்னார் : "பயப்படாதீர்கள். நான் உங்களுடன் சண்டை போட மாட்டேன். நெருங்கி வாருங்கள். உங்கள் சங்கிலிகளால் என்னைப் பிணைக்கலாம்."

"அடிமையாக யாராவது இவ்வளவு ஆர்வம் காட்டுவார்களா என்ன?" - நம்ப முடியாமல் கேட்டார்கள் திருடர்கள்.

"நான் சுதந்திர மனிதன் என்பதால் அதைப்பற்றிக் கவலைப் படவில்லை."

அவர்களுக்குப் புரியவில்லை.

அந்த ஊர் சந்தைக்கு நடுவே நின்று கொண்டு சங்கிலியால் பிணைக்கப்பட்ட டயோஜனீஸ் இடி முழக்கம் செய்தார்.

"ஒரு முதலாளி விற்கப்படப் போகிறார். உங்களில் எந்த அடிமையாவது அவரை வாங்க விரும்புகிறீர்களா?"

உண்மையான சுதந்திரம் என்பது பந்தத்திற்கு எதிரானது அல்ல. பந்தத்திற்கு அப்பாற்பட்டது.

கடைத்தெருவையும் உங்கள் மனைவி மக்களையும் கண்டு அஞ்சி நீங்கள் இமய மலைக்கு ஓடலாம். ஆனால் உங்களுக்குச் சுதந்திரம் இருக்காது. இமயமலை உங்கள் சுதந்திரமாகாது. நீங்கள் உங்கள் மனைவியைக் கண்டு அஞ்சுகிறீர்கள். ஒரு வேளை உங்கள் மனைவி உங்களைப் பார்க்க இமயமலைக்கே வந்துவிட்டால் நீங்கள் பயத்தில் நடுங்க ஆரம்பித்துவிடுவீர்கள்.

சுவாமி ராம்தீர்த்தர் நம் நாட்டின் தத்துவத்தை மேலை நாடுகள் முழுவதும் பிரச்சாரம் செய்தார். அவர் நன்கு படித்தவர். முற்றுணர்ந்த ஞானி. எல்லாவற்றையும் துறந்தவர்.. பிரசாரத்தை முடித்துக் கொண்டு நாடு திரும்பினார்.

இமயமலையில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு தன் சீடன் பூர்ணா சிங்குடன் வசித்துவந்தார்.

ஒருநாள் ராம்தீர்த்தரின் மனைவி அவரைக் காண ஆசிரமத்திற்கு வந்தாள். இந்த நிகழ்வைப் பற்றி பூர்ணா சிங் தன் குறிப்புகளில் எழுதுகிறார்:

"சுவாமி ராம்தீர்த்தர் ஆயிரக்கணக்கான மக்களைச் சந்திப்பதை நான் பார்த்திருக்கிறேன். ஆண்கள், பலதரப்பட்ட பெண்கள், குழந்தைகள் வயதானவர்கள், இளைஞர்கள் இவர்களை எல்லாம் சந்தித்தபோது சலனமற்று இருந்தவர் முகத்தில் இப்போது பயத்தின் நிழல் தெரிந்தது."

சுவாமிஜி பூர்ணாசிங்கிடம் சொன்னார்: "நான் அவளைப் பார்க்க விரும்பவில்லை என்று அவளிடம் சொல்."

சீடருக்கு அதிர்ச்சி.

அவர் சொன்னார்: "குருவே நீங்கள் உங்கள் மனைவியைச் சந்திக்கப் பயந்தால் நானும் உங்களை விட்டுச் செல்ல வேண்டியதிருக்கும். அதன்பின் நீங்கள் என் குருதேவராக

இருக்க மாட்டீர்கள். நான் கேட்கிறேன். நீங்கள் ஏன் அந்தப் பரிதாபமான பெண்மணிக்குப் பயப்பட வேண்டும்?

“பாவம் அவள். பஞ்சாபில் உள்ள ஒரு கிராமத்திலிருந்து நெடுந்தூரம் பயணப்பட்டு உங்களைக் காண வந்திருக்கிறாள். நீங்கள் அவளைக் குழந்தைகளுடன் தவிக்கவிட்டுவிட்டு வந்துவிட்டீர்கள். அவள் எப்படியோ தட்டுத் தடுமாறி வறுமையுடன் போராடி வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறாள். என்றாலும் அவள் உங்களைக் குறை சொல்லவில்லை.

“ஏதோ உங்களைப் பார்த்து உங்கள் கால்களைத் தொட்டு வணங்கிவிட்டுப் போக வந்திருக்கிறாள். இன்று மாலையே திரும்பிப் போய்விடுவாள். நீங்கள் ஏன் அவளைப் பார்க்க மறுக்கிறீர்கள்? உங்கள் மனதில் இன்னும் பயம் ஒளிந்து கொண்டிருக்கிறது. நீங்கள் இன்னும் அவளைக் கண்டு அஞ்சுகிறீர்கள். நீங்கள் மனதளவில் இன்னும் அவளுடைய கணவனாகவே இருக்கிறீர்கள். நீங்கள் இன்னும் துறவியாக வில்லை. அப்படித்தானே?”

ராம்தீர்த்தர் தன் தவறை உணர்ந்தார்.

“நீ சொல்வது சரி. அந்தப் பெண்ணை உள்ளே கூப்பிடு. அவள் என் பாதத்தைத் தொட்டு வணங்கட்டும். நானும் அவள் பாதத்தைத் தொட்டு வணங்குகிறேன். இது கடவுளிடமிருந்து எனக்கு வந்த செய்தி. இதுதான் என் கடைசிப் பயம் என்று நினைக்கிறேன். அது என் ஆழ்மனதில் எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நீ சொல்வது சரிதான்.”

பூர்ணா சிங் தன் குறிப்புகளில் எழுதுகிறார்:

“அன்று முதல் சுவாமி ராம்தீர்த்தரின் முகத்தில் அதுவரை இல்லாத ஓர் ஒளி வந்து சேர்ந்து கொண்டது.”

அன்றுதான் ராம்தீர்த்தர் உண்மையான சுதந்திரத்தைப் பெற்றார். அடிமைத்தனத்தின் கடைசி நிழலும் அவரை விட்டு அகன்றது. அவர் தன் மனைவியையும் ஏற்றுக் கொண்டார்.

இப்போது அவர் மனதில் பயம், குறை தப்பியோடும் எண்ணம், எதுவும் இல்லை.

அதனால்தான் சுதந்திரம் என்பது பந்தத்திற்கு எதிராக இருக்கக் கூடாது. அதற்கு அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும் என்று சொன்னேன். பந்தத்திற்கு எதிராக இருக்கும் சுதந்திரம் பந்தத்தைக் கண்டு பயப்படுகிறது. பயம் வந்துவிட்டால் அங்கு சுதந்திரம் இருக்காது. பயமும் சுதந்திரமும் ஒரே இடத்தில் இருக்க முடியாது. சுதந்திரத்தின் சாவு மணி பயம்தான். எல்லாப் பயங்களும் மறைந்தால்தான் சுதந்திரம் தோன்றும்.

அதைத்தான் கபீர் சொல்கிறார்.:

*அடிமைத்தளையோடு வாழும்போதே என்னை நான் விடுவித்துக் கொண்டேன்*

இந்த சுதந்திரத்தில் கேள்விகளும் இல்லை. நிபந்தனைகளும் இல்லை.

"நான் இமயத்தில் இருந்தால் சுதந்திரமாக இருப்பேன்."

"நான் கத்தோலிக்க மடாலயத்தில் இருந்தால் மட்டுமே சுதந்திரமாக இருப்பேன்."

"நான் பெண்களைத் தவிர்த்தால் சுதந்திரமாக இருப்பேன்."

"நான் பணத்தைக் கையால் தொடமாட்டேன். அதனால் சுதந்திரமாக இருப்பேன்."

இந்தப் பேச்செல்லாம் வடிகட்டிய முட்டாள்த்தனம். மனதில் உள்ள கோழைத்தனத்தின் அசிங்கமான வெளிப்பாடுகள்.

*அடிமைத்தளையோடு வாழும் போதே என்னை நான் விடுவித்துக் கொண்டேன்*

*குறுகிய மனப்பான்மையின் பிடியிலிருந்து தப்பிவிட்டேன்.*

இதுதான் உண்மையான சுதந்திரம். குறுகலான மனப்பான் மையிலிருந்து விடுபடுவதுதான் உண்மையான விடுதலை. நீங்கள் இந்துவாக இருந்தால் உங்களால் சுதந்திரமாக இருக்க முடியாது.

நீங்கள் குறுகிப் போவீர்கள். இந்துமதம் என்ற குறுகலான சுரங்கத்தில்தான் வாழ வேண்டும்.

நீங்கள் முகமதியராக இருந்தால் உங்களால் சுதந்திரமாக இருக்க முடியாது. நீங்கள் உங்களை ஆண் என்றோ பெண் என்றோ நினைத்துக் கொண்டிருந்தால் நீங்கள் சுதந்திரமாக இருக்க முடியாது. அவை எல்லாம் உங்களைக் குறுக்கும் சுரங்கங்கள். நீங்கள் கம்யூனிஸ்ட் என்றோ கம்யூனிசத்தை எதிர்ப்பவர் என்றோ உங்களை நினைத்துக் கொண்டிருந்தால் உங்களை வரையறுக்க ஒரு கோட்பாடு இருந்தால் நீங்கள் சுதந்திரமானவர் அல்லர்.

சுதந்திரத்திற்கு வரையறை இல்லை. நீங்கள் வரையறைக்கு அப்பாற்பட்டவர். இருப்புநிலை அளவிற்குப் பரந்த தன்மை உடையவர். அதுதான் உண்மை. நீங்கள்தான் அந்த உண்மை. தத்வமஸி - அதுதான் நீங்கள். நீங்கள் முழுமையின் வடிவம். ஒரு மாற்றுக் கூடக் குறையாத முழுமையின் முழு வடிவம்.

முழுமையின் ஒரு பகுதிகூட முழுமைதான். நான் அதை இப்போது பிரகடனம் செய்கிறேன்.

ஒரு பகுதியை முழுமை என்று சொல்வது கணித சாஸ்திர விதிகளுக்கு எதிரானது. ஆனால் ஆன்ம ஞானம் கணித சாஸ்திர விதிகளுக்குக் கட்டுப்படாது.

கணிதத்துறை பேராசிரியரிடம் போய் இதைச் சொன்னால் அவர் சொல்வார் " ஒரு பகுதி எப்படி முழுமையாகும்? பகுதி என்பது எப்போதும் பகுதியாகத்தான் இருக்கும். பகுதி எப்போதும் முழுமையாகாது. பகுதி எப்போதும் முழுமைக்குச் சமமாகாது. பகுதி எப்போதும் முழுமையைவிடச் சிறியதாகத்தான் இருக்க வேண்டும்."

கணித விதிகளின்படி அவர் சொல்வது சரிதான். ஆனால் ஞானரீதியாகப் பார்த்தால் அவர் சொல்வது அபத்தம்.

பகுதிதான் முழுமை. பகுதி முழுமைக்குச் சமமானது. முழுமையைவிட பகுதி ஒரு மாற்றுக்கூடக் குறைந்ததல்ல.

பகுதி முழுமையைவிட்டுத் தனியாக இல்லை. பின் எப்படி அது முழுமையைவிடச் சிறியதாக இருக்கமுடியும்?

கடலில் தோன்றும் அலையைப் பாருங்கள். கணித மேதை என்ன சொல்வான்?

"கடலைவிட அலை சிறியதுதான்."

ஒரு ஞானி "அலைதான் கடல். கடல்தான் அலை" என்று தான் சொல்வான்.

அலை எப்படிக் கடலைவிடச் சிறியதாக இருக்க முடியும்? உங்களால் அலையைக் கடலில் இருந்து தனியாகப் பிரித்து எடுக்க முடியுமா என்ன? பிரித்து எடுத்து அதைத் தள்ளிக் கொண்டு போய் வேறு ஒரு குளத்தில் விட முடியுமா என்ன? இல்லை அலையைப் பிரித்தெடுத்து ஒரு டப்பாவில் அடைத்து வைக்க முடியுமா என்ன?

அப்படிச் செய்ய முயன்றால் உங்களுக்கு ஒன்று நன்றாக விளங்கும். அலையைக் கடலில் இருந்து பிரித்தெடுத்த அந்தக் கணத்தில் அது அலையாக இருக்காது. அலை கடலில்தான் இருக்க முடியும். கடலாகத்தான் இருக்க முடியும். அலை என்பது கடலின் அலைதலன்றி வேறென்ன?

அலை என்பது கடலின் செயல். அது கடலில் இருந்து தனியாக இல்லை. கடலிற்கும் அலைக்கும் நடுவே எந்த பாகுபாடும் இல்லை. தடுப்புச்சுவரும் இல்லை.

அலைதான் கடல். கடல்தான் அலை. பகுதிதான் முழுமை. முழுமைதான் பகுதி. நீங்கள் இதை உணர்ந்தால் ஏசுநாதரைப் போல் நீங்களும் அறைகூவலாம் "என் கடவுளும் நானும் ஒன்றுதான்."

இல்லை. அல்-ஹில்லஜ் மன்சூரைப் போல் "அனால் ஹக்." - அதாவது நான்தான் மெய்ப்பொருள் - என்று சொல்லலாம். இல்லை நம்நாட்டு உபநிஷத்துகளைப்போல் "அஹம் பிரம்மஸ்மி" என்று உறுமலாம். நான்தான் கடவுள். நான்தான் பிரம்மம். நானே முழுமை.

*குறுகிய மனப்பான்மையின் பிடியிலிருந்து தப்பிவிட்டேன்.*

*கபீர் சொல்கிறான்: அடைய முடியாததை அடைந்துவிட்டேன்*

வார்த்தைகளின் அழகைப் பாருங்கள்

*கபீர் சொல்கிறான்: அடைய முடியாததை அடைந்துவிட்டேன்*

*அன்பின் வண்ணம் என் இதயத்தில்!*

அதை அடைந்துவிட்டேன் என்று சொன்ன பிறகு அதை ஏன் அடையமுடியாதது என்று சொல்ல வேண்டும்? இந்த இடத்தில்தான் அறிவும் ஞானமும் வெவ்வேறு வழிகளில் போகத் தொடங்குகிறது.

ஆர்தர் கோஸ்ட்லர் போன்ற ஒரு மேதையிடம் போய் "அடையமுடியாததை அடைந்துவிட்டேன்" என்று சொன்னால் அவர் என்ன சொல்வார்?

"அபத்தக் களஞ்சியமாக அல்லவா இருக்கிறது. அது அடைய முடியாதது என்றால் எப்படி அடைந்துவிட்டேன் என்று சொல்கிறீர்கள்? சரி, அதை நீங்கள் அடைந்துவிட்டால், உங்களால் அடையமுடிகிறது என்றால் அதை அடையமுடியாதது என்று சொல்வது அபத்தம் அல்லவா?"

அது பைத்தியக்காரத்தனம் என்று அந்த மேதை புலம்புவார். தேவையில்லாமல் ஒரு விஷயத்தைப் புதிராக்குகிறீர்கள் என்று கூச்சல் போடுவார்.

கவனியுங்கள். இதில் எதையும் புதிராக்கவில்லை. கபீர் ஒரு மகத்தான விஷயத்தைச் சொல்லப் போகிறார். அப்போது இது போன்ற ஓர் அபத்தமான வாக்கியத்தைத்தான் பயன்படுத்த வேண்டும். மகத்தான உண்மையை வெளிப்படுத்த இது ஒன்றுதான் வழி. மெய்ப்பொருளை முரண்பாடுகள் மூலமாகத்தான் விளக்க முடியும்.

*அடைய முடியாததை அடைந்துவிட்டேன்*

பின் இதற்கு என்ன அர்த்தம்? அதை ஏன் அடைய முடியாது என்று சொல்கிறார்? அதை உங்களால் அடைய

முடியாது. அதை நீங்கள் பெற முடியாது. அதை இலக்காக வைத்து அதற்காக முயற்சி செய்து உங்களால் அடையமுடியாது.

அதை அடைய ஒரு முறையோ வழியோ இல்லை. அதனால்தான் அதை அடையமுடியாது என்கிறார். பின் அதே மூச்சிலேயே அதை அடைந்துவிட்டேன் என்கிறாரே!

ஒரு நாள் அது தானாகவே அவரிடம் வந்துவிட்டது. ஒரு சாதனையாக அல்ல. முயற்சியின் பலனாக அல்ல. ஒரு பரிசாக. நீங்கள் அதை அடையவில்லை. ஒரு நாள் திடீரென்று பார்க்கிறீர்கள். அது இருக்கிறது. உங்களால் உங்கள் கண்களையே நம்ப முடியவில்லை. அது அங்கே இருக்கிறது.

இதில் முரண்பாடு என்னவென்றால் அதை அடைய எந்த அளவு முயற்சி செய்கிறீர்களோ அந்த அளவிற்கு அது தானாக வருவது தள்ளிப் போகும்.

அதை அடைய வேண்டும் என்ற முயற்சியை நீங்கள் கைவிடும் போது.. .. ..

அடைதலைப் பற்றி முழுவதுமாக நீங்கள் மறந்துவிட்ட நிலையில்.. .. ..

அதை உங்கள் முயற்சியால் அடையமுடியாது என்பதை நீங்கள் புரிந்து கொண்டபின் .. .. ..

இந்தப் புரிந்துணர்வு உங்கள் ஆழ்மனதில் ஊடுருவி உங்கள் இருப்பு நிலை மொத்தத்தையும் ஆக்கிரமிக்கும் போது.. .. ..

நீங்கள் தளர்வாக இருக்கும் போது., .. ..

அடைய வேண்டும் என்ற ஆசை முற்றிலுமாகப் போய்விட்டபின் .. .. ..

அது தானாக உங்களைத் தேடி வரும்.

ஓர் இடத்திற்குப் போக வேண்டும் ஓர் அனுபவம் கிட்ட வேண்டும் அது கடவுள், மோட்சம் நிர்வாணம் எதுவாக

வேண்டுமானாலும் இருக்கலாம்.) என்ற ஆசைகள் மறைந்துவிட்ட போது அது தானாகவே உங்களைத்தேடி வருகிறது.

அதை உங்கள் பேராசையின் இலக்காக ஆக்கிக் கொள்ளக் கூடாது. பேராசை அகந்தையை உருவாக்கும். அகந்தை வந்துவிட்டால் அதை அடைய முடியாது. அகந்தையின் மூலம் நீங்கள் எப்படி விரிந்து பரந்து வளர முடியும்? அகந்தை ஒரு சுரங்கம். சுரங்கத்திற்குள் இருந்தபடி எப்படிப் பரந்த வானத்தை உங்களால் பார்க்க முடியும்? அடையமுடியும்? வழியேயில்லை.

"என் துன்பங்களுக்கு எல்லாம் நானே காரணம். நானே என் பந்தம்" என்பதைப் புரிந்து கொள்ளும்போது எல்லாமே லேசாகிப் போகிறது. அந்தத் தளர்வுநிலை பரிபூரணமாக இருக்கும்போது அது ஒரு பரிசாக வருகிறது.

அதனால்தான் கபீர் சொல்கிறார் "அடையமுடியாததை அடைந்துவிட்டேன். நான் அடையவில்லை. அது எனக்குக் கொடுக்கப்பட்டது. அது இறைவனின் அருள். அனுக்கிரகம். கடவுள் என் மேல் இறங்கிவிட்டார்."

அதனால்தான் சொன்னேன் தாகூர் இதைச் சரியாக மொழி பெயர்க்கவில்லையென்று.

"கடவுளே, கடைசியில் நீ அதைச் செய்துவிட்டாயா? நான் எல்லா நம்பிக்கையும் இழந்து நின்றேன். அது வேண்டும் என்று பிரார்த்திப்பதைக்கூட விட்டுவிட்டேன். அது அர்த்தமற்றது என்று எனக்குத் தெரியும்.

என்னுடைய ஆயிரம் ஆயிரம் ஜன்மங்களில் அதைத் தேடிக்கொண்டிருந்தேன். அதன்பின் எல்லாவற்றையும் விட்டு விட்டேன். தேடலைக்கூட.

தேடலை முற்றிலும் நிறுத்திவிட்ட வேளையில் நீ அதை என்னிடம் கொண்டுவந்து சேர்த்துவிட்டாயே!

என்னால் அதை அடைய முடியும் என்று நான் நினைத்தபோது அதைப் பெறும் தகுதி எனக்கு இருக்கிறது

என்று நான் நினைத்தபோது நீ என்னைக் கண்டுகொள்ளவே இல்லை. நீ மிகவும் தூரத்தில் இருந்தாய். இப்போது எனக்கு அந்தத் தகுதி இல்லை என்று நான் நினைக்கும்போது அதைப் பெறும் அளவிற்கு நான் உயர்ந்தவன் அல்ல என்று என்னை நானே சாடிக் கொண்டிருக்கும்போது நீ அதை என்னிடம் கொண்டுவந்து கொடுத்துவிட்டாயே!"

*கபீர் சொல்கிறான்: அடைய முடியாததை அடைந்துவிட்டேன்*

*அன்பின் வண்ணம் என் இதயத்தில்!*

இறைவன் உங்களுக்குள் இறங்கினால்தான் உங்கள் இதயம் அன்பின் சாயத்தைப் பூசிக் கொள்ளும். அதற்கு முன்னால் நிச்சயமாக இல்லை.

இதை மாற்றியும் சொல்லலாம்.

அன்பின் வண்ணம் உங்கள் இதயத்தில் இருந்தால்தான் நீங்கள் இறைவனை அடையமுடியும். சத்தியமாக அதற்கு முன்னால் முடியாது.

தயவுசெய்து இதை ஒரு புதிராக ஒரு விடுகதையாக மாற்றிவிடாதீர்கள். கோழி முந்தியா முட்டை முந்தியா என்று கேள்வி கேட்காதீர்கள்.

அன்பின் வழியில் செல்லுங்கள். ஆண்டவனை அடைவீர்கள். ஆண்டவனின் வழியில் செல்லுங்கள் அன்பை அடைவீர்கள். அவை இரண்டும் சேர்ந்தே வரும்.

இந்த வகையில் பார்த்தால் முட்டையும் கோழியும் வேறு வேறு அல்ல. முட்டை என்பது என்ன? ஒரு கோழி மேலும் கோழிகளை உருவாக்கும் வழிதான் முட்டை. கோழி என்பது என்ன? ஒரு முட்டை மேலும் முட்டைகளை உருவாக்கும் வழிதான் கோழி. அவை இரண்டும் வேறு வேறு அல்ல.

முட்டை என்பது கோழியின் வெளிப்படாத தோற்றம். கோழி முட்டையின் வெளிப்பட்ட தோற்றம். அவை ஒரே பொருளின் இரு முனைகள். இறைவனும் அன்பும் போல.

அதனால்தான் 'கடவுள் அன்பு." என்று ஏசுநாதர் சொல்கிறார். நான் சொல்கிறேன் "அன்பே கடவுள்" இரண்டிற்கும் ஒரே பொருள்தான். ஒரே பிரம்மாண்ட சக்தியின் ஒரு முனை கடவுள். மறுமுனை அன்பு. நீங்கள் எந்த முனையிலிருந்து வேண்டுமானாலும் உங்கள் பயணத்தைத் தொடங்கலாம்.

தயவுசெய்து உடனே புறப்படுங்கள். அமர்ந்தபடி யோசிக்காதீர்கள்.

"எது முதலில் வந்தது? நான் எங்கிருந்து ஆரம்பிக்க வேண்டும்?" என்று நினைப்பவர்கள் ஆரம்பிப்பதேயில்லை. சிந்தனையாளர்கள் பயணத்தைத் தொடங்குவதேயில்லை. மற்றவர்கள்தான் பயணத்தில் குதிக்கிறார்கள்.

என்னிடம் வருபவர்களிடம் "நீங்கள் சன்னியாசத்தில் குதிக்கத் தயாராக இருக்கிறீர்களா?" என்று நான் கேட்பேன்

"நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்வார்கள். யோசிப்பவர்கள் ஒரு நாளும் காரியத்தில் இறங்கமாட்டார்கள். யோசனை என்பது என்ன? ஒன்று நடக்கும் முன் அதைப் பற்றி எல்லாவற்றையும் நிச்சயமாகத் தெரிந்து கொள்வது. யோசனை என்பது அறியாததை அறிந்ததாக ஆக்கும் முயற்சி.

யோசிப்பவன் என்ன சொல்கிறான்? " முதலில் நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்ய வேண்டும். நான் கண் மண் தெரியாமல் சூதாட விரும்பவில்லை."

யோசிப்பது கோழையின் செயல். யோசிப்பவர்கள் கோழைகள்.

நான் இதைக் கேட்டிருக்கிறேன்.

கூட்டம் நிறைந்த அந்தப் பேருந்தில் ஓர் அழகான இளம் பெண் தன் பையிலிருந்து சில்லறை எடுக்க மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தாள். அருகிலிருந்த ஒருவன் "நான் உனக்கும் சேர்த்து டிக்கெட் எடுக்கிறேனே" என்று கேட்டான்.

“முடியாது. அதை ஒரு நாளும் அனுமதிக்க மாட்டேன். அன்னியனான நீ எனக்காக ஏன் செலவழிக்க வேண்டும்?”

“நான் அன்னியன் இல்லை பெண்ணே. என் பேண்ட் ஜிப்பை ஏற்கனவே நீ மூன்று முறை அவிழ்த்துவிட்டாய்.”

அதைத்தான் பழக்கம், அறிவு என்று சொல்கிறோம். உங்களுக்கு உங்கள் மனைவியைத் தெரியுமா? உங்கள் கணவரை? உங்கள் குழந்தையை? உங்கள் தாயை? என்னைத் தெரியுமா? நமக்கு என்ன தெரியும்? எல்லா அறிவும் மேலோட்டமானதுதான். என்றாலும் யோசிப்பவன் எல்லா அறிவையும் முதலில் பெற்று நிச்சயப்படுத்திக்கொண்டு பின் உள்ளே குதிப்போம் என்று நினைக்கிறான்.

ஓர் இடத்திற்குப் போக வேண்டுமென்றால் வரைபடம் இருக்க வேண்டும். கைகாட்டி வேண்டும் வழிகாட்டி வேண்டும். அதில் இருக்கும் அபாயங்களைப் பற்றித் தெரிய வேண்டும். அங்கே போவதால் கிடைக்கும் ஆதாயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். அதன்பின்தான் அவன் நகரத் தொடங்குவான். அது சாதாரணமாக ஒரு புதிய இடத்திற்குப் பயணப்படும்போது செய்யலாம். சன்னியாசத்திற்கு அது உதவாது.

என்னிடம் சன்னியாசம் வாங்கிக் கொள்வது என்பது ஒரு சூதாட்டம். இறைவனிடம் செல்லும் பயணமும் ஒரு சூதாட்டமே!

நீங்கள் எதைப் பார்க்கிறீர்களோ அது உண்மையில்லை. அப்போது என்ன யோசிப்பீர்கள்? என்னதான் யோசிக்க முடியும்?

*நீ எதைப் பார்க்கிறாயோ அது இல்லை.*

*எது இருக்கிறதோ அதை விளக்க வார்த்தைகள் இல்லை.*

எது இருக்கிறதோ அதை உங்களால் பார்க்கமுடியாது. காரணம் உங்கள் மனம். உங்கள் யோசனை. யோசனை செய்வதுதான் மனிதனின் மிகப்பெரிய முட்டாள்த்தனம். உங்கள் தலையில் சில கருத்துகளோடு அலைவீர்கள். அந்தக் கருத்துக்களின் வழியேதான் உலகத்தைப் பார்ப்பீர்கள்.

இதை நான் கேட்டிருக்கிறேன்.

அமெரிக்காவின் கனெக்டிக்கட் மாகாண மக்கள் மோசமான ரயில் சேவைக்குத் தங்களைப் பழக்கப்படுத்திக் கொண்டவர்கள்.

ஒரு நாள் ஒரு ரயில் ஒன்றரை மணிநேரம் தாமதமாக வந்து சேர்ந்தது. அட்டவணைப்படி நாற்பது நிமிடங்களுக்குள் முடிய வேண்டிய பயணம் ஒன்றரை மணி நேரம் தாமதமாக முடிந்திருந்தது. அந்த ரயிலில் வந்து கொண்டிருந்த ஒரு பலவீனமான மலைவாசி கூடக் கடுமையான வார்த்தைகளில் தன் எதிர்ப்பைத் தெரிவித்தான்.

"பனி பெய்யும்போது ரயில்கள் எப்போதும் தாமதமாகத்தான் வரும்."

ரயிலின் நடத்துனர் மலைவாசிக்கு நினைவூட்டினார்.

"அது எனக்குத் தெரியும். ஆனால் இன்று காலை பனி இல்லையே? வானத்தில் ஒரு சிறு மேகம் கூட இல்லையே.?"

"அது எனக்குத் தெரியும். அதற்கு நாங்கள் பொறுப்பல்ல. நேற்று வானிலை அறிக்கையில் இன்று பனி பெய்யும் என்று சொன்னார்கள். அதனால்தான் ரயில் தாமதமாகிவிட்டது."

அதுதான் அறிவின் வழி. அறிவு வானிலை அறிக்கையைப் பார்க்கிறது. வானத்தைப் பார்ப்பதில்லை. அறிவு ஊகங்களை நம்புகிறது; உண்மையை ஏற்க மறுக்கிறது. எதைப் பார்க்க வேண்டும் என்று உங்களுக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கிறதோ அதை மட்டும்தான் பார்க்கிறீர்கள். எது இருக்கிறதோ அதை நீங்கள் பார்ப்பதில்லை.

எதைப் பார்க்க வேண்டும் என்று இந்த சமுதாயம் உங்களைத் தயார் படுத்தியிருக்கிறதோ அதை மட்டுமே பார்க்கிறீர்கள். நிஜங்களைப் பார்ப்பதில்லை. நிஜங்களைப் பார்க்க எந்தச் சமுதாயமும் உங்களைத் தயார்ப்படுத்துவதில்லை. ஏனென்றால் சமுதாயம் என்பதே ஒரு மாயத்தோற்றம்தானே ஒரு புனைவுதானே! ஒரு கற்பனைதானே! ஒரு பொய்தானே!

நான் இந்த அபூர்வமான நிகழ்வைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். நம்பத்தகுந்த வட்டாரங்கள் இதை உண்மை நிகழ்ச்சி என்று சொல்கின்றன.

விஞ்ஞான மேதை டார்வின் கப்பல் பயணம் மேற் கொண்டார். ஒரு நாள் அவருடைய கப்பல் ஒரு சிறிய தீவை அடைந்தது. அவர்கள் கப்பலோ மிகப் பெரியது. அந்தத் தீவுவாசிகள் தங்கள் வாழ்நாளில் அவ்வளவு பெரிய மரக்கலத்தைப் பார்த்ததேயில்லை. அவர்கள் பார்த்ததெல்லாம் இருவர் அமர்ந்து செல்லக்கூடிய சிறிய மீன்பிடிப் படகுகளே.

இந்தச் சூழ்நிலையில் டார்வினின் ராட்சதக் கப்பல் அந்தத் தீவை அடைந்தபோது அதைப் பார்க்க தீவுவாசிகள் யாருமே வரவில்லை என்று டார்வின் தன் நாள் குறிப்பில் எழுதியிருக்கிறார்.

யாருமே வரவில்லை. அவர்கள் தங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கரை ஓரத்தில் மீன் பிடித்துக் கொண்டிருந்தார்கள். பெரிய கப்பல் யாரையுமே கவரவில்லை. கப்பலை யாரும் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

மாலுமிகளுக்கோ ஒரே ஆச்சரியம். "என்ன ஆயிற்று இவர்களுக்கு? புத்தி பேதலித்துவிட்டதா?"

இவ்வளவு பெரிய கப்பலைப் பார்க்க ஓடி வர வேண்டாம்? பெருங்கூட்டமாகக் கூட வேண்டாம்? மொத்தத் தீவும் கூடியிருக்க வேண்டாம்? சே என்ன மக்கள் இவர்கள்!

பின் மாலுமிகள் தீவிற்குள் போய் தீவுவாசிகளிடம் பேசினார்கள். தங்கள் கப்பலைக் காட்டி அதன் பிரம்மாண்டத்தை வர்ணித்தார்கள்.

கடைசியில் அந்தத் தீவின் தலைவன் சொன்னான்:

"நாங்கள் இவ்வளவு பெரிய கப்பலைக் கற்பனை செய்துகூடப் பார்த்ததில்லை. அதனால்தான் அது வரும் என்று எதிர் பார்க்கவில்லை. நாங்கள் எதிர்ப்பார்க்காததால் கப்பல் வந்ததைக்கூட நாங்கள் உணரவில்லை."

எதிர்பார்க்காத ஒன்றை எப்படிப் பார்ப்பீர்கள்? இப்படி ஒரு பொருள் இருக்கும் என்ற எதிர்பார்ப்பு மனதில் இருந்தால் அதைப் பார்க்கலாம். உதாரணத்திற்கு உங்களுக்கு ஒரு மடம் என்றால் என்னவென்றே தெரியாது என்று வைத்துக் கொள்வோம். ஒரு மடத்திற்குள் நுழைகிறீர்கள். என்ன பார்ப்பீர்கள்? அங்கே இல்லாததைத்தான் பார்ப்பீர்கள்.

சரி அந்த இடத்தை ஒரு துறவிமடம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உள்ளபடியே அது துறவிமடம் இல்லை. அப்போதும் அங்கே இல்லாததைத்தான் பார்ப்பீர்கள்.

அது ஒரு கல்லறைத்தோட்டம் என்று தெரியாமல் உள்ளே நுழைந்தால் நீங்கள் அங்கே பேய்களையும் பிசாசுகளையும் பார்க்கமாட்டீர்கள்.

அதே சமயம் அந்த இடத்தை நீங்கள் கல்லறை என்று நினைத்துக் கொண்டிருந்தால் - உள்ளபடியே அது கல்லறையாக இல்லாமல் இருக்கலாம். - யாராவது உங்களுக்குத் தவறான தகவல் கொடுத்திருக்கலாம். - நீங்கள் அங்கே பேய்களைப் பார்க்கத் தொடங்குவீர்கள். உங்கள் பார்வை உங்கள் மனதில் இருக்கும் எதிர்பார்ப்பைப் பொறுத்தது. உங்கள் பார்வையில் தெளிவு இல்லை.

*நீ எதைப் பார்க்கிறாயோ அது இல்லை*

*எது இருக்கிறதோ அதை விளக்க வார்த்தைகள் இல்லை*

*நீ பார்த்தாலொழிய நம்பாதே*

*உன்னிடம் சொல்லப்பட்டதை உன்னால் ஏற்க முடியாது*

கபீர் என்ன சொல்கிறார்? "எனக்குத் தெரியும். நான் சொல்வதை உங்களால் நம்ப முடியாது. ஏனென்றால் நீங்கள் அதைப் பார்த்ததில்லை." அதை எப்படி உங்களால் நம்ப முடியும்? எனக்கு உங்கள் கஷ்டம் புரிகிறது.

நான் உங்களிடம் "சந்நியாசத்தில் குதியுங்கள்" என்று சொன்னால் உங்களால் என்னை நம்பிக் குதிக்க முடியாது. உங்களுக்கு என்னைச் சரியாகத் தெரியாது. அப்பறம் எப்படி

என்னை நீங்கள் நம்ப முடியும்? உங்களுக்கு உங்களையே தெரியாதே! உங்களை நீங்களே எப்படி நம்புவீர்கள்?

எனக்கு உங்கள் குழப்பமும் கஷ்டமும் புரிகிறது. ஆனால் இந்த சந்நியாசத்தில் குதித்தவர்கள் தாங்கள் யோசித்து எடுத்த முடிவின் காரணமாக அப்படிச் செய்யவில்லை.

தங்கள் மனதில் இருக்கும் அச்சங்களையும் ஐயங்களையும் மீறி இதில் குதித்தார்கள். அவர்கள் மனதில் இருந்த எதிர்ப்பையும் மீறி அப்படிச் செய்தார்கள். அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டு சந்நியாசத்தில் இறங்கவில்லை. இதில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட வாய்ப்பேயில்லை.

நான் சொல்வது நீங்கள் அடையப் போகும் ஓர் அனுபவத்தைப் பற்றியது. அதை நீங்கள் மட்டுமே உணர முடியும். அதை அடையாமல் உங்களால் எப்படி அந்த அனுபவத்தை நம்ப முடியும்? 'நாம் எடுக்கும் முடிவு சரிதான்' என்ற தீர்மானத்திற்கு எப்படி உங்களால் முன்கூட்டியே வர முடியும்?

கபீர் சொல்கிறார்: :எனக்குத் தெரியும்

*நீ பார்த்தாலொழிய நம்பாதே*

*உன்னிடம் சொல்லப்பட்டதை உன்னால் ஏற்க முடியாது*

*ஞானி சொல்லாலேயே அதனைத் தெரிந்து கொள்கிறான்*

*அறிவிலி திணறிக் கொண்டிருக்கிறான்*

தெரிந்தவனுக்குச் சிறு குறிப்பு கூடப் போதும். வெறும் வார்த்தைகளே வார்த்தைகளுக்கு அப்பால் இருக்கும் உண்மையை அவனுக்கு உணர்த்திவிடும். ஆனால் அவனுக்குத்தான் ஏற்கனவே தெரியுமே! அவன் ஞானி ஆயிற்றே!

கபீரும் ஃபரீத்தும் சந்தித்தார்கள். இருவரும் ஒன்றும் பேசவில்லை. இரண்டு நாட்கள் சேர்ந்தே இருந்தார்கள். ஆனால் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. சில சமயம் இருவரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். சில சமயம் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டார்கள். ஒருவர் கையை ஒருவர்

பற்றியபடி சந்திரனையும் சூரியனையும் பார்த்தபடி அமர்ந்திருந் தார்கள்.

"என்ன ஆகிவிட்டது இவர்களுக்கு?" இருவரின் சீடர்களுக்கும் பெரும் கவலையாகிவிட்டது

ஃபரீத் பெரிய ஞானி கபீரின் ஞானத்திற்கும் குறைவு இல்லை. ஃபரீத் நாடெங்கிலும் சுற்றுப்பயணம் செய்து கொண் டிருந்தார். அப்போது அவருடைய சீடர்கள் அவரிடம் சொன்னார்கள்.

"இவ்வளவு தூரம் வந்துவிட்டோம். கபீரின் ஆசிரமம் அருகில்தான் இருக்கிறது. போகலாமா? உங்களைப் போன்ற இரண்டு மாபெரும் ஞானிகளை ஒரு சேரப் பார்ப்பது எங்கள் பாக்கியம். உங்கள் இருவரின் சந்திப்பு எங்களுக்கு ஒரு மகத்தான போதனையாக அமையும்."

"ஆகா! அப்படியே செய்யலாம்." என்றார் ஃபரீத்.

இந்த இரண்டு ஞானிகளும் சந்தித்தால் பல விஷயங்களைப் பரிமாறிக் கொள்வார்கள். பலவற்றை அலசி ஆராய்வார்கள். அதனால் நாம் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளலாம். என்று கணக்குப் போட்டார்கள் ஃபரீதின் சீடர்கள்.

அதே சமயத்தில் கபீரின் சீடர்கள் அவரிடம் சொன்னார்கள்: "ஆசானே, மகாஞானி ஃபரீத் இந்த வழியாக வரப்போகிறார் என்பதை அறிந்தோம். அவரை நம் ஆசிரமத்திற்கு அழைக்கலாமே! நீங்கள் இருவரும் சந்திப்பது ஆசிரமவாசிகளுக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாக அமையும். உங்கள் இருவரின் உரையாடலைக் கேட்டு நாங்கள் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம்."

"ஆகா அப்படியே செய்யலாம். " என்று சொல்லிவிட்டு கபீர் பெரிதாகச் சிரித்தார்.

ஃபரீத் அழைக்கப்பட்டார். ஃபரீத் கபீருடைய ஆசிரமத்தில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தார். ஆனால் இரண்டு ஞானிகளும் ஒரு வார்த்தை கூடப் பேசிக்கொள்ளவில்லை.

சீடர்கள் சலிப்படைந்தார்கள். அவர்கள் காரசாரமான விவாதங்களை எதிர்பார்த்தார்கள். அது நடக்காததால் ஏமாந்து போனார்கள். இரவும் பகலும் அந்த ஞானிகளுக்கு அருகிலேயே அமர்ந்திருந்தார்கள். ஒரு நொடிப்பொழுது கூட அந்த இருவரையும் அவர்கள் தனியாக இருக்கவிடவில்லை.

ஒருவேளை யாரும் இல்லாதபோது இருவரும் பேசிக் கொண்டால்? சீடர்கள் தங்கள் தூக்கத்தைக்கூடத் தியாகம் செய்துவிட்டு இருவரின் முகங்களையும் பார்த்தபடி அமர்ந்திருந் தார்கள். என்றாலும் இரண்டு ஞானிகளும் ஒரு வார்த்தை கூடப் பேசிக்கொள்ளவில்லை.

ஃபரீத் விடை பெற வேண்டிய நேரம் வந்தது. அந்தச் சமயத்தில் கூட ஞானிகள் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு மௌனமாகப் பிரிந்தார்கள்.

விடைபெற்று ஃபரீத் வெளியே வந்ததும் அவருடைய சீடர்கள் அவர்மேல் பாய்ந்தார்கள்.

"குருதேவா உங்களுக்கு என்ன ஆயிற்று? நீங்கள் இப்படி அசட்டுத்தனமாக நடந்து கொள்வீர்கள் என்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லை. ஏன் மௌனமாக இருந்தீர்கள்? ஏன் எங்களைச் சித்திரவதை செய்தீர்கள்? உங்கள் மௌனம் மிகவும் கனமாக இருந்தது. உங்களிருவருக்கும் இடையில் உரையாடல் நடக்கும் என்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஏமாந்து போனோம்"

"நான் சொல்ல என்ன இருக்கிறது? கபீருக்கு ஏற்கனவே எல்லாம் தெரியும்."

கபீரின் ஆசிரமத்திலும் இதே கதைதான். அவர் தன் சீடர்களிடம் அதேபோல் சொல்லிக் கொண்டிருந்தார்:

"நான் என்ன சொல்வது? ஃபரீத்திடம் ஏதாவது சொன்னால் அது என் அறியாமைக்குச் சான்றாக அமையும். அவருக்குத் தெரியும். எனக்கும் தெரியும் இருவருக்கும் தெரிந்தது ஒரே விஷயம்தான். ஒருவரின் கண்களை மற்றவர் பார்த்தோம்.

எங்கள் உரையாடல் முடிந்துவிட்டது. அதைத் திருப்பித் திருப்பிச் சொல்வதில் என்ன பயன்?"

தெரிந்தவனுக்கு ஒற்றை வார்த்தைகூட மிகைதான்.

*சிலர் அருவத்தைத் தியானம் செய்கிறார்கள்*

*சிலர் உருவங்களை*

*ஆனால் ஞானிக்குத் தெரியும்*

*பிரம்மம் இரண்டிற்கும் அப்பாற்பட்டது என்று*

சிலர் இறைவனுக்கு உருவம் உண்டு என்று கருதுகிறார்கள். இவர்கள் ஸகுண பிரம்மத்தை வழிபடுகிறார்கள். இன்னும் சிலர் அருவமே ஆண்டவனின் உருவம் என்று நினைக்கிறார்கள். இவர்கள் நிர்க்குண பிரம்மத்தை வழிபடுகிறார்கள். உருவம் அருவம் இரண்டிற்கும் அப்பாற்பட்டவன் இறைவன்.

அவன் அருவ வடிவானவன். என்றாலும் உருவங்களில் திகழ்கிறான். கோடானு கோடி உருவங்களில் ஆண்டவன் வெளிப்படுகிறான் என்றாலும் அவன் இன்னும் வெளிப்படாதவனாகவே இருக்கிறான்.

*அதன் அழகு கண்ணால் பார்க்கும் அழகல்ல.*

அவனைப் பார்க்க வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் உங்கள் கண்கள் உங்களுக்கு உதவாது.

*அதன் அழகு கண்ணால் பார்க்கும் அழகல்ல.*

சொல்லப் போனால் நீங்கள் கண்களை மூடிக் கொள்ள வேண்டும். உங்கள் உணர்வுநிலையில் கண்களைத் திறக்க வேண்டும். உங்கள் விழிப்புணர்வின் கண்களைத் திறக்க வேண்டும். இந்த ஊனக்கண்களால் எந்தப் பயனும் இல்லை.

*அதன் சந்தம் காதால் கேட்கக்கூடியது அல்ல.*

அந்த இசை, அந்த சந்தம் அந்த கானம் அந்த தேவராகம் காதால் கேட்கக்கூடியது அல்ல. நீங்கள் உங்களுக்குள் இன்னும் ஆழமாகப் போகவேண்டும்

ஆண்டவன் உங்களுக்குள் பாடிக் கொண்டிருக்கிறான். அது வெளியே கேட்காது. இந்தக் காதுகளால் வெளியில் இருந்து வரும் இசையைத்தான் கேட்க முடியும். நீங்கள் உள்ளே போக வேண்டும். உங்களுக்குள்ளே இன்னும் அதிக தூரம் போக வேண்டும். அங்கேதான் உலக மகா பாடகன் உங்களுக்காக தேவகானம் இசைத்துக் கொண்டிருக்கிறான். அவன் இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கிறான். அந்தப் பாடல்தான் உங்கள் வாழ்க்கை.

ஆனால் அதைக் கேட்கும் விதமே வேறு.

*கபீர் சொல்கிறான்: அன்பு, துறவு என்ற இரண்டையும் உணர்ந்தவன்*

*எந்நாளும் இறப்பதில்லை*

இதை நன்றாக நினைவில் கொள்ளுங்கள். அன்பிற்கும் துறவுக்கும் இருப்பதுதான் அதிகப்பட்ச இசைவு. அன்பையும் துறவையும் ஒன்றாக இணைக்கும் இந்த மகா சூத்திரத்தைக் கவனமாக மனதில் வாங்கிக் கொள்ளுங்கள். இதுதான் என் போதனை. இதுதான் நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது.

என்னிடம் சிலர் புகார் செய்கிறார்கள்: "நீங்கள் தியானத்தை மட்டும் கற்றுக் கொடுத்தால் போதாதா? தேவையில்லாமல் அன்பை ஏன் உள்ளே இழுக்கிறீர்கள்? துறவிகள் அன்பைப் பற்றிப் பேசி நாங்கள் கேட்டதேயில்லையே! நீங்கள் மட்டும் ஏன் விதிவிலக்காக , அன்பு அன்பு என்று ஜல்லியடித்துக் கொண்டிருக்கிறீர்கள்? துறவிகள் அன்பைப் பற்றிப் பேசினாலும் சாதாரண மனித அன்பைப் பற்றிப் பேசுவதில்லையே. நீங்கள் மட்டும் ஏன் அப்படிப் பேசுகிறீர்கள்?"

அன்று ஒருநாள் பேசும் போது "அன்பே கடவுள்" என்று சொன்னேன். கடவுளையே அன்பு என்று சொன்னேன். அந்த அன்பைக் குறிக்கும் சொல்லை ஆங்கிலத்தில் எழுதும் போது love என்று எழுதினால் போதும். தயவு செய்து பெரிய L போட்டு Love என்று எழுதாதீர்கள் என்று சொன்னேன்.

ஒரு பெண்மணி கோபமாகக் கடிதம் எழுதியிருந்தார்:

"ஏன் அப்படி எழுதக்கூடாது? பெரிய L போட்டு Love என்று எழுதினால் என்ன? ஏன் சிறிய l போட வேண்டும் என்று அடம் பிடிக்கிறீர்கள்?" அவளுடைய எதிர்ப்பை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது.

ஆங்கிலத்தில் Love என்று பெரிய L போட்டு எழுதும் போது அது இறைவனின் அன்பைக் குறிக்கிறது. தெய்வத்தின் அன்பை மனிதனின் அன்பிலிருந்து வேறுபடுத்திக்காட்டுவதற்காகப் பெரிய L போடுவது சம்பிரதாயம்.

பெரிய L போட்டு Love என்று எழுதினால் அதில் உங்கள் அன்பு சேர்க்கப்படுவதில்லை. அது கண்ணனுக்கும் கோபிகைகளுக்கும் இடையே உள்ள அன்பு. ஆண்டவனுக்கும் அடியார்களுக்கும் இடையில் உள்ள அன்பு. Love என்ற ஆங்கில வார்த்தை உங்களுக்கும் உங்கள் குழந்தைக்கும் இடையே இருக்கும் அன்பைக் குறிக்காது. அந்த அன்பைக் குறிக்க சிறிய l போட்டு love என்று எழுத வேண்டும். பெரிய L போட்டு Love என்று எழுதினால் அது கடவுளைக் குறிக்கும் சொல்லாகிவிடும். அன்புதானே கடவுள்!

"ஆனால் சாதாரண மனித அன்பை எப்படி நீங்கள் தெய்விகம் என்று சொல்லலாம்? அதை எங்களால் ஜீரணிக்க முடியவில்லை. அது கடவுளை அவமதிக்கும் நாத்திகவாதம்." என்று என்னிடம் வாதிடுகிறார்கள்.

என் செய்தி இதுதான். பெரிய L கிடையாது. ஆங்கிலத்தில் கடவுளைக் குறிக்கும் வார்த்தையான God என்பதைக்கூட god என்றுதான் எழுத வேண்டும் என்பதுதான் என் கொள்கை. ஏனென்றால் எலலாமே தெய்விகம்தான். தெய்விகம் இல்லாத எதுவும் இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை. சாதாரணத்தில்தான் அசாதாரணம் புதைந்திருக்கிறது. சிறிய l எழுத்தைப் பாருங்கள் அதில் பெரிய L அடங்கியிருக்கிறது.

இறைவன் சாதாரணக் கூழாங்கல்லிலும் இருக்கிறான். கோஹினூர் வைரத்திலும் இருக்கிறான். அவனுக்கு இரண்டும் ஒன்றுதான். மொத்தப் படைப்பும் அவனால் ஜொலிக்கிறது.

*கபீர் சொல்கிறான்: அன்பு, துறவு என்ற இரண்டையும் உணர்ந்தவன்*

இதைப் புரிந்து கொள்வது கடினம். இது நம் பகுத்தறிவுக்குப் புறம்பானது. அன்பைப் புரிந்து கொள்ளலாம். துறவை? இல்லையென்றால் துறவைப் புரிந்து கொள்ளலாம். அதில் அன்பு எங்கேயிருந்து வந்தது? அன்பும் துறவும் ஒன்றுக்கு ஒன்று முரணானவை.

நீங்கள் நேசிக்கும் விஷயத்தை எப்படித் துறக்க முடியும்? துறந்த விஷயத்தை நேசிப்பது எப்படி?

இங்குதான் நாம் கவனமாக இருக்க வேண்டும். சாதாரண அன்பு என்பது ஒருவகையான உறக்கம். நீங்கள் நேசிக்கும் பொருள்மேல் பற்று கொள்கிறீர்கள். அதை உங்கள் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்று துடிக்கிறீர்கள்.

அதன்மேல் வேறு யாராவது சொந்தம் கொண்டாடினால் பொறாமை கொள்கிறீர்கள். இந்த சொந்தம் கொண்டாடுதலும் பொறாமையும் உங்கள் நேசத்தில் விஷத்தைப் பாய்ச்சுகின்றன. அன்பை அழிக்கின்றன. எப்போது நீங்கள் நேசிக்கும் பொருள்மேல் உரிமை கொண்டாடுகிறீர்களோ அப்போதே அந்த நேசம் அழிந்துவிடுகிறது. அது அன்பு இல்லை என்று பிரகடனம் செய்துவிட்டீர்கள்.

உரிமை கொண்டாடுதலும் பொறாமையும் இல்லாதபோதுதான் அன்பு இருக்கும். அதாவது அன்பு துறவுநிலைக்குச் சென்றுவிட்டது என்று பொருள். நீங்கள் ஒருவரை நேசிக்கிறீர்கள். ஆனால் அவர்மேல் உரிமை கொண்டாடுவதைத் துறந்து விட்டீர்கள். நேசம் இருக்கிறது; பொறாமையைத் துறந்து விட்டீர்கள். நீங்கள் அவரை நேசிக்கிறீர்கள்:

ஆனால் அவரை உங்களுக்கு அடிமையாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைக்கவில்லை. அவரை நேசிக்கிறீர்கள். ஆனாலும் அவருடைய சுதந்திரத்தை மதிக்கிறீர்கள். உங்களிடம் நேசம் இருக்கிறது. ஆனால் அந்த நேசத்தில் அவரைச் சிறைப்படுத்த வேண்டும் என்று நீங்கள் நினைக்கவில்லை.

நேசம் இருக்கிறது. ஆனால் பற்றுதல் இல்லை. மகத்தான அன்பு இருக்கிறது. ஆனால் நீங்கள் நேசிப்பவரிடம் அட்டை போல் ஒட்டிக் கொள்வதில்லை. இதுதான் துறவு.

உலகத்தையே காதலியுங்கள். ஆனால் பற்று வைக்காதீர்கள். உலகத்தில் வாழுங்கள். ஆனால் உலகத்தன்மையுடன் வாழாதீர்கள். அதுதான் துறவு. அதைத்தான் நான் சந்நியாசம் என்று அழைக்கிறேன். அன்புக்கும் துறவுக்கும் ஏற்படும் மகத்தான இசைவே நான் சொல்லும் சந்நியாசம். இம்மைக்கும் மறுமைக்கும் உள்ள இசைவு அது. படைத்தவனுக்கும் படைக்கப்பட்டதற்கும் இருக்கும் உன்னதமான இசைவு அது. உடலிற்கும் ஆன்மாவிற்கும் இடையே உள்ள உத்தமமான இசைவு அது முரணில்லாத இசைவு. எல்லா முரண்பாடுகளும் அழிந்துவிட்ட ஒரு மகத்தான நிலை. '

துறவு நிலையை உள்ளடக்கும் அளவிற்கு உங்கள் அன்பு பெரிதாக இருக்குமென்றால் அதுதான் மெய்யான அன்பு. ஒரு மனிதனிடம் அன்பும் துறவும் ஒரு சேரத் தோன்றுமானால் அதுதான் அதிகபட்ச ஆன்மிக வளர்ச்சி. அதுதான் நம் ஊழ். அதற்காகத்தான் நாம் படைக்கப்பட்டிருக் கிறோம். அந்த நிலையை அடையும்வரை நமக்குள் எந்த நிறைவும் தோன்றாது.

இறைவனே காதலன். அவனே சந்நியாசி.

இறைவன் இந்த உலகை ஆழமாக நேசிக்கிறான். இல்லாவிட்டால் இந்த உலகம் தோன்றியிருக்காது. என்றாலும் அவனை இந்த உலகத்தில் எங்கும் பார்க்க முடியாது. அவன் எங்கும் இல்லை. அவனுடைய துறவுநிலை பரிபூரணமானது. அவன் இந்த உலகைக் காதலிக்கிறான்.

அதனை இன்னும் ஆக்கிக் கொண்டேயிருக்கிறான். உலகின் மேல் காதல் இல்லையென்றால் அதை ஏன் இன்னும் உருவாக்கிக்கொண்டேயிருக்க வேண்டும்? நம்மையும் இந்த உலகத்தையும் தன் கண்ணிற்குள் வைத்துப் பார்த்துக் கொள்கிறான் இறைவன். ஆனாலும் அவனுக்கு இந்த உலகின்மேல் எந்தப் பற்றும் இல்லை. என்றாவது ஒரு நாள்

சந்தைக்கு நடுவில் வந்து நின்று "பாருங்கள் நான்தான் இந்த உலகத்தைப் படைத்தவன்." என்று சுயப் பிரகடனம் செய்து கொண்டிருக்கிறானா?

அவனிடம் 'நான்' என்ற எண்ணமே கிடையாது. 'நான்தான் படைத்தவன்' என்ற எண்ணம் கொஞ்சம்கூட இல்லாத படைப்பாளி அவன். அவனுடைய அன்பும் பரிபூரணமானது. அவனுடைய துறவும் பரிபூரணமானது.

ஒரு சந்நியாசி கடவுளின் சிறு பிம்பம். ஓர் உண்மையான சந்நியாசியின் அன்பும் சரி துறவும் சரி முழுமையாக இருக்கும்.

கபீர் சொல்கிறார்

*அன்பு, துறவு என்ற இரண்டையும் உணர்ந்தவன்*

*எந்நாளும் இறப்பதில்லை.*

அவன் மரணத்தைத் தாண்டிப் போகிறான். மரணமில்லாப் பெருவாழ்வு பெறுகிறான். இறையமுதத்தைச் சுவைக்கிறான். மரணத்தைத் தவிர்க்கும் அமிர்தத்தை அவன் கண்டு கொண்டுவிட்டான்.

இந்த அமிர்தத்தைத் தேடித்தான் உலகில் உள்ள ரசவாதிகள் எல்லாம் அலைந்து கொண்டிருக்கிறார்கள். இந்த அமிர்தம் உங்களுக்குள் ஊறும்.

அதற்கு ஒரு கூட்டணி தேவைப்படுகிறது. ஒரு பெரிய சேர்க்கை தேவைப்படுகிறது. அன்பும் துறவும் சேர்ந்துதான் அந்தக் கூட்டணியை அமைக்க வேண்டும். அந்த சேர்க்கையில் இந்த இரண்டும் மட்டும்தான் இருக்க வேண்டும்.

இன்று இது போதும்.

## அத்தியாயம் - 8

# தேர்ந்தெடுக்கும் சுதந்திரம்

முதல் கேள்வி:

*ஓஷோ, சாவிற்குப் பின் வாழ்க்கை இருக்கிறதா?*

கேள்வியே தவறு. அர்த்தமற்றது. முந்திரிக் கொட்டை போல் முன்னால் குதிக்கக் கூடாது. அப்படியே குப்புற விழுவீர்கள். அடிப்படைக் கேள்வியைத்தான் முதலில் கேட்க வேண்டும். ஆரம்பத்திலிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும். இன்னும் அடிப்படையான கேள்வியைக் கேளுங்கள்.

உதாரணமாக "பிறந்த பின்னால் வாழ்க்கை இருக்கிறதா?" என்று கேட்கலாம். அது இன்னும் அடிப்படையான கேள்வி. ஏனென்றால் பலர் பிறக்கிறார்கள். வெகு சிலரே வாழ்கிறார்கள். பிறந்ததனால் மட்டுமே நீங்கள் வாழ்கிறீர்கள் என்று ஆகிவிடாது. நீங்கள் இருக்கிறீர்கள். வாழ்கிறீர்களா? வாழ்க்கை என்பது இருப்பதைவிட அதிகம். நீங்கள் பிறந்துவிட்டீர்கள். மறுக்கவில்லை. ஆனால் நீங்கள் உங்கள் இருப்புநிலையில் மறுபிறப்புப் பிறக்கும் வரை உங்கள் வாழ்க்கை ஆரம்பமாகாது. அதுவரை நீங்கள் இருப்பது வாழ்க்கையாகாது.

பிறப்பு அவசியம்தான். ஆனால் அதுமட்டும் போதாது. அதைவிட இன்னும் கொஞ்சம் அதிகம் வேண்டும். இல்லாவிட்டால் வெறுமனே பிறந்து வெந்ததைத் தின்று வயதாகிச் சாகும் அவல நிலைதான் ஏற்படும். நீங்கள் வாழ்வது வாழ்க்கையில்லை. படிப்படியாக நிகழும் மரணம். நீங்கள் பிறந்த அந்த நொடியிலிருந்து உங்கள் மரண ஊர்வலம் தொடங்கிவிடுகிறது. வாழும் மனிதர்களைப் பார்ப்பது மிகவும் அரிதாகிவிட்டது. புத்தர், ஏசுபிரான், கபீர் - இவர்களைப் போன்றவர்கள்தான் வாழ்கிறார்கள்.

ஓர் ஆச்சரியத்தைப் பாருங்களேன். புத்தர் ஏசு கபீர் போன்று உண்மையாகவே வாழ்பவர்கள் ஒரு நாளும் "சாவிற்குப் பின் வாழ்க்கை இருக்கிறதா?" என்று கேட்பதில்லை. அவர்களுக்கு வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியும். அந்த அறிதலில் அவர்களின் மரணம் மறைந்துவிட்டது.

வாழ்க்கை என்னவென்று அறிந்து கொண்டால் மரணம் இருக்காது. வாழ்க்கை என்னவென்று தெரியாதபோதுதான் மரணம் நம்மைப் பயமுறுத்துகிறது.

வாழ்க்கை பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு இல்லை. அதனால்தான் உங்களுக்கு மரணமில்லாப் பெருவாழ்வு என்றால் என்னவென்று புரியவில்லை. நீங்கள் வாழ்க்கையை இன்னும் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. அதனால்தான் மரணபயம் உங்களை வாட்டுகிறது. வாழ்க்கையைப் புரிந்து கொண்ட அந்தக் கணமே மரணமும் மரணபயமும் மாயமாக மறைந்து போய்விடும்.

இருண்ட அறையில் வெளிச்சத்தைக் கொண்டு வாருங்கள். உடனே இருட்டு மறைந்துவிடும். வாழ்க்கையைத் தெரிந்து கொள்ளுங்கள். மரணம் மறைந்துவிடும். உண்மையிலேயே வாழ்ந்து கொண்டிருப்பவன் மரணம் என்ற வார்த்தையைக் கேட்டதும் கைகொட்டிச் சிரிக்கிறான். மரணம் நிகழ வாய்ப்பேயில்லை என்று அவனுக்குத் தெரியும். இயற்கையில் மரணமேயில்லை என்பதை அவன் அறிவான். எதெல்லாம் இருக்கிறதோ அதெல்லாம் தொடர்ந்து இருக்கும். எது இருக்கிறதோ அது மறைந்து போக வாய்ப்பேயில்லை.

ஆனால் இதை ஒரு தகவலாகப் புரிந்து கொள்ள முடியாது. உங்கள் இருப்புநிலை மூலமாக உணர வேண்டும்.

சாதாரணமாக அனைவரின் மனதிலும் இந்தக் கேள்வி இருக்கிறது. நீங்கள் கேட்கிறீர்களோ இல்லையோ இந்தக் கேள்வி உங்கள் மனதில் இருப்பதை மறுக்க முடியாது.

'செத்த பின் என்ன நடக்கும்?' என்பதுதான் அந்தக் கேள்வி. சாவிற்கு முன்னால் எதுவும் நடக்கவில்லை. அதனால் தான் அந்தக் கேள்வி எழுகிறது.

நீங்கள் பிறந்த பின்னும் உங்கள் வாழ்க்கை தொடங்க வில்லை அதனால் இறந்த பின்னாவது வாழ்க்கை இருக்குமா என்ற சந்தேகம் எழுகிறது. இறந்த பின் இருக்கும் வாழ்க்கையை நம்ப முடியவில்லை. பிறந்த பின் வாழ்க்கை வந்திருக்க வேண்டும். ஆனால் வரவில்லை. இறந்தபின்னால் அது எப்படி வரும்?

வாழ்க்கையைப் பற்றித் தெரிந்தவனுக்கும் மரணம் என்பது இன்னொரு ஜனனம் என்று நன்றாகத் தெரியும்.

ஆமாம். மரணம் இன்னொரு ஜனனம். மரணத்தில் ஒரு புது கதவு திறக்கிறது. எந்தக் கதவை நீங்கள் ஜனனம் என்று அழைக்கிறீர்களோ அந்தக் கதவிற்கு அந்தப் பக்கம் இருப்பது மரணம்.

இருப்பது ஒரே கதவு. இந்தப் பக்கத்திலிருந்து பார்க்கும்போது அதன் பெயர் மரணம். அந்தப் பக்கத்திலிருந்து பார்க்கும்போது அதன் பெயர் ஜனனம்.

மரணம் இன்னொரு ஜனனத்தைக் கொண்டு வருகிறது. இன்னொரு தொடக்கத்தைத் தொடங்கிவைக்கிறது. மற்றுமொரு பயணத்தின் ஆரம்பம் மரணம்.

ஆனால் இப்போது இது உங்களுக்கு வெறும் ஊகமாகத்தான் இருக்க முடியும். வாழ்க்கை என்னவென்று தெரிந்தால்தான் இதன் பொருள் உங்களுக்குப் புரியும். அதனால்தான் சரியான கேள்வியைக் கேளுங்கள் என்று சொன்னேன். ஒரு தவறான கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது. சொன்னாலும் தவறான பதிலைத்தான் சொல்லமுடியும். ஒரு தவறான கேள்வி தவறான பதிலை எதிர் நோக்கியிருக்கிறது.

உங்களுக்கு ஞானத்தைத் தர வேண்டும் என்பதற்காகத்தான் நான் இங்கே இருக்கிறேன். உங்களை மதியூகிகளாக மாற்ற வேண்டும் என்பது என் நோக்கம் அல்ல. அனுபவம்தான் நம் இலக்கு. தத்துவம் அல்ல. அனுபவத்தால்தான் மரணம் என்ற புதிருக்கு விடை காண முடியும்.

நீங்கள் பிறக்கிறீர்கள். ஆனால் உண்மையில் பிறப்பதில்லை. நீங்கள் மறுபிறவி எடுக்க வேண்டும். நீங்கள் இருமுறை பிறக்க வேண்டும். முதல் பிறவி உடல் ரீதியாக மட்டுமே ஏற்படுகிறது. இரண்டாவது பிறப்புத்தான் நிஜமானது. அதுதான் ஆன்மிக ஜனனம். நீங்கள் யாரென்று உங்களுக்குத் தெரிய வேண்டும். 'நான் யார்?' என்ற கேள்வியை நீங்கள் எழுப்பிக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கை நடந்து கொண்டிருக்கும்போதே வாழ்க்கையைப் பற்றி விசாரித்தால் என்னவாம்? அதற்குள் ஏன் சாவைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? சாவு வரும் போது அதனை எதிர்கொள்ளலாம். அந்தச் சமயத்தில் அதை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு வாழும்போதுதான் இருக்கும். எந்தக் காரணத்தைக் கொண்டும் அதை நழுவ விடாதீர்கள்.

உங்களுக்கு வாழ்வைப் பற்றித் தெரிந்திருந்தால் சாவைப் பற்றி நிச்சயம் தெரிந்திருக்கும். சாவு நம் விரோதியல்ல. உற்ற நண்பன். சாவு என்பது ஆழ்ந்த தூக்கமல்லாமல் வேறு என்ன? தூக்கத்திற்குப் பின் ஒரு பகல் பொழுது வரத்தான் போகிறது. எல்லாம் மீண்டும் ஆரம்பிக்கத்தான் போகிறது. இந்தக் கோணத்தில் பார்த்தால் சாவு என்பது ஓர் ஓய்வு. மிகவும் தேவைப்படும் ஓர் ஓய்வு. வாழ்நாள் முழுவதும் ஓடியாடி அலைந்தபின் ஓயாமல் உழைத்தபின் இறுதியில் கிடைக்கும் ஓய்வு. அந்த தெய்விக ஓய்வு தேவைப்படத்தான் செய்கிறது. சாவு என்பது மூலத்தை நோக்கி மீண்டும் செல்லும் ஒரு பயணம். ஏன் தூக்கம்கூட ஒரு வகையில் அப்படித்தானே!

ஒவ்வொரு இரவும் நீங்கள் ஒரு குட்டிச் சாவு சாகிறீர்கள். அதனைத் தூக்கம் என்று நீங்கள் அழைக்கிறீர்கள். அதனைச் சிறுமரணம் என்று அழைப்பது இன்னும் பொருத்தமாக இருக்கும். உங்களின் மேலோட்டமான பகுதிகளிலிருந்து நீங்கள் மறைந்து உங்களின் ஆழமான பகுதிகளுக்குச் சென்று ஓய்வு எடுக்கிறீர்கள்.

அந்த நேரத்தில் நீங்கள் தொலைந்து போகிறீர்கள். நீங்கள் யாரென்றே உங்களுக்குத் தெரியாது. இந்த உலகத்தைப் பற்றி உங்கள் உறவுகளைப் பற்றி மக்களைப் பற்றி மறந்து போகிறீர்கள். நடப்பது என்னவோ ஒரு சிறு மரணம்தான். ஒரு குட்டிச் சாவுதான். என்றாலும் அது உங்களுக்குப் புத்துயிர் கொடுக்கிறது. மறுநாள் காலை மீண்டும் உற்சாகத்துடன் உயிரோட்டத்துடன் நாளைத் தொடக்குகிறீர்கள். மீண்டும் ஆயிரத்தியோரு வேலைகளில் அநாயாசமாகக் குதிக்கத் தயாராகிறீர்கள். சவால்களைச் சமாளிக்க முன் வருகிறீர்கள். இரவு மீண்டும் களைத்துவிடுகிறீர்கள்.

இந்தக் கூத்து தினமும் நடக்கிறது. தூக்கம் என்றால் என்னவென்றே உங்களுக்குத் தெரியாது. சாவைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? சாவு என்பது நீண்ட தூக்கம். ஒரு முழு வாழ்க்கையை வாழ்ந்து முடித்தவுடன் கிடைக்கும் பெரிய ஓய்வு. அது உங்களைப் புதுப்பிக்கும். உங்களுக்குப் புத்துயிர் கொடுக்கிறது.

இரண்டாவது கேள்வி

*ஓஷோ,*

*நான் கிராண்ட் ஹோட்டலில் தங்கியிருக்கிறேன். அதன் சொந்தக்காரர் உங்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்கச் சொன்னார். " கடவுள் ஏன் இந்த உலகத்தைப் படைத்தார்?"*

உங்களுக்கு நான் முதலில் சொல்ல விரும்புவது என்னவென்றால் மற்றவரின் கேள்விகளை என்னிடம் கொண்டு வராதீர்கள். கேள்வி கேட்பவர்களைக் கொண்டு வாருங்கள். ஏனென்றால் என்னால் அடுத்தவர் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டு இருக்க முடியாது. கேள்வி கேட்பவர் இங்கே என் முன்னிலையில் இருக்க வேண்டும். என் முன்னிலையின் அடி ஆழத்தில் கேள்விக்கான பதில் இருக்கிறது. பதில் என் வார்த்தைகளில் இல்லை; என் முன்னிலையில் இருக்கிறது. என் இருப்புநிலையில் இருக்கிறது.

இரவல் வாங்கிய கேள்விகளை இங்கு கொண்டு வராதீர்கள். கேள்வி உங்கள் மனதில் எழவில்லையென்றால் அந்தக் கேள்வி உங்களுக்கு அர்த்தமற்றது. அந்த ஹோட்டல் சொந்தக்காரரிடம் "நீங்களே வந்து நேரடியாகக் கேளுங்கள்" என்று சொல்லுங்கள். அவருடைய கேள்விக்குப் பதில் தெரிய வேண்டும் என்ற ஆர்வம் உண்மையிலேயே இருந்தால் அவர் நிச்சயம் வருவார்.

அவருக்குக் கடவுள்மேல் எல்லாம் உண்மையாகவே ஆர்வம் இருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. அவருக்கு இருப்பது ஆர்வக் கோளாறு மட்டுமே. ஆர்வக் கோளாறு உள்ள ஆசாமிகள் முட்டாள்களாகவே இருக்கிறார்கள். முட்டாள் களுக்குத்தான் அவர்களுக்குப் புரியாத விஷயங்களில் ஆர்வம் இருக்கும் அது ஆர்வம் இல்லை. ஆர்வக் கோளாறு.

அவருக்கு உண்மையிலேயே பதில் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருந்தால்.. நான் இங்கே பூனாவில் இருக்கிறேன். அவரும் இதே பூனாவில் ஹோட்டல் நடத்திக் கொண்டிருக்கிறார். தாராளமாக வரலாமே! தொலைதூர நாடுகளில் இருக்கும் நீங்கள் என்னைத் தேடி வந்திருக்கிறீர்கள். இதே ஊரில் இருக்கும் அவருக்கு வர வேண்டும் என்று தோன்றவில்லையே! அவருக்கு இருப்பது ஆர்வம் இல்லை. ஆர்வக் கோளாறு.

அவர் எதையும் பணயம் வைக்க விரும்பவில்லை. இங்கு வரும் அளவிற்குக்கூட அவருக்குத் தைரியம் இல்லை. இந்த நகரில் இருந்து கொண்டு இங்கே வருவதற்கு என்ன லட்ச ரூபாயா செலவாகப் போகிறது? அவர் வந்திருக்கலாம். நீங்கள் இங்கே தினமும் வருகிறீர்கள் என்று அவருக்குத் தெரியும். நீங்கள் இங்கு ஒரு சந்நியாசி என்றும் அவருக்குத் தெரியும். நீங்கள் உங்கள் வாழ்க்கையையே பணயம் வைத்து இங்கு வந்திருக்கிறீர்கள் என்பதுகூட அவருக்குத் தெரியும். அவருக்கு இன்னும் வரவேண்டும் என்று தோன்றவில்லை.

இந்த மாதிரி அபத்தமான கேள்விகளை என்னிடம் கொண்டு வராதீர்கள். இவற்றுக்குப் பதில் சொல்ல முடியாது.

ஏனென்றால் கேள்வி தீவிரமாக இருந்தால்தான் கேள்வி உங்கள் இருப்புநிலையின் மையக்கருவிலிருந்து உதித்தால்தான் உங்கள் வளர்ச்சிக்கு உதவும் கேள்வியாக இருக்கும். இல்லாவிட்டால் அந்தக் கேள்வி தேவையில்லை.

அந்தக் கேள்விக்குப் பின்னால் நீங்கள் இருந்தால்தான் அது ஏற்ற கேள்வியாக இருக்கும். அந்தக் கேள்விக்காக நீங்கள் எதையாவது செய்யத் துணிந்தால்தான், எதையாவது இழக்கத் துணிந்தால்தான் அது பயனுள்ள கேள்வியாக இருக்கும்.

இத்தகைய மனிதர்களுக்கு இறைவன் தன்னைக் காட்டிக் கொள்வதில்லை. அவர்கள் இருந்த இடத்தில் இருந்தபடி எதையுமே இழக்காமல் இன்னும் அதிகம் அடைய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். கடவுளை மலிவான விலைக்கு வாங்கப் பார்க்கிறார்கள். பழைய கார்களை அடிமாட்டு விலைக்கு வாங்குவதுபோல் பழைய கடவுளை இன்னும் குறைந்த விலைக்கு வாங்க முடியுமா என்று அலைந்து கொண்டிருக்கிறார்கள்.

நான் சொல்லும் பதிலை நீங்கள் கவனித்துக் கேட்டுப் பின் அவரிடம் போய்ச் சொல்வீர்கள். முதலில் உங்களுக்கு எதுவும் தெரியாது. நான் சொல்வதை நீங்கள் சரியாகக் கவனிக்க மாட்டீர்கள். தவறான செய்தியை நீங்கள் கொண்டு செல்லும் வாய்ப்பு இருக்கிறது.

நடுவில் உங்கள் மனம் வந்து புகுந்து கொள்ளும். அது என் பதிலை உருச் சிதைத்துவிடும். நான் சொல்வதைக் கூட்டிக் குறைத்துச் சொல்வீர்கள். என் பதிலுக்கு உங்கள் சாயத்தைப் பூசிச் சொல்வீர்கள். உங்கள் புரிந்துணர்வால் அதை மாற்றுவீர்கள். அதன் பின் அந்த சிதைக்கப்பட்ட பதிலை எடுத்துக் கொண்டு கேள்வி கேட்டவரிடம் செல்வீர்கள். என் பதில் ஏற்கனவே செத்துவிட்டது. நீங்கள்தான் அதைக் கொன்றுவிட்டீர்களே! அதன்பின் அதனைக் கொண்டு போய் அவரிடம் கொடுப்பீர்கள்.

இப்படிக் கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்ள முடியுமென்றால் நான் எதற்கு? புத்தகங்கள் இருக்கின்றனவே! அவரை ஒரு நூலகத்திற்குப் போகச் சொல்லுங்கள். அங்கே எல்லா பதில்களும் இருக்கின்றன. உங்கள் நண்பர் அங்கே எதையாவது படித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தக் கேள்வியே வந்திருக்காது. கடவுள் என்ற சொல்லை அவர் கேள்விப்பட்டிருக்க வேண்டும்.

இனிமேல் இப்படிச் செய்யாதீர்கள். யாராவது இப்படிக் கேள்வி கேட்டால் அவரை இங்கே இழுத்துக் கொண்டு வாருங்கள்.

"இங்கே வந்து இந்த மனிதனை நேருக்கு நேர் பார்த்து இந்தக் கேள்வியைக் கேள்." என்று அவரிடம் சொல்லுங்கள்.

எனக்கு இன்னொரு சந்தேகம் இருக்கிறது. இந்தக் கேள்வி உங்களுடையதாக இருக்கலாம். இந்தக் கேள்வியை நேரிடையாகக் கேட்க உங்களுக்குத் தைரியம் இல்லாமல் இருக்கலாம். உண்மையான ஆழமான கேள்விகளை எழுப்பக்கூட மக்கள் பயப்படுகிறார்கள். வெட்கப்படுகிறார்கள்.

ஏன் இந்த வெட்கம்? ஏனென்றால் கேள்வி கேட்டால் உங்கள் அறியாமை நிரூபணமாகிவிடும் என்ற அச்சம் இருக்கிறது. அதனால் மக்கள் அடுத்தவர்கள் பின்னால் ஒளிந்து கொண்டு கேள்விகள் கேட்கிறார்கள். 'நான் தங்கியிருக்கும் கிராண்ட் ஹோட்டலின் சொந்தக்காரர்' என்பது ஒளிந்து கொள்ளச் சரியான இடம்.

கேள்வி கேட்கவே மக்கள் வெட்கப்படுகிறார்கள். ஏனென்றால் கேள்வி கேட்கும் போது 'எனக்குத் தெரியாது' என்பதையும் நீங்கள் பிரகடனப் படுத்துகிறீர்கள்.

ஒரு முறை ஒருவன் என்னிடம் வந்து 'என் நண்பன் தன் ஆண்மையை இழந்துவிட்டான். தாங்கள் ஏதாவது ஆலோசனை சொல்ல முடியுமா?' என்று கேட்டான்.

நான் சொன்னேன்.

"உன் நண்பனே இங்கே வந்து உண்மையை நேரடியாக என்னிடம் சொல்லியிருக்கலாமே! நீ ஏன் அவனுக்காக இவ்வளவு கவலைப்படுகிறாய்.

நீ உன் நண்பனை அனுப்பியிருக்கலாம். அவன் என்னிடம் உண்மையைச் சொல்லியிருப்பான். 'என் நண்பன் தன் ஆண்மையை இழந்துவிட்டான்.' என்று.

இந்தக் கேள்வியைக் கேட்கும் அளவிற்குக்கூட உனக்கு ஆண்மையில்லையே! ஏன் தேவையில்லாமல் உன் நண்பனை உள்ளே இழுக்கிறாய்?"

கேள்வி கேட்கும்போது முதல் காரியமாக உங்கள் அறியாமையை உணர்கிறீர்கள். அந்த நிலையிலிருந்துதான் உங்கள் விசாரணை தொடங்குகிறது. கேள்வி கேட்பவன் தன் அறியாமையை உணர்ந்து அதை ஏற்றுக் கொண்டு கேள்வி கேட்கும்போது அந்தக் கேள்வியே மிகவும் அழகாக இருக்கிறது. அப்போது அந்தக் கேள்வியும் ஆரோக்கியமானதாக இருக்கும். கேள்வி என்பது உங்கள் குழந்தை. தாய் ஆரோக்கியமாக இருந்தால்தானே குழந்தையும் ஆரோக்கியமாக இருக்கும்.?

"எனக்கு இது தெரியாது அதனால்தான் இந்தக் கேள்வி" என்று நீங்கள் சொல்லும்போது அந்தக் கேள்வியில் உயிர்ப்பு இருக்கிறது. ஆரோக்கியம் இருக்கிறது. அதன் இதயம் நன்றாகத் துடித்துக் கொண்டிருக்கிறது. அத்தகைய கேள்விகளை நான் விரும்புகிறேன். அதை வைத்து நான் ஏதாவது செய்யமுடியும்.

ஆனால் இப்போது நீங்கள் கொண்டு வந்திருப்பது ஒரு செத்த கேள்வி. ஏனென்றால் உங்களால் உங்கள் அறியாமையை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. கிராண்ட் ஹோட்டல் சொந்தக்காரருக்கு நீங்கள் அவர் பெயரில் கேள்வி கேட்டதே தெரியாது. அதனால்தான் நான் உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லப் போகிறேன். அது உங்களுடைய கேள்வி என்று எனக்குத் தெரியும்.

"கடவுள் ஏன் இந்த உலகைப் படைத்தார்?"

உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். கடவுள் இந்த உலகைப் படைக்கவில்லை. இந்த உலகம் உங்கள் படைப்பு. கடவுள் ஓர் உலகைப் படைத்தது உண்மைதான். ஆனால் அந்த உலகைப் பற்றி உங்களுக்கு ஒன்றுமே தெரியாது.

இந்த உலகம் கடவுள் படைத்ததல்ல. ரிச்சர்ட் நிக்ஸன், வியட்நாம் யுத்தம் இடி அமீன் இருக்கும் இந்த உலகைக் கடவுள் படைக்கவில்லை. அடால்ஃப் ஹிட்லர், முசோலினி, ஃபாசிஸம், கம்யூனிஸம், ஸ்டாலின் மா சே துங் உள்ள இந்த உலகைக் கடவுள் படைக்கவில்லை.

மக்களின் பேராசையின் காரணமாக பொருள்களைப் பதுக்கி வைத்து அதனால் கொடிய வறுமை நிலவும் இந்த உலகைக் கடவுள் சத்தியமாகப் படைக்கவில்லை.

அசிங்கமான வாழ்க்கை, அன்பில்லாத வாழ்க்கை, பலைவனம் போன்ற தன்மை போட்டி, பொறாமை அன்பின்மை, சண்டை, சச்சரவு முரண்பாடு, வன்முறை - இவையெல்லாம் நிறைந்திருக்கும் இந்த உலகைக் கடவுள் படைக்கவில்லை. இது உங்கள் உலகம். இதை நீங்கள்தான் படைத்தீர்கள். நீங்கள்தான் இந்த உலகம். இந்த உலகம் உங்களின் மனத்தோற்றம். கருத்துரு. உங்கள் மனதில் இருக்கும் அசிங்கமான அதிர்வுகளின் வெளிப்பாடே நீங்கள் வெளியில் காணும் உலகம்.

மீண்டும் சொல்கிறேன். கடவுள் இந்த உலகைப் படைக்கவில்லை. அந்தப் பழியை அவர்மேல் போடாதீர்கள். இந்த உலகைக் கடவுள் படைத்திருந்தால் அவர் பெரிய குற்றவாளியாக இருக்க வேண்டும். வேறு யார் என்ன சொல்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. நான் பகிரங்கமாகப் பிரகடனம் செய்கிறேன். கடவுள் இந்த அசிங்கமான உலகைப் படைக்கவில்லை. இந்த உலகம் உங்கள் படைப்பு.

இதற்குப் பதிலாக நீங்கள் என்ன சொல்வீர்கள்? நாம்தான் இந்த உலகைப் படைத்தோம் என்று ஒரு பேச்சுக்கு வைத்துக் கொண்டாலும் கடவுள்தானே நம்மைப் படைத்தார். அதன் பின் நாம் இந்த உலகைப் படைத்தோம் என்பதால் மறைமுகமாகக்

கடவுள்தான் இந்த உலகைப் படைத்தார் என்று தர்க்கரீதியாக வாதிக்கலாம்.

இல்லை. அது தவறு ஏனென்றால் கடவுள் உங்களை சுதந்திரத்தின் மறு உருவாகப் படைத்தார். உங்களுக்குப் பிடித்தமான வகையில் உங்கள் உலகைப் படைக்கப் பரிபூரண சுதந்திரமும் தந்தார். எனவே இந்த உலகிற்குக் கடவுள் பொறுப்பல்ல. நீங்களே பொறுப்பு.

கடவுள் உங்களை அடிமைகளாகப் படைத்திருந்தால் இந்த அசிங்கமான உலகம் இருந்திருக்காது. கடவுள் உங்களை எந்திரனாக, ரோபோவாகப் படைத்திருந்தால் இந்தக் கேடுகெட்ட உலகம் தோன்றியே இருக்காது. அந்த நிலையில் நீங்கள் அனைவருமே புத்தர்களாக இருந்திருப்பீர்கள் - அர்த்தமற்ற புத்தர்களாக.

ஒரு ஹிட்லராக மாறும் வாய்ப்பு புத்தனுக்கு இல்லையென்றால் அந்தப் புத்தன் உயிரற்ற சிலைதான். நீங்கள் நல்லவராகத்தான் இருக்க முடியும் என்றால் கெட்டுப் போக வழிகளே இல்லை என்றால் நல்லவராக இருப்பதில் என்ன பயன்? கடவுள் உங்களைச் சுதந்திரத்தின் உருவில் படைக்க வில்லையென்றால் இந்த உலகம் உண்மையிலேயே ஒரு நல்ல உலகமாக இருந்திருக்கும்.

இறைவன் உங்களை இயந்திரங்களாகப் படைக்கவில்லை. பதிவு செய்ததைப் பாடும் இசைத் தட்டுக்களாகப் படைக்கவில்லை. அப்படிச் செ.ய்தால் நீங்கள் எல்லோருமே பகவத் கீதையை உபதேசிப்பீர்கள். பைபிளில் வரும் மலைமேல் நடந்த பிரசங்கத்தை விடாமல் ஒலிபரப்பிக் கொண்டிருப்பீர்கள். என்றாலும் ஓர் இசைத்தட்டு இசைத்தட்டுத்தானே!

இறைவன் உங்களைச் சுதந்திரத்தின் உருவாகப் படைத்திருக் கிறார். சுதந்திரம் என்று வந்துவிட்டாலே எதிர்மறைகளும் கூடவே வரும். நீங்கள் நன்மை செய்ய வேண்டும் என்று நினைத்தால் நன்மையைச் செய்யலாம். தீமை செய்ய வேண்டும் என்று நினைத்தால் தீமையைச் செய்யலாம். தேர்வு செய்யும்

உரிமை உங்களிடம் உள்ளது. அதைக் கடவுள்தான் உங்களுக்குக் கொடுத்திருக்கிறார்.

அதுதான் மனிதனின் கீர்த்தி. அதுதான் மனிதனின் வேதனை. ஒரு மரத்திற்கு இந்த சுதந்திரம் கிடையாது. அழகான ரோஜாச் செடிக்குக்கூட இந்த உரிமை கொடுக்கப்படவில்லை. அவற்றைப் பொருத்தமட்டில் என்ன நடக்க வேண்டுமோ அது முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டுவிட்டது.

ரோஜாச் செடிக்கு எந்த சுதந்திரமும் இல்லை. திடீரென்று ஒரு நாள் அந்தச் செடி "நான் இனிமேல் ரோஜா மலர்களைக் கொடுக்க மாட்டேன்" என்று தீர்மானம் செய்தாலும் ஒன்றும் நடக்காது. அதன் மேல் ரோஜாக்கள் பூத்துக் கொண்டுதானிருக்கும். "என் மேல் மலரும் ரோஜாக்களின் வண்ணங்களை மாற்றுவேன்" என்று சொன்னாலும் ஒன்றும் நடக்காது. ரோஜாக்களின் வண்ணம் அதனால் மாறாது. நான் தாமரைக் கொடியாக மாறுவேன் என்று ரோஜாச்செடி வீர சபதம் செய்தாலும் ஒன்றும் நடக்காது. ரோஜாச் செடி ரோஜாச்செடியாகத்தான் இருக்கும். அது ரோஜாச்செடியாகவே இருந்து ரோஜா மலர்களையே கொடுக்க வேண்டும் என்பது அதன் விதி. ரோஜாச் செடி அழகானதுதான். ஆனால் அதனிடம் சுதந்திரம் இல்லை.

அதனால்தான் நான் சொல்கிறேன். மனிதனின் அழகுக்கு உவமையாக எதையுமே சொல்ல முடியாது. அழகான ரோஜா மலர்கள்கூட மனிதனின் அழகிற்கு அருகில் நிற்க முடியாது. ஏனென்றால் ஒரு ரோஜா ரோஜாவாகத்தான் இருக்க வேண்டும். அது ஒரு வகையில் பந்தம்தான். அது வேறு எதுவும் செய்ய முடியாது. பாதை தவறி வேறு பாதையில் போக முடியாது. அது ஒரு புனிதனாக ஒரு மகாத்மாவாகத்தான் இருக்க முடியும். அது ஏசுபிரானாகத்தான் இருக்க முடியும். அவரைக் காட்டிக் கொடுத்த துரோகி ஜூடாஸாக ஒரு நாளும் இருக்க முடியாது.

அதனால்தான் ஒரு ரோஜாச்செடி ரோஜாச்செடியாகவே இருக்கிறது. பார்க்க அழகாக இருக்கும். ஆனால் மனிதனின்

அழகோடு அதை ஒப்பிட முடியாது. மனிதனுக்கு அத்தனை அழகு எப்படி வந்தது? அவன் ஏசுபிரானாகவும் இருக்கலாம் இல்லை துரோகி ஜூடாஸாகவும் இருக்கலாம். நம் அனைவரிடமும் ஏசு-ஜூடாஸ் என்ற இரு எதிர் துருவங்களுக்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றன.

ஒவ்வொருவருக்கும் அபரிமிதமான சுதந்திரம் இருக்கிறது. இந்த சுதந்திரம் மிகவும் பிரம்மாண்டமானது. அனைத்தையும் உள்ளடக்கியது. மனிதன் ஒரு வானவில்லைப் போன்றவன். அவனிடம் எல்லா வண்ணங்களும் இருக்கின்றன. மனிதனின் தலைவிதி அவன் கையில் இருக்கிறது. அது முன்கூட்டியே தீர்மானிக்கப்படவில்லை. அதனால்தான் நாம் இந்த உலகை நம் சுதந்திரத்தை வைத்து உருவாக்கியிருக்கிறோம்.

பொறுப்பு நம்முடையது. நீங்கள் புத்தனாக விரும்பினால் அப்படியே ஆகலாம். யாரும் நீங்கள் புத்தனாக வேண்டும் என்று வற்புறுத்த முடியாது. நீங்கள் ஜெங்கிஸ்கான் ஆக வேண்டும் என்று விரும்பினால் ஆகலாம். தேர்வு உங்களுடையது. கடவுள் உங்களை எந்தப் பக்கமும் இழுத்துச் செல்வதில்லை. தன்னோடு உங்களைப் பிணைத்திருக்கும் கயிறை அவர் போதுமான அளவு நீளமாக வைத்துள்ளார். அதனால் நீங்கள் சரியான பாதையில் போகலாம். பாதை தவறலாம். தவறியபின் மீண்டும் சரியான பாதைக்குத் திரும்பலாம். நீங்கள் பாதை தவறலாம் என்ற சாத்தியக்கூறு இருப்பதால்தான் உலகம் இப்படி இருக்கிறது. இந்த உலகத்தைத் தலைகீழாக மாற்ற முடியும். நம் உணர்வு நிலையை மாற்றிக்கொண்டால் இந்த உலகம் முற்றிலுமாக மாறிவிடும்.

"கடவுள் ஏன் இந்த உலகைப் படைத்தார்?" என்று கேட்கிறீர்கள். கடவுள் இந்த உலகைப் படைக்கவில்லை. கடவுள் உங்களைப் படைத்தார். கடவுள் மனித சுதந்திரத்தைப் படைத்தார். நமக்கு சுதந்திரம் கொடுத்ததற்காகக் கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் நீங்கள் ஏசுபிரானாக மாற வற்புறுத்தப்பட்டிருப்பீர்கள். அந்த ஏசுநாதர் இயந்திரத்தனமாக இருப்பார். அதில் உன்னதம் இருக்காது. அதில் அர்த்தமே இருக்காது. அதில் முக்கியத்துவம் இருக்காது. கவித்துவம் இருக்காது.

ஏனென்றால் நீங்கள் குறி தவறலாம். பாவத்திற்கான ஆங்கில வார்த்தை sin. இந்த வார்த்தையைக் கண்டுபிடித்தவர்கள் கிறிஸ்துவர்கள். இந்த ஆங்கில வார்த்தையின் வேரை ஆராய்ந்து பார்த்தால் 'குறி தவறுதல்' என்ற பொருள் கிடைக்கும்.

நீங்கள் குறிதவறலாம். அது உங்கள் கையில் உள்ளது. பாவம் என்பது குறி தவறுதல்தான். இலக்கிலிருந்து விலகிப் போதல். கடவுள் உங்களைத் தடுக்க மாட்டார்.

கடவுள் உங்கள்மேல் வைத்திருக்கும் அன்பிற்கு அளவே இல்லை. நீங்கள் பாதை தவறிய போதிலும் அவருக்கு உங்கள்மேல் இருக்கும் அன்பில் இம்மிகூடக் குறையாது. கடவுளின் அன்பு பாவிகளின் மேலும் புனிதர்களின் மேலும் ஒரே அளவில்தான் இருக்கிறது. அதுவும் நீங்கள் ஏசுபிரான் சொல்வதைக் கேட்டால் அவர் புனிதர்களைவிடப் பாவிகளைத் தான் அதிகம் நேசிக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். ஏனென்றால் பாவிகளுக்குத்தான் அன்பு அதிகம் தேவைப்படும்.

ஆரோக்கியமான குழந்தையைவிட நோய்வாய்பட்டிருக்கும் குழந்தையின்மேல்தான் தாயின் பாசம் அதிகமாக இருக்கும். அப்படித்தான் இருக்க வேண்டும். ஆரோக்கியமான குழந்தை அதன் போக்கில் விளையாடிக் கொண்டிருக்கும். தாய் அதனை அதிகமாகக் கவனிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

ஆனால் நோய்வாய்ப்பட்டிருக்கும் குழந்தையைப் பாருங்கள். அது சோர்ந்து படுக்கையில் படுத்துக் கிடக்கும். அதன் தாய் அதனருகிலேயே கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருப்பாள். மருந்து கொடுப்பாள். வலியென்றால் அமுக்கிவிடுவாள். அதிக மான கவனத்துடன் இருப்பாள். தங்கள் வாழ்க்கையின் இலக்கைத் தவறவிட்ட பாவிகளின்மேல் இறைவன் இன்னும் அதிக அன்புடன் இருப்பான் என்று ஏசுநாதர் அடிக்கடி சொல்வார்.

இந்த உலகம் பாதை தவறிச் சென்றுகொண்டிருக்கிறது. இது நாம் செய்யும் பாவங்களின் வெளிப்பாடு. இதற்கும் கடவுளுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

"கடவுள் ஏன் இந்த உலகைப் படைத்தார்?"

இரண்டாவதாக நான் சொல்ல விரும்புவது இதுதான். கிறிஸ்துவ, யூத, முகமதிய மதங்களில் கடவுளைப் பற்றிய ஒரு தவறான கருத்து நிலவுகிறது. கடவுள் தன் படைப்புக்களில் இருந்து வேறுபட்டவர் என்று இந்த மதத்தினர் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஏதோ ஒரு நாள் கடவுள் இந்த உலகத்தைப் படைத்து விட்டுப் பின் அதைப் பற்றி முற்றிலும் மறந்துவிட்டார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். கடவுள் ஏதோ ஓர் ஓவியர் போலவும் இந்த உலகம் அவர் வரைந்த ஓவியம் எனவும் ஓவியத்தை வரைந்து முடித்தவுடன் அது ஓவியரிடமிருந்து பிரிந்து தனியாக வந்துவிட்டது போலவும் சொல்கின்றனர்.

கீழை நாடுகளின் தத்துவம் இன்னும் சிறப்பாக இருக்கிறது. கடவுள் தன் படைப்பிலிருந்து வேறுபட்டவர் அல்ல. அவர் இன்னும் படைப்பில் ஈடுபட்டிருக்கிறார். அவர் இன்னும் படைப்பில் இருக்கிறார். அவர் படைத்தலாகவே இருக்கிறார் என்பது கீழை நாட்டு மதங்களின் கோட்பாடு. படைத்தவருக்கும் படைப்பிற்கும் வேறுபாடு இல்லை என்பது கீழைநாட்டுச் சித்தாந்தம்.

கடவுளைப் "படைப்பவன்" என்று அழைக்காதீர்கள் என்று அதனால்தான் சொல்கிறேன். அவரைப் படைக்கும் திறன் என்று அழையுங்கள். எப்போதும் இயங்கிக் கொண்டிருக்கும் படைக்கும் திறனே இறைவன். "படைத்தவன்" என்று கடவுளை அழைப்பது ஒரு செத்த கோட்பாடு. படைப்புத்தொழில் ஒரு நாள் முடிந்துவிட்டது. இப்போது கடவுள் அங்கே இல்லை என்ற பொருள் அதில் தொனிக்கிறது.

கடவுள் ஆறு நாட்களில் இந்த உலகைப் படைத்தார். பின் ஏழாம் நாள் ஓய்வெடுத்துக் கொண்டார் என்று சலிக்காமல் கிறிஸ்துவர்கள் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆறு நாளில் முடித்துவிட்டாரா? அதன்பின் என்ன செய்தார்? அதன்பின் இத்தனை யுகங்கள் ஒன்றுமே செய்யாமல் இருக்கிறாரே அவருக்கு அலுப்பாக இருக்காது? வேலையே இல்லாமல் இருப்பது வெறுப்பாக இருக்காது? பாவம் கொஞ்சம்

கடவுள்மேல் கருணை காட்டுங்கள் ஐயா. அவரை ஒன்றுமே செய்யாத சோம்பேறியாகச் சித்தரிக்காதீர்கள்.

கடவுள் தன் படைப்புத்தொழிலை இன்னும் முடிக்கவில்லை. படைப்பு எப்போதும் முடியாது. காலம் உள்ளவரை தொடர்ந்து நடந்து கொண்டுதானிருக்கும். கடவுள் இன்னும் படைத்துக் கொண்டுதானிருக்கிறார். இன்னும் முடிக்கவில்லை. அவர் அந்தத் தொழிலை முடித்துவிட்டால் அதுதான் இந்த உலகத்தின் முடிவாக இருக்கும். அவர் இன்னும் தொழில் செய்து கொண்டிருக்கிறார். இன்னும் நம்மை நேசித்துக் கொண்டுதான் இருக்கிறார். அவர் இன்னும் ஓவியத்தை வரைந்து கொண்டுதான் இருக்கிறார்.. இன்னும் சிற்பத்தைச் செதுக்கிக் கொண்டுதான் இருக்கிறார்.

"புதிதாகப் பிறக்கும் குழந்தையைப் பார்த்தால் அண்ணாந்து பார்த்து 'கடவுள் இன்னும் நம்பிக்கை இழக்கவில்லை' என்று சொல்வேன்." இது தாகூரின் கூற்று

பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் கடவுள் நம்மேல் இன்னும் வைத்திருக்கும் நம்பிக்கையைத்தான் காட்டுகிறது. பழைய தலைமுறையில் ஏமாந்துபோன கடவுள் ஒரு புதிய தலைமுறையைப் படைக்கிறான். "இந்த முறையாவது நான் வெற்றி காணமுடியுமா என்று பார்க்கிறேன்." என்று சொல்லிக் கொண்டு ஒரு புதிய தலைமுறையை உருவாக்குகிறான் இறைவன்.

அவனுக்கு இருக்கும் நம்பிக்கை அளவற்றது. தினம் தினம் புதிது புதிதாகக் கவிதைகள் படைக்கும் கவிஞனைப் போல் இறைவன் நம்பிக்கையுடன் படைத்துக் கொண்டிருக்கிறான். ஒவ்வொரு நாளும் அவன் மனதில் ஒரு சிறு திருப்தி. ஒரு சிறு அதிருப்தி. எங்கோ ஒரு நல்ல கவிதை பிறக்கிறது யாரோ ஓர் ஒளிக்கீற்றைப் பற்றுகிறார்கள் என்பதில் ஒரு திருப்தி. இருந்தாலும் ஏதோ கொஞ்சம் குறைகிறதே என்பதில் அதிருப்தி. நாளை காலை இன்னொரு முறை முயற்சி செய்வோம் என்று தீர்மானிக்கிறான் இறைவன்.

தாகூர் 6000 கவிதைகளைப் படைத்தவர். அவர் இறக்கும் தருவாயில் அவருடைய நண்பர் சொன்னார்; "நீங்கள் இப்போது நிம்மதியாகச் சாகலாம். ஏனென்றால் நீங்கள் மிகப் பெரும் கவிஞராகிவிட்டீர்கள்."

தாகூர் தன் கண்களைத் திறந்து பார்த்துச் சொன்னார்:

"முட்டாள்தனமாகப் பேசாதே. இப்போது நான் கடவுளிடம் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? நானும் தொடர்ந்து முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். இன்னும் வெற்றி பெறவில்லை. நிறைய எழுதிவிட்டேன்; என்றாலும் எனக்குத் திருப்தியில்லை. இப்போது வெற்றியை நான் கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கிக் கொண்டிருக்கும் இந்தத் தருவாயில் என்னை எடுத்துக் கொண்டு போகிறாயே? இது நியாயமா?

நான் எழுதத் துடித்துக் கொண்டிருக்கும் முழுமையான கவிதை கைக்கெட்டும் தூரத்தில் இருக்கும்போது என் சாவு வேளை வந்துவிட்டதே!

என் ஆறாயிரம் கவிதைகள் என் ஆறாயிரம் தோல்விகள். இந்த ஆறாயிரத்தி ஒன்றாவது கவிதையாவது முழுமையாக இருக்கட்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கும் வேளையில்..

இறைவா என்ன செய்கிறாய்? என் வாழ்நாள் முழுவதும் நான் முயற்சி செய்துகொண்டிருக்கிறேன். இதோ கவிதையின் உச்சம் அருகில் வந்துவிட்டது என்று நான் நினைக்கும் இந்த நேரத்தில் நான் சிகரத்தைத் தொடப்போகும் நேரத்தில் என்னை உன்னிடம் அழைத்துக் கொள்கிறாயே! இப்படிச் செய்யலாமா?"

கடவுள் இன்னும் படைத்து முடிக்கவில்லை. இன்னமும் நம்பிக்கையுடன் படைப்புத் தொழிலில் ஈடுபட்டுக் கொண்டிருக் கிறார். அவருடைய நம்பிக்கையில்தான் நம்முடைய நம்பிக்கையும் இருக்கிறது. கடவுள் தோல்வியடையவில்லை. அவர் இன்னமும் உங்களை நம்பிக் கொண்டிருக்கிறார். இன்னமும் படைத்துக் கொண்டிருக்கிறார். அதனால்தான் என்றோ படைத்துவிட்டு அம்போ என்று அங்கேயே போட்டுவிட்டுப் போனான் இறைவன் என்ற கோட்பாடை என் மனம் ஏற்க மறுக்கிறது.

கிறிஸ்துவ இறையியலாளர்கள் முட்டாள்கள். கடவுள் இந்த உலகத்தைப் படைத்த தேதியைக்கூட நிர்ணயித்துவிட்டதாக மார்தட்டிக் கொள்கிறார்கள். வருடம் மாதம் நாள் கிழமை என்று எல்லாவற்றையும் கண்டுபிடித்துவிட்டார்களாம். ஏசுநாதர் பிறப்பதற்கு 4014 ஆண்டுகள் முன்பாக ஒரு குறிப்பிட்ட திங்கட்கிழமையன்று கடவுள் உலகைப் படைத்தாராம். காலை ஆறுமணிக்கு நீங்கள் தியானம் செய்யத் தயாராகும்போது கடவுள் இந்த உலகைப் படைத்தாராம். என்ன கூத்து இது! காலை சரியாக ஆறு மணிக்கு. ஒரு வேளை இறைவன் தூங்காமல் இருக்க அலாரம் கடிகாரத்தை அந்த நேரத்துக்கு மணியடிக்குமாறு வைத்திருந்தாரோ! எல்லாம் அபத்தம்.

படைப்பு காலமற்றது. அது எப்போதுமே இருந்திருக்கிறது. எப்போதும் இருக்கும். ஏனென்றால் கடவுள்தான் படைப்பு. கடவுள்தான் படைப்புத்திறம். நான் கடவுளை ஓவியர் என்று சொல்வதில்லை. நடனமாடுபவன் என்றுதான் சொல்வேன்.

ஓவியத்தை வரைந்து முடித்தவுடன் ஓவியர் வேறு, ஓவியம் வேறு என்று இருவரும் பிரிந்துவிடுவார்கள். நடனத்தில் அப்படி நடக்காது. நடனம் என்பது பெரிய ஆன்மிக விஷயம். ஏனென்றால் ஆடுபவனும் நடனமும் ஒன்றுதான். வேறு வேறு அல்ல. நடனத்தை ஆடுபவனிடமிருந்து பிரிக்க முடியாது. அந்த இடத்தில் இரட்டைகள் உள்ளே நுழைய முடியாது.

அந்த ஒன்றாக இருக்கும் தன்மை மகத்தானது. ஆடுபவனே நடனம். நடனமே ஆடுபவன். நடனத்தை வெளியே எடுத்துவிட்டால் ஆடுபவன் ஆடுபவனாக இருக்கமாட்டான். ஆடுபவன் நிறுத்திவிட்டால் ஆட்டமும் நின்றுவிடும். ஆடுபவனும் ஆட்டமும் இரண்டு வெவ்வேறு படிமங்கள் அல்ல. இரண்டும் ஒன்றுதான்.

இந்த உலகத்தைப் பொறுத்தமட்டில் படைப்பு என்ற நடனம் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஆடுபவன் இன்னமும் ஆட்டத்தில் ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கிறான்.

அதனால்தான் சொல்கிறேன் உலகை மதியுங்கள். உலகை வழிபடுங்கள். உலகைக் குறை சொல்லாதீர்கள். வெறுக்காதீர்கள். ஏனென்றால் உலகினுள் கடவுள் இருக்கிறார். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறார்.

அதனால்தான் கபீர் சதா சொல்லிக்கொண்டே இருக்கிறார். "அந்த திகைப்பை உணருங்கள். ஆச்சரியத்தை அனுபவியுங்கள். உலகை வழிபடுங்கள். ஏனென்றால் உலகெங்கிலும் கடவுள் இருக்கிறார். இன்னும் வேலை செய்து கொண்டுதான் இருக்கிறார்.

சத்தமில்லாமல் செல்லுங்கள் நீங்கள் கடவுளைப் பிடித்து விடலாம். அவர் இன்னும் வரைந்துகொண்டு இருக்கிறார். செதுக்கிக்கொண்டு இருக்கிறார். நடனமாடிக் கொண்டிருக்கிறார். அது எப்போதோ கடந்தகாலத்தில் நடந்ததல்ல. இன்றும் இப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. என் வடிவில் உங்கள் முன் பேசிக் கொண்டிருக்கிறார். உங்கள் வடிவில் என்முன் அமர்ந்து கவனித்துக் கொண்டிருக்கிறார். படைப்புத்தொழில் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கிறது. அது என்றும் முடியாது. முடிவில்லாத பயணம் படைப்புத்தொழில்.

சொல்லப்போனால் படைப்பிற்கும் இருப்பிற்கும் நோக்கம் இல்லை. அது ஒரு நோக்கமில்லா நெடும் பயணம். பயணமே சுகமாக இருக்கும்போது ஏன் இலக்கைப்பற்றிக் கவலைப் பட வேண்டும்?

புனிதர் தெரசாவின் வார்த்தைகளைக் கூர்ந்து கவனியுங்கள். "சொர்க்கத்திற்குச் செல்லும் எல்லா வழிகளும் சொர்க்கம்தான்.

ஏசுபிரான் சொல்லவில்லையா "நானே வழி" என்று"?

"சொர்க்கத்திற்குச் செல்லும் எல்லா வழிகளும் சொர்க்கம் தான்." அது ஒரு மகத்தான வாக்கியம். சொர்க்கத்தை இலக்காக வைத்துப் பயணம் செய்யாதீர்கள். வழியிலேயே சொர்க்கம் இருக்கிறது. நானே வழி. கடவுள் வழி. இலக்கு அல்ல. கடவுள் இங்கே இருக்கிறார். அங்கே இல்லை. கடவுள் இப்போது இருக்கிறார். அன்று எப்போதோ இருந்தார் என்று சொல்வது சரியில்லை. கடவுள் என்னுள் இருக்கிறார்.

உங்களுள் இருக்கிறார். நம்மைச் சுற்றிலும் இருக்கிறார். கடவுள் மட்டுமே இருக்கிறார்.

“கடவுள் ஏன் இந்த உலகத்தைப் படைத்தார்?” என்று கேட்காதீர்கள். அந்தக் கேள்வியே அபத்தம். அவர் உலகத்தைப் படைத்து முடித்துவிடவில்லை. இன்னும் படைப்புத்தொழில் நடந்துகொண்டுதான் இருக்கிறது. இன்னும் கடவுள் படைத்துக் கொண்டுதான் இருக்கிறார். ஏன் படைக்கிறார் என்று அறிந்து கொள்ள வேண்டுமென்றால் பாதிரியார்களையும் பூசாரிகளையும் கேட்காதீர்கள். தத்துவ ஞானிகளையும் மகா பண்டிதர்களையும் கேட்காதீர்கள். கலைஞர்களிடம் செல்லுங்கள்.

ஓவியம் வரைந்து கொண்டிருக்கும் வேன் கோவிடம் சென்று “ஏன் இப்படி வரைகிறீர்கள்?” என்று கேளுங்கள். நடனமாடுபவனிடம் சென்று அவன் கைகளைப் பற்றியபடி கேளுங்கள் “ஏன் ஆடுகிறாய்?”. பாடகனிடம் கேளுங்கள். “ஏன் பாடிக் கொண்டிருக்கிறீர்கள்?” உங்களுக்கு பதில் தெரியும்.

ஓவியன் தோளைக் குலுக்கிக்கொண்டு சொல்வான். “நான் வேறு என்ன செய்ய முடியும்? எனக்குப் படம் வரையப் பிடிக்கும். வரைகிறேன். ஏன்? ஏன் என்ற கேள்விக்கே இங்கு இடம் இல்லை. எனக்குப் படம் வரைவது மிகவும் பிடிக்கும். நான் அப்படித்தான். நான் படம் வரைந்தால்தான் மகிழ்ச்சியாக இருக்க முடியும். படம் வரையும் போதுதான் இறைவனின் அருளை அழுத்தமாக உணர்கிறேன். அதனால்தான் படம் வரைகிறேன். வேறு எந்தக் காரணமும் இல்லை.”

நடனமாடுபவனிடம் கேளுங்கள் “ஏனப்பா இப்படி ஆடுகிறாய்?” என்று. அவன் சொல்வான்:

“வேறு என்ன செய்வது? ஆடத்தான் பிறந்திருக்கிறேன். அதற்காகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.” என்று சொல்வான்.

காதலிப்பவனிடம் போய்க் கேளுங்கள். “ஏனப்பா காதலிக்கிறாய்?” நீங்கள் எப்போதாவது யாரையாவது காதலித் திருக்கிறீர்களா? யாராவது உங்களிடம் வந்து ஏன் இந்தக்

காதல் கத்திரிக்காய் எல்லாம் என்று கேட்டால் என்ன சொல்வீர்கள்? இன்ன காரணத்திற்காக இன்னாரைக் காதலிக்கிறேன் என்று உங்களால் அறுதியிட்டுச் சொல்ல முடியுமா? அப்படிச் சொன்னால்தான் அது உண்மையான காதலாகத்தான் இருக்குமா?

நீங்கள் என்ன சொல்வீர்கள்? "ஏன் என்ற கேள்விக்கே இங்கு இடம் இல்லை. காதலிக்கும் போதுதான் நான் என்னைச் சிறப்பாக உணர்கிறேன். அப்போதுதான் நான் மலர்கிறேன். என் உச்சத்திற்குச் செல்கிறேன். அப்படி இருக்கும் போதுதான் எனக்குப் பரவச நிலை ஏற்படுகிறது.

பரவச நிலையைப் பற்றியும் சந்தோஷத்தைப் பற்றியும் கேள்வியே இல்லை. நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் அது இயல்பான நிலை. யாரும் உங்களிடம் 'ஏன் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள்?' என்று கேட்க மாட்டார்கள். ஆனால் நீங்கள் சோகமாக இருந்தால் 'ஏன் இப்படி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறாய்?' என்று உங்களிடம் கேட்கலாம். அது கேட்கப்பட வேண்டிய கேள்விதான். ஏனென்றால் சோகமாக இருப்பது உங்கள் இயல்புக்கு விரோதமானது. ஏதோ பெரிய தவறு நடந்துவிட்டது என்பதைத்தான் உங்கள் சோகம் எடுத்துக்காட்டுகிறது.

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது ஏன் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் என்று சில பைத்தியங்களைத் தவிர வேறு யாரும் கேட்க மாட்டார்கள். அப்படிக் கேட்பதற்கும் சில மன நோய் உள்ளவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அதை மறுப்பதற்கில்லை.

நான் ஒரு மன நோயாளியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அவனுடைய சொந்தக்கதை சோகக்கதையைக் கேட்டுக் கேட்டு அவனுடைய மனநல மருத்துவருக்குச் சலித்து விட்டது. பணத்திற்கு ஒன்றும் குறைச்சல் இல்லை. ஒரு மணி நேரத்திற்கு இத்தனை டாலர் என்று கணக்குப் போட்டு அள்ளி அள்ளிக் கொடுத்துக் கொண்டிருந்தான் அந்த மன நோயாளி. என்றாலும் அந்த மருத்துவருக்குச் சலித்து விட்டது. ஐந்து வருடங்களாகச் சிகிச்சை தொடர்ந்து

கொண்டிருந்தது. நோயாளியும் அதே கதைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். இறுதியாக மனநல மருத்துவர் சொன்னார் "ஒரு மன மாற்றத்திற்காக மலை வாசஸ்தலம் ஒன்றுக்கு சில நாட்கள் போய் வாருங்களேன்."

மருத்துவரின் அறிவுரையின் பிரகாரம் ஒரு மலைவாச ஸ்தலத்திற்குப் போனான் அந்த மன நோயாளி. அடுத்த நாளே அவனிடமிருந்து அந்த மனநல மருத்துவருக்கு ஒரு தந்தி வந்தது. "நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். ஏன்?"

'மகிழ்ச்சியாக இருக்கிறேன். ஏன்?' மகிழ்ச்சிக்கும் ஒரு விளக்கம் தேவையாக இருக்கிறது. அது தவறு. மகிழ்ச்சிக்கு விளக்கமோ காரணமோ தேவையில்லை. மகிழ்ச்சியின் விளக்கம் மகிழ்ச்சியே. கடவுள் தொடர்ந்து படைத்துக் கொண்டிருக்கிறார். ஏனென்றால் அப்போதுதான் அவர் மகிழ்ச்சியாக இருக்கிறார். அந்த ஒரு வழியில்தான் அவர் தன் அன்பை வெளிப்படுத்த முடியும். அந்த ஒருவழியில்தான் அவர் பாட முடியும். அந்த ஒரு வழியில்தான் அவர் கடவுளாக இருக்க முடியும். படைப்பு அவருடைய ஆழ்மன இயல்பு. அதற்குக் காரண-காரிய விளக்கங்கள் தேவையில்லை.

மூன்றாவது கேள்வி:

ஓஷோ,

*மேலை நாட்டுத் துறவிகள் வசிக்கும் மடத்திற்கும் கீழைநாட்டுத் துறவிகள் வசிக்கும் ஆசிரமத்திற்கும் என்ன வித்தியாசம்?*

நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றன. எல்லாமே பெரிய வித்தியாசங்கள். கிழக்கிற்கும் மேற்கிற்கும் உள்ள வித்தியாசங்கள். மனத்திட்பத்திற்கும் சரணாகதிக்கும் உள்ள வேறுபாடு.

மடம் மேலைநாட்டுக் கோட்பாடு. ஆசிரமம் என்ற சொல்லை மடம் என்று மொழி பெயர்க்கக் கூடாது. அது அந்த சொல்லைச் சிதைப்பதற்கு ஒப்பாகும். அதன் அர்த்தத்தை அழிப்பதற்கு ஒப்பாகும். மடம் மனத்திட்பத்தின் பாதையில்

இருக்கிறது. அங்கே மக்கள் உண்மையை உணரக் கடுமையாக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். போராடிக் கொண்டிருக் கிறார்கள். கடவுளைக் காணப் போராடிக் கொண்டிருக்கிறார்கள். மடத்தில் மன அழுத்தம் அதிகமாக இருக்கிறது. அங்கே எப்போதும் ஓர் இறுக்கமான சூழ்நிலையே நிலவுகிறது.

ஆசிரமம் என்ற சொல்லிற்கு ஓய்வு, தளர்வாக இருத்தல் என்றுதான் பொருள். ஆசிரமத்திற்கு நீங்கள் ஓய்வெடுப்பதற்காகப் போகிறீர்கள். ஏதோ ஒன்றைக் கடுமையாகத் தேடுவதற்காக மடத்திற்குப் போகிறீர்கள். மடத்தில் ஆளுமை அதிகம் இருக்கிறது. ஆண்தன்மை மிதமிஞ்சி இருக்கிறது. ஆசிரமத்தில் எதையும் ஏற்றுக் கொள்ளும் பெண்தன்மை அதிகம் இருக்கிறது. ஆசிரமத்தில் முயற்சி என்பதே இல்லை. மடத்தில் முயற்சியைத் தவிர வேறொன்றும் இல்லை.

கடவுளை அடைய வேண்டும் என்று ஆசிரமத்தில் கடுமையாக உழைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆசிரமத்தில் ஓய்வாக விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள். அதுதான் வித்தியாசம். மடத்தில் எப்போதுமே ஒரு கனமான சூழ்நிலை நிலவுகிறது. ஆசிரமத்தில் வேடிக்கைக்கும் மகிழ்ச்சிக்கும் ஓய்விற்கும் இடம் இருக்கிறது.

மடத்தைக் குறிக்கும் ஆங்கில வார்த்தையான monastery, monk - துறவி என்ற சொல்லில் இருந்து வந்தது. அதாவது monk கள் வசிக்கும் இடம் monastery. மேலை நாட்டில் துறவி என்பவர் மிகவும் அழுத்தமான மனிதர். அவர் தன் மனைவி மக்கள் சொந்தம் நட்பைத் தியாகம் செய்தவர். மேலை நாட்டுத் துறவி ஒட்டு உறவு இல்லாமல் காய்ந்து போனவர். அதனால்தான் அந்தக்கால மேலைநாட்டு மடங்கள் எல்லாம் பாலைவனங்களிலேயே இருந்தன. எல்லாமே காய்ந்து போயிருந்தன. உள்ளேயும் உலர்ந்து வெளியேயும் உலர்ந்து ஓய்வு இல்லாமல் மர நிழல் இல்லாமல் பச்சைப் பசுமை இல்லாமல் மலர்கள் இல்லாமல் இருந்தன. எப்போது பார்த்தாலும் வேலை வேலை வேலை என்றுதான் மேலைநாட்டுத் துறவிகள் இருந்தார்கள். வேலை என்ற பாலைவனத்திற்கு நடுவே

ஒய்வு என்னும் பசும் சோலை சிறிய அளவுகூட இல்லை. தனியாக வாழத் துணிந்தவர்தான் அங்கே துறவியாக இருக்க முடியும்.

அடுத்து monk என்ற சொல்லைப் பார்ப்போம். அது தனியாக இருத்தல் என்ற வேரிலிருந்து வந்தது. அதே வேரிலிருந்து வந்த வேறு ஆங்கிலச் சொற்களைப் பார்த்தால் அது புரியும் - monopoly (ஒரு துறையில் போட்டியின்றித் தனியாக இருத்தல்) monogamy (ஒரே பெண்ணுடன் வாழ்தல்) monotony (தனியாக இருப்பதால் ஏற்படும் சலிப்புணர்வு)

மேலை நாட்டு மடத்தில் தனிமையில் வாழும் பலர் ஓர் இடத்தில் வாழ்கிறார்கள். ஆனால் அவர்கள் சேர்ந்து வாழ்வதில்லை. அந்த மடம் ஒரு கூட்டு வாழ்க்கை இல்லை. அங்கே மக்கள் இருக்கிறார்கள். அதிகம்பேர் இருக்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவரும் தனித்தனியாக இருக்கிறார்கள். தனியாக இருக்கும் பலர் ஒரு கூறையின்கீழ் தனியாக வசிக்கிறார்கள். தனிமையில் வாழ்கிறார்கள்.

ஒவ்வொருவரும் கடவுளைத் தேடிக்கொண்டு இருக்கிறார்கள். அதற்குப் பெரிய அளவில் தனியாக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். அனைத்தையும் துறந்த வாழ்க்கை. தன்னைத்தானே வருத்திக் கொள்ளுதல், சுய சித்திரவதை உண்ணா நோன்பு என்று உலகத்துடனான அனைத்துத் தொடர்புகளையும் அறுக்க முயற்சிக்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் எப்படி ஓய்வாக இருக்க முடியும்? பாவத்தின் வடிவம் இந்த உலகம் என்றும் நம் பிறப்பு பாவத்தில்தான் உண்டானது என்றும் நம்பும் இவர்கள் எப்படி ஓய்வாக இருக்க முடியும் சொல்லுங்கள். அதில் என்ன கொண்டாட்டம் இருக்க முடியும் சொல்லுங்கள்.

ஆங்கிலத்தில் கொண்டாட்டத்தைக் குறிக்கும் சொல் celebration. அந்தச் சொல்லின் வேர் celere என்ற லத்தீன் மொழிச் சொல். Celere என்றால் உண்ணா நோன்பு என்று பொருள். பழைய மேலை நாட்டு மடாலயங்களில் துறவிகள் உண்ணா நோன்பிருந்தார்கள். அதைத்தான் கொண்டாட்டம்

என்று சொல்லிக் கொண்டார்கள். ஒரு விருந்தைக் கொண்டாட்டம் என்று சொல்லலாம். பட்டினி கிடப்பதை எப்படிக் கொண்டாட்டம் என்று சொல்ல முடியும்? ஆனால் அப்படித்தான் அவர்கள்மேல் உண்ணா நோன்பு திணிக்கப்பட்டது. கொண்டாட்டம் என்ற பெயரில், தன்னைத்தானே வருத்திக் கொள்ளுதல்தான் வழிபாடாகக் கருதப்பட்டது. இந்த உலகமே கடவுளுக்கு எதிராக இருப்பதாகக் கருதப்பட்டது. அதனால் கடவுளை அடைய வேண்டுமென்றால் இந்த உலகத்தை விட வேண்டும் என்று கருதினார்கள்.

ஆசிரமம் என்பது மடத்திற்கு முற்றிலும் எதிரானது. ஆசிரமம் என்பது ஒரு கூட்டுக் குடும்பம். ஒரு கூட்டு வாழ்க்கை. ஒரே மாதிரி எண்ணங்கள் உடையவர்களின் இனிமையான சங்கமம். இன்று இருக்கும் இந்து மத ஆசிரமங் களில் மேலை நாட்டு மடாலயங்களின் பாதிப்பு அதிகம் இருக்கிறது. இன்றைய ஆசிரமங்களை இந்து மத ஆசிரமங்கள் என்று சொல்லவே முடியாது.

ஓர் இந்துமத ஆசிரமத்தைப் பார்க்க வேண்டுமானால் நீங்கள் வேத காலத்திற்குச் செல்ல வேண்டும். அங்கே ஒரு குருதேவர் இருந்தார். ஆனால் அவர் துறவி இல்லை. அவருக்கு மனைவி மக்கள் இருந்தார்கள். அந்த ஆசிரமத்தையே தன் குடும்பமாகப் பாவித்து வாழ்ந்தார் குருதேவர். அதனால்தான் ஆசிரமத்தைக் குருகுலம் என்று அழைத்தார்கள். குருகுலம் என்றால் குருவின் குடும்பம் என்று பொருள்.

குருதேவருக்குக் குழந்தைகள் இருந்தன. மனைவி இருந்தாள். இயல்பாக அழுத்தமில்லாமல் வாழ்ந்துவந்தார் குருதேவர். ஆசிரமம் காட்டிற்குள் இயற்கையின் மடியில் அமைந்திருக்கும். அங்கே பரபரப்பில்லாத இயற்கையான வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது. அவர்கள் கடவுளைத் தேடவில்லை. கடவுளுக் காகக் காத்திருந்தார்கள். கடவுளை உலகத்தின் எதிரியாக அவர்கள் பார்க்கவில்லை. கடவுள் உலகத்தில் இருப்பதால் உலகத்தை நன்றாக அனுபவித்தார்கள்.

குருதேவரின் சீடர்கள் குடும்பத்தினராகவே நடத்தப்பட்டார்கள். ஆசிரமம் ஓர் அமைப்பு இல்லை. அது ஒரு குடும்பம்.

சில நேரங்களில் சீடர்கள் குருவைவிட வயதானவர்களாக இருந்தார்கள். என்றாலும் அவர்கள் குருதேவரின் குழந்தை களாகவே கருதப்பட்டார்கள்.

ஆசிரம வாழ்க்கை இயல்பாக, ஆழமாக இனிமையாக இருந்தது. ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம் விருந்து இயற்கையைக் கொண்டாடுதல் என்று பொழுது கழிந்தது. சந்திரன், சூரியன், விண்மீன்கள், காலை, மாலை, இரவு, பகல் என்று அனைத்திலும் இறைவனின் குரலையே கேட்டார்கள்.

அதனால்தான் குருதேவர் காட்டிற்குள் தன் ஆசிரமத்தை அமைத்தார். ஆசிரமம் உலக வாழ்க்கையை எதிர்க்கவில்லை என்பதனை நீங்கள் உணர வேண்டும். கிறிஸ்துவத் துறவிகள் உலகத்தை விட்டு வெளியேறும்போதே உலகத்தை எதிர்க்கத் தொடங்குகிறார்கள்.

கீழை நாட்டுத்துறவி காட்டிற்குச் சென்றபோது இந்த உலகத்தின்மேல் உள்ள காதலால் உந்தப்பட்டுத்தான் அப்படிச் செய்தார். தன் ஆசிரமத்தை ஊர்ச் சந்தைக்கு நடுவில் அமைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அந்த இடம் மனிதனின் ஊழல் நடவடிக்கைகளால் கறைபடிந்த இடமாகிவிட்டது. அதனால்தான் காட்டிற்குச் சென்றார் கீழைநாட்டுத் துறவி. இந்த வேறுபாட்டைத் தெரிந்து கொள்ளுங்கள். இது மகத்தானது.

கீழைநாட்டுத் துறவி காட்டுக்குச் செல்லக் காரணம் கடவுளின் இருப்பை அங்கே இன்னும் அழுத்தமாக உணர முடிந்தது. காட்டில் மனிதனின் குறுக்கீடு இன்னும் வரவில்லை. நீங்கள் எவ்வளவு கூர்மையாகப் பார்த்தாலும் கடவுளைத் தார் ரோடில் கண்டுபிடிப்பது கஷ்டம். கடவுளின் ஒரு கண நேர மங்கலான தோற்றத்தைக் கூட அங்கே காண முடியாது. கடவுளை ஒரு தொழிற்சாலையில் காண்பது மிகவும் கடினம். காரணம் அங்கே மனிதச் சத்தம் மிக மிக அதிகமாக இருக்கிறது. இயந்திரம், தொழில் நுட்பம் சத்தம் கூட்டம் - இவை எல்லாம் இயற்கையைத் தூர விரட்டிவிட்டன.

லண்டனில் ஓர் ஆய்வு செய்தார்கள். அந்த நகரின் பத்து லட்சம் குழந்தைகள் தங்கள் வாழ்க்கையில் ஒரு

பசுமாட்டைப் பார்த்ததில்லையாம். இது கொஞ்சம் அதிகம்தான். ஒரு பசுமாட்டின் கண்களைப் பார்த்ததில்லை என்றால் கடவுளை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்.?

போப்பாண்டவரின் கண்களில் தெரிவதைவிட ஒரு பசுமாட்டின் கண்களில் கடவுள் இன்னும் தெளிவாகக் காட்சியளிக்கிறார். சங்கராச்சாரியாரின் கண்களைக் காட்டிலும் ஒரு பசுமாட்டின் கண்கள் கடவுளின் பிம்பத்தைத் தெளிவாகப் பிரதிபலிக்கிறது.

பசுவைப் பார்க்காத இந்தப் பத்து லட்சம் குழந்தைகளும் துன்பப்படப் போகிறார்கள். இமயமலையைப் பார்க்காதவர்கள் லட்சக்கணக்கில் இருக்கிறார்கள். அதன் பனிமூடிய சிகரங்களைப் பார்க்காதவர்கள், என்றும் இருக்கும் அந்தப் பனியைப் பார்க்காதவர்கள், இதுவரை மனிதன் காலடிபடாத மலையைப் பார்க்காதவர்கள் இவர்கள் எல்லாம் பாவம் செய்தவர்கள். அங்கே எல்லாம் கடவுள் துடிப்புடன் இருக்கிறார். அதீத உயிர்ப்புடன் இருக்கிறார்.

கீழை நாட்டுத் துறவிகள் உலக வாழ்க்கையை எதிர்த்து காட்டுக்குப் போய் வாழவில்லை. கடவுளால் படைக்கப்பட்டு மனிதன் பாழடிக்காத உலகத்தைக் காணவே அங்கே சென்றார்கள்.

கிறிஸ்துவத் துறவிகள் உலகத்தை எதிர்த்து மடங்களுக்குச் சென்றார்கள். உலகம் பாவத்தின் நிலம் என்ற நினைப்பில் உலகை உதறித்தள்ளிவிட்டு மடங்களில் அடைக்கலம் புகுந்தார்கள்.

இரண்டு வகைத் துறவிகளும் நகர வாழ்க்கையை விட்டு விலகினார்கள். ஆனால் அவர்களுடைய காரணங்கள் ஒன்றுக்கு ஒன்று எதிரானவை.

ஆசிரமம் என்ற கீழை நாட்டு வார்த்தையே மிகவும் அழகானது. அதற்கு ஓய்வு என்று பொருள். நீங்கள் இந்த உலகத்தில் வாழ்ந்து விட்டீர்கள். இந்த உலகத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியும். அதன்பின் ஓய்விற்காக ஆசிரமம் செல்கிறீர்கள். நீங்கள் இந்த உலகத்தை வேண்டுமளவு பார்த்து விட்டீர்கள். அதன் அவலங்கள் உங்களுக்குத் அத்துப்படி.

உலகம் பயனற்றது அர்த்தமற்றது என்று உங்களுக்குத் தெரியும். அது தெரியும்போது உங்களுக்கு ஓய்வு தேவைப்படுகிறது.

அந்தச் சமயத்தில் நீங்கள் அடர்ந்த காட்டிற்குள் செல்கிறீர்கள். பெரிய மரங்களின் நிழலில் அமர்கிறீர்கள். ஓடையின் சத்தத்தையும் பறவைகளின் பாட்டையும் கேட்கிறீர்கள். மௌனமாக ஜொலிக்கும் விண்மீன்களைப் பார்க்கிறீர்கள். வெளியில் உள்ள இயற்கையின் உதவியுடன் உங்கள் உள்ளே இருக்கும் இயற்கையில் ஓய்வாக இருக்கிறீர்கள். அது பெரிய இசைவு - உள்ளிருக்கும் இயற்கையும் வெளியில் இருக்கும் இயற்கையும் இசைந்து இருக்கும் உன்னதமான நிலை. அதன்பின் வெளியில் உள்ள இயற்கையுடன் விளையாட ஆரம்பிக்கிறீர்கள். அது தேடல் இல்லை. ஓர் இந்துவின் ஆசிரமம் தேடுவதற்கான இடம் இல்லை. ஓய்வு எடுப்பதற்கான இடம்.

தேடினால் அதைக் கண்டுபிடிக்க முடியாது. தேடுதல் என்ற செயலே உங்களுக்கு இறுக்கத்தைக் கொடுக்கிறது. 'தேடாதீர்கள்' என்று கிழக்கு முழங்குகிறது. அவனே உங்களைக் கண்டுபிடிப்பான் என்று அன்புடன் சொல்கிறது. தேடுவது வெட்டி வேலை. வழிபாட்டுணர்வுடன் தேடும் அவசரம் இல்லாமல் ஓய்வாக இருப்பவர்கள் வரப்பிரசாதிகள். அவர்களிடம் அபரிமிதமாக இறை நம்பிக்கை இருக்கிறது. "சரி, உனக்கு எப்போது வரவேண்டும் என்று தோன்றுகிறதோ அப்போது வா. எனக்கு எந்த அவசரமும் இல்லை." என்று இறைவனிடமே சொல்லும் அளவிற்குப் பக்குவமானவர்கள்.

கிழக்கிற்கு எந்த அவசரமும் இல்லை. கிழக்கில் கால உணர்வுகூட அதிகம் இல்லை. கடிகாரத்தைப் பார்த்து வேலை செய்யும் வழக்கம் அவர்களிடம் இல்லை.

"இந்த வாழ்க்கையில் வருகிறாயா? நல்லது. அடுத்த வாழ்க்கையில்தான் வருவாயா? நல்லது. நீ எப்போது வந்தாலும் நான் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன். எனக்காக அவசரப்படாதே" என்று இறைவனிடம் சொல்லும் வன்மை பெற்றவர்கள் கீழைநாட்டுத் துறவிகள்.

மேற்கிற்கு எப்போதும் அவசரம்தான். நமக்கு இருப்பது ஒரே வாழ்க்கைதான் என்ற எண்ணம் அங்கே ஓர் இறுக்கத்தை ஏற்படுத்திவிட்டது. ஒரே வாழ்க்கை. அதுவும் ஏறக்குறைய எழுபது வருடங்கள். அதன்பின்? இந்த எழுபது வயதில் இருபத்தியைந்து வருடங்கள் கல்வி கற்பதில் கழிந்து விடுகிறது. இன்னொரு இருபத்தியைந்து ஆண்டுகள் உறக்கத்தில் கழிந்து விடுகிறது. மீதம் இருக்கும் காலம் முகக்ஷவரம் செய்து கொள்ளுதல், ஆபீசுக்குப் போவது, வருவது, போக்குவரத்து நெரிசல், முரண்பாடுகள், குழந்தைகள், மனைவி, விவாகரத்து நீதிமன்றம் என்று கழிந்து விடுகிறது.

பாக்கி என்ன இருக்கிறது? கணக்குப் போட்டுப் பார்த்தால் ஆச்சரியமாக இருக்கும்.

கடவுளுக்காகச் செலவழிக்க ஏழே ஏழு நிமிடங்கள்கூட இல்லை. அதனால் மனதில் ஒரு பெரிய அவசரம் உண்டாகிறது. சீக்கிரம்! தள்ளு! நகர்! வழிவிடு! ஏதாவது செய்! இல்லாவிட்டால் கடவுளை எப்படிக் காண முடியும்?

கடவுள் நாம் கண்டுபிடிக்க வேண்டிய ஒரு பொருள் அல்ல. கடவுள் உங்களுக்குள் இருக்கும் ஓர் உன்னதமான இடம். நீங்கள் அலுத்துச் சலித்து வரும்போது வரவேற்று அரவணைத்து ஓய்வளிக்கும் உங்கள் தாய்வீடு நீங்கள் இல்லாமல் இருக்கும் போதுதான் கடவுள் இருப்பார். நீங்கள் தேடாமல் இருந்தால்தான் இல்லாமல் இருப்பீர்கள். தேடுபவர் உங்கள் அகந்தையைப் பற்றிக் கொண்டு இருப்பார். யார் தேடுகிறார்கள்?

ஆசிரமத்தின் கோட்பாடு முற்றிலும் வேறுபட்டது. நீங்கள் அங்கே உங்கள் இயல்பு நிலையில் தளர்வாக இறுக்கமில்லாமல் இருக்கிறீர்கள். சின்னச் சின்ன வேலைகளைச் செய்கிறீர்கள். பசித்தால் உண்கிறீர்கள். அலுப்பாக இருந்தால் உறங்கச் செல்கிறீர்கள். அவசரம் இல்லை. கவலை இல்லை. கடவுள் தனக்கே உரித்தான வழியில் தனக்கே உரித்தான நேரத்தில் வரட்டும் என்று நீங்கள் காத்திருக்கும் இடமே ஆசிரமம். உண்மையான ஆசிரமம் எப்படி இருக்க வேண்டும் என்று நீங்கள் பார்க்க விரும்பினால் என் ஆசிரமத்தைத்தான் பார்க்க

வேண்டும். ஏனென்றால் மற்ற ஆசிரமங்கள் எல்லாம் கிறிஸ்துவர்களின் கோட்பாடுகளால் கெட்டுப் போய்விட்டன. இந்துக்களால் கட்டிய ஆசிரமம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அது உண்மையில்லை. என்னதான் சொல்லுங்கள். இந்தக் கிறிஸ்துவ துறவிகளின் முறையில் ஒரு வசீகரம் இருக்கத்தான் செய்கிறது. அனைவரும் கடுமையாக உழைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது.

கிறிஸ்துவர்கள்தான் உலகிற்கு எப்படி வேலை பார்க்க வேண்டும் என்று சொல்லிக் கொடுத்தார்கள். கடுமையாக உழை. இதுதான் அவர்களுடைய சித்தாந்தம்.

விளையாட்டு? அதை மறந்துவிடு. அது குழந்தைகளுக்குத்தான். நீங்கள் வேலை பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும். நீங்கள் வயது வந்தவர்கள். வளர்ந்தவர்கள். அதனால் உங்கள் வாழ்நாள் முழுவதும் நீங்கள் கடுமையாக உழைக்க வேண்டும். அப்படிச் செய்தால் பொதி சுமக்கும் கழுதைக்கு முன்னால் ஒரு குச்சியில் கேரட்டைத் தொங்கவிட்டுக் காட்டுவதைப்போல் உங்களுக்கு ஒரு வெகுமதியைக் காட்டுவார்கள். அதுவும் முடிவில். கடைசிக்கட்டத்தில். ஆனால் அந்தக் கடைசிகட்டம் வரவே வராது. நீங்கள் வேலை பார்த்துக் கொண்டேயிருப்பீர்கள். ஒருநாள் அப்படியே இறந்துவிடுவீர்கள். ஒருநாள் நீங்கள் உங்கள் கல்லறையில் விழுந்து விடுவீர்கள்.

கீழை நாடுகளில் வேலை விதிகள் அவ்வளவு கடுமையாக இருப்பதில்லை. சந்தோஷமாக இரு. ஓய்வாக இரு. விளையாடு. மகிழ்ச்சியைக் கொண்டாடு. எதையும் சீரியசாக எடுத்துக் கொள்ளாதே என்றுதான் சொல்கிறோம். நம் இலக்கு கடைசியில் இல்லை. வேலையின் குறிப்பிட்ட விளைவுகள் நம் இலக்கு இல்லை. வேலை செய்வதே நம் குறிக்கோள் என்று இருக்கிறோம். நான் மீண்டும் சொல்கிறேன் : "சொர்க்கத்திற்குச் செல்லும் எல்லா வழிகளும் சொர்க்கம்தான்."

"நானே வழி" என்று ஏசுபிரான் சொல்லவில்லையா? வேலையைக் குறித்த இறுக்கமில்லாத அணுகுமுறை கொஞ்சம்

கொஞ்சமாக உங்களுக்குள் இருக்கும் அகந்தையை மறைய வைக்கிறது. அகந்தையாகிய நீங்கள் மறைந்துவிட்டபின் ஒரு நாள் திடீரென்று கடவுளைப் பார்ப்பீர்கள். அது மட்டும் இல்லை. அத்தனை நாளும் கடவுள் அங்கேயேதான் இருந்திருக்கிறார் என்பதை உணர்ந்து ஆச்சரியப் படுவீர்கள். அவரைத் தேடி அலையவில்லையென்றால் அவர் இருப்பது உங்களுக்கு முன்பே தெரிந்திருக்கும். நீங்கள் தேடுவதுதான் உங்களுக்கும் கடவுளுக்கும் நடுவில் உள்ள தடுப்புச் சுவராக இருந்து வந்திருக்கிறது. ஏனென்றால் தேடப்பட்டவர் தேடுபவருக்குள் ஒளிந்து கொண்டிருந்தார். அது தெரியாமல் நீங்கள் அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருந்தீர்கள்.

மடம் என்பது மேற்கின் வாதம். ஆசிரமம் என்பது கிழக்கின் வாதம். இந்தியாவில் உள்ள எல்லா ஆசிரமங்களும் இன்று கிறிஸ்துவ மதத்தின் தாக்கத்தால் மடங்களாக மாறிவிட்டன. ஏனென்றால் கிறிஸ்துவ மடாலயங்களுக்கு ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. இன்றைய உலகம் மேலை நாடுகளின் தத்துவங்களால் ஆனது. கிழக்கு இன்று கிழக்காக இல்லை.

மனத்திட்பத்தை வளர்த்துக் கொண்டால் அகந்தை இன்னும் வலுப்படும். இன்று எல்லோரும் தங்களை ஒரு முக்கியமான மனிதராக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த முக்கியமான மனிதராக ஏதாவது செய்தே தீரவேண்டும் என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். எதுவும் செய்யாமல் திரிந்து கொண்டிருந்தால் நீங்கள் முக்கியமான மனிதராக உணர மாட்டீர்கள். ஏதாவது செய்ய வேண்டும் என்ற உந்துதல் உண்டாகிறது. மதம் என்பது மக்கள் சேவையே என்று இந்த நேரத்தில் கிறிஸ்துவ மதம் சொல்கிறது. அதனால் பேர்ய் மக்களுக்குச் சேவை செய்யுங்கள் என்று பக்கம் பக்கமாக எழுதுகிறார்கள்.

கீழை நாடுகளின் அணுகுமுறையில் மதம் என்பது மக்கள் சேவை அல்ல. மத உணர்வு மேம்படும்போது சில சமயம் அதன் பக்கவிளைவாக ஆங்காங்கே மக்கள் சேவை நிகழலாம். ஆனால் உண்மையான மதத்தின் நோக்கம் மக்கள் சேவை அல்ல. மதம் என்பது தியானம், வழிபாட்டுணர்வு, இறுக்கமற்ற மனம்.

மதம் என்பது உங்களுக்குள் இருக்கும் ஆழத்திற்குப் போவது. உங்கள் அடிமனத்தின் ஆழத்திற்கு உங்களால் செல்ல முடிந்தால் ஒரு வேளை - வார்த்தையைக் கவனியுங்கள் ஒருவேளை, நிச்சயமாக இல்லை ஒரு வேளை - நீங்கள் மக்கள் பணியில் ஈடுபடலாம். ஆனால் அது உங்கள்மேல் திணிக்கப்படும் கடமையாக இருக்காது. நீங்களாக விரும்பிச் செய்யும் பகிர்ந்தளித்தலாக இருக்கும்.

ஆனால் கீழை நாட்டு மதங்கள் "ஒரு வேளை" என்ற வார்த்தையில் அதிகப்படியான அழுத்தத்தைக் கொடுக்கின்றன. ஏனென்றால் எல்லாருக்கும் ஒரே மாதிரியாக இருக்காது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வழி.

மீராவுக்குச் சமய உணர்வு அதிகமானபோது அவர் நடனமாடினார். மீரா மக்கள் சேவையைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்படவில்லை. மீரா காலத்திலும் ஏழைகள் இருந்தார்கள். மீரா அவர்களுக்கு உதவி செய்திருந்தால் பொருளாதார ரீதியாகச் சரியாக இருந்திருக்கும். ஆனால் மீரா அப்படிச் செய்யாமல் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருந்தார்.

நான் சொல்கிறேன். மீரா செய்ததைச் செம்மையாகவே செய்தார். நன்றாகவே செய்தார். சரியாகவே செய்தார். ஒரு வேளை மீரா ஒரு குஷ்ட ரோகிக்கு உதவி செய்திருந்தால், ஒரு பள்ளிக்கூடத்தைத் திறந்திருந்தால், இல்லை ஒரு மருத்துவமனையைக் கட்டியிருந்தால் - நமக்குப் பேரிழப்பு உண்டாகியிருக்கும்.

ஆமாம் மீராவின் தெய்விகப் பாடல்களை நாம் இழந்திருப்போம். அதற்கு ஈடாக வேறு யாராலும் பாடியிருக்க முடியாது. மீராவின் நடனம் மனித வாழ்க்கையின் தரத்தையே ஒரு படி உயர்த்தியது. அதை விட்டுவிட்டு மீரா மக்கள் பணி செய்திருந்தால் நன்றாக இருந்திருக்காது. மீரா தன் போக்கில் தன் வெளிப்பாடுகளை இருக்கவிட்டதுதான் சரி. இன்னும் சில ஞானிகள் ஞானம் பெற்றவுடன் மரத்தடியை விட்டு ஓர் அங்குலம்கூட நகரவில்லை. அதே இடத்தில்

அப்படியே இருந்தார்கள். அது அவர்களின் வழி. அவர்களுடைய ஞானத்தின் வெளிப்பாடு.

கிழக்கில் ஒரு மனிதனின் தனித்தன்மையை நாம் அங்கீகரிக்கிறோம். அவன்மேல் நம் கோட்பாடுகளைத் திணிப்பதில்லை. “நீ வீடுபேறு அடைந்துவிட்டாய் அப்பனே! இனிமேல் என்ன நடந்தாலும் நல்லது. கடவுள் உன்மூலம் என்ன செய்யத் திட்டமிட்டுள்ளாரோ அப்படியே நடக்கட்டும். ஆமென்.” என்றுதான் சொல்கிறோம்.

அவன் போக்கில் நாம் குறுக்கிடுவதில்லை. போதிமரத்தின் அடியில் மௌனமாக அமர்ந்திருக்க அவன் விரும்பினால் அவனை அப்படியே இருக்க விடுகிறோம். உண்மையான ஞானம் பெற்றவனின் ஆழமான மௌனம் பல நூற்றாண்டுகள் வரை வீர்யத்துடன் இருக்கும் பல நல்ல மாற்றங்களுக்கு அது வித்தாக அமையும்.

அந்த ஞானத்துடிப்புகள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் வரை மக்கள் உயர்ந்த உணர்வு நிலையை அடைய உதவி செய்யும். அதனால் நீங்கள் கவலைப்படாதீர்கள். ஒரு ஞானியின் வழியில் குறுக்கிடாதீர்கள். அவன் மௌனமாக ஒன்றும் செய்யாமல் இருக்க வேண்டும் என்று விரும்பினால் இருக்கட்டும் ஆட விரும்பினால் ஆடட்டும். உலகத்திற்குச் சென்று மக்கள் பணி செய்ய விரும்பினால் செய்யட்டும். அவன் மீராவாக விரும்புகிறானா? நல்லது. சைதன்யராக விரும்புகிறானா?, சபாஷ். புத்தபிரானாக விருப்பமா? பேஷாக அப்படியே ஆகட்டும். அவன் என்ன நினைக்கிறானோ அப்படியே நடக்கட்டும்.

இங்கே கிறிஸ்துவர்களின் வாதத்தைப் பார்க்க வேண்டும். உலகம் வறுமையில் இருக்கிறது. மக்கள் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். நீ ஏன் வெட்டியாக தியானம் செய்து கொண்டிருக்கிறாய் என்று கேட்கிறார்கள். போய் மக்களுக்குச் சேவை செய் என்று ஞானியின் தியானத்தைக் கலைக்கிறார்கள். சட்டென்று பார்க்க அது நியாயம் போல் தோன்றுகிறது. அந்த வாதத்தில் ஆசிரமம் மறைந்துவிடுகிறது.

நான் ஒரு புதிய கூட்டமைப்பை உருவாக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அதை ஏன் புதிது என்று சொல்கிறேன் என்றால் அப்படி ஓர் அமைப்பு இப்போது உலகத்தில் எங்கும் இல்லை.

ஆனால் நான் சொல்லும் அமைப்பு அரதப் பழசு. பல ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் அது இருந்தது. ஆனால் இப்போது அதன் நினைவுகள் மட்டுமே இருக்கின்றன. அந்த நினைவுகளும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகின்றன.

அந்தக் கூட்டமைப்பில் மக்கள் தங்கள் மனம்போல் வாழ்வார்கள். அழுத்தம் இல்லை இறுக்கம் இல்லை. தங்கள் உணர்வுகள் சொல்லும் வழியில் தடையில்லாமல் வாழ்வார்கள். வாழ்க்கையை எளிதாக எடுத்துக் கொண்டு இயல்பாக வாழ்வார்கள்.

ஆமாம், ஆசிரமம் என்ற வார்த்தையின் உண்மையான அர்த்தம் எதையும் எளிதாக எடுத்துக் கொள்வதுதான்.

நான்காவது கேள்வி

*ஓஷோ,*

*சூழ்ச்சிக்காரக் கிழவா! என்றாவது நான் உன் வழிகளைக் கற்றுக் கொள்வேனா?*

நிச்சயமாக இல்லை ஐயா. ஏனென்றால் என்னிடம் வழிகளே இல்லை. நான்தான் வழி. என்னை ஊடுருவிப் பார்த்தால்தான் நீங்கள் வழியைக் காண முடியும். ஆனால் என் பேச்சை மட்டும் கேட்டால். ..

அதைத்தான் நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். கேள்வி கேட்டவர் சந்நியாசி இல்லை. நீங்கள் எனக்கு வெளியே நின்று கொண்டிருந்தால்.... ..

சந்நியாசி என்றால் எனக்குள் ஊடுருவி நிற்க வேண்டும். என் குடும்பத்தில் ஒருவராக என்னில் ஒரு பகுதியாக எனக்குச் சொந்தமாக இருக்க வேண்டும். நான்தான் வழி.

உங்களுக்கு ஒரு வழியைப் போதிப்பதற்காக நான் இங்கே வரவில்லை. எனக்கு நானே போதித்துக் கொண்டிருக்கிறேன். நான் உங்களுக்கு எந்த உத்தியையும் சொல்லித்தரவில்லை. ஒரு முறையையோ வழியையோ ஏற்படுத்திக் கொடுக்கவில்லை. அது என் வேலையும் இல்லை. என் வழி என்ன என்று நீங்கள் கண்டுபிடிக்க முனைந்தால் இன்னும் குழப்பம்தான் அடைவீர்கள். உங்களுக்குப் பைத்தியம் பிடிக்கும் அளவிற்கு என்னால் உங்களைக் குழப்ப முடியும். ஒன்று என் சந்நியாசியாக இருங்கள். இல்லை என்னை விட்டு வெகு தூரம் சென்றுவிடுங்கள்.

நீங்கள் சந்நியாசியாக இருந்தால் உங்கள் பைத்தியக்காரத் தனத்திற்கு ஓர் அர்த்தம் இருக்கும். நீங்கள் சந்நியாசியாக இல்லையென்றால் இன்னும் குழப்பமடைவீர்கள். உங்களுக்குப் பைத்தியம்தான் பிடிக்கும். அதன்பின் நீங்கள் இங்கிருந்து தப்பித்தாலும் பயனில்லை. நான் உங்களைத் தவிக்க வைப்பேன்.

"உங்கள் வழிகளைக் கற்க முடியுமா?" என்பதுதான் உங்கள் கேள்வி. அதற்கு வாய்ப்பே இல்லை. ஏனென்றால் எனக்கு வழிகளே இல்லை. நான் இருக்கும் வழிகளை எல்லாம் அழித்துக் கொண்டிருக்கிறேன். உங்களிடம் இருக்கும் வழிகளை எல்லாம் நான் அழித்துக் கொண்டிருக்கிறேன். உங்களுக்குள் ஒரு குழப்பத்தை உருவாக்க வேண்டும் என்பதே என் நோக்கம். ஏனென்றால் உங்கள் வழிகள் எல்லாம் இடைஞ்சல்கள்தான். நீங்கள் குழப்ப நிலையில் இருக்கும்போது - நீங்கள் யார், எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள் என்பதே தெரியாமல் இருக்கும்போது எது என்ன என்பதே புரியாமல் இருக்கும் போது - அந்த அழகான குழப்பத்தில்தான் உண்மையான சுதந்திரம் இருக்கிறது. அந்தச் சுதந்திரத்தில்தான் நீங்கள் கடவுளைக் காண முடியும்.

இங்கே நான் உங்களுக்காக இடைவெளியை உண்டாக்கிக் கொண்டிருக்கிறேன். வழிகளை அல்ல. மக்கள் எல்லோரும் நடந்து செல்வதற்கான ராஜபாட்டையை நான் உருவாக்கவில்லை. மாறாக உங்களை நடுகாட்டில் தூக்கியெறியப் போகிறேன்.

உங்களுக்கு வரைபடங்களோ வழிகாட்டியோ தரப் போவதில்லை. ஒரு குறிப்பிட்ட தத்துவத்தை நான் உங்களுக்குப் போதிக்கப் போவதில்லை. நீங்கள் ஏற்கனவே கற்று வைத்திருக்கும் தத்துவங்களை உங்களிடமிருந்து பிடுங்கிக் கொள்ளப் போகிறேன்.

நீங்கள் கற்றதை மறக்க வைக்கப் போகிறேன். நீங்கள் வழிகளை மறந்தால்தான் அந்தப் பெரிய வழி உங்கள்முன் உருவாகும். அந்தப் பெரிய வழி நீங்கள் கற்ற வழிகளில் ஒன்றல்ல. அது நீங்கள் உங்கள் மனதினால் தேர்வு செய்ததல்ல. காரண–காரியங்களால் விளக்கக்கூடியது அல்ல. என்ன செய்வது என்று தெரியாமல் கற்றதை எல்லாம் மறந்து விட்டு நீங்கள் பேந்தப் பேந்த விழிக்கும் அந்தத் தருணத்தில்தான் அந்தப் பெரிய வழியின் கதவுகள் திறக்கின்றன. கடவுள் உங்களுக்குக் காட்சி தருகிறார்.

நான் சொல்வது இறைமைத் தத்துவம் அல்ல. அன்பின் வழி. நீங்கள் கொஞ்சம் தள்ளி நின்று வேடிக்கை பார்த்தால் உங்களுக்கு ஏதோ கொஞ்சம் கிடைக்கலாம். முழுமையாகக் கிடைக்காது. கிடைப்பதும் உண்மையானதாக இருக்காது. அதன் உடைந்து போன துண்டுகள்தான் உங்களுக்குக் கிடைக்கும். அதுவும் உங்கள் தன்மைக்குத் தகுந்தாற்போல்தான் கிடைக்கும்.

என்னை நீங்கள் உங்கள் தன்மைக்குத் தகுந்தாற்போல் வாங்கிக் கொள்ள முடியாது. நீங்கள் என்னை முழுமையாகப் பெற வேண்டுமானால் என் தன்மைக்குத் தகுந்தாற்போல்தான் பெற முடியும். இங்கே சந்நியாசியாவது அதற்குத்தான்.

"சரி ஓஷோ உங்களை உங்களுக்குத் தகுந்தாற்போல் பெற்றுக் கொள்கிறேன்" என்று நீங்கள் சொல்வதுதான் சந்நியாசம். மாறாக உங்களுக்குத் தகுந்தாற்போல் என்னைப் பெற்றுக் கொண்டால் உங்களுக்கு என்னைச் சரியாகப் புரியாது. கடைசிவரை நாம் நேரெதிர் துருவங்களாகவே இருப்போம்.

இதனை நான் கேட்டிருக்கிறேன்.

நரகத்தைப் பற்றிப் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுப் பேசிக் கொண்டிருந்தார் அந்தப் பாதிரியார். கூட்டத்தில் இருந்த ஒரு

நான்கு வயதுப் பையன் பாதிரியாரை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியாகத் தன் தாயின் காதில் கிசுகிசுத்தான்:

"இந்த ஐந்து தப்பித்துவிட்டால் நாம் என்னம்மா செய்வது?"

ஒரு குழந்தைக்கு என்று தனியாகப் புரிந்துணர்வு இருக்கிறது. அந்தக் குழந்தை அங்கே இருக்கிறது. அந்த உரையைக் கேட்கிறது. ஆனால் தன் மனதிற்குத் தகுந்தாற்போல் கேட்கிறது.

உங்கள் புரிந்துணர்வின் வழியாக என்னைப் புரிந்து கொள்ள முயற்சி செய்தால் அது தோல்வியில்தான் முடியும். உங்களால் என்னைப் புரிந்து கொள்ளவே முடியாது. சில தவறான கருத்துக்களும் கோட்பாடுகளும்தான் உங்களுக்குக் கிடைக்கும் இங்கிருந்து நீங்கள் சுமந்து செல்வது உங்களுக்குப் பாரமாகத்தான் இருக்கும். சுகத்தைக் கொடுக்காது. அவை உங்களுக்குத் தொந்தரவாகத்தான் இருக்கும். எந்த இடத்திற்கும் அரைமனதுடன் போகாதீர்கள். முழுமனதுடன் செல்லுங்கள். இல்லை அந்தப் பக்கமே தலை வைத்துப் படுக்காதீர்கள்.

நீங்கள் இங்கே சந்நியாசியாகாமலேயே நான் சொல்வதைக் கேட்க முடியும். சந்நியாசியாகாமலேயே தியானம் செய்ய முடியும். நீங்கள் வெளியாளாக தனியாளாக எதிலும் பட்டும் படாமல் இருக்க முடியும். உங்களை மிகவும் சாமர்த்தியசாலியாக நினைத்துக் கொண்டிருப்பீர்கள். ஆனால் அதனால் உங்களுக்குப் பிரச்சினைதான் மிஞ்சும். நான் எச்சரித்துவிட்டேன். இனிமேல் நடப்பதற்கெல்லாம் நீங்களே பொறுப்பு.

என்ன பிரச்சினை? நீங்கள் அப்படிப் பட்டும் படாமலும் இருந்தால் ஏதோ ஒன்று நடக்க ஆரம்பிக்கும். ஆனால் அது உங்களுக்கு நல்லதாக இருக்காது.

எனக்கு உத்திகளின்மேல் நம்பிக்கை இல்லை. உங்களை என் அருகில் வரவைப்பதற்காக சில உத்திகளைப் பயன்படுத்து வேன். உத்திகள் உங்களுக்கு விளையாட்டுப் பொம்மைகள் மாதிரி. நீங்கள் ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்க முடியாது என்பதற்காகத்தான் உங்களுக்கு உத்திகளைக் கற்றுத்தருகிறேன்.

நான் உங்களிடம் பேசுகிறேன். ஆனால் பேசுவது என் குறிக்கோள் அல்ல. வார்த்தைகளால் சொல்ல முடியாததை உங்களிடம் சேர்ப்பிக்க வேண்டும். உங்கள் இதயம் முற்றிலுமாகத் திறந்திருக்கும் போதுதான் அதை உங்களிடம் நான் கொண்டு வந்து சேர்க்க முடியும். உங்கள் இதயம் திறக்கும் வரை நான் உங்கள் மனதை வற்புறுத்திக் கொண்டிருப்பேன். நான் உங்கள் மனதிற்குச் செய்வது எல்லாம் உண்மையில்லை.

உண்மையை நான் உங்கள் இதயத்திற்குத் தந்தாக வேண்டும். அதுவும் உங்கள் இதயம் தயாராக இருக்கும்போது, உங்கள் நம்பிக்கை ஆழமாக இருக்கும்போது நீங்கள் என்னை முழுவதுமாக ஏற்றுக் கொள்ளும்போது.

அப்போது நீங்கள் நினைப்பீர்கள் "உங்களை ஏற்றுக் கொள்வதா வேண்டாமா என்றுதான் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன்:"

நீங்கள் நன்மை தீமைகளை யோசித்து எடை போட்டு என்னை ஏற்றுக் கொண்டால் அது ஏற்பு ஆகாது.

நீங்கள் உங்களைதான் ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் யோசனைகளை உங்கள் எண்ணங்களைத்தான் ஏற்றுக் கொண்டிருக் கிறீர்களே ஒழிய என்னை இல்லை.

பலவாறாக யோசித்துக் கடைசியில் "ஓஷோ சொல்வது சரியென்றுதான் படுகிறது. சரி நாம் இதில் குதித்துவிட வேண்டியதுதான்" என்று தீர்மானம் செய்தால் அது குதித்தல் ஆகாது. நீங்கள் குதிக்கத் தவறிவிட்டீர்கள். நீங்கள் இன்னமும் உங்கள் மனதையும் அதில் தோன்றும் எண்ணங்களையும் மட்டுமே நம்பிக் கொண்டிருக்கிறீர்கள். அதன் மூலமாகத்தான் நான் சொல்வது சரி என்ற முடிவுக்கு வந்திருக்கிறீர்கள். "நான் இந்தப் பயணத்தைத் தொடக்குகிறேன்." என்று மனதளவில் தீர்மானிக்கும்போது பயணம் தொடங்குவதில்லை.

நீங்கள் எடுத்து வைக்கும் முதல் அடி உங்கள் வெகுளித்தனத்தின் வெளிப்பாடாக இருக்க வேண்டும். உங்கள் சாமர்த்தியத்தின் விளைவாக இருக்கக்கூடாது. ஒரு குழந்தையைப்

போல் முழு நம்பிக்கையில் ஏறக்குறைய முட்டாள்தனமான நம்பிக்கையில்தான் நீங்கள் முதல் அடி எடுத்து வைக்க வேண்டும்.

நான் மீண்டும் சொல்கிறேன்: இதில் குதிக்கும் அளவிற்கு முட்டாள்களாக இருப்பவர்களுக்கு வழி என்னவென்று தெரியாது. இது பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வந்திருக்கிறது. ஏசுநாதர் உலகில் தோன்றிய போது சில முட்டாள்கள் மட்டுமே அவரை நம்பினார்கள். இன்று அவர்களை நீங்கள் இறைத்தூதர்கள் என்று அழைக்கலாம். ஆனால் இது நடந்த காலத்தில் அவர்கள் வெறும் வெகுளிகள் முட்டாள்கள். ஒரு மீனவன், ஒரு தச்சன் ஒரு செருப்பு தைப்பவன் இவர்கள்தான் ஏசுநாதரை முதலில் முட்டாள்த்தனமாக நம்பியவர்கள். ஏசுநாதரை ஒரு யூதமதப் பூசாரியோ ஒரு பேராசிரியரோ பண்டிதரோ பின்தொடரவில்லை. சமுதாயத்தில் மரியாதையுடன் வாழ்ந்து கொண்டிருந்த எவரும் ஏசுவின்பின் போகவில்லை. ஏசுவின் சீடர்கள் எல்லோரும் முகம் தெரியாதவர்கள். - மீனவன் தச்சன் விலைமகள் குடிகாரன் உழவன் - இப்படிச் சாதாரண நிலையில் இருந்த மிகச் சிலரே ஏசுவின்பின் சென்றனர்.

யூத மதப் பூசாரிகள் ஏசுநாதரைக் கடுமையாக எதிர்த்தார்கள். அவர்கள் சாமர்த்தியசாலிகள். அவர்களுக்கு ஏற்கனவே எல்லாம் தெரியும். கற்றறிந்தவர்கள் எல்லாம் ஏசுவிற்கு எதிராக இருந்தார்கள். கூர்ந்து கவனித்தால் இந்தப் பண்டிதர்கள் படித்தவர்கள் பூசாரிகள் இவர்கள் எல்லோரும் சேர்ந்துதான் ஏசுநாதரை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று சதித்திட்டம் தீட்டினார்கள்.

ஏசுநாதரைப் பார்த்து அவர்கள் பயந்தார்கள். அதனால்தான் அவரைக் கொல்ல வேண்டும் என்று தீர்மானித்தார்கள். ஏசுவின் முன்னிலையே அவர்களை அச்சுறுத்தியது. அவர் ஓர் உயிருள்ள மதப் புத்தகமாக அவர்களுக்குக் காட்சியளித்தார். அவரோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது யூதப் பூசாரிகள் எல்லாம் செத்த நூல்களை விளக்கும் செத்தவர்கள் போல் காட்சியளித்தார்கள்.

ஏசுநாதரே கடவுளை அடையும் வழி. யூதப் பூசாரிகள் கடவுளை அடையப் பல வழிகளைப் போதித்தார்கள். ஏசுநாதரோ 'நானே வழி. நானே சத்தியம். நானே ஜீவன்' என்று இடிமுழக்கம் செய்தார். 'பாரம் சுமப்பவர்கள் என்னிடம் வந்து இளைப்பாருங்கள்' என்று எல்லோரையும் அழைத்தார்.

நீங்கள் படித்தவரைப் போல் இருக்கலாம். ஓரமாக அமர்ந்து ஓரக்கண்களால் பார்த்துக் கொண்டு நேரடியான பார்வையைத் தவிர்த்து இவன் என்னதான் சொல்கிறான் என்ற நினைப்புடன் என் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கலாம். அதனால் உங்களுக்கு எந்த நன்மையும் இல்லை. முக்கிய மானதைத் தவற விட்டுவிடுவீர்கள்.

ஐந்தாவது கேள்வி

*ஓஷோ,*

*காலையில் எழுந்து பறவைகளின் பாட்டைக் கேட்கும்போது சுத்தமான காற்றைச் சுவாசிக்கும்போது 'எனக்கு இது போதும் எதற்காக நான் உரையாற்ற வேண்டும்?' என்று எப்போதாவது நினைத்ததுண்டா?*

ஒவ்வொரு நாளும் அப்படித்தான் நினைக்கிறேன். பாதாம் மரத்தில் அமர்ந்திருக்கும் பறவைகளின் பாட்டொலியைக் கேட்கும்போது அப்படித்தான் நினைக்கிறேன். அந்தப் பாட்டை அனுபவித்துக் கேட்கிறேன். அதன் ஆழமான அழகை முற்றிலும் உணர்கிறேன். அதனால்தான் நான் ஒவ்வொரு நாளும் உரையாற்றுகிறேன். அப்போதுதானே நான் பாடமுடியும்?

என் உரை ஒரு பாடல். இது பறவைகளின் பாட்டிற்கு எதிர்ப்பாட்டல்ல. அந்தப் பாட்டோடு இசைந்து வரும் சங்கீதம். இதுதான் நான் பாடும் வழி. என்னை நம்புங்கள். பறவைகள் பாடும்போது நான் மகிழ்கிறேன். நான் பாடும்போது - அதாவது உரையாற்றும்போது - பறவைகள் மகிழ்கின்றன. இது எனக்கும் பறவைகளுக்கும் தினமும் நடக்கும் நிகழ்வு.

நான் தினமும் உங்களுக்குச் சொல்வது விரிவுரையல்ல. விரிவுரை ஓர் அசிங்கமான வார்த்தை. நான் எப்படி

விரிவுரையாற்ற முடியும்? இது ஒரு பாடல். தன்னிச்சையாக வெளிவரும் பாடல். அன்பால் மனம் நிரம்பிவழியும்போது வெளியே வரும் பாடல். நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். அதனால்தான் உங்களிடம் பல விஷயங்களைப் பகிர்ந்து கொள்கிறேன். அவை எதுவும் விளக்கங்கள் அல்ல. நான் உங்களுக்கு எதையும் விளக்கிச் சொல்லவில்லை. என் மனதில் இருக்கும் பேருவகையை பரவசத்தை வாழ்க்கை எனக்குக் கொடுக்கும் மட்டற்ற மகிழ்ச்சியை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

இது நான் தினமும் உங்கள் முன் ஆடும் நடனம். வார்த்தைகள்தான் என் அபிநயங்கள்.

ஒரு கவிஞனை ரசிப்பதைப் போல் என்னை ரசியுங்கள். ஒரு பறவையின் பாட்டொலியை ரசித்துக் கேட்பதுபோல் நான் சொல்வதைக் கேளுங்கள். ஒரு தத்துவ மேதையின் உரையைக் கேட்பதுபோல் என் பேச்சைக் கேட்காதீர்கள். இது விரிவுரை அல்ல. இது பிரசங்கம் அல்ல. நான் உங்களுக்கு ஒழுக்க விதிகளைப் போதிப்பதில்லை. இதைச் செய்ய வேண்டும் அதைச் செய்யக்கூடாது என்று உங்களுக்கு அறிவுரை வழங்கவில்லை. நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன் என்பதை உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்.

உங்களுக்குப் புரியவில்லை? நான் வரவேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்துவிட்டேன் என்பதை உங்களுக்குத் தெரியப்படுத்து கிறேன். நீங்களும் இந்த இடத்திற்கு வரலாம். நான் பல அபிநயங்களைப் பிடித்துக் காட்டுகிறேன். நீங்கள் ஒன்றைத் தவறவிட்டால் மற்றொன்றைப் பிடித்துக் கொள்ளலாம்.

நான் ஆயிரத்தியோரு அபிநயங்களைக் காட்டுகிறேன். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் இதில் ஏதாவது ஒன்று உங்களைச் சரியான சமயத்தில் தாக்கலாம். ஒரு நாள் ஒரு நேரத்தில் நீங்கள் பழுத்து பக்குவமடைந்து தயாராக இருக்கலாம். அப்போது அது திடீரென்று நிகழும்.

என்னைக் கவனிப்பது என்னோடு கூடுவதற்குச் சமம். நான் பேசுகிறேன். நீங்கள் கேட்கிறீர்கள். இதில் பெரிய

கூட்டு நிகழலாம். தோழமை உருவாகலாம். உங்கள் கவனம் முழுமையாக இருக்கும்போது உங்கள் உடலெல்லாம் செவிகளாகும் போது திடீரென்று உங்களிடம் உள்ள சக்தி உச்சத்தைத் தொடும். ஒரு மின்னல் வெட்டும். அதைத்தான் ஜென் துறவிகள் ஸடோரி என்கிறார்கள். அப்போது உங்களுக்கு எல்லாம் புரியும். நான் எதையும் விளக்கிச் சொல்லவில்லை என்றாலும் உங்களுக்குப் புரியும்.

நான் விளக்கம் சொல்லவில்லை. என் மனதின் ஆழத்தில் இருக்கும் புரிந்துணர்வை உங்களுக்கு மாற்றுகிறேன்.

நீங்கள் செவிடாக இருந்தால்தான் இதைத் தவறவிட முடியும். இன்று மக்களில் பலர் செவிடாகவே இருக்கிறார்கள். நீங்கள் குருடாக இருந்தால்தான் என்னைக் கவனிக்காமல் இருக்க முடியும். இன்று மக்களில் பலர் கண்ணிருந்து,ம் குருடராகவே இருக்கிறார்கள்.

ஒரு மனிதன் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குச் சென்றிருந்தான். ஒரு பைத்தியம் சுவரில் காதை வைத்து எதையோ உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தது. வந்தவனைப் பார்த்து "நீயும் இதில் காதை வைத்துப் பாரேன்" என்று சொன்னது. வந்தவன் அப்படியே செய்தான்.

"எனக்கு ஒன்றும் கேட்கவில்லையே?" - வந்தவன்

"எனக்குத் தெரியும். எனக்கும் ஒன்றும் கேட்கவில்லை. நான் வந்ததில் இருந்து இப்படித்தான் இருக்கிறது. ஒன்றும் கேட்கவில்லை."

அவனுக்கு ஒன்றும் கேட்கவில்லை. என்றாலும் இன்னமும் சுவரில் காதை வைத்துக் கவனித்துக் கொண்டிருக்கிறான்.

வாழ்க்கையில் இரண்டு விபத்துக்கள் நடக்கலாம். சிலர் வாழ்நாள் முழுவதும் சுவர்களில் காதை வைத்துக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். விரிவுரை, பிரசங்கம், பூசாரிகள், போப்பாண்டவர், சங்கராச்சாரியார் - போன்ற சுவர்களில் காதைவைத்துக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் இரண்டாம்தர மனிதர்கள்.

இவர்கள் நகல் உருவங்கள். இவர்களுக்கென்று சொந்தமாக எந்த அனுபவமும் இல்லை. இந்தச் சுவர்களில் காதை வைத்தால் உங்களுக்கு ஒன்றுமே கேட்காது. இவர்கள் வெறும் சுவர்கள் மட்டுமே. உள்ளே ஒன்றும் இல்லை. இப்படி ஒன்றும் இல்லாத சுவரின்மேல் பற்று வைப்பது ஒரு விபத்து.

இன்னொரு விபத்து நடக்கவும் வாய்ப்பு இருக்கிறது. நீங்கள் ஒரு புத்தரோடு இருக்கலாம். ஒரு கிருஷ்ணபரமாத்மா வோடு ஓர் ஏசுபிரானோடு ஒரு நபிகள் நாயகத்தோடு இருக்கலாம். ஆனால் நீங்களே சுவராக இருந்தால்.. ..

அதன்பின் அவர்கள் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். ஆனால் உங்களுக்கு ஒன்றும் ஏறாது. நீங்கள் அவர்களைக் கவனிக்க மாட்டீர்கள்.

ஏசுநாதர் பலமுறை தன் சீடர்களிடம் இதைச் சொல்லி யிருக்கிறார் "உங்களுக்குச் செவிகள் இருந்தால் கேளுங்கள். கண்கள் இருந்தால் பாருங்கள். நான் இங்கேதான் இருக்கிறேன்."

நான் உங்களுக்கு விரிவுரையாற்றவில்லை. என் இருப்புநிலையை உங்களோடு பங்கு போட்டுக் கொண்டிருக்கிறேன். உங்கள் உணர்வுகளை இன்னும் கூர்மைப்படுத்திக் கொள்ளுங்கள். உங்கள் மனதில் இருக்கும் அன்பை அதிகமாக்குங்கள். இன்னும் பெண்மையுடன் இருங்கள் இன்னும் அக்கறையுடன் இருங்கள் ஒரு கருப்பையாக மாறுங்கள் கூடிய சீக்கிரம் என்னைக் கருத்தரிப்பீர்கள்.

ஆனால் சிலருக்குக் கவனிக்க விருப்பமில்லை. என்னைக் கவனிக்க வேண்டும் என்றுதான் வந்திருக்கிறார்கள். ஆனால் கவனிப்பதில்லை. இங்கே இல்லாதபோது எதையோ தவறவிட்டு விட்டோம் என்று நினைப்பார்கள்.

இங்கே இருக்கும்போது இறுக்கமாகப் பயத்துடன் அமர்ந்திருப்பார்கள். அதிகம் கவனித்தால் அதற்குள் ஆழ்ந்து போய்விடுவோமோ என்ற அச்சம் அவர்களுக்கு இருக்கிறது.

பின் இந்த நிலைக்குத் திரும்பி வரமுடியாமல் போய்விடுமோ என்ற பயம் அவர்களுக்கு இருக்கிறது. அதனால் இங்கும் இல்லாமல் அங்கும் இல்லாமல் ஒரு தொங்கு நிலையில் இருக்கிறார்கள்.

இப்படித்தான் முல்லா நசிருதீன் ஒரு நாள் செய்தித்தாளில் வரி விளம்பரம் கொடுத்தார். தன் மனைவி வளர்க்கும் பூனையை யாராவது கண்டுபிடித்துக் கொடுத்தால் எந்த நிபந்தனையும் இல்லாமல் பத்தாயிரம் ரூபாய் தந்துவிடுவதாக விளம்பரம் கொடுத்தார்.

"இந்தியாவில் ஒரு பூனைக்கு இது கொஞ்சம் அதிகம் இல்லையா?" விளம்பரத்தை ஏற்றுக் கொண்ட பத்திரிகை ஊழியர் கரிசனத்துடன் விசாரித்தார்.

"நிச்சயமாக இல்லை. அந்தப் பூனையை ஆற்றில் மூழ்கடித்துக் கொன்றவனே நான்தான்!"

அப்படிப் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு இங்கே வந்து நான் பேசுவதைக் கவனிக்கப் பிடிக்கவில்லை. என்றாலும் வருகிறார்கள். கவனம் செலுத்த முயற்சி செய்கிறார்கள். அவர்கள் பூனையை ஏற்கனவே மூழ்கடித்துவிட்டார்கள். ஆகையால் தொலைந்து போன பூனையைக் கண்டுபிடிக்கும் வாய்ப்பே இல்லை என்று அவர்களுக்குத் தெரியும். என்றாலும் பூனையைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒருவேளை மற்றவர்களை ஏமாற்றுவதற்காகப் பூனையைத் தேடுவதைப் போல் நடிக்கிறார்களோ என்னவோ? ஆனால் அப்படிச் செய்தால் விரைவில் நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்வீர்கள்! அடுத்தவர்கள் ஏமாந்தால் அந்த ஏமாற்றமே உங்களையும் ஏமாற்றிவிடும்.

விழிப்புணர்வுடன் இருங்கள். அதீத விழிப்புணர்வுடன்தான் நீங்கள் என்னை ஏற்றுக் கொள்ள முடியும். அப்போதுதான் இங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று உங்களுக்குத் தெரியும்.

கடைசிக் கேள்வி:

*ஓஷோ,*

*ஒவ்வொரு நாளும் உங்கள் பேச்சுக்கு இவ்வளவு தாமதமாக வருவதற்கு ஏதாவது மூன்று விசேஷ காரணங்கள்..*

இது யாத்ரியின் கேள்வி. ஏன் தாமதம்? எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. ஏன் சில நாட்கள் நான் தாமதமாக வரவில்லை என்று எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. எனக்குக் காலம் இல்லை. நான் எப்படிச் சமாளிக்கிறேன் என்று எனக்கே தெரியவில்லை.

யாத்ரி கேட்கிறான் : என் தாமதத்திற்கு மூன்று விசேஷ காரணங்கள்..

முதல் காரணம் நான் குடித்திருக்கிறேன்.

இரண்டாவது காரணம் நான் குடித்திருக்கிறேன்.

மூன்றாவது காரணம் நான் குடித்திருக்கிறேன்.

கடைசி கடைசியாக ஒரு கேள்வி

*ஓஷோ,*

*நான் முதல் கேள்விக்கு முந்தைய கேள்வியைக் கேட்க முடியுமா? முதன் முதல் கேள்வியைக் கேட்க முடியுமா? ஓஷோ நீங்களோ விஞ்ஞானி ஐன்ஸ்ட்டீன் இல்லை. அதன்பின் ஏன் கேள்விகளை ஒன்று இரண்டு மூன்று என்று வரிசைப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள்.*

அது உண்மைதான். எனக்குக் கணக்குத் தெரியாது. ஆனால் ஒன்றை மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஐன்ஸ்டீனுக்கும் கணக்கு தெரியாது. சில நேரங்களில் அவர் என்னை விட மோசம்.

ஒரு முறை ஐன்ஸ்ட்டீன் பேருந்தில் சென்று கொண்டிருந்தார். பயணச்சீட்டிற்காக நடத்துனரிடம் கொஞ்சம் பணம் கொடுத்தார். நடத்துனர் சீட்டையும் பாக்கிப் பணத்தையும் கொடுத்தார்.

ஐன்ஸ்டீன் சில்லறையை எண்ணிப் பார்த்தார். நடத்துனர் தன்னை ஏமாற்றுவதாக நினைத்தார்.

"உன் மனதில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? என்னை யார் என்று நினைத்து என்னுடன் விளையாடிக் கொண்டிருக்கிறாய்? பாக்கி சில்லறை சரியாக இல்லை."

விஞ்ஞானியின் கையில் இருந்த சில்லறையை மீண்டும் எண்ணிப் பார்த்தார் நடத்துனர்.

"சரியாகத்தான் இருக்கிறது."

ஐன்ஸ்டீன் மீண்டும் எண்ணினார்.

"சரியாக இல்லை. குறைவாக இருக்கிறது."

நடத்துனருக்குக் கோபம் வந்துவிட்டது. "யோவ் உனக்கு என்னய்யா பிரச்சினை? காசு எண்ணத் தெரியாது? இந்த சாதாரணக் கணக்குக் கூடவா தெரியாது? நீயெல்லாம் வாழ்க்கையில எப்படித்தான் குப்பை கொட்டப் போறியோ!"

இதை ஐன்ஸ்டீன் தன் சுயசரிதையில் எழுதியுள்ளார். ஐன்ஸ்டீனே ஐன்ஸ்டீனைப் போல் இல்லை. எனக்குச் சுட்டுப் போட்டாலும் கணக்கு வராது. முதல் கேள்வி இரண்டாவது கேள்வி. அப்பறம் கணக்கை மறந்துவிடுவேன். நீங்கள் சொல்வது உண்மைதான். நல்ல வேளையாக நான் தினமும் கடைசி கேள்வியிலிருந்து ஆரம்பிக்கவில்லை என்று சந்தோஷப் படுங்கள்.

இன்று இவ்வளவு போதும்.

முடிவின்மை இடையறாது புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருக்கிறது

அதிலிருந்து வரும் ஒலிதான் அன்பு

அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்

உண்மையைச் சென்றடையும்.

எவ்வளவு தூரத்திற்கு அதன் மணம் பரவுகிறது!

அதற்கு முடிவு இல்லை அதன் வழியில் எதுவும் நிற்க முடியாது.

இந்த இன்னிசையின் உருவம்

கோடி சூர்யப் பிரகாசத்துடன் ஜொலிக்கிறது.

மெய்ப்பொருளின் ஸ்வரங்களின் வீணையினின்றும்

கிளம்பும் இசைக்கு உவமையே இல்லை.

அன்பின் வழி நுட்பமானது

அங்கே கேட்டலும் இல்லை. கேட்காமல் இருத்தலும் இல்லை.

அங்கே ஒருவன் அவன் காலடியில் தன்னையே இழக்கிறான்.

மற்றவன் தேடல் என்னும் சுகத்தில் மூழ்கியிருக்கிறான்.

மீன் நீருக்குள் திளைத்து இருப்பது போல்

அன்பின் ஆழங்களில் திளைத்து இருக்கிறான்.

*இறைவனின் பணியில் தன் தலையைக் கொடுக்க*

*காதலன் என்றும் தாமதம் செய்வதில்லை*

*இந்தக் காதலின் ரகசியத்தைக் கபீர் பிரகடனம் செய்கிறான்*

கோட்பாட்டியல் வல்லுனன் என்னவென்று தெரியாமல் தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறான். எல்லாம் தெரிந்த ஞானியோ ஒன்றும் பேசாமல் இருக்கிறான். ஞானியின் ஆழ்ந்த மௌனத்தில் இன்னும் அதிகமான பேச்சாற்றல் பொதிந்து கிடக்கிறது.

நுண்பொருள் விஞ்ஞானியும் ஞானியும் குருதேவரில் சங்கமிக்கிறார்கள்.

நுண்பொருள் விஞ்ஞானிக்கு எப்படிப் பேச வேண்டுமென்று தெரியும். ஆனால் என்ன பேச வேண்டும் என்று தெரியாது. ஞானிக்கு எதைப் பேச வேண்டும் என்று தெரியும். ஆனால் அதற்கான வார்த்தைகள் தெரியாது. ஞானியிடம் அனுபவம் பொங்கி வழிகிறது. ஆனால் அதை வெளிப்படுத்த வார்தைகள் இல்லை. அந்த விஷயத்தில் ஞானி ஊமையாக இருக்கிறான்.

நுண்பொருள் விஞ்ஞானிக்கு அனுபவமே கிட்டவில்லை. என்றாலும் பெரிய வாயாடியாக இருக்கிறான். அவனிடம் மதிப்பில்லை. தன் அனுபவத்தை வார்த்தையில் வடிக்க முடியாத ஞானியால் நமக்கு எந்தப் பயனும் இல்லை.

நீங்கள் ஒரு ஞானியை வழிபடலாம். ஆனால் அவனைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் உங்களுக்கும் அவனுக்கும் கருத்துப் பரிமாற்றம் நடக்க வாய்ப்பேயில்லை. அந்த ஞானி தான் கடந்து வந்த மொழி என்னும் பாலத்தைத் தகர்த்து எறிந்து விட்டான்.

அவன் உண்மையில் திளைத்திருக்கிறான். ஆனால் அந்தச் செய்தியை உங்களுக்குச் சொல்ல அவனால் முடியாது.

நுண்பொருள் விஞ்ஞானி தொடர்ந்து செய்திகளாக அனுப்பிக் கொண்டேயிருப்பான். ஆனால் அவை வெறும் வார்த்தைப்

பொட்டலங்களாகத்தான் இருக்கும். அந்தப் பொட்டலங்களுக்குள் எந்தச் சரக்கும் இருக்காது.

ஒரு குருவிற்கு வேண்டும் என்ற அளவிற்கு அனுபவமும் இருக்கும். அதை வெளிப்படுத்தும் அளவிற்கு மொழியின்மேல் ஆளுமையும் இருக்கும். நுண்பொருள் விஞ்ஞானிகள் ஆயிரக்கணக்கில் இருந்திருக்கிறார்கள். அதேபோல் ஞானிகளும் இருந்திருக்கிறார்கள். ஆனால் ஒரு முழுமையான குருதேவர் எப்போதாவதுதான் இந்த உலகில் தோன்றுவார்.

அப்படிப்பட்ட குருதேவர்களில் கபீர் மிகவும் சிறப்பான இடத்தில் இருக்கிறார். அவருக்கு எது மெய்ப்பொருள் என்று தெரியும். அதை எப்படி நம்மிடம் சொல்வது என்றும் தெரியும். அதனால்தான் அவர் துணிச்சலாகப் பிரகடனம் செய்கிறார்:

*இந்தக் காதலின் ரகசியத்தைக் கபீர் பிரகடனம் செய்கிறான்*

அவருடைய இருப்புநிலையே ஒரு பிரகடனம்தான். அவர் ஊமையில்லை. தன் வாழ்நாள் எல்லாம் பாடிக்கொண்டிருந்தவர். அன்பின் கீதங்களை, உண்மையின் கீதத்தைப் பாடியவர்.

இந்த வரிசையில் நாம் பார்க்கப்போகும் கடைசிப் பாடல் மகத்தானது. நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இந்தப் பாடலின் பொருளைக் கவனமாக உள்வாங்கிக் கொள்ளுங்கள். இதன் பொருளை ஜீரணித்து உங்கள் இருப்புநிலையின் ஒரு பகுதியாக வைத்துக் கொள்ளுங்கள். இந்தப் பாடலைப் புரிந்து கொள்ளும் ஒரே வழி அதுதான்.

*முடிவின்மை இடையறாது புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருக்கிறது*

*அதிலிருந்து வரும் ஒலிதான் அன்பு.*

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்*

*உண்மையைச் சென்றடையும்.*

*எவ்வளவுதூரத்திற்கு அதன் மணம் பரவுகிறது!*

முடிவின்மை என்னும் புல்லாங்குழல்... கீழைநாடுகளில் மனிதனின் இருப்பிற்குப் புல்லாங்குழலைக் குறியீடாகச் சொல்வது மரபு. இறைவனின் உதடுகளின்மேல் இருக்கும் அந்த மூங்கில் குழல் போன்றதுதான் மனிதனின் இருப்பு. பாடல் இறைவனுடையது.

புல்லாங்குழல் தானாக எந்தப் பாட்டும் பாடமுடியாது. அதிகபட்சமாக அதனால் இசைக் கலைஞனைப் பாட அனுமதிக்கத்தான் முடியும். அந்தக் கலைஞனின் இசை தன்வழியாகப் பாய அனுமதிக்க முடியும். ஒரு புல்லாங்குழலினால் அவ்வளவுதான் செய்ய முடியும்.

இருப்புநிலை ஒரு பாதை. மனிதனும் அப்படித்தான். மனிதன் ஒரு புல்லாங்குழல். பறவைகள், மரங்கள், சூரிய சந்திரர்கள் எல்லாமே புல்லாங்குழல்கள்தான். மொத்தப் படைப்பும் மூங்கில் குழாய் போன்றதுதான். இறைவன் அந்தக் குழாய் வழியாகப் பாய்ந்து கொண்டிருக்கிறான். அந்த மூங்கில் குழாயின் ஓட்டைகள் மூலமாக வடிகட்டப்பட்டு ஆயிரம் ஆயிரம் வழிகளில் வெளியேறிக் கொண்டிருக்கிறான்.

உங்களிடம் பேசிக் கொண்டிருப்பது நான் அல்ல. நான் ஒரு துளையிட்ட மூங்கில். என் பேச்சைக் கவனிப்பதும் நீங்கள் அல்ல. அவன் உங்கள் மூலமாக என் பேச்சைக் கவனித்துக் கொண்டிருக்கிறான். நீங்கள் ஒரு துளையிடப்பட்ட மூங்கில்.

பேசுபவர் கவனிப்பவர் நடனமாடுபவர் அதை ரசித்துப் பார்ப்பவர் யாராக இருந்தாலும் சரி - நாம் அனைவரும் அந்த முடிவின்மையின் - அந்த இறைவனின் - உதடுகளைத் தொட்டுக் கொண்டிருக்கும் துளையிடப்பட்ட மூங்கில்களே. பாட்டும் அவனுடையது. மௌனமும் அவனுடையது.

இந்தத் துளையிடப்பட்ட மூங்கில் கோட்பாட்டைப் புரிந்து கொண்டால் நீங்கள் அன்பின் பாதைக்கு வந்துவிடலாம். இதுதான் முதல்படி.

*முடிவின்மை இடையறாது புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருக்கிறது.*

இது ஓர் அழகான முரண்பாடு. முடிவின்மைத் தத்துவத்திற்கு முடியும் தன்மை கொண்ட ஒரு புல்லாங்குழல் தேவைப்படுகிறது. உருவங்களைத் தாண்டி நிற்கும் அந்த அருவத்திற்குத் தன்னை வெளிப்படுத்திக்கொள்ள ஓர் உருவம் தேவைப்படுகிறது. உங்களுக்கு எந்த அளவிற்கு இறைவன் தேவைப்படுகிறாரோ அந்த அளவிற்கு இறைவனுக்கு நீங்கள் தேவைப்படுகிறீர்கள்.

தேவை ஒருபக்கம் மட்டும் இல்லை. அப்படி இருந்தால் அது அவ்வளவு அழகாக இருக்காது. நமக்கு மட்டும் கடவுளின் தேவை இருந்து கடவுளுக்கு நாம் தேவைப்படவில்லையென்றால் அது ஓர் அசிங்கமான ஒருதலைக்காதலாக இருந்திருக்கும். அதில்கூட ஒரு சமச்சீர் நிலை இருக்கிறது. ஒரு புல்லாங்குழலை இசைக்க ஓர் இசைக் கலைஞன் தேவை. அதேபோல் ஓர் இசைக் கலைஞனுக்குத் தன் கலையை வெளிப்படுத்த ஒரு புல்லாங்குழல் தேவை.

ஒரு புல்லாங்குழல் தானாக ஒரு பாட்டை உருவாக்க முடியாது. ஆனால் அந்தக் கலைஞனாலும் குழல் இல்லாமல் ஒரு பாட்டை உருவாக்க முடியாது. புல்லாங்குழலுக்குக் கலைஞன் தேவை. அதே அளவிற்கு கலைஞனுக்குப் புல்லாங்குழல் தேவை.

இது ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கும் உன்னதமான நிலை. முழுமை பகுதிகளைச் சார்ந்திருக்கிறது. பகுதிகள் முழுமையைச் சார்ந்திருகின்றன. முழுமையும் தனியாகச் சுதந்திரமாக இல்லை. பகுதிகளும் தனியாக, சுதந்திரமாக இல்லை. இந்த இடத்தில் சுதந்திரம் என்ற கோட்பாடே பைத்தியக்காரத் தனமானது. நாம் ஒன்றாக இணைந்திருக்கிறோம். நம் கண்ணியமே இந்த இணைப்பில்தான் இருக்கிறது.

ஒரு பக்கம் கபீர் சொல்கிறார்: "துளையிடப்பட்ட மூங்கிலாக இரு." மறுபக்கம் "உன் கண்ணியத்தை நினைத்துப் பார். நீ இல்லாமல் கடவுளால் இசையை உருவாக்க முடியாது."

சவுக்கு மரத்தில் குடியிருக்கும் சிறு பறவைகளின் துணையில்லாமல் கடவுளால் பாட முடியாது. கடவுள் அந்தப்

பறவைகளைச் சார்ந்து இருக்கிறார். ஒவ்வொரு நாள் காலையிலும் அந்தப் பறவைகளின் சேவை அவருக்குத் தேவைப்படுகிறது. ரோஜாப்பூக்களின் துணையில்லாமல் கடவுளால் மலர முடியாது. தினமும் காலை அந்த மலர்களைத் தேடுகிறார் கடவுள்.

கடவுளும் அவருடைய இருப்புநிலையும் வேறு வேறு அல்ல. ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. ஒன்றன் மேல் ஒன்று சாய்ந்திருக்கிறது. இரு காதலர்களைப் போல் சதா ஒன்றை ஒன்று தேடிக் கொண்டிருக்கிறது. காதலி தொலைந்து போய்விட்டால் காதலன் முழுமையானவனாக இருக்கமாட்டான். காதலன் இல்லையென்றால் காதலிக்கு முழுமை இருக்காது. அவர்கள் இருவரும் இணைந்து இருக்கும்போது, ஒருவருக்காக ஒருவர் அன்பில் உருகிக் கொண்டிருக்கும் அந்த இணைப்பில் தான் இருவருமே முழுமை பெறுகிறார்கள்.

இதை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். ஒருபகுதி மட்டும் என்றும் முழுமையாகாது. அவ்வளவு ஏன்? பகுதிகள் இல்லாமல் முழுமை மட்டுமே ஒரு நாளும் முழுமையாகாது. முழுமைக்குப் பகுதிகள் வேண்டும். பகுதிகள் இல்லாமல் முழுமையில் செழுமை இருக்காது.

படைப்புகள் இல்லாத ஒரு கடவுளை யோசித்துப் பாருங்கள். அந்தக் கடவுள் வெறுமையாகவே இருப்பார். தரிசுநிலமாகத்தான் இருப்பார். மரங்கள் ஆறுகள் கடல்கள் இல்லாத ஒரு கடவுளைச் சிந்தித்துப் பாருங்கள். மனிதன் பறவைகள் விலங்குகள் இல்லாத ஒரு கடவுளைச் சிந்தித்துப் பாருங்கள். சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் இல்லாத ஒரு கடவுளைச் சிந்தித்துப் பாருங்கள். அந்தக் கடவுள் பாலைவனமாகவே இருப்பார்.

கடவுளுக்கு நாம் தேவைப்படுகிறோம் என்ற கோட்பாட்டை கீழை நாட்டு மதங்கள் அழுத்தமாகச் சொல்கின்றன. கடவுளும் நாமும் ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கிறோம். நாம் சேர்ந்து இருக்கிறோம். இந்தச் சேர்க்கையைத் தெரிந்து கொள்வதின்மூலமாக மட்டுமே நாம் அன்பைத் தெரிந்து கொள்ளலாம். இந்த

மகத்தான இணைப்பைத் தெரிந்து கொண்டால் அன்பு எதைப் பற்றியது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

ஒரு பெண்ணையோ ஆணையோ காதலிக்கிறீர்கள். அப்போது என்ன தெரிந்து கொள்கிறீர்கள்.? காதல் என்றால் என்ன? ஒரு சிறிய அளவில் நீங்கள் இருவரும் தனித்தனி ஆட்கள் இல்லை என்று புரிந்து கொள்கிறீர்கள் அல்லவா? எனக்காக நீயும் உனக்காக நானும் படைக்கப்பட்டிருக்கிறோம் என்ற பேருண்மையை ஒரு சிறிய அளவில் தெரிந்து கொள்கிறீர்கள் அல்லவா?

ஒருவர் இல்லாமல் மற்றவர் முழுமையாக இருக்க முடியாது; அடுத்தவர் நிச்சயம் வாழ்க்கையில் வேண்டும்.; உங்கள் காதலி உங்கள் ஆன்மாவின் ஒரு பகுதி; உங்கள் காதலி உங்களுக்கு வெளியில் இல்லை - இவை போன்ற உண்மைகளைத் தெரிந்து கொள்கிறீர்கள் அல்லவா?

ஏதோ ஒருவகையில் உங்கள் காதலன் உங்களுக்குள் இருக்கிறான். இருந்தாலும் அவன் உங்களுக்கு வெளியே இருக்கிறான். காதலர்கள் ஒருவரை ஒருவர் ஊடுருவி உட்செல்லுகிறார்கள். இது உடலுறவைக் குறிக்கும் சொற்றொடர் மட்டும் இல்லை.

இந்த ஊடுருவல் ஆன்மிகமானது. உடலுறவு என்பது அதன் பலவீனமான ஒரு நிழல் மட்டுமே.

காதலர்கள் ஒருவரை ஒருவர் ஊடுருவிச் செல்கிறார்கள். அவர்களின் எல்லைகள் மங்குகின்றன. அவர்களின் தனிமனித வரையறைகள் மறைகின்றன. ஓர் ஆணும் பெண்ணும் பல வருடங்கள் சேர்ந்து வாழ்கிறார்கள். திடீரென்று அதில் ஒருவர் இறந்துவிடுகிறார். அந்தச் சமயத்தில் உயிருடன் இருப்பவர் அனுபவிக்கும் வலியும் வேதனையும் பிரிவினால் மட்டும் வருவதல்ல.

அந்தச் சாவுக்குப்பின் உயிருடன் இருப்பவர் முழுமையாக இருக்க மாட்டார். அவரில் ஒரு பகுதி இப்போது நிரந்தரமாக அழிக்கப்பட்டுவிட்டது. இப்போது அவருடைய இருப்புநிலையில்

ஓர் ஓட்டை விழுந்துவிட்டது. ஒரு சூன்யம் புகுந்துவிட்டது. உங்கள் காதலி இறந்தால் உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று இறந்துவிடுகிறது.

நீங்கள் இருவரும் ஒன்றாக இணைந்து இருந்தீர்கள். உங்கள் வாழ்க்கை தனித்தனியாக இல்லாமல் சேர்ந்தே இருந்தது. நீங்கள் இரு வேறு உடல்களில் இருந்தாலும் ஒருயிராகவே வாழ்ந்து வந்தீர்கள். இதுதான் உச்சகட்ட காதல். இதுதான் காதலின் உண்மைப் பொருள்.

இதே காதல் மொத்தப் படைப்போடு உண்டாகுமேயானால்.. .. நீங்கள் தனியாள் அல்ல என்பதை உணர்ந்தால், உங்கள் எல்லைகள் இணைந்தால், உங்கள் எல்லைகள் மட்டுமில்லை உங்கள் மையங்கள் இணைந்தால் உங்கள் மையமே பிரபஞ்சத்தின் மையம் என்று ஆகிவிட்டால் பிரபஞ்சத்தின் மையமே உங்கள் மையம் என்று ஆகிவிட்டால் - அந்த ஒருமையின் பரவசநிலையில்தான் அன்பின் வாசம் பிறக்கிறது.

*முடிவின்மை இடையறாது புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருக்கிறது*

*அதிலிருந்து வரும் ஒலிதான் அன்பு*

இந்த மொழிபெயர்ப்பைவிட கபீரின் மூலம் இன்னும் அழகாக செறிவுடன் இருக்கிறது. 'முரளி பஜத் அகண்ட் ஸதயா'

இதில் வரும் அகண்ட் அர்த்தச் செறிவுள்ள ஓர் அழகான சொல். அதை 'இடையறாது' என்று இங்கே மொழிபெயர்த்திருக்கிறோம்.

*முடிவின்மை இடையறாது புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருக்கிறது*

ஆனால் அது துல்லியமான மொழிபெயர்ப்பு இல்லை. அகண்ட் என்றால் தொடர்ந்து. இடையறாது என்பதுதான் பொருள். ஆனால் இந்தச் சொற்களில் மூலத்தில் இருக்கும் வீரியம் முழுதாக வரவில்லை.

நீங்கள் தொடர்ந்து சுவாசித்துக் கொண்டிருக்கிறீர்கள். இல்லாவிட்டால் நீங்கள் இறந்துவிடுவீர்கள். ஆனால் சில சமயம் நீங்கள் மூச்சை உள்வாங்குகிறீர்கள். சில சமயம் அதை வெளியே விடுகிறீர்கள். உள்வாங்கும்போது வெளியே விடுவதில்லை. இரண்டையும் ஒரே சமயத்தில் செய்ய முடியாது. உள்மூச்சு ஒரு நிகழ்வு என்றால் வெளி மூச்சு வேறொரு நிகழ்வு. மூச்சை உள்ளிழுக்கும் நிகழ்விற்கு மூச்சை வெளியே விடுதல் ஓர் இடைவெளியை உண்டாக்கும். அதேபோல் மூச்சை வெளியே விடுதல் என்னும் நிகழ்விற்கு மூச்சை உள்ளே இழுத்தல் ஓர் இடைவெளியை உண்டாக்கும்.

நம் நாட்டுக் கோட்பாடுகளை வைத்துப் பார்த்தால் கடவுள் 'இடையறாது' புல்லாங்குழல் வாசித்துக் கொண்டுதான் இருக்கிறார். அதற்காக அந்த வாசிப்பில் இடைவெளியே கிடையாது என்று நாம் சொல்ல முடியாது. இடைவெளியே இல்லை என்றால் இசை இசையாக இருக்காது. இசை என்பது வெறும் ஒலி மட்டுமல்ல. ஒலியும் ஒலியற்ற மௌனமும் இணையும் ஒரு ரசவாத நிகழ்வே இசை. இசை ஒலியிலும் இருக்கிறது. ஒலிகளுக்கு இடையே உள்ள மௌனத்திலும் இருக்கிறது.

யாராவது புல்லாங்குழல் இசைக்கும்போது கவனியுங்கள். யாராவது பாடும்போது ஸ்வரங்களைக் கவனியுங்கள். நான் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். கவனித்துப் பாருங்கள். ஒரு வார்த்தையைத் தொடர்ந்து அடுத்த வார்த்தை வருவதில்லை. ஒரு சொல் அதைத் தொடர்ந்து ஒரு குட்டி மௌனம் பின் அதைத் தொடர்ந்து இன்னும் ஒரு சொல் என்றுதான் என் பேச்சு போகிறது.

இரண்டு சொற்களுக்கு இடையே ஓர் இடைவெளி இருக்கிறது. இல்லாவிட்டால் இரண்டு சொற்களுக்குமே வரையறை இருக்காது. வரையறை இல்லையென்றால் இரண்டும் ஒன்றோடு ஒன்று மோதிக்கொண்டு உருச்சிதைந்துவிடும்.

அதன்பின் பேச்சு இருக்காது. அர்த்தமில்லாத சத்தம் மட்டுமே இருக்கும்.

'இடையறாது' என்றால் ஒலி இடையறாது வந்து கொண்டிருக்கிறது. சிலசமயம் அது ஒலியாகவும் சில சமயம் மௌனமாகவும் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதுதான் இந்த வாக்கியத்தின் பொருள். சில சமயம் முழுமை வெளிப்படுகிறது. சில சமயம் அந்த வெளிப்பாடு இல்லாமல் இருக்கிறது. ஆனால் முழுமை என்றும் 'இடையறாது' இருக்கிறது.

இறைவன் சுவாசத்தை வெளியே விடும்போது படைப்புத் தொழில் நிகழ்கிறது. சுவாசத்தை உள்ளிழுக்கும்போது படைக்கப் பட்டவை அழிக்கப்பட்டு உள்ளே சென்றுவிடுகின்றன. இதுதான் இந்து மதத்தின் படைப்புத் தத்துவம்.

இது ஓர் அர்த்தச் செறிவுள்ள கோட்பாடு. கடவுள் மூச்சை வெளியே விடுவதால்தான் நாம் படைக்கப்படுகிறோம். அவர் மூச்சை உள்வாங்கும்போது எல்லாப் படைப்புகளும் மறைந்து விடுகின்றன. மீண்டும் மூச்சை வெளியே விடும்போது மீண்டும் படைப்புகள் தோன்றுகின்றன.

இன்றைய அறிவியல் இந்தத் தத்துவத்தை நெருங்கி வந்துவிட்டது. பருப்பொருள் இடையறாது தொடர்ந்து இருக்கிறது. என்றாலும் அந்தத் தொடர்ச்சி ஒரே மாதிரியாக இல்லை. நடுவில் தோன்றும் இடைவெளியில் பருப்பொருள் மறைந்துவிடுகிறது. அந்த இடைவெளி மிகச்சிறியதாக இருப்பதால் நம் கண்களுக்கு அந்த மறைதல் புலப்படாது. மின்னணுக்களின் இயக்கம் மிகவும் நுட்பமாக இருக்கிறது. ஒரு விநாடி ஒரு மின்னணுவை ஓரிடத்தில் பார்க்கிறீர்கள். அடுத்த விநாடியே அது வேறு ஓர் இடத்தில் தோன்றுகிறது. அது எப்படி இந்த இடத்திலிருந்து அந்த இடத்திற்குச் சென்றது என்று உங்களால் உணர முடியவில்லை. அது நகரவில்லை. அது ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் குதிக்கவில்லை.

இதை வைத்துப் பார்க்கும்போது ஓர் அபத்தமான கருத்து தோன்றுகிறது. மின்னணு ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போவதில்லை. ஓர் இடத்தில் இருந்து அது மறைந்துவிடுகிறது. பின் வேறொரு இடத்தில் அது திடீரென்று தோன்றுகிறது. இது விநோதமானது. கற்பனையைவிட நிஜம் இன்னும் விநோதமானது.

இன்றைய அறிவியல் நுண்பொருள் விஞ்ஞானத்தைவிட அதிகமான நுட்பத்துடன் இருக்கிறது. கபீர் மூல நூலில் பயன்படுத்திய அகண்ட் என்ற சொல்லிற்கு இதுதான் பொருள். அது மறைந்தாலும் அங்கேயேதான் இருக்கிறது. அது தோன்றும்போது அங்குதான் இருக்கிறது. மறையும் போதும் அங்குதான் இருக்கிறது. சில சமயம் அதனை நீங்கள் வெளிப்பாடாகப் பார்க்கலாம்.

சிலசமயம் வெளிப்பாடில்லாத நிலையில் பார்க்கலாம். சிலசமயம் அது உருவங்களில் விளையாடுகிறது. சில சமயம் அது அருவத்தில் நிலைபெற்றிருக்கிறது. ஆனால் எப்போதும் அது அங்கு இருக்கிறது. உங்கள் காதுகளால் இரண்டு ஸ்வரங்களுக்கு இடையில் உள்ள இடைவெளியைக் கேட்க முடியுமென்றால் அது 'இடையறாது' இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

'முரளி பஜத் அகண்ட் ஸதயா' புல்லாங்குழல் தொடர்ந்து இசைத்துக் கொண்டே இருக்கிறது. தொடர்ந்து பாடல்களை உருவாக்கிக் கொண்டேயிருக்கிறது.

*அதிலிருந்து வரும் ஒலிதான் அன்பு*

*படைப்புக்கள் அனைத்தும் அன்பினால் ஆனவை.*

பருப்பொருளில் ஒருவகை மின்சக்தி இருப்பதாக பௌதிகம் சொல்கிறது. கபீரைக் கேட்டால் என்ன சொல்வார் தெரியுமா? படைப்புகள் அனைத்திலுமே வெப்பம் இருக்கிறது மின்சக்தி இல்லை. ஆம் அன்பு என்னும் வெப்பம் இருக்கிறது. அன்பு இருப்பதால்தான் படைப்பே சாத்தியமாகிறது.

கடவுளுக்கு நம்மேல் அக்கறை இருக்கிறது. கடவுளுக்கு அன்பு இருக்கிறது. கடவுள் விட்டேற்றியாகப் படைக்கவில்லை. அன்பு அதிகமாகிக் கரை புரண்டு ஓடியபோதுதான் படைப்பு நிகழ்ந்தது. கடவுள் ஒரு காதலர். கடவுள்தான் அன்பு. அன்பே கடவுள் என்று சொல்வதே சரியாக இருக்கும். கடவுள் என்ற வார்த்தையை மறந்துவிடலாம்.

ஆனால் அன்பு என்னும் வார்த்தையை நாம் மறந்துவிடக் கூடாது. கடவுள் என்ற சொல்லைவிட அன்பு என்னும் சொல் மதிப்பு மிக்கது. அன்புதான் கடவுளின் ஆன்மா. கடவுள் உடல் என்றால் அன்பு அவருடைய ஆன்மா.

மொத்தப் படைப்பும் அன்புதான். இந்த மரங்கள் அன்பினால்தான் அசைகின்றன. இந்த ஆறுகள் தங்கள் காதலனாகிய சமுத்திரராஜனைச் சந்தித்து அவனோடு இரண்டறக் கலக்கவே வேகமாக ஓடுகின்றன.

உங்களைச் சுற்றிலும் பாருங்கள் அன்பின் மகத்துவம் அன்பின் பேருவகை எல்லா இடத்திலும் நடனமாடிக் கொண்டிருக்கும். உருவம் எதுவாக இருந்தாலும் சரி அதன் மையத்தில், ஏதோ ஒன்று துடித்துக் கொண்டிருக்கும். அது அன்பன்றி வேறு எதுவும் இல்லை.

*அதிலிருந்து வரும் ஒலிதான் அன்பு*

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்*

*உண்மையைச் சென்றடையும்.*

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்.. .. .*

நம் அன்பு எல்லைகளுக்குள் அடங்கிவிடுகிறது. பல எல்லைகள் நம் அன்பைக் கட்டுப்படுத்துகின்றன. அதனால்தான் நாம் அன்பாக இருந்தாலும் மகிழ்ச்சியாக இல்லை. அன்பினால் வரும் வலிக்குக் காரணம் அன்பல்ல. அன்பின் எல்லைகள்தான்.

அன்பினால் இறுதியில் வலியும் வேதனையுமே மிஞ்சும் என்பதைத் தெரிந்து கொண்ட பலர் அன்பு காட்டவே பயப்படுகிறார்கள். அன்பின் பகைவர்களாகிறார்கள். அன்பின் எல்லா வழிகளிலிருந்தும் தப்பித்துக் கொள்கிறார்கள்.

ஐரோப்பாவில் சில துறவிமடங்கள் இருக்கின்றன. அதிலும் குறிப்பாக ஒரு மடத்தைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். அது ஏறக்குறைய 1300 ஆண்டுகளாக இருக்கிறது. அதற்குள் ஒரு துறவி நுழைந்துவிட்டால் அதன்பின் உயிருள்ளவரை வெளியே வர முடியாது. வாழ்நாள் முழுவதையும் அங்கேதான்

கழிக்க வேண்டும். அந்த மடத்தில் பெண்களுக்கு அனுமதியில்லை. 1300 ஆண்டுகளில் ஒரு பெண்கூட அந்த மடத்திற்குள் நுழைந்ததில்லை. அது ஆண்களுக்கான மடம். அதே போல் ஆண்வாசனையே இல்லாத பெண்களுக்கான மடங்களும் இருக்கின்றன. அன்பின் அனைத்துக் கதவுகளும் அடைக்கப்பட்டு விட்டன.

இன்றும் பலர் இமயமலைக்கு ஓடுகிறார்கள். உலகத்திலிருந்து தப்பிப்பதற்காக அல்ல. அன்பிலிருந்து தப்பிப்பதற்காக. அவர்கள் அன்பைப் பார்த்து அஞ்சுகிறார்கள். அந்த அச்சத்திற்கு ஒரு காரணம் இருக்கிறது. நீங்கள் அன்பு வயப்படும்போது கொந்தளிப்பான ஒரு நிலையில் இருக்கிறீர்கள். அன்பில் துன்பம் இருக்கிறது. முரண்பாடுகள் இருக்கின்றன. அன்பில் நரக வேதனை இருக்கிறது.

*ழான் பால் சாத்ரே* சொல்கிறார் "மற்றது என்பதே நரகம்" அதாவது நீங்கள் மட்டும் இருக்கும் வாழ்வில் இன்னொருவர் புகுந்தாலே நரகம் என்கிறார்.

அன்போ காதலோ தோன்றும்போது உங்கள் வாழ்க்கையில் மற்றவர் புகுகிறார். முரண்பாடு குழப்பம் ஒருவரை ஒருவர் கட்டுப்படுத்தும் அவசரம் ஒருவர்மேல் ஒருவர் உரிமை கொள்ளும் அவலம், ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்தும் வேதனை எல்லாமே உள்ளே நுழைகிறது.

காதலர்கள் எப்போதுமே மகிழ்ச்சியாக இருப்பதில்லை. அதற்காக காதல் வயப்படாதவர்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள் என்று நான் சொல்லவில்லை. அவர்களும் மகிழ்ச்சியில்லாமல் இருக்கலாம். ஆனால் சத்தியமாக காதலர்கள் அனுபவிக்கும் வேதனையை அவர்கள் அனுபவிக்க மாட்டார்கள்.

காதலர்களின் வேதனைக்குக் காரணம் என்ன? ஆரம்பத்தில் காதல் நம்பிக்கையையும் எதிர்பார்ப்பையும் கொடுத்தது. அதன்பின் அதை எல்லாம் கல்லில் மோதி உடைப்பது போல் தகர்த்தெறிந்து விட்டது. காதல் வயப்படாதவனுக்கு எதிர்பார்ப்பே கிடையாது. அவன் இருக்கும் நிலையில் அப்படியே இருக்கிறான். அவன் சொர்க்கம் கிடைக்கும் என்று ஒரு நாளும் நம்பவில்லை.

சொர்க்கத்தில் நம்பிக்கையில்லாதவனை நீங்கள் நரகத்தில் எறிய முடியாது.

இந்தியாவில் திருமணங்கள் மேலை நாடுகளில் உள்ளதுபோல் மகிழ்ச்சியாக இல்லை. ஏனென்றால் இந்தியத் திருமணங்கள் காதல் திருமணங்கள் இல்லை. உங்கள் திருமணம் காதல் திருமணம் இல்லையென்றால் அதில் நீங்கள் அதிகம் எதிர்பார்க்க மாட்டீர்கள். உங்களுக்குத் திருமண வாழ்க்கையின் நடைமுறை நன்றாகத் தெரியும்.

உங்கள் திருமணம் உங்கள் பெற்றோர்களாலும் உங்கள் குடும்ப சோதிடராலும் தீர்மானிக்கப்படும்போது அதில் உங்கள் பங்கு என்று ஒன்றும் இல்லை. நீங்களே ஒரு விருந்தாளியைப் போல் உங்கள் திருமணக் கேளிக்கைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பீர்கள். திடீரென்று இதுவரை நீங்கள் வாழ்க்கையில் சந்தித்திராத ஒரு பெண் உங்கள் அறைக்குள்- உங்கள் வாழ்க்கைக்குள்- நுழைவாள். இந்த வாழ்க்கையில் எதிர்பார்ப்பு இல்லை. காதல் இல்லை. நம்பிக்கையில்லை.

அந்தச் சந்திரனே வசப்படவேண்டும் என்று ஆகாயக் கோட்டை கட்டமாட்டீர்கள். உங்கள் திருமணம் ஒரு சாதாரண நிகழ்வாகிவிடும். அன்றாடம் நடக்கும் ஒரு சமூக யதார்த்தம். நீங்கள் அந்த அன்னியப் பெண்ணோடு சேர்ந்து வாழத் தொடங்குகிறீர்கள்.

மேற்கே மக்கள் தங்கள் பெற்றோர் உடன் பிறந்தோருடன் சேர்ந்து வாழ்வதுபோல் கிழக்கே தங்கள் மனைவியுடன் சேர்ந்து வாழ்கிறார்கள்.

நீங்கள் உங்கள் தாய் தந்தையைத் தேர்ந்தெடுக்கவில்லை. திடீரென்று இந்தப் பெண்மணிதான் உங்கள் தாய் என்பதைக் கண்டுபிடிக்கிறீர்கள். அதன்பின் என்ன செய்வது? அழகோ அசிங்கமோ நல்லவளோ கெட்டவளோ, ஒரு தாய் தாய்தானே! அதனால் உங்கள் தாயை நேசிக்கத் தொடங்குகிறீர்கள்.

அதேபோல்தான் கீழைநாடுகளில் தங்கள் மனைவிகளையும் கணவன்களையும் நேசிக்கிறார்கள்.

உங்களால் என்ன செய்ய முடியும்? ஒருநாள் இதுதான் உங்கள் மனைவி என்று கண்டுபிடித்துவிட்டீர்கள். அதற்குமுன் அவளைப் பார்த்ததேயில்லை. காதல் கீதல் என்பதெல்லாம் சத்தியமாக இல்லை. அதனால் பெரிய மகிழ்ச்சியும் இல்லை. பெரிய வேதனையும் இல்லை. நீங்கள் சொர்க்கத்தை எதிர் பார்க்கவில்லை. அதனால் நீங்கள் நரகத்தில் விழவும் இல்லை. உங்கள் வாழ்க்கை சமதரையில் ஒரே சீராகப் போய்க் கொண்டிருக்கிறது. நீங்கள் மேலே போகப் போகத்தான் கீழே விழும் சாத்தியக்கூறுகள் அதிகமாகின்றன.

மலை உச்சிகளில் பயணம் செய்தால் பள்ளத்தாக்கில் விழுந்துவிடும் அபாயம் அதிகமாக இருக்கிறது. நான்குவழிச் சாலையில் பயணம் செய்யும்போது பள்ளத்தில் விழும் அபாயம் கிடையாது. இந்தியத் திருமணம் நான்கு வழிச்சாலையில் பயணம் செய்து கொண்டிருக்கிறது.

திருமணத்தில் காதல் இல்லை. திருமணத்திற்குப் பிறகுதான் அன்பு தோன்றுகிறது. அதுவும் ஏறக்குறைய சகோதரப் பாசத்தைப் போல்தான் இருக்கிறது. அதில் சத்தியமாகக் காதல் இல்லை.

இருவரும் இப்படி ஒரு சூழ்நிலையில் சேர்ந்து வாழ வேண்டும் என்ற கட்டாயம் ஏற்படும் போது கொஞ்சம் கொஞ்சமாக அது பழக்கமாகிவிடுகிறது. படிப்படியாக ஒருவரை ஒருவர் விரும்பத் தொடங்குகிறார்கள். ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுக்கப் பழகிக் கொள்கிறார்கள். இது சாதாரண உலகியல் வாழ்க்கை. இதில் கவிதையும் இல்லை. கவித்துவமும் இல்லை.

மேலை நாடுகளில் திருமணம் என்பது ரோஜாக்களின் படுக்கை அல்ல. திருமண வாழ்க்கை என்னும் படகு சதா ஆடிக்கொண்டேயிருக்கிறது. எந்த நேரத்தில் வேண்டுமானாலும் அந்தப் படகு கவிழலாம் என்ற அபாயம் இருக்கிறது. ஏன்? அங்கே எல்லாத் திருமணங்களும் காதல் திருமணங்களே. காதல் வரும்போது கூடவே எதிர்பார்ப்பும் வந்துவிடுகிறது. எதிர்பார்ப்பு வந்துவிட்டால் காதலில் மாசுபடிந்து விடுகிறது.

அதன்பின் அது உண்மையான காதல் அல்ல. அந்த எதிர்பார்ப்பின் காரணமாக காதலுக்கு ஒரு வரையறை வந்துவிடுகிறது.

நீங்கள் ஒருவரைக் காதலிக்கும்போது அவர்மேல் உரிமை கொண்டாடுகிறீர்கள். உங்கள் காதலி வேறு யார் பக்கமாவது சாய்ந்துவிடுவாளோ என்ற பயம் நிரந்தரமாக இருக்கிறது. அவள் வேறு ஓர் ஆணைச் சாதாரணமாகப் பார்த்தால்கூட உங்களுக்குப் பற்றிக்கொண்டு வருகிறது.

வேறு யாருடனாவது சிரித்துப் பேசினால் நீங்கள் சீறுகிறீர்கள். அது எப்படி வேறு ஒருவருடன் அவள் சிரித்துப் பேச முடியும்? அதைப் பார்க்கும்போது உங்களுக்கு வலிக்கிறது.

நீங்கள் உங்கள் காதலியை ஒரு கூண்டிற்குள் வைக்கிறீர்கள். அது அழகான கூண்டுதான். அதற்கு இல்லம் என்று பெயர் சூட்டுகிறீர்கள். என்றாலும் அது ஒரு கூண்டுதான்.

அவளுக்காக நீங்கள் அந்தக் கூண்டை உருவாக்கும்போது அவளும் உங்களுக்காக ஒரு கூண்டை உருவாக்குகிறாள். சிறையின் காவலனும் சிறைக்குள்தானே இருக்க வேண்டும்? நீங்கள் அடுத்தவரைச் சொந்தமாக்க நினைக்கும்போது நீங்களும் அடுத்தவரால் சொந்தமாக்கப்படுகிறீர்கள். அடுத்தவரை அடிமைப்படுத்தும்போது நீங்களும் அடிமையாகிறீர்கள்.

அடுத்தவரை அடிமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் கொஞ்சம்கூட இல்லாதவரே உண்மையான குரு. மற்றவர்களை அடிமைப்படுத்த நினைத்தால் நீங்களும் அடிமையாகிவிடுவீர்கள். இது ஒரு சாதாரண உண்மை. எதையாவது சொந்தமாக்கிக்கொள்ள நினைத்தால் அது உங்களைத் தன் சொந்தமாக்கிக் கொள்ளும்.

அன்பிற்கு இருக்கும் இந்த வரையறைகளால் பலர் அன்பைச் சாடுகிறார்கள். தங்களின் துன்பத்திற்கெல்லாம் அன்புதான் காரணம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

கபீர் சொல்கிறார்:

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்*

*உண்மையைச் சென்றடையும்.*

அந்த எல்லைகளைப் புரிந்து கொள்ள வேண்டும்.

மாா்ட்டின் பூபா் (Martin Buber) என்ற சிறந்த சிந்தனையாளா் அன்பை இரண்டாகப் பிரிக்கிறாா். முதல் பிரிவு "நான் - அது" அன்பு. நீங்கள் உங்கள் காரை நேசிக்கிறீா்கள் உங்கள் வீட்டை நேசிக்கிறீா்கள். அது "நான் - அது" அன்பு.

உங்கள் குழந்தையை நேசிக்கிறீா்கள். உங்கள் மனைவியை நேசிக்கிறீா்கள். அது "நான் - நீ" அன்பு.

நான் - அது அன்பு மிகவும் குறுகியது. ஏனென்றால் நீங்கள் நேசிப்பது ஒரு ஜடப்பொருளை மட்டுமே. அந்த ஜடப்பொருளால் ஒரு நாளும் உங்களுக்குச் சுதந்திரத்தைத் தர முடியாது.

ஒரு ஜடப்பொருளின்மேல் அதீதப் பற்று வைக்கத் தொடங்கினால் கூடிய விரைவில் நீங்களும் ஒரு ஜடப்பொருளைப் போலாகிவிடுவீா்கள். நீங்கள் எதை நேசிக்கிறீா்களோ அதுவே உங்களின் தன்மையை நிா்ணயிக்கிறது.

காரை நேசிக்கும் ஒருவனிடம் மனிதத்தன்மை அதிகம் இருக்காது. காரை நேசிப்பதன் மூலம் நீங்கள் எப்படிப்பட்டவா் என்பதைக் காட்டிவிட்டீா்கள்.

பணத்தை நேசிக்கும் ஒருவன் கொஞ்சம் கொஞ்சமாக பணம் போலவே ஆகிவிடுகிறான். பலா் கைபட்டு அழுக்கடைந்த ரூபாய் நோட்டுக்களைப் போலவே ஆகிவிடுகிறான். அதை அவன் கண்களில் பாா்க்க முடியும். ஒருவன் கருமியாக இருந்தால் அது அவன் கண்களில் தெளிவாகத் தெரியும். அவனிடம் ஆன்மா இருக்காது. ஜடப்பொருளான பணத்தின் நிலைக்கு அவன் தாழ்ந்துவிடுகிறான்.

ஜாக்கிரதை! உங்களைவிடக் கீழான பொருள்களை நேசிக் காதீா்கள். அப்படிச் செய்தால் நீங்களும் அந்தப் பொருள்களின் நிலைக்குத் தாழ்ந்துவிடுவீா்கள். காரணம் நீங்கள் நேசிக்கும் பொருள் உங்கள் இலக்காகி விடுகிறது. அதை நோக்கி

நீங்கள் விழ ஆரம்பித்துவிடுவீர்கள். யாரை நீங்கள் நேசித்தாலும் அவரை நோக்கி விழ ஆரம்பித்துவிடுவீர்கள்.

அதனால் நான் உங்களை எச்சரிக்கிறேன். ஜடப்பொருளை நேசிக்காதீர்கள். அப்படிச் செய்தால் உங்கள் ஆன்மாவும் ஜடமாகிவிடும். இதுதான் 'நான்- அது' வகை அன்பில் விளையும் மிகப் பெரிய தீமை.

இந்தப் பிரச்சினை நீங்கள் நினைப்பதைவிடச் சிக்கலானது. நீங்கள் உங்கள் காரை நேசிக்கும்போது அது கார், அது ஒரு ஜடப்பொருள் என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் சிலர் தங்கள் காரை நேசிப்பது போலவே தங்கள் மனைவி யையும் நேசிக்கிறார்கள். தங்கள் மனைவியின்மேலும் அதே 'நான் - அது வகை அன்பைக் காட்டுகிறார்கள்.

கீழை நாடுகளில் தங்கள் மனைவியைத் தங்கள் சொத்து என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படித்தான் காலம் காலமாக நினைத்து வந்திருக்கிறார்கள். கிழக்கில் கணவன் மனைவியிடம் காட்டும் அன்பு 'நான் - அது' என்ற வகையைச் சேர்ந்தது. இன்றும் பல கீழை நாடுகளில் நீங்கள் உங்கள் மனைவியைக் கொன்றால் அது சட்டப்படி குற்றமாகாது.

அது சட்டத்தின் பிரச்சினை அல்ல. அவள் உங்கள் மனைவி. அவளைக் கொல்லும் உரிமை உங்களுக்கு இருக்கிறது என்று அந்நாடுகளின் சட்டங்கள் சொல்கின்றன. நீங்கள் உங்கள் மனைவியை அடித்தால் யாரும் எதுவும் கேட்க மாட்டார்கள். அது உங்கள் விவகாரம். மனைவியை அடிக்கும் உரிமை கணவனுக்கு உண்டு. அப்படித்தான் பல காலமாக இருந்து வந்திருக்கிறது.

ஆனால் மனைவி மறைமுகமாகத் தன் கணவனைப் பழிவாங்குவாள். வெளிப்படையாகக் கணவனை அடிக்க மாட்டாள். ஆனால் மறைமுகமாக ஆயிரம் வழிகளில் அவள் தன் கணவனைத் திருப்பி அடிக்க முடியும். அடிப்பாள். தங்கள் கணவர்களை அடிப்பதில் அந்த நாட்டு மனைவிகள் மிகவும் வல்லவர்களாகிவிட்டார்கள். உங்களால் 'நீ என்னை அடிக்கிறாய்'

என்று சொல்லமுடியாதபடி சாமர்த்தியமாக அடிப்பாள் மனைவி. மெலிந்தவர்கள் வலியவர்களைப் பழிவாங்கவென்றே சில வழிகள் இருக்கின்றன. அந்த முறைகள் வேறுபடலாம்.

உதாரணமாக மனைவி அழத் தொடங்குவாள். தன் அழுகையால் தன் கணவரை அடிப்பாள்.

இல்லை என்றால் ஏதாவது காரணம் காட்டிப் படுத்துக் கொள்வாள். திடீரென்று அவளுக்கு எப்படித் தலைவலி வந்தது என்று உங்களுக்குத் தெரியாது. சமைக்க மாட்டாள். குழந்தைகளைப் பார்த்துக்கொள்ள மாட்டாள். காய்ச்சல் என்று சொல்லிப் படுத்துக் கொள்வாள். இப்போது பாருங்கள் அவள் மொத்தக் குடும்பத்திற்கும் சாட்டையடி கொடுக்கிறாள். அது அவள் வழி.

இல்லை விட்டேற்றியாக இருந்துவிடுவாள். நீங்கள் அவளை ஆசையோடு நெருங்கும் போது அவள் உறைந்து போய்விடுவாள். உங்களைக் குற்றம் சாட்டும் கண்களுடன் முறைத்துப் பார்ப்பாள். உங்களை ஒரு மிருகம்போல் மட்டமாக நடத்துவாள். நீங்கள் செக்ஸ் வெறியர் என்று தோன்றும்படி செய்வாள்.

நீங்கள் அவளுடன் உடலுறவு கொள்ளும்போது எந்த உணர்ச்சியும் இல்லாமல் பிணம் போல் கிடப்பாள். கொஞ்சம்கூட ஒத்துழைப்புத் தர மாட்டாள். பொறாமைப் படுவாள். உங்கள் மேல் உரிமை கொண்டாடுவாள்.

உங்களுக்கு எந்தச் சுதந்திரத்தையும் தர மாட்டாள். நீங்கள் அவளுக்கு எந்தச் சுதந்திரத்தையும் தரவில்லையே!

இது இயற்கையின் விதி. நீங்கள் ஓர் உயிருள்ள மனிதருடன் "நான் - அது" உறவு வைத்திருந்தால் அந்த மனிதரும் உங்களுடன் அதே "நான் - அது" உறவு வைத்திருப்பார். இது இயற்கையான எதிர்வினை.

நான் பார்த்தவரையில் நூற்றுக்கு 99 பேர் மற்ற மனிதர்களிடன் "நான் - அது" உறவு தான் வைத்திருக்கிறார்கள். கணவனும் மனிதன் இல்லை. மனைவியும் மனுஷி இல்லை.

கணவன் உரிமை கொண்டாட வேண்டிய ஒரு ஜடப்பொருள். மனைவியும் அப்படித்தான் என்ற நிலையில்தான் பெரும்பாலான திருமண உறவுகள் இருக்கின்றன. நாம் ஒருவரை ஒருவர் ஜடப் பொருள்களாக மாற்றிவிட்டோம். இதுதான் "நான் - அது" நேசத்தின் அசிங்கமான எல்லை.

இந்த எல்லையை விட்டொழியுங்கள். கொஞ்சம் மேலே செல்லுங்கள். கொஞ்சம் பெரிய கோட்ப்பாட்டை ஏற்றுக் கொள்ளுங்கள். அதைத்தான் பூபர் (Buber) "நான் - நீ" அன்பு என்று சொல்கிறார். உங்கள் மனைவி ஒரு "அது" வாக இருக்க வேண்டாம். ஒரு "நீ" யாக இருக்கட்டும். உங்கள் கணவனை "அது" என்று அழைத்து ஜடப்பொருளாக்க வேண்டாம் "நீ" என்ற வட்டத்திற்குள் அவரைக் கொண்டு வாருங்கள். உங்கள் குழந்தைகூட அதுவாக இருக்க வேண்டாம். "நீ" யாகவே இருக்கட்டும்.

மற்றவர்களை மதியுங்கள். மற்றவர்கள்தான் கண்கூடான தெய்வங்கள். அடுத்தவரை நீ அல்லது நீங்கள் என்று அழையுங்கள். அதுமட்டும் போதாது. அடுத்தவரை நான் ஜடப்பொருளாக நினைக்கவில்லை என்று தோன்றுமாறு நடந்து கொள்ளுங்கள்.

யாரையும் உங்கள் நன்மைக்காகப் பயன்படுத்திக் கொள்ளா தீர்கள். பகிர்ந்து கொள்ளுங்கள். பயன்படுத்திக் கொள்ளாதீர்கள். அடுத்தவரின் கண்ணியத்தை மதியுங்கள். அவர்கள் வாழ்க்கையில் குறுக்கிடாதீர்கள். அப்போது உங்கள் அன்பு சிறிய வட்டத்திலிருந்து விடுபட்டு மேலும் விரிவடைகிறது. என்றாலும் இந்த அன்பிற்கும் ஓர் எல்லை உண்டு.

பூபர் "நான் - அது" "நான் - நீ" என்ற இரண்டு வகை அன்பைப்பற்றி மட்டுமே பேசுகிறார். நான் இன்னும் இரண்டு வகை அன்பைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். மூன்றாவது வகை அன்பு "நான் - நீ" ரகத்தை விட உயர்ந்தது. "நான் இல்லை. நீ மட்டுமே இருக்கிறாய்" என்னும் வகையைச் சேர்ந்தது. இந்த இடத்தில்தான் நமது வழிபாட்டுணர்வு விழித்துக் கொள்கிறது.

“நான் இல்லை. நீ மட்டுமே இருக்கிறாய். நான் உன்னுடன் சேர்ந்தே இருக்கிறேன். எனக்கு என்று தனியாக ஒரு சுயம் கிடையாது.” என்று சொல்வதுதான் உத்தமமான வழிபாடு. அதை நீங்கள் உங்கள் காதலியிடம் சொல்ல முடிந்தால் அந்தக் காதல் மனிதக் காதலாக இருக்காது உண்மையிலேயே தெய்விகக்காதலாகிவிடும்.

“நான் - அது” அன்பு மனித நேசத்தைவிடத் தாழ்ந்தது. “நான் - நீ “ அன்பு சாதாரணமான மனித அன்பு. “நான் இல்லை - நீ மட்டும்தான் இருக்கிறாய்” என்ற அன்பு தெய்விகமானது. அந்த அன்புதான் உண்மையான வழிபாடு.

“நான் - அது “ அன்பு பாலுணர்வு சம்பந்தப்பட்டது. “நான் - நீ” வகை அன்பைத்தான் சாதாரணமாக காதல் என்கிறோம். “நான் இல்லை - நீ மட்டும்” அன்பு வழிபாடு. அதனால்தான் உண்மையான பக்தன் கடவுளிடம் “எல்லாம் உன் செயல். என் விருப்பம் போல் எதுவும் நடக்க வேண்டாம். உன் விருப்பம் போல் நடக்கட்டும்.” என்று இறைஞ்சுகிறான்.

பக்தன் தன் “நான் தன்மையை” சமர்ப்பிக்கிறான். தலையைக் குனிந்து பணிவுடன் வேண்டுகிறான்.

“இறைவா நீ மட்டுமே இருக்கிறாய். நான் உன்னில் ஒரு பகுதி. எனக்கு என்று தனியாக எதுவும் இல்லை. எந்தப் பெருமையும் இல்லை. என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் இல்லை.”

இது மூன்றாவது ரகம். இப்போது உங்கள் அன்பு இன்னும் விரிவடைந்துவிட்டது.

நான்காவது வகையை நான் “நானும் இல்லை. நீயும் இல்லை” என்று அழைக்கிறேன். அது தியானத்தின் உச்சகட்டம்.

நான் இல்லை நீ மட்டுமே இருக்கிறாய் என்று சொல்லும் போது நான் என்னும் உணர்வு அதிநுட்பமாக உங்களிடத்தில் இருக்கத்தான் செய்கிறது. நான் இல்லை என்று சொல்வதற்கும் நீ இருக்கிறாய் என்று சொல்வதற்கும் மறைமுகமாகவாது

கொஞ்சம் "நான்" உணர்வு வேண்டுமல்லவா? நான் என்ற உணர்வு இல்லாமல் நீ என்பது இருக்க வாய்ப்பில்லையே! அந்த நான் வெளிப்படையாக இருக்காது. "நான் - அது" வகையில் காண்பதுபோல் கர்வத்துடன் இருக்காது. என்றாலும் ஒரு நிழலாகவாவது "நான்" என்ற உணர்வு இருக்கத்தான் செய்யும் இல்லாவிட்டால் யாரை "நீ" என்று அழைப்பீர்களாம்? கடவுளை நீ என்று அழைப்பதற்கும் உங்கள் காதலியை நீ என்றழைப்பதற்கும் "நான்" கொஞ்சமாவது இருக்கத்தான் வேண்டும்.

நான்காவது நிலை "நானும் இல்லை நீயும் இல்லை" என்னும் தன்மை. இங்கு வழிபாடு கூடக் கிடையாது. வழிபாடு செய்வதாக இருந்தாலும் ஒரு குறைந்தபட்ச இருபொருள் வாதம் தேவைப்படுகிறது. அதையும் இங்கே உதறித் தள்ளிவிடுகிறோம். இங்கே மிஞ்சி நிற்பது மௌனம் மட்டுமே. தியானத்தில் தோய்ந்த மௌனம். ஜென் துறவிகள் சொல்லும் ஜாஜென் தியான மௌனம்.

ஒன்றுமே செய்யாமல் அமர்ந்திருக்கும் நிலை. 'சும்மா இருத்தல்' என்னும் உன்னத நிலை இது. சொல்வதற்கு ஒன்றும் இல்லை. சொல்ல ஆள் இல்லை. யாரிடம் சொல்வது? அந்த ஆளும் இல்லை. சொல்பவனும் மறைந்துவிட்டான். கேட்பவனும் மறைந்துவிட்டான். அதனால்தான் புத்த மதம் இந்த உச்ச நிலையைத் தொட்டுவிட்டது என்று சொல்கிறேன்.

"கடவுள் இல்லை. ஆன்மா இல்லை" என்று சொல்கிறது புத்த மதம். அந்த நாத்திகவாதத்திற்கு அதுதான் பொருள். அது நுண்பொருள் ஆராய்ச்சி அல்ல. அன்பின் உச்ச கட்டம். அங்கே கடவுளும் இல்லை ஆன்மாவும் இல்லை. எதுவும் இல்லை. எல்லாமே அழிந்துவிட்டது. எதையும் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. இப்போது மௌனம் அங்கே அரசாளலாம். வசனத்திற்கு வேலையில்லை.

"நான் - அது" வகை அன்பு - உடல்கள் சந்திக்கின்றன. பாலுணர்வு, உடல்ரீதியானது உரிமை கொண்டாடுவது இருப்பதிலேயே கீழ்த்தரமானது.

“நான் - நீ” வகை அன்பு மனங்கள் சந்திக்கின்றன. மனம் சம்பந்தப்பட்டது. கொஞ்சம் நுட்பமானது. என்றாலும் அவ்வளவு உயர்ந்த வகை இல்லை.

“நான் இல்லை - நீ மட்டும்” வகை அன்பில் ஆன்மாக்கள் சந்திக்கின்றன. என்றாலும் அவை இன்னும் வேறு வேறாகத்தான் இருக்கின்றன. இன்னும் நெருங்கி நெருங்கி வருகின்றன. அதிகபட்சம் நெருங்கிவிட்டன என்றாலும் சில எல்லைக் கோடுகளும் நான் - நீ என்ற நுட்பமான பேதங்களும் இருக்கத்தான் செய்கின்றன. பக்தன் இன்னும் இருக்கிறான். அவனிடம் கர்வம் இல்லை. பணிவு இருக்கிறது. அந்தப் பணிவில்கூட சூட்சுமமான வடிவில் நான் என்னும் உணர்வு இருக்கத்தான் செய்கிறது.

“நானும் இல்லை - நீயும் இல்லை” என்ற வகை அன்பில் ஆன்மாக்களுமே மறைந்துவிடுகின்றன. உடல், உள்ளம் ஆன்மா எதுவுமே இல்லை. நீங்கள் வீட்டுக்கு வந்துவிட்டீர்கள்.

இருப்பது ஒன்றுதான். அதில் எந்த எல்லைகளும் பாகுபாடுகளும் இல்லை.

இதைத்தான் கபீர் சொல்கிறார்.

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்*

*உண்மையைச் சென்றடையும்.*

*எவ்வளவு தூரத்திற்கு அதன் மணம் பரவுகிறது!*

அந்த நான்காவது நிலை அன்பில் நீங்கள் லயித்துவிட்டால் ஜன்ம ஜன்மாந்தரமாக நீங்கள் தாங்கிவந்த வாசம் உங்களிடமிருந்து உலகத்திற்குப் பரவுகிறது. இதுவரை விதை வடிவில் இருந்த அந்த வாசம் இன்று தாமரையாக வானோக்கி மலர்ந்துவிட்டது. காற்று, மழை, சூரியன் என்று அந்த வாசம் அண்ட சராசரத்தின் மூலைகளுக்கெல்லாம் பரவுகிறது.

உங்கள் மனதில் இருந்த காதல் உலகின் உயிரினங்களுக்கு எல்லாம் பரவிவிட்டது. இருப்புநிலையோடு உள்ள உங்கள்

உறவின் உச்சத்தை அடைந்து விட்டீர்கள். இதுதான் பேருவகை. இதுதான் பரவச நிலை. இதுதான் வரப்பிரசாதம்.

அன்பின் உச்சகட்டத்தில் உங்கள் ஆன்ம மலர்ச்சியின் உச்சத்தில் அன்பு என்பது ஓர் உறவு அல்ல. அது ஒரு நிலை. "நான் - அது" வகை அன்பு ஓர் உறவு. அந்த அன்பை "அது" பந்தப்படுத்துகிறது.

"நான் - நீ" என்பதும் உறவுதான். அதில் பந்தம் கொஞ்சம் குறைவாக இருக்கிறது. உங்களைக் கட்டியிருக்கும் கயிறு இன்னும் அதிக தூரம் போக அனுமதிக்கிறது. என்றாலும் அந்த அன்பில் இருக்கும் "நீ" உங்களைப் பந்தப் படுத்தத்தான் செய்கிறது. இந்த அன்பும் ஒருவகை உறவுதான்.

"நான் இல்லை - நீ மட்டும்" வகையில் எல்லாமே உருகி ஓடத்தொடங்குகின்றன. பொருள்களை உருக வைக்கும் பானையில் நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் இன்னும் முற்றிலும் மறையவில்லை. உறவு மிகவும் பெரிதாகிவிட்டது. பிரம்மாண்டமாகிவிட்டது என்றாலும் அதுவும் உறவுதானே!

நான்காவது வகை அன்பில் உறவு என்ற பேச்சுக்கே இடம் இல்லை. ஏனென்றால் உறவு இருக்க வேண்டுமென்றால் குறைந்த பட்சம் இருவர் வேண்டும். ஆனால் இதில் ஒருவர்கூட இல்லையே. அதனால் அது உறவல்ல. ஒரு நிலை.

மூன்றாவது நிலைவரை அன்பு வசன வடிவில் இருக்கிறது நான்காவது நிலையில் பேச்சே மறைந்துவிடுகிறது. முதல் மூன்று வகைகளில் நீங்கள் அன்பு காட்டுகிறீர்கள். நான்காவது நிலையில் நீங்கள்தான் அன்பு, அன்புதான் நீங்கள் என்ற நிலைக்கு வந்துவிட்டீர்கள். அங்கே இருப்பது அன்பு மட்டுமே. அன்பு காட்டுபவரும் இல்லை. காட்டப்படுபவரும் இல்லை.

வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் இந்த "மும்மூர்த்திகளை" நாம் நினைத்துக் கொள்ள வேண்டும்.

*1) அறிபவன் 2) அறியப்படுவது 3) அறிவு*

*1) காதலிப்பவன் 2) காதலிக்கப்படுபவள் 3) காதல்*

*1) பார்ப்பவன் 2) பார்க்கப்படும் பொருள் 3) பார்வை*

இவைதான் மும்மூர்த்திகள். இவற்றைப் படிப்படியாகக் கரைக்க வேண்டும். அறிபவன் இல்லை என்றால் அறியப்படுவது தானாக மறைந்துவிடும். அறிவின் விளிம்புகள் மறைந்து சுயம்பிரகாச சுத்த ஞானமாகிவிடும். அந்த அறிவு அளவிற்கு அப்பாற்பட்டதாகிவிடும். அண்ட சராசரங்களைவிட அகண்டதாகி விடும்.

அதே போல்தான் அன்பும். அன்பு செய்பவனும் அன்பு செய்யப்படுபவனும் மறைந்துவிட்டால் மீதமிருக்கும் அன்பு இந்த அண்டங்களை எல்லாம் தன்னுள் அடக்கி வைக்கும் அளவிற்கு பிரம்மாண்டமாகிவிடும்.

*அன்பு தன் எல்லைகளைத் துறந்துவிட்டால்*

*உண்மையைச் சென்றடையும்.*

*அன்பு உண்மையாகவே மாறிவிடும்.*

*அதற்கு முடிவு இல்லை அதன் வழியில் எதுவும் நிற்க முடியாது.*

*இந்த இன்னிசையின் உருவம்*

*கோடி சூர்யப் பிரகாசத்துடன் ஜொலிக்கிறது.*

*மெய்ப்பொருளின் ஸ்வரங்களின் வீணையினின்றும்*

*கிளம்பும் இசைக்கு உவமையே இல்லை.*

இதில் நாம் பார்க்க வேண்டிய இன்னொரு விஷயம்: அன்பு மலர்ந்துவிட்டால் உங்களைச் சுற்றிக் கோடி சூரியன்களின் ஒளிக்குச் சமமான ஒளி திகழ்கிறது என்று கபீர் மீண்டும் மீண்டும் சொல்கிறார். கபீர் மட்டுமல்லாமல் நபிகள் நாயகமும் ஏசுபிரானும் ஏறக்குறைய இதே போல் சொல்கிறார்கள். எல்லா ஞானிகளும் இதையே சொல்கிறார்கள்.

உங்களுக்கு உள்ளே இருக்கும் மையக்கருவிற்குள் நீங்கள் நுழைந்துவிட்டால் ஒளி வெள்ளம் உங்களைச் சூழ்ந்து கொள்கிறது.

இது சாதாரண உவமையோ உருவகமோ இல்லை. வெவ்வேறு காலகட்டங்களில் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு மொழிகளில் ஒரே கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள். ஞானம் பெறும் அந்தக் கடைசி நிமிடத்தில் ஒளியினால் ஆன ஒரு குண்டு வெடித்ததைப்போல் உங்களை ஒளி சூழ்ந்து கொள்கிறது.

ஆயிரம் ஆயிரம் சூரியன்கள் உதயமாகின்றன. அந்த வெளிச்சத்தைக் கண் கொண்டு பார்க்க முடியாது. கண்கள் கூசும். அந்த அளவு ஒளிக்கு உங்கள் கண்களைப் பழக்கப் படுத்திக் கொள்ளக் கொஞ்சம் நேரமாகும். முதல் முறை அது நிகழும் போது ஞானிக்கு ஓர் இருண்ட இரவில் விழுந்துவிட்டதைப்போல் தோன்றும். ஞான ஒளியின் வீரியம் அத்தகையது.

ஞான ஒளி தோன்றுவதற்கு முன்னால் ஆன்மாவின் இருண்ட இரவு வழியாகச் செல்ல வேண்டியதிருக்கும் என்று கிறிஸ்துவ ஞானிகள் சொல்கிறார்கள். அது சூரியனை வெறும் கண்களால் நேருக்கு நேர் உற்றுப் பார்ப்பதற்குச் சமம். அப்படிப் பார்த்த சில நொடிகளிலேயே உங்கள் பார்வை போய்விட்டதுபோல் உணர்வீர்கள். சட்டென்று சூரியன் மறைந்துவிடும். அந்த ஒளியும் மறைந்துவிடும். நீங்கள் குருடாகிவிட்டதைப் போல் தோன்றும். உங்களை இருள் சூழ்ந்துவிட்டதாகத் தோன்றும்.

சூரிய ஒளியை உங்களால் தாங்கமுடியவில்லை என்றால் உங்கள் கண்கள் அந்த ஒளியை உள்வாங்கிக் கொள்ள முடியவில்லையென்றால் உங்கள் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டுவிடும். அதிக ஒளியைக் கண்டால் உங்கள் கண்ணில் இருக்கும் பாவை தன்னைச் சுருக்கிக் கொண்டுவிடும். அதுதான் இருளுக்குக் காரணம். ஒரு சூரியனுக்கே இப்படி என்றால் ஆயிரம் சூரியன்களை ஒரு சேரப் பார்த்தால்? அந்த நிலையை உங்களால் கற்பனைகூடச் செய்ய முடியாது.

முதலில் இருள் சூழ்ந்து கொள்கிறது. அந்த இருள் நம்மை அச்சுறுத்துகிறது. அந்த இருளில் தான் பார்வையை இழந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறான் ஞானி.

ஆனால் அந்த இருள்கூடச் சுகமாகத்தான் இருக்கிறது. அந்த இருளிலும் இறுக்கமில்லாமல் தளர்வாக இருக்கிறான் ஞானி. இருட்டாக இருந்தபோதிலும் தன் கண்களைத் திறந்து இந்த உலகத்தைப் பார்க்க விரும்புவதில்லை.

வெளியில் இருக்கும் ஒளியைவிட உள்ளே இருக்கும் இருள் சிறந்தது என்று நினைக்கிறான் ஞானி. கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே இருக்கும் இருளுக்குத் தன் ஞானக் கண்களைப் பழக்கிக் கொள்கிறான். அப்போதுதான் ஞான ஒளியைப் பார்க்கும் வல்லமை அவனுக்குக் கிட்டுகிறது.

இந்த ஒளியின் தன்மை என்ன? இது எதனால் உண்டாகிறது? பருப்பொருளில் (matter) மின்சக்தி இருக்கிறது என்று விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். பருப்பொருளைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரித்துக் கொண்டே போனால் இறுதியில் அணு வரும். அதையும் பிரிக்கும்போது மகத்தான ஒளி தோன்றுகிறது. அப்போது பருப்பொருளில் மின்னணுக்கள் மட்டுமே மிஞ்சுகின்றன. இது அணுசக்தியின் கோட்பாடு. அணுகுண்டு தயாரிக்கும் முறையும் இதுதான். ஓர் அணு வெடிக்கும்போது பெரிய ஒளி வெள்ளம் தோன்றுகிறது.

இரண்டாம் உலகப் போரின் முடிவில் ஜப்பான் நாட்டின் ஹிரோஷிமா நாகசாகி நகரங்களில் அணுகுண்டுகள் வெடித்த போது ஆயிரம் சூரியன் ஒன்றாக உதித்ததுபோல் பிரம்மாண்டமான ஓர் ஒளி தெரிந்ததாம். பெரிய சத்தமும் உண்டானது. இந்த ஒலி-ஒளிக் காட்சி சில விநாடிகள் மட்டுமே நீடித்தது.

கண்களால் பார்க்க முடியாத ஒரு சிறிய அணுவைக் கூறுபோடும்போதே இப்படி நிகழ்ந்தால்... இது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒரு விஷயம்.

உங்களுக்கு உள்ளே உங்கள் இருப்பு நிலையின் அணு வெடிக்கும்போது அதேபோல்தான் நிகழ்கிறது. உள்ளே இருந்தாலும் வெளியே இருந்தாலும் உயிருக்கு அதே சக்திதான் இருக்கிறது. பருப்பொருள், உணர்வு - இரண்டிற்குள்ளும் இருக்கும் மூல சக்தி ஒன்றுதான்.

அணு ஒளிவெள்ளமாக வெடிக்கிறது என்பது விஞ்ஞானிகளின் கூற்று. உள்ளிருக்கும் ஆன்மா ஒளிவெள்ளமாக வெடிக்கிறது என்பது ஞானிகளின் கூற்று. இந்த இடத்தில் இருவரும் ஒரே கருத்தையே சொல்கிறார்கள். மதத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் பாலம் அமைக்க யாரும் முயற்சி செய்யவில்லை. அப்படி ஒரு பாலம் அமைந்தால் அது மகத்தான சாதனையாக இருக்கும். இரண்டிற்கும் உள்ளுணர்வு ஒன்றாகத்தான் இருக்கிறது. அது அப்படித்தான் இருக்க வேண்டும். ஏனென்றால் இருப்பது ஓர் இருப்பு நிலைதானே!

மொழிகளும் சொற்றொடர்களும் வேறு வேறாக இருந்தாலும் நோக்கம் வேறாக இருந்தாலும் விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புகளுக்கும் சமயத்தின் கண்டுபிடிப்புகளுக்கும் ஒரு மகத்தான ஒற்றுமை இருக்கத்தான் செய்கிறது. நாம் ஒரே உண்மையைத் தேடித்தானே பயணம் செய்து கொண்டிருக்கிறோம்?

வழிகள் வேறாக இருக்கலாம், தொழில் நுட்பம் வேறாக இருக்கலாம் அணுகுமுறை வேறாக இருக்கலாம். - ஆனால் ஆன்மிகத்திலும் விஞ்ஞானத்திலும் நாம் ஒரே உண்மையைத்தான் தேடிக்கொண்டிருக்கிறோம்.

விஞ்ஞானியும் உண்மையை நோக்கி நடந்து கொண்டிருக்கிறான். ஞானியும் உண்மையை நோக்கி நடந்து கொண்டிருக்கிறான். இருவரும் ஓர் இடத்தில் சந்தித்துத்தான் ஆக வேண்டும்.

*இந்த இன்னிசையின் உருவம்*

*கோடி சூர்யப் பிரகாசத்துடன் ஜொலிக்கிறது.*

இதில் இன்னும் ஒரு நுட்பமான விஷயம் இருக்கிறது. ஒவ்வொரு ஒலிக்கும் ஒரு குறிப்பிட்ட வண்ணம் இருக்கிறது என்று ஆரம்ப காலத்திலிருந்தே கிழக்கில் நம்பி வந்திருக்கிறார்கள். அதனால்தான் இந்திய இசையில் “ராகங்கள்” இருக்கின்றன. ராகம் என்ற சொல்லின் வேரை ஆராய்ந்து பார்த்தால் “நிறம்” என்ற பொருள் கிடைக்கும். ஒவ்வொரு

ஒலிக்கும் ஒரு நிறம் உண்டு. இது கீழை நாட்டு இசையின் அடிப்படைத் தத்துவங்களில் ஒன்று.

இப்போது விஞ்ஞானிகளும் இதனை உணர ஆரம்பித்து விட்டார்கள். ஒலிக்கும் நிறத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்பதை விஞ்ஞானிகள் உணர ஆரம்பித்து விட்டார்கள். ஒலி என்பது என்ன? மின் அதிர்வுகள். மின்சாரம் என்பது ஒளிதானே! ஒளிதானே நிறம்.

என்ன புரியவில்லையா? இந்த உதாரணத்தைப் பாருங்கள். ஓர் ஒளிக்கீற்று ஒரு பட்டகைக்குள் நுழையும்போது அது வானவில்லின் ஏழு வண்ணங்களாக வெளிவருகிறது. அந்த ஏழு வண்ணங்களும் மீண்டும் இணையும்போது வெண்மையான ஒளி கிடைக்கிறது. ஏழு ஸ்வரங்கள் இருப்பதைப் போல் ஏழு வண்ணங்கள் இருக்கின்றன. இந்த ஏழிற்கும் அந்த ஏழிற்கும் நிச்சயம் ஒரு தொடர்பு இருக்க வேண்டும்.

இதுதான் இந்திய இசையின் கோட்பாடு. கபீர் ஞானி மட்டுமில்லை. ஒரு சிறந்த இசைக் கலைஞனும் கூட. அவர் சொல்கிறார்:

*இந்த இன்னிசையின் உருவம்*

*கோடி சூர்யப் பிரகாசத்துடன் ஜொலிக்கிறது.*

உள்ளே இருக்கும் அந்த இன்னிசை, அந்த உள் ஒலி, ஒலியல்லாத ஒலி அந்த ஓங்காரம்., அந்த அனாகத நாதம் வெடித்தால் அதன் வண்ணம் அப்பழுக்கற்ற வெண்மை என்று கபீர் சொல்கிறார். ஏனென்றால் இப்போது எல்லா ஒலிகளும் எல்லா ஸ்வரங்களும் அந்த வெண்மையில் மறைந்துவிடுகின்றன. ஏழு வண்ணங்கள் வெண்மையில் ஐக்கிய மாகிவிடுகின்றன. ஏழு ஸ்வரங்கள் மௌனத்தில் ஐக்கியமாகி விடுகின்றன.

இரவின் ஆழ்ந்த மௌனத்தில் சிலசமயம் அதை நீங்கள் கேட்கலாம். உங்கள் காதுகளை இறுக்க மூடிக்கொண்டால் உள்ளே அந்த இசை கேட்கும். நீங்கள் தியானத்தில் ஆழ்ந் திருந்தால் உங்களுடைய எண்ணங்கள் எல்லாம் மறைந்துவிட்டால் நீங்கள் அந்த ஆழமான சத்தத்தைக் கேட்க முடியும்.

மனம் வேலை செய்யாதபோது அந்தப் பட்டகை கீழே விழுந்துவிடுகிறது. மனம் என்னும் பட்டகை மூலமாகத்தான் அந்த ஒற்றை ஒலி ஏழு ஸ்வரங்களாகிறது. மனம் என்னும் பட்டகைதான் ஒலியைப் பிரிக்கிறது. ஏழு ஸ்வ்ரங்களாகக் கூறு போடுகிறது.

அந்தப் பட்டகையை அகற்றிவிட்டால் மனதை அகற்றி விட்டால் எல்லா ஒலிகளும் ஒன்றாகிவிடும். அந்த ஓர் ஒலியின் நிறம் வெள்ளை. ஜென் துறவிகள் ஒரு கையால் தட்டும் சத்தம் என்று வர்ணிக்கிறார்களே அந்த ஒலியின் நிறம் தூய்மையான வெண்மை.

நான் சொல்வது உண்மை. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நீங்களே இந்த உண்மையை உணர்வீர்கள். நீங்கள் தியானம் செய்து கொண்டேயிருந்தால் ஒரு நாள் நீங்கள் இந்த உள்ளொளிக்குள் நுழைவீர்கள். இதுதான் நம் ஆன்மிக வளர்ச்சியின் உச்சகட்டம். அந்த இசை மகத்தானது. அந்த ராகம் மகத்தானது. அந்த ஒளி மகத்தானது. அதுதான் மனித வளர்ச்சியின் உச்ச நிலை. அந்த நிலையில் ஒலியும் வண்ணமும் ஒன்றாக இருக்கின்றன. ஒரே சக்தியின் இரு வேறு பக்கங்களாகத் திகழ்கின்றன.

*அன்பின் வழி நுட்பமானது*

*அங்கே கேட்டலும் இல்லை. கேட்காமல் இருத்தலும் இல்லை.*

*அங்கே ஒருவன் அவன் காலடியில் தன்னையே இழக்கிறான்.*

*மற்றவன் தேடல் என்னும் சுகத்தில் மூழ்கியிருக்கிறான்.*
*மீன் நீருக்குள் திளைத்து இருப்பது போல்*
*அன்பின் ஆழங்களில் திளைத்து இருக்கிறான்.*
*இறைவனின் பணியில் தன் தலையைக் கொடுக்க*
*காதலன் என்றும் தாமதம் செய்வதில்லை*

*இந்த காதலின் ரகசியத்தைக் கபீர் பிரகடனம் செய்கிறான்*

கபீரின் பிரகடனம் அன்பின் ரகசியத்தைப் பற்றியது. இது என் வழி என்று சொல்கிறார் கபீர்.

அனைவரும் எளிதாகச் செல்லக்கூடிய வழி அன்பின் வழி. ஏனென்றால் அன்புதான் உங்கள் இதயத்திற்கு வெகு சமீபத்தில் இருக்கிறது.

ஆனால் இன்றைய மனிதனின் ஒரே பிரச்சினை அவன் தன் இதயத்தில் இருந்து இயங்கவில்லை. தலையில் உள்ள அறிவைப் பற்றிக் கொண்டு வாழ்கிறான். நம் அறிவை வளர்க்கப் பயிற்சியில் ஈடுபடும்போது நம் இதயம் உதாசீனப்படுத்தப்படுகிறது.

நம் இதயத்திற்கும் அதில் உள்ள மெல்லிய உணர்வுகளுக்கும் எந்தப் பயிற்சியும் கிடைப்பதில்லை. எந்தக் கல்லூரியும் எந்தப் பல்கலைக்கழகமும் நம் இதயத்தைப் பற்றிக் கவலைப் படுவதில்லை.

உணர்வுகளில் நாம் இன்னும் காட்டுமிராண்டிகளாகத்தான் இருக்கிறோம். சில நேரங்களில் காட்டுமிராண்டிகளைவிடக் கேவலமாக இருக்கிறோம். நம் மூளை விரிந்து கொண்டே போகிறது. நம் இதயம் சுருங்கிக்கொண்டே போகிறது. இது விபரீதமான வளர்ச்சி.

மனித வரலாற்றில் மனிதனின் மனதுக்கு ஏற்பட்ட மிகப்பெரிய ஆபத்து இதுதான். நமது அறிவை வளர்த்துக் கொள்ள ஏராளமான முதலீடுகள் செய்கிறோம். ஆனால் இதயம் என்று இருப்பதையே மறந்துவிடுகிறோம். இதயத்தைத் தாண்டி வந்துவிட்டோம். அதன் வழியாகக்கூட நாம் செல்லவில்லை.

நாம் உணர்வுகளை அனுமதிப்பதில்லை. உணர்வுகள் உள்ள மனிதன் பலவீனமானவனவாகத் தோன்றுகிறான். உணர்வுகள் இல்லாதவன் வலியவனாகத் தோன்றுகிறான். உணர்ச்சிவசப்படாதீர்கள் என்று தொடர்ந்து அறிவுரைகள் வழங்குகிறோம். அழக்கூடாது சத்தம்போட்டுச் சிரிக்கக்கூடாது என்று அடிக்கடி

அறிவுறுத்துகிறோம். 'அனைத்தையும் உன் கட்டுப்பாட்டில் வைத்திரு' என்று சொல்கிறோம். அப்படி இருந்தால் உங்களுக்குள் அன்பு மலர வாய்ப்பேயில்லை. நீங்கள் எதையும் கட்டுப்படுத்தாமல் இருக்கும்போது மட்டுமே அன்பு உண்டாகும்.

அன்பு உங்களைவிடப் பலமடங்கு பெரியது. அதை உங்களால் கட்டுப்படுத்த முடியாது. நீங்கள் வெறுப்பைக் கட்டுப்படுத்தலாம். வெறுப்பு உங்களைவிடச் சிறியது.

அன்பைக் கட்டுப்படுத்த நினைத்தால் நீங்கள் எல்லா வாய்ப்புகளையும் தவறவிட்டுவிடுவீர்கள். உங்களிடம் கொஞ்சம்கூட அன்பிருக்காது. அன்பில்லாதவன் பிணத்திற்கு சமானம். தன் இதயத்தை ஒதுக்கிவிட்டு எந்த நேரமும் தன் அறிவில் வாழ நினைப்பவன் செத்தவனுக்குச் சமானம்.

அன்பின் வழி நுட்பமானது என்கிறார் கபீர். அறிவு நுட்பமற்றது. கீழ்த்தரமானது. அறிவு என்பது என்ன? கூட்டல் கழித்தல் கணக்கு, சூழ்ச்சித் திட்டங்கள், சாமர்த்தியம், வாத-பிரதிவாதங்கள் ஆகியவற்றின் கூட்டே அறிவு.

அடுத்தவனைச் சுரண்ட அடுத்தவனைக் கவிழ்க்க அடுத்தவனைச் சித்திரவதை செய்ய பணம் சம்பாதிக்க, சொத்து சேர்க்க, அரசியல்வாதியாக, மக்களை அடிமைப்படுத்த, அழிவு வேலைகள் செய்ய அறிவு தேவைப்படும்.

இதயம் நுட்பமானது உலகியல் வேலைகளுக்கு இதயம் பயன்படாது. இதயம் கவிதைகளுக்கான இடம். கணக்கிற்கு இல்லை. அது மென்மைக்கான இடம். சூழ்ச்சிக்கு இல்லை. அது கருணை காட்டும் இடம். அடுத்தவரைச் சுரண்டும் இடம் இல்லை.

சந்தையில் பணம் சம்பாதிக்க இதயம் தேவையில்லை. இதயத்தை வைத்துக் கொண்டு நூறு கிராம் உப்புகூட வாங்கமுடியாது. இதயம் உங்களை அரசியல்வாதி ஆக்காது. ராணுவ தளபதியாகப் பதவி உயர்வு கொடுக்காது. உங்களைப் பெரிய வீரனாக்காது. உங்களை ஒரு ஹிட்லராகக் கண்டிப்பாக ஆக்காது.

இதயம் உங்களை ஆட்கொள்ளத் தொடங்கினால் கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் போட்டியிலிருந்து விலகிக் கொள்ளத் தொடங்குவீர்கள். ஒருவரை ஒருவர் அழிக்க எத்தனிக்கும் நாய்ச்சண்டையிலிருந்து தள்ளிப் போகத் தொடங்குவீர்கள். பகைமை போட்டி பொறாமை வஞ்சம் நிறைந்த உலகிலிருந்து தள்ளிப் போகத் தொடங்குவீர்கள் இந்த அசிங்கமான சமூகத்தின் பகுதியாக நீங்கள் இருக்க மாட்டீர்கள். பாசிசம், சோஷலிசம் கம்யூனிசம் போன்ற அசிங்கமான விளையாட்டுக்களை விளையாடமாட்டீர்கள். சித்தாந்தங்களில் உங்கள் மனம் செல்லாது. அன்பு செய்வீர்கள். அனுபவிப்பீர்கள். என்றும் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்.

சில நாட்களுக்கு முன்னால் ஓர் இளைஞன் என்னிடம் வந்தான்.

“நான் தொடர்ந்து தியானத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேன். மனித இனத்தின்மேல் எனக்குத் தீராக் காதல் உண்டாகிவிட்டது.”

“மனித இனத்தின் மீதா? மனித இனத்தை ஒட்டுமொத்தமாக எப்படி நேசிப்பாய்? மனித இனத்தை எங்கே காண்பாய்? ஒரு மனிதனை நேசி. அது போதும். மனித இனம் என்ற வார்த்தையே உன் அறிவு செய்யும் சூழ்ச்சி.

மனித இனத்தை எப்படித் தழுவிக் கொள்வாய்? மனித இனத்தின் கைகளை எப்படிப் பிடித்துக் கொள்வாய்? மனிதனை நீ எங்கு சென்றாலும் பார்க்கலாம். ஆனால் மனித இனத்தை எங்கே காண்பாய்? மனித இனம் என்பது ஒரு சித்தாந்தம். ஒரு கோட்பாடு. உன் தலையில் உள்ள ஒரு கருத்து வடிவம். வாழ்க்கை என்றும் யதார்த்தத்தில் திளைத்திருக்கிறது. உன் அறிவோ கருத்துவடிவங்களில் மூழ்கியிருக்கிறது.

ஒரு குறிப்பிட்ட ஆணையோ பெண்ணையோ நேசிக்கத் தொடங்கு.”

“ஒரு மனிதனை நேசி” என்று நான் சொன்னதைக் கேட்டு அவன் அதிர்ந்தான். மனிதர்களைத் தவிர்ப்பதற்காகவே அவன் மனித இனம் என்ற பெரிய வார்த்தையைக் காட்டிப்

பீலா விட்டுக் கொண்டிருந்தான். நான் சொன்னது அவனுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. ஏதோ வானத்தில் உயரப் பறந்து கொண்டிருந்தவனை நான் வலுக்கட்டாயமாகத் தரையிறக்கியதைப் போல் என்னை வெறித்துப் பார்த்தான்.

அவன் வானத்தில் பறக்கவில்லை. தரையில் இருந்தபடியே வார்த்தை விளையாட்டு ஆடிக் கொண்டிருந்தான்.

நீங்கள் மனித இனத்தையே காதலித்தால் அதைக் காப்பதற்காக உங்களால் மனிதர்களைக் கொல்ல முடியும். நீங்கள் அமைதியைக் காதலித்தால் அதற்காகப் போருக்குச் செல்ல முடியும். அமைதியை நேசிக்காதீர்கள். ஜனநாயகம், கம்யூனிசம் எதையுமே நேசிக்காதீர்கள். இவையெல்லாம் நிஜங்கள் இல்லை. வெறும் சித்தாந்தங்கள்.

மனிதர்களை நேசியுங்கள். மரங்களை நேசியுங்கள். பாறைகளை நேசியுங்கள். அப்போதுதான் அன்பு என்றால் என்னவென்று நீங்கள் உணர்வீர்கள். பிரம்மாண்டமான கருத்துவடிவங்களைக் காதலிக்காதீர்கள். அவை ஆபத்தானவை.

மனிதனை மனிதன் அழிக்க முற்படுவதற்குக் காரணம் அந்தப் பிரம்மாண்டமான கருத்து வடிவங்களே. ஒரு முகமதியன் தன்னுடைய மதத்திற்காக மனிதர்களைக் கொல்லத் தயங்குவதில்லை. இது மடத்தனம்.

ஒரு கிறிஸ்துவன் கிறிஸ்துவ மதத்தைக் காக்க மற்ற கிறிஸ்துவர்களைக் கொல்லத் தயாராக இருக்கிறான். அப்படியென்றால் கிறிஸ்துவ மதம் என்றால் என்ன?

அன்பு என்பது நேரடியானது உடனடியான வெளிப்பாடு. அன்பு ஓர் எண்ணமோ கருத்துவடிவமோ இல்லை. அது திண்ணியமானது

இந்தக் கணத்தை நன்றாக அனுபவியுங்கள். நாளை நடக்கப்போவதற்கு இன்று தயார்ப்படுத்திக் கொள்ளாதீர்கள். இன்றைய நாள் மிகவும் அழகான நாள். அதில் திளைத்திருங்கள். இன்றைய நாள் ஒரு திருவிழாவாக ஒரு கொண்டாட்டமாக இருக்கட்டும்.

*அன்பின் வழி நுட்பமானது*

அதை உணர நாம் கூர் உணர்வுகள் உடையவர்களாக இருக்க வேண்டும். நாம் அறிவை விட்டுவிட்டு இதயத்தில் வாழ வேண்டும். உணர்வுகளை வெளிப்படுத்தும் வன்மை நமக்கு இருக்க வேண்டும்.

உணருங்கள், அழுங்கள், புன்னகை புரியுங்கள், நடனம் ஆடுங்கள் கதறுங்கள், சத்தம் போடுங்கள். ஆனால் இவை எல்லாம் உங்கள் இதயத்திலிருந்து நடக்கட்டும்.

கொஞ்சம் கொஞ்சமாக உங்களுக்குள் ஒரு மாற்றம் வரத் தொடங்கும். தலையில் இருக்கும் உங்கள் சக்தி உங்கள் இதயத்தில் இறங்கத் தொடங்கும். நீங்கள் ஒரு புதிய வழியில் பயணிக்கத் தொடங்குவீர்கள். புதிய மதிப்பீடுகள் தோன்றும்.

நீங்கள் ஓர் அழகான பெண்ணைப் பார்த்துக் காதல் வயப்படுவீர்கள். ஆனால் உங்கள் அறிவு உங்களை எச்சரிக்கும்.

"ஏய் என்ன செய்து கொண்டிருக்கிறாய்? இவள் அழகாக இருக்கலாம். ஆனால் இவளிடம் பணம் இல்லை. சொத்துள்ள ஒரு பெண்ணைத் தேடிப் பிடித்துக் காதலி."

உங்கள் அறிவு கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் உங்கள் இதயத்திற்குக் காதல் பித்துப் பிடித்துவிட்டது. அன்பு காட்ட வேண்டுமென்றால் உங்களுக்குப் பித்துப் பிடிக்க வேண்டும். பித்துப் பிடித்தவர்கள்தான் அன்பின் பாதையில் நடக்க முடியும். பித்துப் பிடித்தவன் அன்பினால் வரும் லாப நட்டங்களுக்குக் கணக்குப் போடமாட்டான். பித்துப் பிடித்தவன் தன் உள்ளுணர்வுகளுக்காக வெளியுலகைத் தியாகம் செய்யத் தயங்க மாட்டான். பித்துப் பிடித்தவன் இன்றைய வாழ்க்கைக்காக நாளைய வாழ்க்கையைத் தியாகம் செய்யத் தயங்க மாட்டான்.

*அங்கே கேட்டலும் இல்லை. கேட்காமல் இருத்தலும் இல்லை.*

அன்பில் நான்கு வகை இருப்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். முதல் வகை - நீங்கள் கேட்கிறீர்கள். வேண்டியதை வெட்கமில்லாமல் கேட்கிறீர்கள். இது பக்குவமற்ற அன்பு. ஒரு குழந்தை தனக்கு வேண்டியதைக் கேட்கிறது. ஒரு குழந்தைக்குக் கொடுக்கத் தெரியாது. அது குழந்தை. அதை மன்னித்துவிடலாம்.

குழந்தை தனக்கு வேண்டியதைத் தன் தாயிடம் கேட்கிறது. தன் தந்தையிடம் கேட்கிறது. வீட்டிற்கு வரும் விருந்தாளியிடம் கேட்கிறது. எல்லோரும் அதை நேசிக்க வேண்டும் என்று அது எதிர்பார்க்கிறது.

ஒரு குழந்தை எப்போதும் ஏதாவது கேட்டுக் கொண்டே யிருக்கிறது. அந்த நிலையிலிருந்து குழந்தை வளர வேண்டும். முதல் வகை அன்பு பக்குவமில்லாத அன்பு.

"இதைக் கொடு. அதைக் கொடு. நான் கேட்பதை நீ கொடுத்தால்தான் நீ என்னை நேசிக்கிறாய் என்று எனக்குத் தெரியும். கொடுக்காவிட்டால் நீ என்னை நேசிக்கவில்லை என்று அர்த்தம்." என்று குழந்தை சொல்லிக் கொண்டே யிருக்கிறது.

நீங்கள் குழந்தையை நேசிக்கிறீர்களா இல்லையா என்பதை அந்தக் குழந்தை தெரிந்து கொள்ள இருக்கும் ஒரே வழி இதுதான். அதற்கு அதிகமாக பொம்மைகள் வாங்கிக் கொடுத்தால் கேட்கும்போதெல்லாம் சாக்லேட்டும் ஐஸ்க்ரீமும் கொடுத்தால் நீங்கள் அதை நேசிக்கிறீர்கள் என்று அது புரிந்துகொள்ளும்.

குழந்தைக்குத் தெரிந்த ஒரே மொழி - பொருள்களைக் கொடுப்பது.

இது தவறு அல்ல. ஒவ்வொரு குழந்தையும் இந்தக் கட்டத்தைக் கடந்து செல்ல வேண்டும். ஆனால் பலர் இந்தக் கட்டத்தைத் தாண்டுவது இல்லை. உடல் ரீதியாக அவர்கள் வளர்ந்துவிடுவார்கள். நாற்பது வயதாகிவிடும். திருமண மாகி அவர்களுக்கே குழந்தைகள் பிறந்துவிடும். என்றாலும் இன்னும் குழந்தைகளைப்போல் அதைக் கொடு இதைக் கொடு என்று சதா கேட்டுக் கொண்டேயிருப்பார்கள்.

நாற்பது வயது மனிதன் வீட்டிற்குத் திரும்புகிறான். தன் குழந்தை தனக்கு முத்தம் கொடுத்து வரவேற்க வேண்டும் என்று காத்திருக்கிறான்.

"பார்த்தாயா அப்பா வீட்டுக்கு வந்து விட்டேன். எங்கே ஒரு முத்தம் கொடு பார்க்கலாம்" என்று வெளிப்படையாகக் கேட்கிறான்.

எந்த மாதிரியான தந்தை அவன்?

அவன் இன்னும் பக்குவப்படவில்லை. இன்னும் குழந்தையைப் போல் அதைக் கொடு இதைக் கொடு என்று சதா நச்சரித்துக் கொண்டிருக்கிறான். இந்த மாதிரியான ஆள் தன் மனைவியிடம் காதலைக் கேட்டுப் பெற்றுக் கொள்வான். இந்த மாதிரியான பெண் தன் காதலனிடம் அன்பைக் கத்தியைக் காட்டி மிரட்டியாவது பெற்றுக் கொள்வாள். எல்லோரும் கேட்கிறார்கள். யாருக்கும் கொடுக்க மனமில்லை. எல்லோரும் மனதளவில் குழந்தைகளாகவே இருக்கிறார்கள். கொடுக்கும் பக்குவம் யாருக்கும் வரவில்லை. அதனால்தான் இவ்வளவு சண்டைகள் இவ்வளவு முரண்பாடுகள்.

இரண்டாவது வகை அன்பு நீங்கள் கொடுக்கத் தொடங்கும்போது வெளிப்படுகிறது. மற்றவர்கள் உங்களுக்குக் கொடுக்கிறார்களா இல்லையா என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் நீங்கள் கொடுக்கத் தொடங்குகிறீர்கள். ஆனால் இந்த இரண்டாவது வகை அன்பிலும் நீங்கள் மாட்டிக் கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது.

சிலர் மனமுவந்து கொடுப்பார்கள். ஆனால் மற்றவர்கள் கொடுத்தால் வாங்கிக் கொள்ள மாட்டார்கள். மதப் பிரச்சாரகர்கள் சமூக சேவகர்கள் தியாகிகள் எல்லாம் இந்த வகையைச் சேர்ந்தவர்கள்.

உங்களுக்கு நல்லது செய்யத் தயாராக இருப்பார்கள். ஆனால் உங்களிடமிருந்து எதையும் பெற்றுக் கொள்ள மாட்டார்கள். அடுத்தவரிடமிருந்து உதவி பெற்றுக் கொள்ள அவர்கள் அகந்தை இடம் கொடுக்காது.

அவர்கள் எப்படிப் பெற முடியும்? அவர்கள் பக்குவமடைந்த வர்கள். அவர்களால் கொடுக்கத்தான் முடியும். பெற முடியாது.

ஒரு முனையிலிருந்து மறு முனைக்குச் சென்றுவிட்டார்கள்.

முதலாமவர்களைக் காட்டிலும் பக்குவமானவர்கள் என்றாலும் அவர்களின் அகந்தை அவர்கள் வளர்ச்சியைத் தடுக்கிறது. "என்னால் தரத்தான் முடியும் பெற முடியாது." என்ற அவர்களின் கொள்கையில் பக்குவமின்மை இருக்கத்தான் செய்கிறது.

எனக்கு ஒரு செல்வந்தனைத் தெரியும். தன் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் நிறைய உதவிகள் செய்திருக்கிறான். தன்னிடமிருந்த பணத்தில் பெரும்பகுதியை இப்படி உதவி செய்வதிலேயே செலவழித்துவிட்டான். ஒரு நாள் ,அவன் என்னைப் பார்க்க வந்தான்.

"ஓஷோ, எனக்கு ஒன்றுமட்டும் புரியவில்;லை. எத்தனையோ பேருக்கு எவ்வளவோ வழிகளில் உதவி செய்திருக்கிறேன். ஆனால் ஒருவரிடம்கூட நன்றி உணர்வில்லையே. அது ஏன்?"

அவன் சொல்வது சரிதான். அவன் உதவி செய்ததும் உண்மைதான். அவன் பெரிய மனம் படைத்தவன்தான். ஒரு சிறு குறிப்புக் கொடுத்தால் போதும். வரிந்து கட்டிக் கொண்டு உதவி செய்வான். என்ன கொடுக்க முடியுமோ அதைக் கொடுப்பான். இல்லை என்று எப்போதும் சொல்ல மாட்டான். அவனுடைய நண்பர்களும் சொந்தக்காரர்களும் அவனால் பணக்காரர்கள் ஆனது உண்மைதான்.

அவனிடம் உதவி பெற்றவர்கள் யாரும் நன்றி உணர்வுடன் இல்லை என்பதும் உண்மைதான். அது எனக்கு நன்றாகத் தெரியும்.

நான் அவனிடம் சொன்னேன்.

"நான் சொல்வது உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் அதுதான் உண்மை. நீதான் எப்போதும் கொடுக்கிறாய்.

ஒருநாள்கூட அவர்கள் உனக்கு ஏதாவது கொடுக்க நீ அனுமதித்ததில்லை. உனக்குப் பெரிய மனம் இருப்பது உண்மைதான். ஆனால் உன் அகந்தை மிகவும் அழுத்தமாக இருக்கிறது. 'அது எப்படி என் கை தாழ்ந்து அவர்கள் கை ஓங்கியிருப்பது? நான் யாரிடமும் எதுவும் பெற மாட்டேன்.' என்ற பிடிவாதத்துடன் இருக்கிறாய். அதுதான் உன் பிரச்சினை."

அதைக் கேட்டதும் அந்த இளைஞனுக்குச் சிறிது நேரத்திற்குப் பேச்சே வரவில்லை. பின்னர் பெரிதாக அழத் தொடங்கினான்.

"ஆமாம். நீங்கள் சொல்வது சரிதான். இதுவரை நான் யாரிடமும் உதவி கோரிப் பெற்றதில்லை. நான் சுயமாக உழைத்து முன்னுக்கு வந்தவன். என்னால் கொடுக்க முடியுமே தவிர எதையும் யாரிடமிருந்தும் வாங்கிக் கொள்ள முடியாது."

"பெரிய பெரிய விஷயங்களை வாங்கிக்கொள்ள வேண்டும் என்ற அவசியம் இல்லை. சிறு உதவிகள் போதும் அதுவும் பொருள் சம்பந்தப்பட்டதாக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. உதாரணமாக உன் நண்பனைத் தொலைபேசியில் அழைத்து " என் உடல்நிலை சரியில்லை. பயப்பட ஒன்றும் இல்லை.. ஆனால் நீ கொஞ்ச நேரம் என் அருகில் அமர்ந்திருந்தால் நன்றாக இருக்கும்." என்று சொல்.

அது சிறிய விஷயம்தான். என்றாலும் அடுத்தவர்கள் உன்மேல் வைத்திருக்கும் அன்பைக் காண்பிக்க ஒரு வாய்ப்பு கிடைக்கும். இல்லாவிட்டால் அவர்கள் எப்போதும் கடன்பட்டவர்களாகவே இருப்பார்கள். நன்றியுணர்வின் பாரம் அவர்களை அமுக்கிவிடும். அவர்கள்மேல் பாரம் ஏற்றிய குற்றத்தை மன்னிக்கவே மாட்டார்கள்."

ஆக மூன்றாவது வகை அன்பு பரிமாற்றம். அன்பைக் கொடுப்பது அன்பைப் பெறுவது. அன்பை எளிதாகப் பரிமாறிக் கொள்வது. அன்பின் ஓட்டம் இரண்டு பக்கமும் ஒன்றாக இருக்கும். இந்த அன்பு மிகவும் பக்குவமானது.

நான்காவது வகை அன்புதான் உச்ச நிலை. இதுதான் கடைசி வகை. இதில் கொடுப்பதும் தெரியாது பெறுவதும் தெரியாது. ஏனென்றால் இங்கே மற்றவர் என்ற பேச்சுக்கே இடமில்லை. இருப்பது ஒரே ஒரு முழுமைதான். அதில் நான் - நீ. என்னுடையது மற்றவர்களுடையது போன்ற பிரிவினைகளுக்கு இடமில்லை.

அதைத்தான் கபீர் இந்த வரிகளில் சுட்டிக் காட்டுகிறார்.

*அங்கே கேட்டலும் இல்லை. கேட்காமல் இருத்தலும் இல்லை.*

*அங்கே ஒருவன் அவன் காலடியில் தன்னையே இழக்கிறான்.*

*மற்றவன் தேடல் என்னும் சுகத்தில் மூழ்கியிருக்கிறான்.*

*மீன் நீருக்குள் திளைத்து இருப்பது போல்*

*அன்பின் ஆழங்களில் திளைத்து இருக்கிறான்.*

*இறைவனின் பணியில் தன் தலையைக் கொடுக்க*

*காதலன் என்றும் தாமதம் செய்வதில்லை*

ஒன்றே ஒன்றை மட்டும் கொடுத்தால் போதும் உங்கள் தலையை. உங்கள் மனதை உங்கள் எண்ணங்களை, உங்கள் காரண-காரிய அறிவை அவன் காலடியில் சமர்ப்பணம் செய்யுங்கள். போதும். உங்கள் தலையை அறுத்துப் போட்டுவிட்டு இதயத்துடன் வாழுங்கள். இதுதான் கபீர் பிரகடனம் செய்யும் காதலின் ரகசியம்.

இறைவனுக்கு மலர்களைக் கொடுப்பதால் எந்தப் பயனும் இல்லை. உங்கள் மனத்திட்பத்தை உங்கள் மனதை உங்கள் மண்டையைக் கொடுங்கள். "தேடல் என்னும் சுகத்தில் மூழ்கியிருக்கும்போது.." என்று கபீர் சொல்கிறார். அன்பின் தோட்டத்தில் இருக்கும் உண்மையான காதலன் தன் இலக்கை அடைவதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. பயணமே அவன் இலக்கு.

"சொர்க்கத்திற்குச் செல்லும் எல்லா வழிகளும் சொர்க்கம் தான்."

"நான்தான் வழி" என்று ஏசுநாதர் சொல்லவில்லையா?

நாளை என்ன நடக்கப் போகிறது, முடிவில் என்னவாகப் போகிறோம் என்பதைப் பற்றிக் காதலன் கவலைப்படுவதில்லை. அவன் பலன்களையும் விளைவுகளையும் பார்ப்பதில்லை. அவன் அடைய வேண்டிய லட்சியம் என்று ஒன்றும் கிடையாது. பயணம்தான் அவனுடைய இலக்கு. அந்தப் பயணத்தில் ஓர் ஆழமான அழகு இருக்கிறது.

கிழக்கில் பக்தர்களின் பஜனைப்பாடல் ஒன்று : "இறைவா எங்களுக்கு மோட்சம் வேண்டாம் விடுதலை வேண்டாம். சமாதிநிலை வேண்டாம். இந்த உலகம் அழகாக இருக்கிறது. உன் திருவிளையாடல் அழகாக இருக்கிறது. எங்களையும் உன் விளையாட்டில் சேர்த்துக் கொள். எங்களையும் விளையாடவிடு. பயணம் சுகமாக இருக்கும்போது யார் இலக்கைப்பற்றிக் கவலைப்பட்டார்கள்? எங்களுக்குப் பயணமே இலக்கு."

உண்மையான பக்தனுக்கு கடவுளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற அவசரம் இல்லை. அவன் கடவுளை நோக்கிக் கூவுகிறான் "இறைவா நீ ஒளிந்துகொள். வெளியே வராதே. நாம் கண்ணாமூச்சி விளையாடலாம். உன்னைத் தேடுவதே ஒரு சுகம்தானே!"

பக்தன் பொறுமை இழந்து அரக்கப் பரக்க ஆண்டவனைத் தேடி அலையவில்லை.

"உனக்கு எப்போது வெளியே வரவேண்டும் என்று தோன்றுகிறதோ அப்போது வந்தால் போதும். நீ எப்போது வந்தாலும் நான் தயாராக இருப்பேன். என் கதவுகள் உனக்காக எப்போதும் திறந்தே இருக்கும். நான் கதவருகிலேயே நின்று கொண்டிருப்பேன். உணவும் தயாராக இருக்கும். நீ வந்ததும் நாம் விருந்து சாப்பிடலாம். ஒன்றும் அவசரம் இல்லை. நான் காத்திருக்கிறேன்."

காதலன் பொறுமையுடன் காத்துக் கொண்டிருப்பான். அவன் தேடலைக்கூட ரசிப்பான் அனுபவிப்பான். அவனுடைய இலக்கு எதிர்காலத்தில் இல்லை. இந்தக் கணத்தில் இப்போது நடந்து கொண்டிருக்கும் இந்த நொடியில் மூழ்கியிருக்கிறது. அதுதான் அவனுடைய தியானம்.

உங்கள் மனதை நழுவவிட்டால்தான் இந்த நிலை சாத்தியம். மனம் நழுவியவுடன் மொத்த சக்தியும் இதயத்திற்குச் சென்றுவிடுகிறது. அன்பு விளைகிறது.

அன்புதான் ரகசியச் சாவி. அது தெய்வம் குடியிருக்கும் வீட்டின் கதவைத் திறக்கிறது. சிரியுங்கள், அன்பு செய்யுங்கள், உயிர்ப்புடன் இருங்கள், பாடுங்கள், ஆடுங்கள், துளையிட்ட மூங்கிலாக உருவெடுங்கள். உங்கள் வழியாக அவனுடைய பாடல் வெளிவரட்டும்.

அவன் புல்லாங்குழல் இடையறாது இசைத்துக் கொண்டு இருக்கிறது. எந்த நொடியில் நீங்கள் அவன் கைப் புல்லாங்குழலாக மாற வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அந்தக் கணத்தில் அவன் உங்களை எடுத்துத் தன் உதட்டருகில் வைத்து இசைக்கத் தொடங்குவான்.

அது ஒரு காதல் பாட்டாகத்தான் இருக்கும். அது விடுதலை கீதமாகத்தான் இருக்கும்.

இன்று இது போதும்.

முதல் கேள்வி:

*ஓஷோ,*

*மனத்திட்பத்தின் வழி, சரணாகதி அடைவது என்று இரண்டு வழிகளைப் பற்றிச் சொன்னீர்கள். மனத்திட்பத்தின் வழி எனக்கு ஏற்றதல்ல. சரணாகதி அடைவதும் சரியான வழியாகத் தோன்றவில்லை. நான் என்ன செய்வது? நான் ஒட்டுமொத்தமாகக் குழம்பிப் போயிருக்கிறேன். எனக்கு வழிகாட்டுங்களேன்!*

முதலில் ஒன்றைத் தெரிந்து கொள்ளுங்கள். நீங்கள் ஒட்டுமொத்தமாகக் குழம்பியிருந்தால் அந்தக் குழப்பத்திலிருந்து தெளிவு பிறக்கும். ஆனால் உங்கள் குழப்பம்கூட முழுமையாக இல்லை. குழப்பம் முழுமையாகிவிட்டால் அதிலிருந்து பாதை பிறக்கும். அதன்பின் வேறு பாதை உங்களுக்குத் தேவையில்லை.

நாம் குழம்பிப் போயிருக்கிறோம். குழப்பங்களுக்கு இடையில் நம் பாதையைத் தேடுகிறோம். நம் குழப்பம்கூட முழுமையாக இல்லை. நம் குழப்பத்திலிருந்து ஏதாவது வழி கிடைக்குமா என்று பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

அதே சமயம் குழப்பம் முழுமையாக இருந்துவிட்டால் உங்களுடைய எல்லா வழிகளும் அடைக்கப்படுகிறது. உங்களுக்கு என்ன செய்வது என்று புரிவதில்லை. உதவி செய்ய ஆளில்லை. இப்போது உங்களைப் பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. உங்கள் இலக்கு என்னவென்பதும் தெரியாது. அதற்கான பாதை என்னவென்பதும் உங்களுக்குத் தெரியாது.

உங்களுக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் வெற்றுக் காகிதத்தைப் போல் சுத்தமாக வெறுமையாக இருக்கிறீர்கள். மொத்தக்குழப்பத்தில் மனம் வெறிச்சோடிவிடுகிறது. ஆனால் பிரச்சினை என்னவென்றால் நீங்கள் ஒருபோதும் முழுமையான குழப்பத்தில் இருப்பதில்லை.

தெய்வத்தை அடைய முழுமையான குழப்பம் ஒரு வழி. அத்தகைய குழப்பம் நம் மொத்த அறிவும் அர்த்தமற்றது என்பதைக் காண்பித்துவிடும். அதில் விதிவிலக்குகளே இருக்க முடியாது. "எனக்குக் கொஞ்சம் தெரியும். தெரிந்த அளவு அது சரி. அது உண்மை." என்று நீங்கள் சொல்ல முடியாது.

முழுமையான குழப்பம் ஏற்படும்போது நீங்கள் உங்கள் ஆன்மாவின் இருண்ட இரவில் இருப்பீர்கள். அங்கு எந்த ஒளியும் இருக்காது. ஒளி தோன்றுவதற்கான சாத்தியக்கூறு கூட இருக்காது. அங்கு நம்பிக்கையில்லை. வருங்காலம் மாயமாக மறைந்துவிடுகிறது. கடந்தகாலம் அர்த்தமற்றதாகிவிடுகிறது. உங்கள் மனதில் இருக்கும் வேதனை சிகரத்தைத் தொடும் அளவிற்கு உச்சிக்குப் போய்விட்டது. அந்த உச்சியில் மனம் மறைந்துவிடுகிறது. சிறு குழப்பத்தில்தான் மனம் ஜீவித்திருக்க முடியும். முழுமையான குழப்பத்தில் மனதால் இருக்க முடியாது.

எது முழுமையாக இருந்தாலும் அதில் மனம் இருக்கமுடியாது. முழுமையான அன்பில் மனம் கரைந்துவிடுகிறது. முழுமையான மனத்திட்பத்தில் மனம் மறைந்துவிடுகிறது. முழுமையான சரணாகதியில் மனம் மறைந்துவிடுகிறது. முழுமையும் மனமும் ஒரே இடத்தில் இருக்க முடியாது. குழப்பம் முழுமையாக இருந்தால் உங்கள் மனம் இருக்காது.

குழப்பம் முழுமையாக இல்லாத போதுதான் உங்கள் மனம் உயிர்வாழ முடியும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் எதிலாவது முழுதாக ஈடுபடாதவரைதான் மனம் வேலை செய்யும். செய்யும் எதையும் முழுமையாகச் செய்து பாருங்கள். ஒரு நொடிப் பொழுதுகூட மனம் உங்களிடம் இருக்காது.

நீங்கள் உங்கள் கேள்வியில் "ஒட்டுமொத்தமாக" என்று சொன்னது உங்கள் பிரச்சினையை இன்னும் அழுத்தமாகச் சொல்வதற்குத்தான். உங்களுக்கு அந்தச் சொற்றொடரின் பொருள் இன்னும் சரியாக விளங்கவில்லை.

முழுமையான குழப்பத்தில் உள்ளவன் இந்தக் கேள்வியைக் கேட்கமாட்டான். அவனால் எப்படிக் கேட்க முடியும்? மனதில் இருக்கும் கேள்வியை வார்த்தை வடிவில் கொண்டுவர அவனால் எப்படி முடியும்? அறிவிலிருந்துதான் கேள்வி கிளம்புகிறது. முழுமையான குழப்பத்தில் உள்ளவன் என்னிடம் வருவான்;

தன் வெறுமையான பித்துப் பிடித்த கண்களால் என்னை உற்றுப் பார்ப்பான். ஆனால் ஒன்றும் பேச மாட்டான். எதுவும் கேட்க மாட்டான். கேள்வி கேட்பவன் என்று ஒருவன் இருந்தால் மனம் என்ற ஒன்று இருக்கும். உங்களிடம் கேள்வி இருந்ததென்றால் நீங்கள் இன்னும் அறிந்ததைப் பிடித்துக் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்றுதான் பொருள்.

ஒரு வழி கிடைக்கும்; யாராவது வழி காண்பிப்பார்கள் என்ற நம்பிக்கை உங்களிடம் இருக்கிறது என்றுதான் பொருள். நீங்கள் இன்னும் உங்களை ஆற்றலுடையவராக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். எப்படியாவது தப்பிக்க வழி ஒன்றைக் கண்டுபிடித்துவிடலாம் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள். உங்கள் வெறி இன்னும் முழுமையடையவில்லை. உங்கள் வேதனை இன்னும் பூரணமாகவில்லை. உங்கள் கட்டி அறுக்கும் அளவிற்குப் பழுக்கவில்லை.

மனத்திட்பம் உங்கள் வழியில்லை என்று உங்களுக்குத் தோன்றினால், சரணாகதியும் சரியான வழியில்லை என்று நீங்கள் நினைத்தால் குழம்பிப்போவது உங்கள் இயற்கையாக இருந்தால் - நான் சொல்கிறேன் - அதுவே உங்கள் வழியாக இருக்கட்டும். ஆனால் அந்தக் குழப்பம் முழுமையாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள். அரை வேக்காட்டுக் குழப்பம் பயன்படாது. அறிவு கொஞ்சம்கூட மிஞ்சாத அளவிற்குக் குழம்புங்கள். உங்கள் குழப்பம் உச்சகட்டத்தை

அடையும்போது உங்களிடம் கொஞ்சம்கூட திடத்தன்மை இருக் காது. புனித நூல் இருக்காது. மதம் இருக்காது. நம்பிக்கை இருக்காது. எதுவும் இருக்காது. நான் இப்படிச் சொல்வதற்கு வலுவான காரணம் இருக்கிறது. உண்மையை அடைய குழப்பத்தின் வழியில் பயணம் செய்தவன் நான்.

முழுமையான குழப்பம் வரும்போது உங்களுக்குப் பித்துப் பிடித்துவிடும். எது என்ன என்பதே உங்களுக்குத் தெரியாது. அந்தச் சமயத்தில் உங்களுக்கு அசாத்தியமான துணிச்சல் தேவைப்படும். சூஃபித் துறவிகள் "குழப்ப உத்தி" என்று இதைப் பெயரிட்டு அழைக்கிறார்கள். உங்களுக்குத் தெரிந்ததை யெல்லாம் குழப்பம் புரட்டிப் போட்டுவிடும். உங்களை இருண்ட சூன்யத்திற்கு அழைத்துச் சென்றுவிடும். எல்லா அறிவும் போய்விட்டால் குழப்பம் மட்டும் தனியாக இருக்க முடியாது.

நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். நீங்கள் என்னிடம் வருகிறீர்கள். உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருக்கிறது. நான் கடவுள் இல்லை என்று சொல்கிறேன். உங்களுக்குக் குழப்பமாக இருக்கிறது. கடவுள் இல்லை என்று நான் சொன்னதால் குழப்பம் வரவில்லை. கடவுள் இருக்கிறார் என்று நீங்கள் நம்புவதால் குழப்பம் தோன்றுகிறது.

இப்போது உங்களிடம் இரண்டு முரண்பாடான விஷயங்கள் இருக்கின்றன. உங்களில் ஒரு பகுதி கடவுள் இருக்கிறார் என்று சொல்கிறது. மற்றொரு பகுதி என்னோடு சேர்ந்துகொண்டு கடவுளை மறுக்கிறது. அதனால் குழப்பம் தோன்றுகிறது. குழப்பம் வந்தால் முரண்பாடு தோன்றும். உங்களிடம் இரண்டு வேறு வேறு அறிவு இருக்கிறது. அந்த இரண்டும் உங்களை எதிரெதிர் பக்கங்களில் இழுக்கின்றன.

வருங்காலத்தில் சூஃபிக்களின் இந்த "குழப்ப உத்தி" மிகவும் பயனுள்ளதாக இருக்கப் போகிறது. கடந்த காலத்தில் இந்த உத்திக்கு அவ்வளவாக முக்கியத்துவம் கிடைக்கவில்லை. காரணம் ஓர் இந்து பிறக்கும்போதே ஓர் இந்துவாகத்தான் இருப்பான். கிறிஸ்துவர்கள், முகமதியர்கள், சமணர்கள் பற்றி அவன் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. ஆரம்பத்திலிருந்தே

அவன் பாதை சரி மற்றவர்களின் பாதை தவறு என்று அவனு.க்கு நன்றாகத் தெரியும். அதேபோல் ஒரு முகமதியன் முகமதியனாகவே பிறக்கிறான். குரானில் உள்ளது மட்டும்தான் உண்மை என்று அவனுக்குத் தெரியும். மற்ற மதங்கள் சொல்வது எல்லாம் வெறும் பேத்தல் என்று அவன் திடமாக நம்புகிறான். அதே நிலையில்தான் கிறிஸ்துவனும் இருக்கிறான். இறைவனை அடைய வேண்டுமென்றால் ஏசுநாதர் மூலமாகத்தான் அடையமுடியும். மற்றவர்கள் எல்லாம் நரகத்திற்குப் போவார்கள் என்று அவன் திடமாக நம்புகிறான்.

அன்று எல்லாமே நிச்சயமாக மிக உறுதியாக இருந்தது. ஆனால் அந்த உறுதியின் அஸ்திவாரம் அறியாமை. நான் அதை ஆதரிக்கவில்லை. என்றாலும் அந்த நாளில் இதுபோன்று எந்தக் குழப்பமும் இல்லை. எதிலும் ஒரு தெளிவு இருந்தது ஒரு ஸ்திரத்தன்மை இருந்தது. அனைவரும் மகிழ்ச்சியாக இருந்தார்கள்.

ஆனால் இந்தத் திடத்தன்மை ஆபத்தானது. அது ஒரு தேக்கநிலை. அந்த நிலையில் யாரும் எதுவும் சாதித்ததில்லை. ஆனால் மக்களுக்கு அது வசதியாக இருந்தது. மிகச் சாதாரண அறிவு படைத்த முட்டாள்கள்கூடத் தங்களுக்கு எல்லாம் தெரியும் என்று சந்தோஷப்பட்டார்கள்.

நமக்கு மட்டுமே தெரியும். நாம் மட்டுமே சரியான பாதையில் போகிறோம் மற்றவர்கள் எல்லாம் அழிவுப் பாதையில் போகிறார்கள் என்ற சிந்தனையே நமக்கு ஒரு பெரிய பாதுகாப்பு உணர்வைத் தரும். ஆனால் அது உங்களை ஒரே இடத்தில் தேங்க வைத்துவிடும். குழப்பத்திற்குள் சென்று புறப்பட்டால்தான் உண்மையான தெளிவு பிறக்கும்.

தெளிவாய் இருப்பது வேறு. உறுதியாய் இருப்பது வேறு. உறுதியாக இருப்பது பெரும்பாலான நேரங்களில் கண்மூடித்தனமான நம்பிக்கையாக இருக்கலாம். இதுவரை இந்த உலகம் ஒரு மாதிரியான நிச்சயத்தன்மையில் வாழ்ந்து வந்தது. ஆனால் இன்று அது இல்லை. அந்த சௌகரியம் இப்போது இல்லை. உலகம் சிறியதாகிக்கொண்டே போகிறது.

ஓர் இந்துவிற்கு கிறிஸ்துவனைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். ஒரு கிறிஸ்துவன் இந்துவைப் பற்றித் தெரிந்து வைத்திருக்க வேண்டும். செய்தித்தாள் வானொலி தொலைக்காட்சி என்று ஊடகங்கள் பரவலாக வந்துவிட்டன. அறிந்து கொள்ளும் திறன் பெருகிவிட்டது. எல்லா இடங்களிலும் அறிவு அதிகமாகிவிட்டது. அறிவு அதிகமானதால்தான் குழப்பமே தோன்றுகிறது. 'யார் சொல்வது சரி?'

இஸ்லாமியர்கள், கிறிஸ்துவர்கள், யூதர்கள் ஒரே ஒரு வாழ்க்கைதான் இருக்கிறது என்று சொல்கிறார்கள் மறுபிறப்பில் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. இதற்கு முன்னால் அவர்களுக்கு இந்த விஷயத்தில் குழப்பம் இருந்ததில்லை. தங்கள் நம்பிக்கைதான் உண்மை என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் இன்று அப்படி இருப்பது மிகவும் கடினம். ஒரு முட்டாள் கிறிஸ்துவனால்கூட மறுபிறவியை இன்று நம்பாமல் இருக்க முடியாது. உலக ஜனத்தொகையில் பாதி – இந்துக்கள், பௌத்தர்கள், சமணர்கள் சீக்கியர்கள் – மறுபிறவி இருக்கிறது என்று சொல்கிறார்கள். அவர்கள் சொல்வதைக் கவனிக்காமல் இருக்க முடியாது. மறுபிறவி என்று ஒன்று இருக்கிறது என்பதற்கு வலுவான காரணங்களைச் சொல்கிறார்கள். இப்போது குழப்பம் வரத் தொடங்குகிறது.

குழப்பம் என்றால் என்ன? எல்லாவகை அறிவையும் நீங்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறீர்கள் என்றுதானே அர்த்தம்? இதற்குமேல் என்னிடம் நீங்கள் வந்தால் இன்னும் அதிகக் குழப்பம்தான் ஏற்படும். ஒரு நாள் நான் இஸ்லாமிய மதத்தைப் பற்றிப் பேசுவேன். மறுநாள் யூதர்களின் புனித நூலைப் பற்றிப் பேசுவேன். ஒரு நாள் புத்தரைப் பற்றி ஒரு நாள் கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றி.. என்று தொடர்ந்து மாறி மாறிப் பேசிக் கொண்டிருப்பேன்.

எல்லா ரகசிய அறிவையும் உங்களுக்குப் பகிர்ந்து கொடுத்துக்கொண்டுதான் இருப்பேன். இந்தச் சூழலில் குழப்பம் ஏற்படுவது சகஜம்தான்.

அவசரப்படாதீர்கள். இங்கு குழப்பத்தை நாம் ஓர் உத்தியாகப் பயன்படுத்தப் போகிறோம். வருங்காலத்தில் அது மிக முக்கியமான உத்தியாகத் திகழப் போகிறது. ஏனென்றால் இன்றைய சூழ்நிலையில் நீங்கள் உங்கள் குகைக்குள் ஒடுங்கிக் கொண்டு நான் இந்து. வேறு எந்த மதத்தைப் பற்றியும் நான் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்று ஜல்லியடிக்க முடியாது.

இன்றைய தேதியில் ஒரு கிறிஸ்துவனால் புத்தபிரானை மறுக்க முடியாது. ஒரு கிறிஸ்துவன் புத்தரை நேரில் பார்த்தால் ஏசுநாதர்மேல் அவன் வைத்திருக்கும் நம்பிக்கை ஆட்டம் கொள்கிறது. பௌத்தர்களும் ஏசுநாதர் எங்கோ அருகில் இருக்கிறார் என்பதை நம்ப வேண்டியிருக்கிறது. ஒரு வேளை ஏசுபிரான் மையத்தில் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அருகில் எங்கோ இருக்கிறார் என்பதை மறுக்க முடியாது. வருவது புத்தபிரானாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் குறைந்த பட்சம் ஒரு போதிசத்துவராக இருப்பார். புத்தராக மாறும் வல்லமை படைத்தவர் போதிசத்துவர்.

ஆனால் இதில் பிரச்சினை இருக்கிறது. ஏசுநாதரும் புத்தபிரானும் இரு வேறு துருவங்கள். மனப்பாங்கு, அணுகுமுறை, தத்துவம், வாழும் முறை என்று எதை எடுத்துக் கொண்டாலும் ஏசுநாதருக்கும் புத்தபிரானுக்கும் இடையே நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றன. புத்தர் மௌனமாக போதி மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவர் உலக வாழ்க்கையில் தன்னை அவ்வளவாக ஈடுபடுத்திக் கொள்ளவில்லை.

ஏசுநாதர் உலகவாழ்க்கையில் அதிகம் ஈடுபட்டவர். மக்களுக்காக மனம் இரங்கினார். யூதர்கள் ஏசுநாதரைக் கொன்றது தற்செயலாக நிகழ்ந்த ஒரு விபத்தல்ல. அதேபோல் இந்தியாவில் இந்துக்கள் புத்தரைக் கொல்லாமல் இருந்ததும் தற்செயலாக நிகழ்ந்த ஒரு விபத்தல்ல.

புத்தர் ஒன்றுமே செய்யவில்லையே! அவர் போதி மரத்தடியில் அமர்ந்து தியானித்துக் கொண்டிருந்தார். ஆனால் ஏசுநாதர் சமுதாயம், மதம் அரசியல், என்று அனைத்திலும்

புகுந்து புறப்பட்டார். மொத்த சமுதாய அமைப்பையே அழிக்க முனைந்தார் ஏசுநாதர். அவர் ஒரு புரட்சிக்காரர். அதனால்தான் அவர் தன் உயிரையே கொடுக்க வேண்டியதாயிற்று.

ஏசுநாதர், புத்தபிரான் கிருஷ்ண பரமாத்மா -மூவரும் மூன்று வகைகளில் செயல்பட்டார்கள். பகவான் கிருஷ்ணர் மற்றொரு பரிமாணம். புத்தர் போதி மரத்தடியில் அமர்ந்திருந்தார் என்றால் கிருஷ்ணர் புல்லாங்குழல் இசைத்துக் கொண்டிருந்தார். புத்தர் புல்லாங்குழல் வாசிப்பதை உங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

ஏசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்தார். பகவான் கிருஷ்ணரோ பதினாயிரம் பெண்களுடன் நடனமாடிக் கொண்டிருந்தார்.

இப்படிப் பல்வேறுபட்ட பரிமாணங்கள் இன்று உங்களுக்குக் கிடைக்கிறது. இதனால்தான் குழப்பம் உண்டாகிறது.

இப்படித்தான் என்று நிச்சயமாக இருப்பதைவிடக் குழப்பநிலை எவ்வளவோ மேலானது. உறுதித்தன்மை சராசரி குணம். முட்டாள்தனமானது. நீங்கள் கொள்கைப்பிடிப்பில் உறுதியாக இருந்தால் உங்களுக்கு ஒன்றும் தெரியாது என்பது உறுதியாகிவிடும். அறியாதவன்தான் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்பதில் உறுதியாக இருப்பான்.

ஒரு முறை பிரெஞ்சு மேதை வால்டயரிடம் ஒரு குறிப்பிட்ட மனிதரைப் பற்றி ஒருவர் பேசிக் கொண்டிருந்தார்.

குறிப்பிடப்பட்ட மனிதர் பெரிய அறிவாளி, தத்துவ ஞானி, மதக்கல்வி விற்பன்னர். பேசிக்கொண்டிருந்த மனிதர் வால்டயரிடம் சொன்னார்: "அவருக்கு எல்லாமே தெரியும்."

வால்டயருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. "எல்லாம் தெரிந்திருக்கும் அளவிற்கு அவர் பெரிய முட்டாளா?"

புத்திசாலி எதிலும் சிறிது தயக்கம் காட்டுகிறான். வாழ்க்கையின் விநோத விபரீதங்களை அவன் அறிவான். வாழ்க்கையின் பல பரிமாணங்களை அறிவான்.

கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு என்று அவனுக்குத் தெரியும். எந்தக் கால கட்டத்திலும் நாம் அறியாதவை அறிந்தவற்றைவிடப் பலமடங்கு அதிகமாக இருக்கும். புத்தபிரான் இதை அழகாகச் சொல்வார்:

“எனக்குத் தெரிந்ததெல்லாம் ஒரு மண் துகளைப் போன்றது. தெரியாதது. உலகில் உள்ள மண்ணின் அளவு இருக்கும். எனக்குத் தெரிந்தது ஒரு துளி நீரென்றால் தெரியாதது உலகில் உள்ள ஆறுகள் குளங்கள் கடல்கள் எல்லாவற்றிலும் உள்ள நீர்.”

எதிலும் உறுதியாக இருப்பது நல்ல விஷயம் இல்லை. உறுதியான அறிவு நமக்கு வசதியாகத்தான் இருக்கிறது. முட்டாள்தனமும் பிடிவாதமும்கூட வசதியாகத்தான் இருக்கிறது. வடிகட்டின முட்டாள் நம் கண்களுக்குப் பெரிய வரப்பிரசாதியாகத் தெரிகிறான். ஏன்? அவனுக்கு எந்தக் குழப்பமும் இல்லை.

குழம்புவதற்குத் தேவையான அறிவுகூட அவனிடம் இல்லை. அவனிடம் இருக்கும் சிறிய அறிவை வைத்துக் கொண்டு அவனால் குழம்ப முடியாது. அறிவு அதிகமாக அதிகமாகத்தான் உங்களால் குழம்ப முடியும். அதனால்தான் இந்தக் காலத்தைக் குழப்பத்தின் காலம் என்று சொல்கிறேன். ஏன் என்றால் என்றைக்கும் இல்லாத அளவிற்கு இன்று அறிவு மிகுந்திருக்கிறது.

பழைய திடத்தன்மை போய்விட்டது. பழைய முட்டாள்தனமும் போய்விட்டது. போனது நல்லதுதான். அந்த இடத்தில் இப்போது குழப்பம் நுழைந்துவிட்டது. இதுதான் தெளிவிற்கான முதற்படி. நீங்கள் உண்மையிலேயே துணிச்சல் உள்ளவராக இருந்தால் உங்களுக்குத் தெரிந்த விஷயங்களை எல்லாம் சந்தேகப்படுவீர்கள்.

கேள்விகள் கேட்பீர்கள். அந்தக் கேள்விகளும் சந்தேகமும் மென்மையாக இருக்காது. தொடர்ந்து கேள்வி கேட்பதன்மூலம் தெரிந்த விஷயங்கள் எல்லாம் தெரியாத விஷயங்களாகிவிடும். எதுவும் இரண்டுங்கெட்டானாக இல்லாமல் உறுதியாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். எல்லாமே உறுதியாக இருந்துவிட்டால் கேள்விக்கே இடம் இல்லை. அதன்பின் உங்கள் கேள்விகள் நேர்மையற்றதாகிவிடும்.

உங்கள் கேள்விகளில் நேர்மையிருந்தால் அது உங்கள் இருப்புநிலையின் மையக்கருவிற்கே சென்றுவிடும்.

உண்மையைத் தேடிக்கொண்டிருப்பவன் ஒரு தீயாக. ஒரு தாகமாக ஒரு பெரிய பசியாக இருக்கிறான். உண்மையை உணரத் தன் வாழ்க்கையையே பணயம் வைக்கிறான். இதில் அவன் குழம்பிப்போகும் அபாயமும் இருக்கிறது. குழம்பியும் போகிறான். ஆனால் உங்கள் தேடலில் நீங்கள் உறுதியாக இருந்தால் எந்தக் கோட்ப்பாட்டையும் பற்றித் தொங்கிக் கொண்டிருக்கவில்லையென்றால் உங்கள் தேடல் நேர்மையானதாக இருந்தால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் உங்கள் குழப்பம் எல்லாம் மறைந்துவிடும்.

முதலில் குழப்பம் தோன்றுகிறது. அது உங்கள் அறிவின் வேர்களை அறுத்துப் போடுகிறது. உங்கள் அறிவு மறைந்தவுடன் குழப்பமும் தானாகவே மறைந்துவிடுகிறது. அறிவு இல்லாமல் குழப்பம் தனியாக இருக்க முடியாது. நீங்கள் கடவுள் இருக்கிறார் என்று நம்புகிறீர்கள். யாரோ ஒருவர் கடவுள் இல்லை என்கிறார். குழப்பம் தோன்றுகிறது. குழப்பத்திற்குக் காரணம் அடுத்தவரின் கூற்று அல்ல. நீங்கள் வைத்திருக்கும் கடவுள் நம்பிக்கைதான்.

'கடவுள் என்று யாரும் இல்லை. என்னிடம் இருந்தது வெறும் நம்பிக்கைதான். எனக்கு நிச்சயமாகத் தெரிந்தால்தான் நான் கடவுளை நம்புவேன். நல்லது. இதோ கடவுள் இல்லை என்று சொல்லிக்கொண்டிருக்கும் இந்த மனிதன் நான் வைத்திருந்த அர்த்தமில்லாத மூடநம்பிக்கையை விரட்டியடிக்க உதவினான். எனக்குக் கடவுள் அனுபவம் கிடைக்கவில்லையே! என்னிடம் இருந்ததெல்லாம் வெறும் நம்பிக்கைதானே! அதுவும் எப்படி வந்தது? அடுத்தவர்களிடம் இரவல் வாங்கினேன். யாரோ சொன்னதைக் கண்மூடித்தனமாக நம்பினேன்.' என்று சிந்தித்து கடவுள் நம்பிக்கையை உதறித்தள்ளினால் உங்களுக்குத் தெளிவு பிறக்கிறது.

அதற்காக நீங்கள் நாத்திகவாதியாக வேண்டும் என்று நான் சொல்லவில்லை. கடவுள் இல்லை என்பதை நம்ப

வேண்டும் என்றும் நான் சொல்லவில்லை. அதுவும் ஒரு நம்பிக்கைதான் அதுவும் உங்களைக் குழம்பவைக்கும்.

கடவுளை நீங்கள் நம்பவில்லை என்று ஒரு பேச்சுக்கு வைத்துக் கொள்வோம். அந்த சமயத்தில் அதீத கடவுள் நம்பிக்கையுடன் சதா வழிபாட்டுணர்வில் திளைத்துக் கொண்டிருக்கும் மகிழ்ச்சியான ஒருவரைச் சந்திக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். கடவுள் இருக்கிறார் என்பதை அனுபவித்துப் பார்த்துவிட்டதாகச் சொல்கிறார்.

அவரைப் பார்த்தாலே ஒரு பெரிய மகான் என்று தெரிகிறது. அவரைச் சுற்றி நிகழும் எண்ண அதிர்வுகள் எல்லாம் தெய்விகமாக இருக்கின்றன. நீங்கள் மீண்டும் குழப்பம் அடைவீர்கள். கடவுள் இல்லை என்ற நம்பிக்கையில் தொங்கிக் கொண்டிருக்கும் நீங்கள் கடவுள் இருக்கிறார் என்று ஆணித்தரமாக நம்பும் ஒருவரைக் கண்டால் உங்களுக்குக் குழப்பமும் சந்தேகமும்தான் வரும்.

எந்த நம்பிக்கையையும் பிடித்துக் கொண்டு தொங்காதீர்கள். எல்லா நம்பிக்கைகளையும் விட்டுவிடுங்கள். நம்பிக்கையில்லாத ஒரு சூனியத்தில் நிலை கொள்ளுங்கள். கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கையை விட்டுவிடுங்கள். கடவுள் இல்லை என்ற நம்பிக்கையையும் விட்டுவிடுங்கள். எந்த நம்பிக்கையும் வேண்டாம்.

கிறிஸ்துவன், இந்து, இஸ்லாமியன், ஆத்திகன் நாத்திகன் எதுவும் வேண்டாம். அப்பறம் யாராலும் உங்களைக் குழப்ப முடியாது. நீங்கள் எப்படிக் குழம்ப முடியும்? யாராவது ஏதாவது புது செய்தியைக் கொண்டுவந்தால் நீங்கள் என்ன சொல்வீர்கள்? ''ஐயா தகவலுக்கு நன்றி. நான் நீங்கள் சொன்னதைச் சிந்தித்துப் பார்க்கிறேன். அதனை தியானம் செய்கிறேன். அதை அனுபவித்துப் பார்க்கிறேன். எனக்கு என்று எந்த நம்பிக்கையும் கிடையாது. ஆகையால் உங்கள் செய்தி என்னைக் குழப்பாது.''

குழப்பம் முழுமையாகிவிட்டால் உங்கள் நம்பிக்கைகள் எல்லாம் ஓடி ஒளிந்துகொண்டுவிடும். உங்கள் மனம் சுத்தமாகி

விடும். அந்த நிலையில் எந்த நம்பிக்கையும் இருக்காது. எந்தக் குழப்பமும் இருக்காது. குழப்பத்திற்கு வழியே இல்லை என்ற நிலையில் உங்களிடம் ஒரு தெளிவு உண்டாகும். அந்தத் தெளிவிற்கு அடிப்படை ஒரு நம்பிக்கையோ ஒரு குறிப்பிட்ட புனித நூலோ ஒரு மதமோ இல்லை. அந்தத் தெளிவு உங்கள் வசதிக்காக உண்டாக்கப்பட்டதல்ல. அது யாராலும் உருவாக்கப்பட்டதல்ல. அது உங்கள் விழிப்புணர்வின் வெளிப்பாடு. அந்தத் தெளிவின் மூலமாகத்தான் உண்மையைப் பார்க்க முடியும்.

"நான் ஒட்டுமொத்தமாகக் குழம்பியிருக்கிறேன்." என்று சொல்கிறீர்கள். என்னை மன்னியுங்கள். என்னால் அந்தக் கூற்றை ஏற்றுக் கொள்ள முடியாது. உங்கள் குழப்பம் தீர்ந்து உங்களிடம் மீண்டும் ஓர் உறுதித்தன்மை வர என்னிடம் மருந்து கேட்கிறீர்கள்.

நான் உங்கள் பகைவன் இல்லை. உங்கள் குழப்பத்திற்கு மாற்றாக என்னால் எந்த நம்பிக்கையையும் கொடுக்க முடியாது. நான் உங்களுக்காக என்னையே கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன். ஆனால் என்னால் எந்த நம்பிக்கையையும் கொடுக்கமுடியாது. என் அனுபவத்தை நீங்கள் சுவைக்க ஆயத்தமாக இருக்கிறேன். என் இருப்புநிலையைக் கூட உங்களுடன் பங்கு போட்டுக் கொள்கிறேன். ஆனால் உங்களுக்கு எந்த நம்பிக்கையையும் என்னால் கொடுக்க முடியாது.

உங்களை சௌகரியமாக வைத்துக் கொள்வது என் நோக்கம் அல்ல. வசதியான' வாழ்க்கை சாவிற்குச் சமானம்.

நீங்கள் இன்னும் உங்கள் வீட்டை அடையவில்லை. அதை நோக்கி நடந்து கொண்டிருக்கிறீர்கள். நடுவே சாலையில் யாராவது உங்களுக்குச் சில வசதிகள் செய்து கொடுக்கலாம். ஏன், தூக்கமாத்திரை கொடுத்துத் தூங்க வைக்கலாம். நீங்கள் தூங்கிவிட்டீர்கள். தூக்கத்தின் நடுவே அந்தச் சாலைதான் உங்கள் வீடு என்று கனவு காண்கிறீர்கள். பார்க்கும் எல்லாமே அழகாக இருக்கிறது என்று சொல்கிறீர்கள். அந்தமாதிரி எல்லாம் நான் உங்களுக்குச் செய்யமாட்டேன். அதைத்தான்

போப்பாண்டவரும் பாதிரியார்களும் பூசாரிகளும் காலம் காலமாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

நான் உங்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பப் போகிறேன். உங்கள் நம்பிக்கையிலிருந்து உலுக்கப் போகிறேன். நீங்கள் நிச்சயம் என்று நம்பிக்கொண்டிருந்தவற்றைத் தகர்த்தெறியப் போகிறேன். உங்களைக் கலக்கப் போகிறேன். உங்களுக்குள் ஒரு புயலாக வரப் போகிறேன். உங்கள் மனதை அடியோடு அழிக்கப் போகிறேன். அழிவிற்கு நீங்கள் தயாராக இருந்தால்தான் உங்களுக்குள் ஆக்கசக்தி பிறக்கும்.

நீங்கள் சொல்கிறீர்கள்: "மனத்திட்பத்தின் வழி, சரணாகதி அடைவது என்று இரண்டு வழிகளைப் பற்றிச் சொன்னீர்கள். மனத்திட்பத்தின் வழி எனக்கு ஏற்றதல்ல."

அது எப்படி உங்களுக்குத் தெரியும்? மனத்திட்பத்தின் வழி உங்கள் வழி இல்லை என்று உங்களால் எப்படி நிச்சயமாகச் சொல்ல முடிகிறது? முயற்சி செய்து பாருங்கள். சோதித்துப் பார்த்துத் தவறு செய்துதான் நாம் ஒவ்வொன்றையும் கற்றுக் கொள்கிறோம். வேறு வழி எதுவும் இல்லை. முன் முடிவுகளோடு வாழாதீர்கள். எது என்ன என்று தெரியாமலேயே இது எனக்கு ஏற்றது இல்லை என்ற முடிவுக்கு வராதீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் மீண்டும் குழம்பிவிடுவீர்கள்.

ஒரு நாள் நீங்கள் மனத்திட்பத்தின் வழியாக இலக்கை அடைந்த ஒருவரைச் சந்திப்பீர்கள். அவருடைய ஆன்மா நன்கு மலர்ந்து மணம் வீசிக்கொண்டிருப்பதைப் பார்ப்பீர்கள். "ஒரு வேளை இதுதான் நான் போக வேண்டிய வழியோ? இந்த மனிதன் இந்த வழியில் போய்ச் சாதித்துவிட்டானே!" என்று எண்ணத் தொடங்குவீர்கள். உங்கள் மனதில் பேராசை எழும். மீண்டும் குழப்பம் வரும்.

இப்படித்தான் உங்கள் மனதில் குழப்பத்தின் அலைகள் ஓயாமல் அடித்துக் கொண்டேயிருக்கின்றன. "எனக்கு மனத்திட்பத்தின் வழி ஏற்றதல்ல" என்று சொல்லாதீர்கள். ஏனென்றால் நீங்கள் அதை இன்னும் சோதித்துப் பார்க்கவில்லை. அந்த வழியில் கொஞ்சதூரம் செல்லுங்கள். அதனைப்

பரிசோதித்துப் பாருங்கள். ஒரு வழியைச் சோதித்துப் பார்ப்பதில் எந்தத் தவறும் இல்லை. அதில் நீங்கள் வெற்றி பெற்றால் நல்லது. தோல்வியடைந்தாலும் நல்லதுதான். அப்போது இந்த வழி உங்களுக்கு ஏற்றதல்ல என்று நிச்சயமாகத் தெரியும் அதுவும் ஒரு வெற்றிதான். சாதனைதான். இந்தக் கதவு எனக்காக அல்ல என்று தெரிந்து கொள்வதும் முன்னேற்றம்தான். இல்லாவிட்டால் தவறான கதவைத் தட்டிக் கொண்டிருப்போம்.

என்னிடம் ஒருவன் வந்தான்.

"ஓஷோ, எனக்கு தொடர்ந்து ஒரே கனவு வந்து கொண்டிருக்கிறது. இப்போது அது பயங்கரமான கனவாக மாறிவிட்டது. இந்தப் பிரச்சினையிலிருந்து நீங்கள்தான் . என்னைக் காப்பாற்ற வேண்டும்."

"உன் கனவைப் பற்றிச் சொல்லேன்."

அந்த மனிதனுக்கு ஐம்பது வயது இருக்கும்.

"இந்தக் கனவு நான் குழந்தையாக இருந்த நாளிலிருந்து அடிக்கடி வருகிறது. மாதம் ஒன்,ிரண்டு முறையாவது வரும். அதிலிருந்து தப்பிக்க எனக்கு வழி தெரியவில்லை. அது ஒரு சாதாரணக் கனவு. நான் ஒரு கதவின் அருகில் நிற்கிறேன். அது அழகாக வடிவமைக்கப்பட்ட ஒரு மரக்கதவு.

அது ஓர் அரண்மனையின் கதவாக இருக்கும் என்று நினைக்கிறேன். பூட்டியிருக்கும் கதவை நான் தட்டுகிறேன். அந்த அரண்மனைக்குள் எப்படியாவது நுழைந்துவிட வேண்டும் என்ற உந்துதல் இருக்கிறது. ஆனால் கதவு திறக்கவில்லை. கதவைத் தள்ளித் திறக்க முயற்சி செய்கிறேன்.

ஆன மட்டும் முயன்று பார்க்கிறேன். எனக்கு வியர்த்துவிடுகிறது. இன்னும் தீவிரமாக முயற்சி செய்கிறேன். இந்தக் கதவு திறக்காமலேயே போய்விடுமோ என்ற அவநம்பிக்கை தோன்றுகிறது. ஆனால் கதவைத் திறக்கும் முயற்சி தோல்வியில்தான் முடிகிறது. ஏதோ ஆழ்மனதில் ஓர் ஆசை.. எப்படியாவது உள்ளே நுழைந்துவிட வேண்டுமென்று....

நிறைவேறாத ஆசை. அதன்பின் நான் விழித்துக் கொள்கிறேன். உடல் நடுங்குகிறது உண்மையாகவே எனக்கு வேர்த்திருக்கிறது. என் மூச்சு சீராக இல்லை. அடுத்த இரண்டு மணி நேரத்திற்கு என்னால் தூங்கமுடியவில்லை. அந்தக் கனவைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஏன் இந்தக் கனவு அடிக்கடி வருகிறது?"

"அந்தக் கதவில் ஏதாவது எழுத்து, படம் இருந்ததைப் பார்த்தாயா?"

"ஆமாம். பார்த்தேன். ஆனால் இதுவரை அதைப் பற்றி யோசித்ததேயில்லையே! உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அதைவிடு. கதவில் என்ன எழுதியிருந்தது?"

அந்த மனிதன் கண்களை மூடிக்கொண்டு சிந்திக்க ஆரம்பித்தான். திடீரென்று பெரிதாகச் சிரிக்கத் தொடங்கினான்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"அந்தக் கதவில் "இழு" என்று எழுதியிருந்தது. அது தெரியாமல் நான் மூர்க்கத்தனமாகக் கதவைத் தள்ளிக் கொண்டிருந்திருக்கிறேன்."

"அடுத்த முறை கனவு வரும்போது கதவில் எழுதி யிருப்பதைப் போல் செய்."

இரண்டு மூன்று மாதங்கள் கழித்து அந்த ஆள் என்னிடம் திரும்பி வந்தான்.

"அந்தக் கனவு அதன்பின் வரவே இல்லையே."

"அது இனிமேல் வராது. அதன் நோக்கம் நிறைவேறி விட்டது. உனக்கு விழிப்புணர்வு வந்துவிட்டது."

மனத்திட்பத்தின் வழியில் நடந்து பாருங்கள். அது உங்களுக்கான வழியாக இருக்கலாம். யார் கண்டது? இல்லை உங்களுக்கு ஏற்ற வழியாக இல்லாமல் இருக்கலாம்.

ஆனால் என்னால் அது ஏற்ற வழியா இல்லையா என்று சொல்லமுடியாது. நான் அப்படிச் சொல்லி அதை

நீங்கள் கண்மூடித்தனமாக நம்பி அதனால் ஒருநாள் குழப்பங்கள் வரலாம். என்னை நம்பாதீர்கள். நீங்களே சோதித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

அதில் என்ன தவறு இருக்கிறது? என்ன, நீங்கள் கொஞ்சம் விளையாட்டு மனப்பான்மையோடு அதை முயற்சி செய்து பார்க்க வேண்டும். அது ஒரு நல்ல விளையாட்டு. விளையாடித்தான் பாருங்களேன். மனத்திட்பத்தின் வழியைச் சோதித்துத்தான் பாருங்களேன்.

"நிச்சயமாக அது என் வழியில்லை" என்று எப்படிச் சொல்கிறீர்கள்? என்னவென்று தெரிந்து கொள்ளாமலேயே நிச்சயமாகத் தெரிந்ததுபோல் சொல்லும் ஏமாற்றுவித்தையை உடனே விட்டொழியுங்கள். அந்த வழியை முயன்று பாருங்கள். நீங்கள் வெற்றியடைந்துவிட்டால் நல்லது. வெற்றியடையாவிட்டால் அதுகூட ஒரு வகையில் வெற்றிதான்.

ஏனென்றால் இந்த வழி இல்லையென்றால் மிச்சம் இருக்கும் ஒரே வழி சரணாகதிதான். மனத்திட்பத்தின் வழியில் நீங்கள் தோல்வியடைந்துவிட்டால் இன்னும் அதிக சக்தியுடன் இன்னும் அதிக நம்பிக்கையுடன் சரணாகதி வழியில் செல்ல முற்படுவீர்கள். மனத்திட்பத்தின் வழியைச் சோதித்துப் பார்க்காமல் சரணாகதியின் வழியில் சென்றால் உங்கள் மனதில் ஒரு வேளை அந்த வழியில் போயிருக்கலாமோ என்ற சந்தேகம் இருந்து கொண்டேயிருக்கும்.

அதனால் எதையும் சோதித்துப் பார்க்காமல் முடிவு எடுக்காதீர்கள். விஞ்ஞானபூர்வமாகப் பிரச்சினையை அணுகுங்கள். எல்லாமே ஓர் ஊகம்தான். ஒரு கற்பிதம்தான். அதைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும். அது சரியா தவறா என்பது அனுபவத்தில்தான் தெரியும். அது சரியில்லை என்பதும் அனுபவித்தால்தான் தெரியும். வேறு எந்த வழியும் இல்லை. எந்த வழி என்ற முடிவு உங்கள் நேரடி அனுபவத்திலிருந்து தோன்றட்டும்.

"சரணாகதி அடைவதும் சரியான வழியாகத் தோன்றவில்லை." என்று சொல்கிறீர்கள். நீங்கள் சரியாக இல்லாமல்

இருக்கும்போது மற்ற எதுவும் சரியாக இருக்க வாய்ப்பேயில்லை. சரணாகதி உங்களுடையது. என் சரணாகதியில்லை. மீரா, மகாவீரர் போன்றவர்கள் செய்த சரணாகதி இல்லை. உங்கள் சரணாகதி. கண்ணனும் ஏசுநாதரும் செய்த சரணாகதி இல்லை; உங்கள் சரணாகதி. உங்களுடைய தன்மை உங்கள் சரணாகதிக்கும் இருக்கும்.

மனத்திட்பத்தின் வழி அல்லது சரணாகதியின் வழி என்பது கார்கள் போகும் தார்ச் சாலைகள் இல்லை. யார் நடந்தாலும் எத்தனை கார்கள் போனாலும் தார்ச் சாலைகள் அப்படியேதான் இருக்கும். ஆனால் இந்த வழிகள் அப்படி யில்லை. நடப்பவரைப் பொறுத்து வழியும் மாறிக்கொண்டே யிருக்கும். உங்கள் தன்மையை நீங்கள் சாலைக்குக் கொண்டு வருகிறீர்கள்.

உதாரணமாக ஓவியக் கலைஞர் பிகாஸோ வரைந்த ஓர் ஓவியத்தைப் பார்க்கிறீர்கள். நீங்கள் அதே தூரிகையைப் பயன்படுத்தலாம். அதே பரப்பைப் பயன்படுத்தலாம். ஆனால் உங்களால் பிகாஸோ வரைந்த மாதிரியே வரைய முடியுமா? அது நீங்கள் வரைந்த ஓவியமாகத்தான் இருக்கும்.

பிகாஸோ பயன்படுத்திய அதே தூரிகையில் வரைந்தாலும் ஓவியம் உங்களுடையதுதான். பிகாஸோ குடும்பத்தாரிடம் அனுமதி பெற்று அவர் வரைந்த அதே அறையில் அதே பரப்பில் அதே தூரிகை கொண்டு அதே பின்னணியில் வரையலாம். அது பிகாஸோ வரைந்த ஓவியமாக இருக்காது.

அதேபோல் நீங்கள் ஒரு பாதையில் நடக்கும்போது அதே பாதையில் ஏற்கனவே சென்றவர்களின் அனுபவம் உங்களுக்குக் கிட்டாது. அந்தப் பெரிய பாதையில் நடக்கும்போது ஒவ்வொரு தனிமனிதனும் தனக்கு என்று ஒரு சிறு பாதையை அந்தப் பெரிய பாதைக்குள் உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

உங்கள் சரணாகதி உங்களுடையது. உங்களைப்போல்தான் அது இருக்கும். அதற்குமேல் வேறு எதையும் எதிர்பார்க்காதீர்கள். எதிர்பார்ப்புக்கள் இருந்தால் அது உங்கள் வளர்ச்சியின்

பாதையில் தடைக்கற்களைப் போட்டுவிடும். அந்தப் பாதையை நீங்கள் பயன்படுத்தாதவரை அது சரியான பாதையாக இருக்காது. நீங்கள் அதில் நடக்க நடக்கச் சரியாகிவிடும். அதனால் அனைவரும் குறையுள்ள ஒரு பாதையில்தான் நடக்க வேண்டி யிருக்கிறது. ஏனென்றால் அனைவரும் குறையுள்ளவர்களே.

எதிலும் பூரணத்துவத்தை எதிர்பார்க்காதீர்கள். உங்கள் தேவைகள் அதிகமாக இருக்கின்றன. ஒரு மருந்துக்கடைக்காரரிடம் செல்கிறீர்கள். பூரணமான மருந்தை அவர் கொடுப்பார் என்றா எதிர்பார்க்கிறீர்கள்? எது சிறந்ததோ அதைத்தான் கேட்பீர்கள். பூரணத்துவமான மருந்து என்று எதுவும் இல்லை. நாளை வேறு மருந்து வரலாம். அப்போது இந்த மருந்து தேவைப்படாமல் போகலாம்.

ஒவ்வொரு மாதமும் பழைய மருந்துகள் தூக்கியெறியப் படுகின்றன. புதிய மருந்துகள் சந்தைக்கு வருகின்றன. ஆனால் எந்த மருந்திலும் பூரணத்துவம் இல்லை. இருக்கவும் முடியாது. பூரணத்துவம் இருக்கும் இடத்தில் வளர்ச்சிக்கு வாய்ப்பேயில்லை. பூரண்த்துவத்தின் இன்னொரு பொருள் மரணம். ஒரு பொருள் பூரணத்துவம் அடைந்துவிட்டதென்றால் அதில் எல்லாம் முடிந்துவிட்டது என்றுதானே பொருள்?

வாழ்க்கை ஒரு தொடர் நிகழ்வு. அதில் எதுவும் பூரணத்துவம் பெறவில்லை. எல்லாவற்றிலும் குறை இருக்கிறது. எதில் அதிகம் பூரணத்துவம் இருக்கிறது என்று நீங்கள் கேட்கலாம். இன்னும் யதார்த்தமாகக் கேட்க வேண்டுமென்றால் எதில் குறைவாகக் குறைகள் உள்ளன என்று கேட்கலாம்.

உங்களைப் பொறுத்தமட்டில் சரணாகதி வழி அளவிற்கு மனத்திட்பத்தின் வழி பூரணத்துவம் இல்லாததாக இருக்கலாம். ஆனால் நூறு சதவிகிதம் பூரணத்துவம் வேண்டும் என்று நீங்கள் அடம்பிடித்தால் அது உங்கள் பேராசையைத்தான் காட்டும்.

மெதுவாகச் செல்லுங்கள். இது உங்களுடைய பாதை. இந்தப் பாதை உங்களை மாற்றும். அதேபோல் நீங்களும்

இந்தப் பாதையை மாற்றுவீர்கள். இந்தப் பரஸ்பர மாற்றம் நடந்து கொண்டேயிருக்கும். உங்கள் பாதை உங்களை வளப்படுத்தும். அதேபோல் நீங்களும் உங்கள் பாதையை வளப்படுத்துவீர்கள்.

நீங்கள் சரணாகதியின் வழியில் நடக்கிறீர்கள். அதில் ஏதோ கொஞ்சம் பூரணத்துவம் தெரிகிறது. ஆனால் அதே பாதையில் பக்த மீரா நடக்கும்போது இன்னும் பலமடங்கு அதிக பூரணத்துவம் தென்படும். அதே போல் மகாவீரர் மனத்திட்பத்தின் வழியில் நடக்கும்போது நீங்கள் பார்க்கும் பூரணத்துவத்தைவிடப் பல மடங்கு அதிகம் பார்ப்பார்.

இதில் இன்னொரு நுட்பம் இருக்கிறது. மீரா அந்தப் பாதையில் நடந்து இலக்கை அடைந்தபிறகுதான் நமக்கு அது தெரிகிறது. அவருடைய ஞானத்தின் நறுமணம் நாலாபக்கமும் பரவிய பிறகுதான் நமக்குத் தெரிகிறது. மகாவீரர் மனத்திட்பத்தின் பாதையில் நடந்து ஞானம் பெற்றபிறகுதான் மக்களுக்குச் செய்தி தெரிந்து அவரை மொய்க்கிறார்கள். இவர்கள் இருவரும் பாதையில் நடப்பதற்கு முன், இல்லை பாதையில் நடந்து கொண்டிருந்தபோது எப்படி இருந்தார்கள் என்று நமக்குத் தெரியாது. மக்கள் பார்க்கும்போது அவர்கள் பரிபூரணத்துவத்தை அடைந்திருந்தார்கள். பிகாஸோ வரைந்து முடித்திருந்த ஓவியத்தைத்தான் நாம் பார்கிறோம். வரையும்போது அவர் பட்ட துன்பங்கள் நமக்குத் தெரியாது.

உங்களுக்கு மகாவீரரைப் பற்றித் தெரியாது. உங்களைப் போலத்தான் அவர் குழம்பிப் போயிருந்தார். பாதையைவிட்டுப் பலமுறை விலகிச் சென்றிருக்கிறார். மீண்டும் திரும்பி வந்திருக்கிறார். ஆயிரத்தியோரு தவறுகள் செய்திருக்கிறார். ஆனால் இருட்டில் தனியாகத் தவித்துக் கொண்டிருந்த அந்த மகாவீரரைப் பற்றி உங்களுக்குத் தெரியாது.

இன்று மகாவீரர் இலக்கையடைந்துவிட்டார். மற்றவர்களுக்கு வழிகாட்டும் ஒளியாகத் திகழ்கிறார். இன்று எல்லோரும் அவரைப் பார்க்க வருகிறார்கள். அவரை வணங்குகிறார்கள். ஆனால் அன்று மகாவீரர் உங்களைப் போல் குறைகளுடன் தான் தேர்ந்தெடுத்த வழியில் நடந்து கொண்டிருந்தார்.

புத்தர், மகாவீரர், கிருஷ்ணபரமாத்மா போன்றவர்களை நமக்கு ஞானம் பெற்றபிறகுதான் தெரியும். அவர்கள் மகா சித்தர்கள் ஆனபின்புதான் தெரியும். அவர்களும் ஒரு காலத்தில் தேடலில் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது நமக்கு அவர்களைத் தெரியாது.

நீங்கள் ஒரு சித்தர் இல்லை என்பதை மறந்துவிடாதீர்கள். நீங்கள் சித்தராக இருந்தால் இந்தத் தேடலில் இறங்க வேண்டிய அவசியம் என்ன? நீங்கள் இன்னும் இலக்கை அடையவில்லை. பயணம் செய்து கொண்டிருக்கிறீர்கள். எந்த வழியில் செல்வது என்ற குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. இருப்பதற்குள் எது சிறந்த வழி என்று தோன்றுகிறதோ அதைத் தேர்ந்தெடுங்கள். குறையே இல்லாத வழியைத் தேடிக்கொண்டிருக்காதீர்கள். குறையே இல்லாத வழியில்தான் போவேன் என்றால் நீங்கள் போகவே முடியாது.

குறையே இல்லாத விமானத்தில்தான் பறப்பேன் என்று நீங்கள் சொன்னால் உங்களால் விமானப்பயணம் செய்யவே முடியாது. விமானங்களில் இருக்கும் குறைகளை அன்றாடம் களைந்துக் கொண்டிருக்கிறார்கள். விமானம் செய்யும் தொழிலில் தொடர்ந்து முன்னேற்றம் நடந்து கொண்டிருக்கிறது.

கிடைப்பதில் சிறந்ததைத் தேர்ந்தெடுங்கள். கவனமாகத் தேர்ந்தெடுங்கள். நன்றாகச் சிந்தித்துப் பார்த்துத் தெரிவு செய்யுங்கள். ஒவ்வொரு வழியிலும் உள்ள குறை–நிறைகளைத் தெரிந்து கொண்டு தேர்ந்தெடுங்கள். ஆனால் குறையே இல்லாத வழிக்காகக் காத்திருக்காதீர்கள்.

முதலில் கிளம்புங்கள். ஆரம்பத்தில் மகத்தான விஷயங்கள் நடக்க வாய்ப்பில்லை. நீங்கள் எங்காவது ஆரம்பித்தால்தான் அவை நடக்கும். தொடக்கத்தில் எது நடந்தாலும் சரிதான். தொடங்குங்கள். உங்கள் கால்கள் தடுமாறலாம். உங்கள் உடல் அந்தப் பாதைக்குத் தன்னை மாற்றிக் கொள்ளச் சிரமப்படலாம்.

ஒரு சிறிய குழந்தை நடக்கும்போது எத்தனை முறை விழுகிறது? எத்தனை முறை அது மீண்டும் தன் முயற்சியைத்

தொடர்கிறது? அப்படியே கொஞ்சம் கொஞ்சமாகத் தட்டுத் தடுமாறிப் பின் ஒருகாலத்தில் வலிமையான கால்களுடன் சரியாக நடப்பதில்லையா? ஆன்மிகத்தின் பாதையும் அப்படித்தான்.

இந்த நகர்தல் வெளியில் இருக்கும் இலக்கை நோக்கி அல்ல. ஏற்கனவே உங்கள் உள்ளுக்குள்ளேயே இருக்கும் ஓர் இலக்கை நோக்கித்தான் இந்தப் பயணம்.

"இப்போது என்ன செய்வது?" என்று நீங்கள் கேட்டால் என்னால் இந்தக் கதையைத்தான் சொல்லமுடியும். நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இது John Luis Borges என்ற பெரிய எழுத்தாளர் சொன்ன கதை.

பல நாட்களுக்குத் தலைமறைவாக இருந்த என் பகைவன் இன்று என் வீடு தேடி வந்துவிட்டான். என் வீடு மலைமேல் இருக்கிறது. ஜன்னல் வழியாகப் பார்த்தேன். அவன் மிகவும் கஷ்டப்பட்டு மலையேறிக் கொண்டிருந்தான். செங்குத்தான பாதையில் ஒரு கம்பை ஊன்றியபடி மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தான். அவன் கையில் இருந்த கம்பு வயதானவர்கள் ஊன்றிக் கொள்வதற்காகப்பயன்படுமே தவிர ஒருநாளும் ஆயுதமாக இருக்க முடியாது.

அவனுக்காகக் காத்திருந்தேன். அவன் என் வீட்டுக் கதவைப் பலவீனமாகத் தட்டினான். அவசரம் அவசரமாகச் சாவியைத் தேடி எடுத்துக் கதவைத் திறந்து அவனை உள்ளே அனுமதித்தேன். வந்தவுடன் மயங்கி விழுந்துவிடுவான் என்று நினைத்தேன். ஆனால் சில அடிகள் நடந்து சென்று என் படுக்கையில் விழுந்துவிட்டான்.

அவனருகில் குனிந்து கொண்டு சத்தமாகப் பேசினேன். நான் பேசுவது அவனுக்குக் கேட்க வேண்டுமே என்ற ஆதங்கம்.

"ஆண்டுகள் ஓடுகின்றன. எனக்கு மட்டும் இல்லை. எல்லாருக்கும்தான் காலம் ஓடுகிறது. இதோ இன்று நாம் நேருக்கு நேர் சந்திக்கிறோம். இந்தச் சந்திப்பில் இதுவரை நடந்ததெல்லாம் அர்த்தமில்லாமல் போய்விடுகிறது."

நான் பேசிக்கொண்டிருக்கும்போதே அவன் அணிந்திருந்த கோட் பட்டன்களைக் கழற்றினான். அவனுடைய வலது கை கால்சட்டைப் பைக்குள் இருந்தது. அதிலிருந்து எதையோ ஒன்றை எடுத்து என்னைக் குறிபார்த்தான். அது பளபளக்கும் துப்பாக்கி என்று தெரிந்து கொண்டேன்.

“நீ என்னை உன் வீட்டிற்குள் அனுமதிக்க வேண்டுமே என்பதற்காகத்தான் உன் இரக்கத்தைச் சம்பாதித்துக் கொண்டேன். இப்போது நீ என் பிடியில் இருக்கிறாய். எனக்கு மன்னிப்பு என்றால் என்னவென்றே தெரியாது.”

ஏதாவது பேசித்தான் சமாளிக்க வேண்டும். என்னிடம் அவனை எதிர்க்கும் வலிமை இல்லை. வார்த்தைகள்தான் என்னைக் காப்பாற்ற முடியும். நான் திக்கித் திணறிப் பேச ஆரம்பித்தேன்.

“பல ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு சிறு பையனைக் கொடுமைப்படுத்தியது உண்மைதான். ஆனால் இன்று நீ அந்தப் பையனும் இல்லை. நான் அந்த அறிவிழந்த மிருகமும் இல்லை. மன்னிப்பதைவிடப் பழிவாங்குவது எந்த வகையிலும் உயர்ந்ததில்லை. “

“அதைத்தான் நானும் சொல்கிறேன். இன்று நான் அந்தப் பலவீனமான பையன் இல்லை. இதோ உன்னைக் கொல்லப் போகிறேன். இது பழிவாங்கும் நடவடிக்கை. நீதி வழங்கும் நடவடிக்கை. உன் சமத்காரமான வாதங்கள் என்னைப் பணிசெய்யவிடாமல் தடுக்க நீ கையாளும் உத்திகள். இதோ உன் வாழ்க்கை முடியப்போகிறது. நீ செய்வதற்கு ஒன்றும் இல்லை.”

“நான் செய்யக்கூடிய ஒன்று இருக்கிறது.”

“என்ன?”

“விழித்துக் கொள்ளலாம்.”

அதைத்தான் செய்தேன்.

உங்கள் மொத்த வாழ்க்கையும் ஒரு கனவுதான். நண்பன், பகைவன் இருவருமே அந்தக் கனவின் பகுதிகள். மனத்திட்பம், சரணாகதி இரண்டுமே அந்தக் கனவில் வருபவைதான். தத்துவங்கள், தேற்றங்கள், கோட்பாடுகள், எல்லாமே அந்தக் கனவின் பகுதிகள்தான்.

ஆகையால் நீங்கள் செய்யக்கூடியது ஒன்றுதான். விழித்துக் கொள்வது. ஆனால் வேறு யாரும் உங்களை எழுப்ப முடியாது. நீங்களாக முடிவு செய்து விழித்தால் ஒழிய உங்களை யாராலும் தூக்கத்திலிருந்து எழுப்ப முடியாது. அது உங்கள் முடிவு.

வெளியில் இருக்கும் நம்பிக்கைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதீர்கள். அவை அனைத்தும் தவறானவையே. வாழ்க்கைத் தத்துவத்தைத் தேடி அலையாதீர்கள். வாழ்க்கை மட்டுமே போதுமானது. எல்லாத் தத்துவங்களும் பொய் - என் தத்துவம் உட்பட.

அதனால்,

தயவு செய்து விழித்தெழுங்கள். அதை மட்டும்தான் நான் சொல்ல முடியும்.

இரண்டாவது கேள்வி

*ஓஷோ,*

*நான் உங்களிடம் சந்நியாசியாக விரும்புகிறேன். ஆனால் இங்கே உங்கள் சந்நியாசிகள் மத்தியில் பல ஆஷாடபூதிகள் இருக்கிறார்கள். அதுதான் என்னை சந்நியாசியாகவிடாமல் தடுக்கிறது. நான் என்ன செய்ய?*

என் பதிலை ஒரு சிறு துணுக்கின்மூலம் சொல்ல விரும்புகிறேன்.

“நீங்கள் ஏன் சர்ச் பக்கம் வருவதில்லை?” என்று ஓர் உள்ளூர் ஹோட்டல்காரரை பாதிரியார் கேட்டார்.

“அங்கே பல ஆஷாடபூதிகள் இருக்கிறார்கள்.”

"ஐயோ, அதற்காக வராமல் இருக்காதீர்கள். அவ்வளவு ஆஷாடபூதிகள் இருக்கும்போது இன்னொருவர் வருவதால் ஒன்றும் குறைந்து போய்விடாது. இன்னும் ஓர் ஆஷாடபூதிக்கு நிச்சயமாக இடம் இருக்கிறது."

மூன்றாவது கேள்வி:

ஓஷோ,

*நான் பல குழுக்களில் இருந்திருக்கிறேன். பல பொருத்தமான வளர்ச்சி அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். அதனால் என் உள்ளுணர்வு வலுப்பெற்றுவிட்டதை உணர்கிறேன். என்றாலும் நான் செய்த தவறுகளையே மீண்டும் செய்கிறேன். என்னதான் எனக்கு ஆன்மிக அனுபவங்கள் ஏற்பட்டாலும் கடந்தகாலத்தில் செய்ததை மீண்டும் செய்கிறேன். கடந்தகாலத்தையே மீண்டும் வாழ்கிறேன். நான் என்ன செய்வது? எனக்கு நிரந்தரமான மாற்றம் கிடைக்க வழியுண்டா? நமக்கு நாமே செய்து கொண்டிருக்கும் இந்த வேலைகள் வெறும் மாயைதானா? இவற்றால் எந்தப் பயனும் இல்லையா? சந்நியாசம் நிரந்தர மாற்றத்தைக் கொண்டுவருமா?*

உங்களை முன்னேற்றிக் கொள்ள நீங்கள் எடுக்கும் எல்லா முயற்சியும் தோல்வியில்தான் முடியும். யார் அந்த முயற்சியைச் செய்வது? அவரால்தான் பிரச்சினை. அவர்தான் உங்கள் அகந்தை.

உங்கள் அகந்தை உங்களை முன்னேற்ற எப்போதும் முயற்சி செய்து வருகிறது. இன்னும் அதிக பணம், பெரிய வீடு, நீளமான கார், இன்னும் அழகான மனைவி அல்லது கணவன், இது, அது என்று முயற்சி நீண்டு கொண்டே போகிறது. அது அகந்தையின் வெளிப்பாடு என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

இதே போல் உங்கள் அகந்தை இன்னொரு விளையாட்டும் விளையாடுகிறது.

"அமைதியடைவாயாக. இன்னும் அதிகமாக அன்பு காட்டுவாயாக. உனக்குத் தியானநிலை சித்திக்கப் போகிறது

ஒரு புத்தனாக மாறுவாய்." என்று அகந்தை சொல்லிக் கொண்டிருக்கிறது.

இதுவும் ஒரு விளையாட்டுத்தான். வெளியுலகப் பொருள் களால் உங்களை அலங்காரம் செய்ய நினைத்த உங்கள் அகந்தை இன்று உள்ளுலகப் பொருள்களால் அலங்கரிக்கிறது.

நீங்கள் உங்களை முன்னேற்றிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தால் உங்களுக்குத் தோல்விதான் மிஞ்சும். உங்கள் அகந்தைதான் பிரச்சினை என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். உங்கள் அகந்தையில் படிந்த பேராசைதான் உங்களை அதுவாக வேண்டும் இதுவாக வேண்டும் என்று வற்புறுத்துகிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

உங்கள் செயல்கள் எண்ணங்கள் அனைத்துமே அந்த அகந்தையின் வெளிப்பாடு என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அப்போது ஒரு புரட்சி நடக்கும். அது நீங்களாகச் செய்யக்கூடிய ஒரு புரட்சியில்லை. உங்கள் புரிந்துணர்வின் பயனாகத் தானாக நிகழும் ஒரு புரட்சி.

பணம், பதவி, அந்தஸ்து, அரசியல் என்று அலைந்து கொண்டிருந்த அதே அகந்தைதான் இன்று தியானம், ஞானம், அமைதி, ஆன்மிகம் என்று உங்களை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் உணரும்போது வாய்விட்டுச் சிரிப்பீர்கள். இது என்ன வேடிக்கை என்று நொந்து கொள்வீர்கள்.

முன்னேற்றம் என்ற பேச்சுக்கே இடம் இல்லை. மாற்றம் இருக்கலாம். முன்னேற்றத்திற்கு வாய்ப்பு இல்லை. தலைகீழான மாற்றம்கூட நிகழலாம். ஆனால் முன்னேற்றம்? நிச்சயமாக இல்லை. முன்னேற்றம் என்பது ஏற்கனவே இருக்கும் படிவத்தில் சில மாற்றங்கள் நிகழ்வது. ஏற்கனவே இருக்கும் வடிவத்தில் சில புதிய வரவுகள் சேர்வது. - உதாரணமாக நீங்கள் கார் வாங்கலாம், வீடு வாங்கலாம். திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால் நீங்கள் அப்படியேதான் இருக்கிறீர்கள்.

நீங்கள் தியானம் செய்கிறீர்கள். என்றாலும் அப்படியேதானே இருக்கிறீர்கள். நீங்கள் சந்நியாசியாகலாம். ஆனால் உங்கள்

மனதின் அடியாழத்தில் அப்படியேதான் இருக்கிறீர்கள். மேலும் மேலும் பொருள்களைச் சேகரிக்கிறீர்கள். தன்மைகள், குணங்கள், நடத்தை, ஒழுக்கம், நற்குணம், அறிவு என்று எவ்வளவோ வந்து சேர்கின்றன. நீங்கள் தொடர்ந்து சென்று கொண்டே யிருக்கிறீர்கள். ஆனல் அது பழைய பயணம்தான். அதில் புதிதாக ஒன்றும் இல்லை. இந்த வழியில் முன்னேற்றத்திற்கு இடமே இல்லை.

முன்னேற்றத்திற்கு வழியே இல்லை என்பதை முதலில் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். இதைப் புரிந்துகொண்டால் வேறு ஒருவராக மாற வேண்டும் என்ற ஆசை இன்னும் முக்கியத்துவம் வாய்ந்தவராக மாற வேண்டும் என்ற பேராசை இன்னும் பெரிய விஷயங்களைச் சாதிக்க வேண்டும் என்ற ஆசை எல்லாமே உங்கள் அகங்காரம் விளையாடும் கண்ணா மூச்சி விளையாட்டுகள் என்று புரிந்து கொள்வீர்கள். அந்தப் புரிந்துணர்வின் தருணத்தில் உங்களிடம் திடீரென்று ஒரு தடாலடி மாற்றம் நிகழும். இப்போது நீங்கள் பழைய ஆள் இல்லை. முற்றிலும் புதியவர்..

இந்தப் புதிய ஆளுக்கும் பழைய ஆளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அதனால்தான் இது முன்னேற்றம் இல்லை என்று சொல்கிறேன். இந்தப் புதுமைக்கும் அந்தப் பழமைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அந்தப் பழைய வயதான மனிதன் செத்துவிட்டான். இந்தப் புதியமனிதனுக்குக் கடந்தகாலமே இல்லை. நடுவில் இவ்வளவு பெரிய இடைவெளி இருக்கும்போது இந்த மாற்றத்தை முன்னேற்றம் என்று சொல்வது சரியாகாது.

ஆன்மிகம் ஒரு சாதனையல்ல. அது ஒரு பயணம்.

"நான் பல குழுக்களில் இருந்திருக்கிறேன். பல பொருத்த மான வளர்ச்சி அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன்", என்று சொல்கிறீர்கள். அந்த வளர்ச்சி அனுபவங்கள் பொருத்தமானவை அல்ல என்றுதான் தோன்றுகிறது. அவை யாவும் உங்கள் அகந்தையின் விளையாட்டுக்கள். அவை நடக்கும்போது உங்களுக்குச் சுகமாக இருந்திருக்கலாம்.

உங்கள் அகந்தை உங்களைத் தோளில் தட்டிக்கொடுத்து "நன்று செய்தாய். நீ முன்னேறிக்கொண்டேயிருக்கிறாய். ஒரு நாள் நீ புத்தராகப் போகிறாய். இல்லை ஏசுநாதராகப் போகிறாய். நீ அந்த வழியில்தான் இருக்கிறாய். அழகாக முன்னேறிக் கொண்டிருக்கிறாய்." என்று சொல்லியிருக்கும். உங்களுக்குச் சுகமாக இருந்திருக்கும்.

அந்த வளர்ச்சி அனுபவங்கள் பொருத்தமானவை அல்ல. உங்கள் அகந்தை அவற்றைப் பயன்படுத்திக் கொண்டது. அவ்வளவுதான். அகந்தை தொட்ட எதுவும் விஷமாகிவிடும். நீங்கள் சந்தோஷப் பட்டிருப்பீர்கள். "பாருங்கள் எப்படி வேகமாக விஷயங்கள் நடக்கின்றன." நீங்கள் சமாதிநிலைக்காகக் காத்துக் கொண்டிருப்பீர்கள். "அது வெகுதூரத்தில் இல்லை. இன்னும் கொஞ்ச தூரம்தான்." என்று அகந்தை உங்களைத் தட்டிக் கொடுக்கும்.

உங்கள் அகந்தை அந்த அனுபவங்களை விளையாட்டுப் பொம்மைகளாக உங்கள்முன் வைத்தது. நீங்களும் அவற்றை வைத்துக்கொண்டு விளையாட ஆரம்பித்தீர்கள். இப்போது நீங்கள் குணவானாக சமய உணர்வு உள்ளவராக மாறிவிட்டீர்கள். விளையாட்டுப் பொம்மைகள் இன்னும் அதிகமாகிவிட்டன. "ஆகா இந்த பொம்மை அழகாக இருக்கிறதே. இந்த அனுபவம் சுகமாக இருக்கிறதே! இது மீண்டும் கிடைத்தால் நன்றாக இருக்குமே" என்று நீங்கள் நினைக்கும்போதெல்லாம் அந்த அகந்தையின் தொடர்ச்சி ஏற்படுகிறது.

"நீங்கள்" இல்லாத போதுதான் புதுமை நிகழ முடியும். நீங்கள்தான் உங்களை விட்டு எங்குமே போவதில்லையே எந்த நேரமும் அங்கேயேதான் அமர்ந்திருக்கிறீர்கள். அந்தக் குழுக்கள்மூலம் நீங்கள் போவதால் வளமை கிடைக்காது. ஏனென்றால் "இந்த அனுபவம் மீண்டும் கிடைக்கப் போகிறது" என்று நீங்கள் காத்திருப்பீர்கள். அந்தக் காத்திருப்பில் "நீங்கள்" இருப்பீர்களே! அதனால் ஒன்றும் நடக்காது.

அது எதிர்பாராமல்தான் நடக்கும். நீங்கள் அதற்காகக் காத்திருக்காதபோதுதான் அது வரும். கடவுளுக்காக நீங்கள்

வழி மேல் விழி வைத்துக் காத்திருக்கும்போது கடவுள் வரமாட்டார். அவரை எதிர்பார்க்காதபோது வருவார். ஏனென்றால் அவரை எதிர்பார்த்துக் காத்திருக்கும் போது ஒரு மன அழுத்தம் ஏற்படுகிறது.

மிகச்சாதாரணமான சமயங்களில் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத இடத்தில்தான் கடவுள் தோன்றுவார். நீங்கள் கடவுளை எதிர்பார்க்கும்போது நீங்கள் அங்கே அழுத்தமாக இருக்கிறீர்கள். நீங்கள் இருக்கும்போது கடவுள் வரமாட்டார். நீங்கள் முற்றிலும் எதிர்பாராத போது -ஆற்றில் நீந்திக் கொண்டிருக்கும் போது அந்த நொடியை அனுபவித்துக் கொண்டிருக்கும்போது மரங்களையும் பறவைகளையும் அஸ்தமிக்கும் சூரியனையும் உங்களை மறந்து ரசித்துக் கொண்டிருக்கும்போது - கடவுள் உங்கள்முன் குதிப்பார். நீங்கள் உங்களைத் தொலைத்துவிட்ட அந்தத் தருணங்களில் கடவுள் உங்கள்முன் தோன்றுவார்.

அந்தச் சமயத்தில் நீங்கள் ஒன்றும் செய்து கொண்டிருக்க வில்லை. நீங்கள் வளர்க்கும் பூனைக்குட்டியுடன் விளையாடிக் கொண்டிருக்கிறீர்கள். அதன் அழகான கண்களைப் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கிறீர்கள். பெரிதாக ஏதோ நிகழப் போகிறது என்று நீங்கள் நினைக்கவில்லை. திடீரென்று அந்தப் பூனைக்குட்டியின் கண்கள் மாறும். அதில் ஓர் அபரிமிதமான ஆழம் உண்டாகும். கடவுள் அங்கே இருப்பார். நீங்கள் நிலைகுலைந்து போவீர்கள்.

கடவுள் எப்போதும் அப்படித் திடீரென்றுதான் தோன்றுவார். நீங்கள் உங்கள் பூஜையறையில் அமர்ந்து பூஜை செய்து கொண்டிருக்கும்போது கடவுளின் திருவுருவத்தின் முன்னால் மணியடித்துக் கொண்டிருக்கும்போது கடவுள் நிச்சயம் தோன்ற மாட்டார். ஏனென்றால் அந்தச் சமயங்களில் உங்களிடம் எதிர்பார்ப்பு மிதமிஞ்சியிருக்கிறது. கடவுள் வரப்போகிறார் என்று வாசலில் ஒரு கண் வைத்தபடி காத்துக் கொண் டிருக்கிறீர்கள். கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது. கடவுள்தான் வந்துவிட்டார் என்று வாசலுக்கு ஓடுகிறீர்கள். வந்திருப்பது தபால்காரர்.

நீங்கள் கடவுளுக்காகக் காத்திருக்கும்போது அவர் சத்தியமாக வரமாட்டார். ஏனென்றால் அந்தச் சமயத்தில் உங்களிடம் "நான்" நிறைந்து இருக்கும். :"நான்" இல்லாதபோதுதான் கடவுள் தோன்றுவார்.

"நான் பல குழுக்களில் இருந்திருக்கிறேன். பல பொருத்த மான வளர்ச்சி அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். அதனால் என் உள்ளுணர்வு வலுப்பெற்றுவிட்டது தெரிகிறது. என்றாலும் நான் செய்த தவறுகளையே மீண்டும் செய்கிறேன். என்னதான் எனக்கு ஆன்மிக அனுபவங்கள் ஏற்பட்டாலும் கடந்தகாலத்தில் செய்ததையே மீண்டும் செய்கிறேன். கடந்தகாலத்தையே மீண்டும் வாழ்கிறேன். நான் என்ன செய்வது?."

உங்கள் கேள்வியில் எத்தனை "நான்" எத்தனை "என்" என்று யோசித்துப் பாருங்கள். நீங்கள் அதே தவறைத்தான் செய்யப் போகிறீர்கள். நீங்கள்தான் இன்னும் மாறவேயில்லையே! வேறு எதுவும் நடக்கும் என்று நம்பிக்கை கொள்ளாதீர்கள்.

நான் என்பது ஓர் அமைப்பு. ஓர் இயந்திரம். ஓர் இயக்கமுறை. அந்த இயந்திரம் செய்ததையேதான் திரும்பத் திரும்பச் செய்யும். அதில் சீக்கிரமே தேர்ச்சி பெற்றுவிடும். அது ஒரு கணினியைப் போன்றது. அது முதலில் பழக்கங்களை ஏற்படுத்துகிறது. பின் அவற்றை மீண்டும் மீண்டும் செய்யவைத்து வலுப்படுத்துகிறது. வளர்ச்சி என்ற எண்ணத்தையே விட்டொழி யுங்கள்.

ஏனென்றால் வளர்ச்சி என்பது வருங்காலத்திற்குரியது. வளர்ச்சி என்பது இன்று செய்வதை நாளைக்குத் தள்ளிப்போடும் ஓர் உத்தி. நாளை என்பது நிச்சயம் வராது. இந்த நொடியில் இருங்கள் இங்கே இருங்கள். இந்தக் கணம் ஒன்றுதான் நிஜம். இந்தக் கணத்தை முழுமையாக அனுபவியுங்கள். என்ன செய்கிறீர்களோ அதை முழுமையாகச் செய்யுங்கள். அதில் உங்களை நீங்களே கரைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் செய்ய வேண்டியது என்ன என்று நான் சொல்லவில்லை. ஆனால் அதில் நீங்கள் ஆழ்ந்து போனால் அதுவே வழிபாடாகிறது.

உங்கள் வீட்டுத்தரையை மெழுகுவதுகூட ஒரு வழிபாடாக லாம். உங்கள் வீட்டுச் சமையலறையில் செய்யும் சின்னச் சின்ன வேலைகள் வழிபாடாகலாம். தோட்டத்தில் குழி தோண்டுவதும் வழிபாடாகலாம். கோயிலுக்குப் போக வேண்டிய அவசியம் இல்லை. தங்கள் வாழ்க்கையில் எப்படி வழிபாட் டுணர்வைக் கொண்டுவருவது என்று தெரியாதவர்கள்தான் கோயிலுக்குப் போகிறார்கள். மசூதிக்கோ குருத்வாராவிற்கோ போக வேண்டிய அவசியம் இல்லை.. கடவுள் எங்கும் இருக்கிறார். எங்கே நீங்கள் முற்றிலும் ஆழ்ந்து போகிறீர்களோ அங்கே கடவுள் இருக்கிறார்.

எனக்கு நிரந்தரமான மாற்றம் கிடைக்க வழியுண்டா? நமக்கு நாமே செய்து கொண்டிருக்கும் இந்த வேலைகள் வெறும் மாயைதானா?

நீங்கள் செய்வது எல்லாமே மாயைதான். ஏனென்றால் நீங்களே மாயைதான். உங்களிடமிருந்து மாயைதான் பிறக்கும். நீங்கள் உண்மையைப் பிறப்பிக்க முடியாது. நீங்கள் காலத்திற்குக் கட்டுப்பட்டவர். உங்களிடமிருந்து காலத்திற்கு அப்பால் நிற்கும் ஒன்று பிறக்க வாய்ப்பு இல்லை. நீங்கள் தள்ளி நின்று வழிவிட வேண்டும். உங்கள் வழியில் நீங்கள் மட்டுமே குறுக்கே நின்று தடுக்க முடியும். கடவுள் அந்த வழியில்தான் வந்து கொண்டிருக்கிறார். தயவு செய்து அவர் பாதையை மறிக்காதீர்கள்.

நான் சொல்வதைக் கவனிக்கிறீர்களா? கடவுள் வரும் வழியில் மறித்துக் கொண்டு நிற்காதீர்கள். கடவுள் மலரில் இருக்கிறார் பறவையின் சிறகில் இருக்கிறார் மரங்களை ஊடுருவிச் செல்லும் தென்றலில் இருக்கிறார். நீங்கள் அவரை மறைக்கவில்லையென்றால் அவர் எங்கும் இருப்பதை உங்களால் பார்க்க முடியும். அவரை நாம் பார்க்காமல் இருப்பதே ஒரு பெரிய அற்புதம்தான்.

நீங்கள் நிரந்தரமான ஒன்றைத் தேடுகிறீர்கள். அகந்தை என்றும் நிரந்தரமாக இருக்க முடியாது. அது தாற்காலிகமானது

தான். அகந்தையின் மூலம் நீங்கள் அடையும் எதுவும் நிரந்தரமாக இருக்காது.

ஓர் அலையை நிரந்தரமாக்க முடியுமா? என்ற ரீதியில் கேட்கிறீர்கள். அலை நிரந்தரமாகாது. அதை உறைய வைக்கலாம். பனிக்கட்டியாகிவிடும். ஆனால் அப்போது அது அலையில் லையே! வெறும் பனிக்கட்டிதானே! அதனால் அலைபாய முடியாதே! அப்பறம் எப்படி அது அலையாகும். அது உறைந்தவுடன் அதன் உயிர்ப்பு போய்விட்டது. அதன் இயக்க நிலை போய்விட்டது.

நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள். அந்தக் காதலை நிரந்தரமாக்க விரும்புகிறீர்கள். அலையை நிரந்தரமாக்கும் அளவிற்கும் இதுவும் ஒரு முட்டாள்த்தனமான காரியம். நீங்கள் திருமணம் செய்து கொள்ளலாம். உங்கள் காதலுக்கு இப்போது சட்டத்தின் அங்கீகாரம் கிடைத்துவிட்டது. ஆனால் இப்போது அலை உறைந்துவிட்டது. காதல் மறைந்துவிட்டது. மிஞ்சியிருப்பதெல்லாம் ஒரு திருமண ஒப்பந்தம் மட்டுமே. அது காதலைப் போல் அழகாக இருக்காது. அசிங்கமாகத்தான் இருக்கும்.

உலகத்திலேயே காதல்தான் மிகவும் அழகானது. திருமணம் அசிங்கமானது ஏனென்றால் இப்போது காதலுக்குள் சட்டம் புகுந்துவிட்டது. நீங்கள் ஏன் திருமணம் செய்து கொண்டீர்கள்? உங்கள் காதலை நிரந்தரமாக்கத்தான்.

"யார் கண்டது இந்தப் பெண் நாளை வேறு யாரையாவது காதலிக்கலாம்." இப்போது சட்டம் உங்களைப் பாதுகாக்கும்.

"யார் கண்டது? இந்த மனிதன் நாளை எவள் பின்னாலாவது ஓடிப்போகலாம்." இப்போது சட்டம் உங்களைப் பாதுகாக்கும்.

உங்கள் கணவரை நீங்கள் கோர்ட்டுக்கு இழுக்கலாம். அவரால் எளிதாகத் தப்பிக்க முடியாது.

நீங்கள் திருமணம் செய்துகொள்ளும்போது என்ன செய்கிறீர்கள்? சமூகத்திடம் சொல்லி உங்கள் திருமண உறவைக்

காப்பாற்றச் சொல்கிறீர்கள். சட்டத்தையும் காவல்துறையையும் துணைக்கு அழைத்து உங்கள் திருமண வாழ்வைக் காப்பாற்றிக் கொள்கிறீர்கள்.

காவல்துறை வந்துதான் உங்கள் காதலைக் காப்பாற்ற வேண்டும் என்றால் என்ன கண்றாவிக் காதல் அது? திரும்மணம் என்பது. ஒரு சிறைதான். அதைப் புனிதமான பந்தம் தூய்மையான உறவு என்று என்ன பெயரிட்டு வேண்டுமானாலும் நீங்கள் அழைத்துக் கொள்ளலாம். அது பந்தம் மட்டுமே. நீங்கள் இருவருமே கைதிகள்தான். ஒருவரை ஒருவர் சிறைப்படுத்தி வைத்திருக்கிறீர்கள். இப்படித்தான் நாம் பலவற்றை அழித்துவிட்டோம்.

அகந்தை நிரந்தரமானது அல்ல. உங்கள் அன்பு அகந்தையிலிருந்து உதித்தால் அதுவும் தாற்காலிகமானதாகத்தான் இருக்கும். மனமே தாற்காலிகமானதுதான். காலத்திற்குக் கட்டுப்பட்டதுதான். மனம்தான் காலம். மனதில் எதுவும் நிரந்தரமாக இருக்கமுடியாது.

நிரந்தரமானவற்றைப் பார்க்க வேண்டுமென்றால் - நிரந்தரம்கூடச் சரியான வார்த்தையில்லை, நித்தியம் என்பது இன்னும் பொருத்தமாக இருக்கும் - கடலலைக்குள் உற்றுப் பாருங்கள். நித்தியமான கடல் தெரியும். நித்திய வஸ்துவைப் பார்க்க வேண்டுமென்றால் உங்கள் காதலை ஆழமாகப் பாருங்கள் உள்ளே கடவுள் சிரித்துக் கொண்டிருப்பார். அன்பிலே கடவுளைப் பார்ப்பதற்குப் பதிலாக உறவைப் பாதுகாக்க நீங்கள் போலீஸ்காரரை அழைக்கிறீர்கள்.

அன்பு் நிகழும்போது நிரந்தரம் வேண்டும் என்று அலையாதீர்கள். நித்தியத்தை நினையுங்கள். தியானியுங்கள். அந்தத் தருணங்கள் அபூர்வமானவை. ஜன்னல்கள் எளிதாகத் திறக்கும். இதயம் எளிதாக உருகும். உங்களுக்குத் தெரியாத ஒன்றைப் பார்த்துத் திகைத்து நிற்பீர்கள். திருமணத்தைப் பற்றி இப்போது கவலைப்படாதீர்கள்.

அதற்குப் பதிலாக அந்தக் காதல் நிறைந்த கணங்களுக்குள் நீந்திச் செல்லுங்கள். அந்த அலைகளுக்குள் புகுந்து அதில் இருக்கும் சமுத்திரத்தைத் தரிசியுங்கள். எங்கெல்லாம் அலை இருக்கிறதோ அங்கெல்லாம் சத்தியமாக சமுத்திரம் இருக்கும். காதல்-அலை அங்கே இருந்தால் காதல்-கடல் அதன் பின்னாலேயேதான் இருக்க வேண்டும். அந்தக் காதல்-கடல்தான் கடவுள்.

அதனால் நிரந்தரத்தைத் தேடாதீர்கள். அந்தத் தேடல் தோல்வியில்தான் முடியும் . அது உங்களை வெறுப்படையச் செய்யும். காரணம் - நிரந்தரத்தைத் தேடும் யாரும் நிரந்தரம் இல்லை. நீங்கள் தவறான ஊடகத்தைத் தேர்ந்தெடுத்துவிட்டீர்கள் - மனம், அகந்தை எல்லாமே தவறான ஊடகங்கள். உங்கள் ஆன்மாவிற்குள் ஆழமாகப் பாருங்கள்.

"சந்நியாசம் நிரந்தர மாற்றத்தைக் கொண்டுவருமா?" என்று கேட்கிறீர்கள். மீண்டும் நிரந்தரம் என்ற அசிங்கமான வார்த்தையைப் பயன்படுத்துகிறீர்கள். இங்கே என்னிடத்தில் சந்நியாசம் வாங்கிக் கொள்வது அலையும் கடலும் சேர்ந்த அமைப்பு. அது நிரந்தரமா இல்லையா என்பது உங்கள் பார்வையைப் பொறுத்தது. நீங்கள் அலையை மட்டும் பார்த்தால் அது நிரந்தரமான மாற்றம் அல்ல. அதே அலையைக் கூர்ந்து கவனித்து உள்ளே பொதிந்து இருக்கும் கடலையும் பார்க்க முடிந்தால் அது சாசுவதமான மாற்றம்

சாசுவதம் என்பது நிரந்தரம் என்பதற்கும் மேலானது. சாசுவதம் என்பது காலம் கடந்து நித்தியமாக இருப்பது. நிரந்தரம் என்பது நீண்ட காலம் நீடித்து இருப்பது.

நீங்கள் ஒரு நாள் சந்நியாசியாக இருந்தால் என்ன இல்லை ஆயிரம் வருடங்கள் சந்நியாசியாக இருந்தால்தான் என்ன? அந்த மாற்றம் நிரந்தரம் இல்லை என்றால் நிரந்தரம் இல்லைதான்.

காலம் கடந்து நிற்பதைத் தேடுங்கள். அது கிடைத்துவிட்டால் அது என்றென்றும் இருந்திருக்கிறது. என்றென்றும் இருக்கும்

என்று தெரிந்து கொள்வீர்கள். அது உங்களின் உண்மையான உள்ளார்ந்த தன்மை. உங்கள் சுபாவம். அதுதான் உங்கள் இருப்பு நிலை.

உங்கள் தேடலின் அடிப்படை உங்கள் பேராசையாக இருக்கக் கூடாது. பழையது மீண்டும் நடக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கக்கூடாது. கடந்தகாலத்தை மறந்துவிடுங்கள். அதை உங்கள் மனதிலிருந்து போக விடுங்கள். அது போகும் சமயத்தில் வருங்காலத்தைப் பற்றிச் சிந்திக்காதீர்கள். அது இன்னும் வராத காலம்தானே! அதைப்பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? அது வரும்போது நிகழ்காலமாகிவிடும் அதை உன்னிப்பாகப் பார்க்க நாம் இருக்கப் போகிறோம்.

நேற்று என்ன நடந்ததோ அது இன்று நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். நேற்று நீங்கள் அதற்காகக் காத்திருக்கவில்லை. அதனால் அது நடந்தது. இன்று நீங்கள் அது நடக்க வேண்டும் என்று நினைத்துக் காத்திருக்கிறீர்கள். அது நடக்காது.

இங்கே தியானம் பயில்பவர்களிடம் அந்த மனப்பாங்கைப் பார்த்திருக்கிறேன். திடீரென்று ஒரு நாள் ஒருவருக்குத் தியானம் சித்திக்கும். தனக்குள்ளே அடியாழத்திற்குச் சென்றுவிடுவார். அந்தப் பயணத்தில் ஏற்படும் சிலிர்ப்பு அவரை நிலைகுலைய வைத்துவிடும். ஆனால் அடுத்த நாள் அந்தச் சிலிர்ப்பு ஏற்படாது. அந்த ஆழத்திற்கு அவரால் போக முடியாது. அவருக்கு வருத்தமாக இருக்கும்.

அடுத்தநாள் இதன் காரணமாக அவருக்கு மன அழுத்தமே வந்துவிடும். என்னிடம் புகார் சொல்ல வருவார்: “அந்த அனுபவம் கிடைப்பதற்கு முன்னால் நன்றாக இருந்தது. அப்படி ஓர் அனுபவம் இருக்கிறது என்பதே எனக்குத் தெரியாது. ஆனால் இன்று அதை அனுபவித்துப் பார்த்துவிட்டேன். அந்த அனுபவம் இருக்கிறது என்று தெரிந்து கொண்டுவிட்டேன். இப்போது அது கைகூடாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். அந்த அனுபவம் எனக்கு ஏன் மீண்டும் மீண்டும் கிடைக்கவில்லை?”

அது உங்களுக்கு மறுபடியும் கிடைக்காது. எதிர்ப்பார்க்காத சமயத்தில் வருவதுதான் கடவுளின் சுபாவம். உங்களிடம் சொல்லாமல் கொள்ளாமல் திடீரென்று குதிக்கும் விருந்தாளியைப் போன்றவர் கடவுள்.

விருந்தாளிக்கான வடமொழிச் சொல் "அதிதி". தான் வரும் தேதியை முன்கூட்டியே சொல்லாமல் வருபவர் என்று அதற்குப் பொருள். திதி என்றால் தேதி. அதிதி என்றால் தேதி குறிக்காமல் வருபவர் என்று பொருள்.

கடவுள் விருந்தாளி. அவர் வந்தால் நன்றி சொல்லுங்கள். வராவிட்டாலும் நன்றியுணர்வுடன் இருங்கள். இன்று அவர் வராததும் ஒருவகையில் நல்லதுதான். உங்களுக்கு ஓர் இடைவெளி தேவைப்பட்டிருக்கலாம். நேற்று நடந்த நிகழ்வை உள்வாங்கிக்கொள்ள உங்களுக்குக் கொஞ்சம் அவகாசம் தேவைப் பட்டிருக்கலாம். அதனால் கடவுள் இன்று வராமல் இருந்திருக் கலாம்.

ஒரு முதலாளி தன்னிடம் வேலை பார்ப்பவர்களை எப்போதும் திட்டிக்கொண்டிருப்பான். அன்று அது கொஞ்சம் அதிகமாகப் போய்விட்டது. அதுவும் அவனிடம் வேலை பார்த்த ஓர் இளம்பெண்ணின் ஒழுக்கத்தைப் பற்றிக் கேவலமாகத் திட்டியபோது அவளால் அதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. பல்லைக்கடித்துக்கொண்டு அலுவலகத்தைவிட்டு வெளியேறினாள்.

மறுநாள் காலை அவள் தன் கொடுமைக்கார முதலாளியின் அறைக்குப் போனாள். கையில் இருந்த காகிதத்தை அவன் மேல் கோபத்துடன் எறிந்தாள்.

"நேற்று என் ஒழுக்கத்தைப் பற்றித் தரக்குறைவாகப் பேசினீர்களே! இது என் குடும்ப டாக்டர் எனக்குக் கொடுத்த சான்றிதழ். நான் இன்னும் கறைபடாத கன்னிப் பெண் என்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருக்கிறார்."

முதலாளி அந்தக் காகிதத்தை ஒரு பார்வை பார்த்துவிட்டு அவளிடம் கொடுத்துவிட்டான்.

"இது பயன்படாது. இதில் நேற்றைய தேதி இருக்கிறது. அதற்கப்பறம் நீ கெட்டுப் போயிருக்கலாம், அல்லவா?"

ஆமாம், நேற்று என்பது நேற்றுதான். போனது போய்விட்டது. யாருக்குத் தெரியும்? இன்று நீங்கள் அடியோடு மாறியிருக்கலாம். உங்கள் நன்னடத்தை ஒழுக்கம் நற்குணங்கள் எல்லாமே நேற்றைய தேதியிட்ட சான்றிதழ்தான்.

நீங்கள் யாரையாவது புனிதர் என்று அழைத்தால் அதன் பொருள் என்ன? அவருடைய "நேற்று"கள் முழுவதும் புனிதமாக இருந்தன. அது நேற்றைய தேதியிட்ட சான்றிதழ்தான். அந்தப் புனிதர் நேற்று இரவு ஒரு பாவகாரியம் செய்திருக்கலாம். யார் கண்டது?

அதேபோல் ஒருவரை நீங்கள் பாவி என்று முத்திரை குத்தியிருக்கலாம். ஆனால் அதுவும் "நேற்று" சம்பந்தப்பட்ட ஒரு விஷயம்தான். அதுவும் நேற்றைய தேதியிடப்பட்ட ஒரு சான்றிதழ்தான். அவர் பாவங்கள் செய்திருக்கலாம். ஆனால் நேற்று இரவு அவர் உண்மையாக இறைவனை வழிபட்டிருக்கலாம். தியானநிலை சித்தித்திருக்கலாம். கடவுள் தரிசனம் கிட்டியிருக்கலாம்.

யாரையும் புனிதர் என்று அழைக்காதீர்கள். புனிதர் கடந்த காலத்தைச் சேர்ந்தவர். யாரையும் பாவி என்று சொல்லாதீர்கள். அதுவும் கடந்தகால விஷயம்தான். வாழ்க்கையைக் கடந்த காலத்திற்குள் கட்டுப்படுத்த முடியாது.

இருப்புநிலை நிகழ்காலத்தைச் சேர்ந்தது. ஏற்கனவே நடந்த ஒன்று மீண்டும் நடக்கவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். கடந்தகாலம் நிகழ்காலமாக வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள். அதனால் என்ன நன்மை? உங்களுக்கு அது தெரியும். அதைவிடச் சிறந்ததாக அதைவிட உயர்ந்த ஒன்றைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்குத் தயாராக இருங்கள்.

என்னுடைய அடிப்படை போதனை இதுதான்: ஆசைப்படாதீர்கள். தயாராக இருங்கள். கடவுளுக்காகக் காத்திருங்கள். அவர் பார்த்துக் கொள்வார்.

நான்காவது கேள்வி:

*ஓஷோ,*

*மற்றவர்களுக்கு உதவி செய்யத்தானே நாம் பிறந்திருக்கிறோம்? அடுத்தவர்களுக்குச் சேவை செய்வது ஒன்றுதானே வாழ்க்கை லட்சியமாக இருக்க முடியும்''*

இதற்குப் பதிலாக எனக்குத் தெரிந்த துணுக்கு ஒன்றைக் கூற விரும்புகிறேன்.

அந்தச் சிறுவனிடம் அவனுடைய தாய் 'தன்னலம் பாராட்டக்கூடாது' என்று விலாவாரியாகப் பேசிக் கொண்டிருந்தாள்.

''மற்றவர்களுக்கு உதவி செய்யத்தான் நாம் இந்த உலகில் பிறந்திருக்கிறோம்.'' என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசினாள் தாய்.

தாயின் கூற்றைச் சிந்தித்துப் பார்த்துவிட்டுச் சொன்னான் மகன். ''அப்படியானால் மற்றவர்கள் எதற்காகப் பிறந்திருக்கிறார்கள் அம்மா?''

முதலில் உங்களை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். நல்லவன் என்று பெயர் வாங்க முயற்சி செய்யாதீர்கள். நல்லது செய்கிறேன் என்று கிளம்புபவர்கள் ஆபத்தானவர்கள். நன்மை செய்கிறேன் பேர்வழி என்று அடுத்தவர் வாழ்க்கையில் அநாவசியமாகக் குறுக்கிடுபவர்கள். அடுத்தவருக்கு உதவி செய்ய நீங்கள் யார்? உங்களுக்கே உதவி தேவைப்படுகிறது. மருத்துவனே முதலில் உன் நோயைக் குணப்படுத்திக் கொள்.

நான் சொல்வதைக் கேட்கிறீர்கள். உங்களுக்கு நிறைய விஷயங்கள் தெரிகிறது. அறிவைச் சேகரித்துக் கொள்கிறீர்கள் உடனே அடுத்தவருக்கு உதவி செய்யவேண்டும் என்ற ஆவல் கிளர்ந்து எழுகிறது. ஆனால் உங்களுடைய உண்மையான நோக்கம் என்ன? உங்கள் மனதில் இருக்கும் குப்பையை அடுத்தவர் மனதில் கொட்ட வேண்டும் என்பதுதான்.

மற்றவர்களை ஆன்மிகத்திற்கு இழுக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். நான் சொல்வது என்ன என்று முழுதாகத் தெரிந்து கொண்டாலொழிய அதை மற்றவர்களுக்குச் சொல்லாதீர்கள். உங்களுக்கே அது சரியாகப் புரியாதபோது நீங்கள் அடுத்தவருக்குச் சொல்லும்போது அது திரிக்கப்பட்டிருக்கும். மாற்றப்பட்டிருக்கும்.

அரை வேக்காட்டு உண்மைகளைவிடப் பொய்களே தேவலை. பொய் சொல்லும்போது அடுத்தவருக்கு அது பொய் என்று தெரிந்துவிடும். அதை விட்டுவிடுவார். பொய்யும் இல்லாமல் உண்மையும் இல்லாமல் அரை வேக்காடாக நீங்கள் ஏதாவது சொல்லும்போது கேட்பவர் குழம்பிப் போவார்.

பாதி உண்மை மிகவும் ஆபத்தானது. அது பொய் என்று கேட்பவருக்குத் தெரியாது. அவரால் அதை விடவும் முடியாது. அந்தப் பாதி உண்மை அவரை எப்போதும் உறுத்திக்கொண்டே இருக்கும். விடவும் முடியாமல் ஏற்கவும் முடியாமல் தவித்துக் கொண்டிருப்பார்.

அந்த முதியவள் நான்கு வருடங்களாக ஒரு கிளியை வளர்த்து வந்தாள். நான்கு வருடங்களாக அந்தக் கிளியைப் பேச வைக்க வேண்டும் என்று பிரம்மப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தாள். எல்லா வழிகளிலும் முயன்று பார்த்துவிட்டாள் அந்த முதியவள். சிறு தொடர்களை திருப்பித் திருப்பிச் சொல்வது, மணிகள் வாங்குவது, கண்ணாடியை முன்னால் காட்டுவது சிறந்த உணவை வாங்கித்தருவது என்று எந்த வழியும் பயன் தரவில்லை.

கடைசியில் வெறுத்துப் போய் கிளியைப் பார்த்துக் கோபமாகக் கத்தினாள்.

“சனியனே ஏன் பேசமாட்டேன் என்று அடம் பிடிக்கிறாய்?”

அந்தக் கிளி அவளை உற்றுப் பார்த்தது. பின் உறுதியான குரலில் பேச ஆரம்பித்தது.

"உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் அடுத்தவர்கள் சொல்வதைக் கிளிப்பிள்ளை போல் அப்படியே சொல்வது சரியல்ல என்பது என் கொள்கை."

கடைசிக் கேள்வி :

*ஓஷோ,*

*ஒரு குருதேவரின் முன்னிலையில் எப்படி உள்மாற்றம் நிகழும்? அது எப்படிச் சாத்தியம்?*

அந்த உள்மாற்றம் ஒரு தொற்று நோய். ஆன்மிகத் தொற்று நோய். ஆரோக்கியமான தொற்று.

எப்படிக் காற்றில் உலவும் கிருமிகளால் நீங்கள் நோயாளியாக முடியுமோ அதேபோல் குருதேவரின் முன்னிலையில் இருக்கும் அதிர்வுகளால் உள்மாற்றம் நிகழ முடியும். நோய்க்கு என்று எப்படி ஓர் அதிர்வு, ஓர் அலைநீளம் இருக்கிறதோ அதே போல் நலனுக்கும் நல்வாழ்விற்கும் ஓர் அதிர்வு, ஓர் அலைநீளம் இருக்கிறது.

ஆன்மிகத்தில் திளைத்திருப்பவரின் அருகே நீங்கள் இருக்கும்போது ஒரு புது வழியில் உங்கள் அதிர்வுகள் மாறுபடுகின்றன. அவருடைய முன்னிலை உங்கள் ஆன்ம வீணையை மீட்டத் தொடங்குகிறது. அவருடைய முன்னிலையே உங்களுக்குள் ஓர் இனிமையை உண்டாக்குகிறது.

ஓர் உண்மையான குருதேவரின் முன்னிலை சாதாரணமான முன்னிலையல்ல. அதில் அதீத உயிர்ப்பு இருக்கும். குருதேவரின் சூழல் ஆபத்தானது. அது உங்களை நொடிப்பொழுதில் முழுமையாக மாற்றிவிடும்.

அந்த பஸ்ஸில் கூட்டம் அதிகமாக இருந்தது. அப்போது ஒருவன் சொன்னான்.

"எனக்குப் பல பெனிசிலின் ஊசிகள் போட்டிருக்கிறார்கள். என் உடல் நிறைய பெனிசிலின் இருக்கிறது. நான் ஒரு தும்மல் போட்டால் யாராவது ஒருவருக்கு நோய் குணமாகலாம்."

உங்கள் நோய் குணமாக வேண்டாம் என்று நீங்கள் நினைத்தால் தயவு செய்து குருதேவரைத் தேடிப் போகாதீர்கள். ஆன்மிகத்தில் திளைத்திருப்பவர்களின் அருகே போகாதீர்கள்.

அவர்களுடைய முன்னிலை ஆபத்தானது. அது உங்களுக்குள் ஒரு ருசியை உண்டாக்கிவிடும். அந்த ருசி நடக்கப்போகும் பெரிய உள்மாற்றத்திற்கு ஆரம்பமாகிவிடும்.

இன்று இது போதும்.

